# தமிழில் ஆவணங்கள்


பதிப்பாசிரியர்கள்

முனைவர் ஆ. தசரதன்
முனைவர் தி. மகாலட்சுமி
முனைவர் சு. நிர்மலாதேவி
திரு த. பூமிநாகநாதன்





INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Tamilil Ávaṇaṅkaḷ |
| Editors | : | Dr. A. Thasarathan, Thiru D. Boominaganathan<br>Dr. T. Mahalakshmi, Dr. S. Nirmaladevi<br>Thiru. M. Maruthamuthu, Thiru. M.Parimanan |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Tharamani<br>Chennai - 600 113 |
| First Edition | : | 2001 |
| Publication No. | : | 402 |
| Language | : | Tamil |
| Paper used | : | 18.6 TNPL Super Printing |
| Size of tbe book | : | 1/8 Demy |
| Printing types | : | 11 points |
| No. of pages | : | XI + 341 |
| Price | : | 75/- |
| No. copies | : | 1200 |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Documents in Tamil |

முனைவர் **ச.சு. இராமர்இளங்கோ**
**இயக்குநர்**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - *600 113*

## *அணிந்துரை*

ஒன்றைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் ஒன்று அல்லது பல செய்திகளைப் பதிவு செய்து வைக்கும் பொருள்களை ஆவணங்கள் என்று குறிப்பிடுவர். ஆகவே ஆவணங்கள் என்பது தனியார் இருவரிடையே ஏற்படும் பரிவர்த்தனைகள், விற்பனைகள், உடன்பாடுகள், சபை, ஊர் ஆகியவை எடுத்த முடிவுகள், தீர்மானங்கள், அளித்த சலுகைகள், தொடர்ந்து நடைபெற வேண்டிய தருமங்கள், நியதிகள் எனப் பல பொருண்மைகளை உள்ளடக்கியதாக அமையும். இதனையே வேறுவிதமாகச் சொன்னால் கொடை, இலக்கியம், வரலாறு, சமயம், வாழ்க்கை, அரசியல், என்ற நிலையிலும் பகுத்துக் காணலாம். தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் ஆவணங்களாகக் கருதுவது அகழாய்விற்கிடைத்த தொல்பழம் பொருள்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், நாணயங்கள் மற்றும் ஓலைச் சுவடிகள் என்பன ஆகும்.

வரலாற்று நோக்கிற்கும் பண்பாட்டின் கால எல்லையை மீள்பார்வை செய்வதற்கும் உலக அளவில் அறிஞர்கள் மேற்சொன்ன தொல்லியலார் ஏற்றுக் கொண்ட ஐந்து கூறுகளையே தரவுகளாக மதிக்கின்றனர்.

இதனைக் கருத்திற் கொண்டுதான் ஆவணங்கள் பற்றிக் கருத்தரங்கம் நடத்த எண்ணியபோது தமிழில் ஆவணங்கள் என்ற தலைப்பில் மேற்சொன்ன ஐந்து பொருண்மைகளையும் உள்ளடக்கிய வகையில் இக் கருத்தரங்கம் அமைந்தது. தொடக்கத்தில் இக்கருத்தரங்கம் ஓலைச் சுவடி ஆவணங்களை மட்டுமே எடுத்து ஆராயத்திட்டமிடப்பட்டிருந்ததாயினும் பின்பு மேலே கூறப்பட்ட பரந்த எல்லைக்கேற்ப அது விரிவாக்கப்பட்டது.

உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் தமிழ் ஓலைச் சுவடிகள் பாதுகாப்பு மையமும் இணைந்து இக்கருத்தரங்கத்தை நடத்துவதற்கு திட்டமிடப்பட்டது. ஆயினும், பின்னர் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனமே இக்கருத்தரங்கத்தை நடத்துவது என்று முடிவெடுக்கப்பட்டது. இக்கருத்தரங்குச் சிறப்பாக அமைய டாக்டர் பா.சிவந்தி ஆதித்தனார் நற்பணி மன்றமும் கள்ளிகுலம் தட்சணமாற நாடார் கல்லூரியும் நிதியுதவி அளித்தன. இவ்விரு நிறுவனங்களுக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவற்றைப் பெற்றுத் தந்து இக்கருத்தரங்கம் சிறப்பாக நடைபெற உதவிபுரிந்த திரு நெல்லை நெடுமாறன் அவர்களுக்கு நன்றி உரித்தாகுக.

இக்கருத்தரங்கிற் கலந்து கொள்ள அழைப்பை ஏற்று, கட்டுரைகளை முன்னே அனுப்பித் தந்தும், பின்பு கருத்தரங்கத்தில் கலந்து கொண்டும் சிறப்பித்த பேராளர் அனைவரையும் பாராட்டுகிறேன். ஆவணங்களாகக் கருதப்படுகின்ற கல்வெட்டுகள், பண்டைத் தமிழ் எழுத்துக்கள், செப்புப் பட்டயங்கள், ஓலைச் சுவடிகள், காசுகள் போன்ற பொருண்மைகளிலும் அவற்றுடன் தொடர்புறும் பொருண்மைகளிலுமாக அமைந்த இருபத்தாறு கட்டுரைகள் இத்தொகுப்பில் இடம் பெறுகின்றன.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் நிறுவனத் தலைவரும், தமிழக அரசின் கல்வித் துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை மற்றும் அறநிலையத்துறை செயலாளர் திரு. பி.ஏ. இராமையா, இ.ஆ.ப. அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறையின் கூடுதல் செயலர் திரு, தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் இந்நூல் உருவாவதற்கு உறுதுணையாயிருந்த முனைவர் ஆ. தசரதன், திரு த. பூமிநாகநாதன், முனைவர் சூ. நிர்மலாதேவி, முனைவர் தி. மகாலட்சுமி, திரு. மூ. பரிமணன், திரு. மொ. மருதமுத்து ஆகியோருக்கும் என் நன்றி.

இந்நூலினை கவினுற அச்சிட்டுத்தந்த யுனெடெட் பைண்டிங் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கு நன்றி.

**இயக்குநர்**

# பதிப்புரை

*1995*-ஆம் ஆண்டு ஆகசுடுத் திங்கள் *17, 15, 19* ஆகிய நாட்களில் தமிழில் ஆவணங்கள் என்ற தலைப்பில் நடைப்பெற்ற தேசியக் கருத்தரங்கில் படிக்கப்பெற்ற கட்டுரைகள் இங்குத் தொகுக்கப் பெற்று நூல்வடிவம் பெறுகின்றன. தமிழில் ஆவணங்கள் எனக் கருதப்படும், தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள் என்ற கூறுகளை உள்ளடக்கிப் பல கட்டுரைகள் அமைந்துள்ளன. இவை பல ஆய்வு அறிஞர்களால் வழங்கப்பட்டவை. இவற்றுள் நூல் உருவாக்கத்தின் போது தயார் நிலையில் இருந்த இருபத்தாறு கட்டுரைகள் மட்டும் இங்கே தொகுக்கப்பட்டன.

இந்நூல் தமிழின் தொன்மை வரலாற்றையும், பண்பாட்டையும், மொழியையும் எடுத்து இயம்பும். இக்கட்டுரைகள் ஐம்பெரும் பொருண்மைகளைச் சார்ந்தவை. இவை, இங்கே முறைப்படுத்தித் தொகுக்கப்பட்டுள்ளன. இக் கட்டுரைகள் கூறும் சிறப்புச் செய்திகள் வருமாறு.

இருபத்தோராம் நூற்றாண்டில் தமிழ் கல்வெட்டியல் கல்வியும் ஆய்வும் என்ற முதற்கட்டுரை கல்வெட்டியலின் தொன்மையையும் அது சமுகத்திற்கு எவ்வகையில் எல்லாம் பயன்தரக்கூடியது என்பதையும் வரலாற்று நோக்கில் எடுத்தியம்புகிறது. பிற துறையாளர்கள் இக் கட்டுரை வாயிலாகக் கல்வெட்டியலின் தோற்றம் வளர்ச்சி பற்றிச் சுருக்கமாக அறிந்து கொள்ள பெரிதும் துணை செய்யும்.

சோழர்காலக் கோயிற்பணியாளர் சமூகமும் பொருளாதார நிலைகளும் என்ற கட்டுரை சோழ வள நாட்டின் சமுகச் சூழலையும் பொருளாதார அமைப்புகளையும் தேவதாசிகளின் புனிதமான பக்தி சேவையையும் மிகத் தெளிவாக விளக்குகிறது.

முன்னூர்க் கல்வெட்டுகளில் அரசாணைகளும் பிற ஆவணப் பண்புகளும் என்ற தலைப்பிலமைந்த கட்டுரை இராச இராச சோழன் காலத்திலிருந்து எவ்வாறெல்லாம் அரசு இயந்திரம் பரிணாம வளர்ச்சி அடைந்திருக்கிறது என்பதனைத் தெளிவாகக் காட்டுவதோடு கோயில்கள் சமூகத்தில் பெற்றிருந்த முக்கியத்துவத்தையும் எடுத்துணர்த்துகின்றது.

ஏரிகளில் கல் ஆவணங்கள் என்ற கட்டுரையில் தமிழகத்தில் ஆட்சி புரிந்த அரசுகள் நீர்வளம் கருதி ஆற்றிய பணிகளை வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் வெளிக்கொணர்வதோடு நீர் வாரியத்தின்கண் ஏரிகள் பெற்றிருந்த செல்வாக்கையும் ஒரு சேர எடுத்தியம்புவதைக் காணலாம்.

கோணேசர் கல்வெட்டு இலங்கைத் திரிகோணமலை என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையில், அச்சில் வெளிவந்த நூலிலுள்ள கல்வெட்டை மீள்பார்வை செய்து, அந்நூல் கூறும் செய்திகளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் எடுத்தியம்புகிறது. தமிழ்நாட்டிற்கும் இலங்கைக்கும் உள்ள வரலாறு மற்றும் பண்பாட்டுத் தொடர்புகளை நயம்பட இது எடுத்துக் கூறுகிறது.

மானவீர வளநாட்டுக் கல்வெட்டுக்கள் என்ற கட்டுரை மானவீர வளநாட்டின் பெயர்க்காரணம் மற்றும் வரலாறு பற்றியும் சமூகத்தில் நிலைமைக்காரர் என்பவர் பெற்றிருந்த பல்வேறு சமூகச் சிறப்புகள் குறித்தும் எடுத்துக் கூறி அப்பகுதி வாழ் மக்களின் தொன்மையை வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் தக்க தரவுகளைக் கொண்டு நிறுவுகிறது.

தென்பாண்டி நாட்டுச் சாத்தூர் செப்பேடு என்ற கட்டுரை அப்பகுதி குறிப்பிட்ட காலகட்டத்தில் எந்த அளவிற்கு, எவ்வகையிலெல்லாம் சிறப்புற்றிருந்தது என்பதனைக் காலக் கண்ணாடி போல் எடுத்துக் காட்டுகிறது.

தஞ்சை நாயக்கர் செப்பேடுகள் என்ற கட்டுரை, சோழப் பேரரசின் பல்வேறு தரப்பு அதிகாரிகள் பற்றிய தகவல்கள், இலக்கியச் செய்திகள், புராணச் செய்திகள், சமுதாயச் செய்திகள் கலைப் படைப்புகள், வணிகச் செய்திகள் போன்ற பல்வேறு மக்கள் தொடர்புடையவற்றை எடுத்தியம்புகிறது.

இராமநாதபுரத்தைத் தலைமையகமாகக் கொண்டு ஆட்சிபுரிந்த சேதுபதிகளின் பல்வேறு சிறப்புகளை அவர்கள்தம் செப்பேடுகளைக் கொண்டு ஆய்வு செய்கிறது சேதுபதி மன்னர் செப்பேடுகள் எனும் அடுத்தக் கட்டுரை.

கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள் என்ற கட்டுரை கொங்கு நாட்டின் நிலச்சூழல், அந்நாட்டுக் குடிமக்களின் நிலை, அப்பகுதியின் வரலாறு போன்ற பல செய்திகளைச் செப்புப் பட்டயங்கள் மூலம் எடுத்தியம்புகிறது.

அகழாய்வில் கிடைத்த எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் என்ற கட்டுரை தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை செய்துள்ள பல்வேறு அகழ் ஆய்வுகள் பற்றித் தொகுத்துக் கூறுகிறது. பண்டைத் தமிழர் எழுத்தறிவு பற்றி அக்கட்டுரையில் பல சிறப்பான செய்திகள் கூறப்பட்டுள்ளன.

அகழாய்வில் ஆவணங்கள் என்ற கட்டுரையில் கொடுமணல் அகழாய்வு பற்றியும், அகழாய்வில் கிடைத்த பானை ஓடுகளின் குறியீடுகள் குறித்தும் கூறப்பட்டுள்ளது. பானை செய்தோர் தங்களைப் பற்றிக் குறிப்பிட்ட குறியீடுகள் பற்றியும் பானை உரிமையாளர்கள் அவர்களது பொருள் என்பதற்காக அவர்கள் பதித்த குறியீடுகள் குறித்தும் இதிலிருந்து அறியமுடிகிறது. இவை மட்டுமன்றித் தமிழ், பிராமி எழுத்துகள் பற்றியும், குறிப்பாகக் கொடுமணலில் கிடைத்த தமிழ்-பிராமி எழுத்துப் பொறிக்கப்பட்ட பானைவோடுகள் பற்றியும் மிகச்சிறப்பாக இக் கட்டுரை எடுத்துக் கூறுகிறது.

சேலம் தருமபுரி நாணயங்கள் என்ற கட்டுரை, பண்டைத் தமிழர்களின் வணிகம், பண்டமாற்றம் முதலாய துறைகளை எடுத்துக் கூறுகிறது. தருமபுரி பகுதியை அதியமான்கள், மலையமான்கள், களப்பிரர், பாணர், கங்கர், பல்லவர், இராட்டிரகூடர், சாளுக்கியர், ஒய்சாளர், விசயநகரப் பேரரசர், மைசூர் உடையார்கள் போன்ற அரச வம்சத்தினர் ஆட்சி செய்தனர் என்பதற்கான ஆதாரங்கள் இக்காசுகள் கொண்டே அறியப்பட்டுள்ளன. வரலாற்றை அறிய காசுகள் எத்தனைச் சிறப்புடைய தரவுகளாக அமைய வல்லன என்பதை அறிந்துகொள்ளலாம்.

பல்லவலர் காசுகள் என்ற கட்டுரை வாயிலாகப் பல்லவப் பேரரசின் பல்வேறு சிறப்புகளை அறிய முடிகிறது. தொடக்கத்தில் பல்லவர் வரலாறு பற்றிச் சுருக்கமாகக் கூறி, பல்லவர்களின் தொன்மையைக் காட்ட சங்க இலக்கியத்தில் இருந்து மேற்கோள்கள் தொகுக்கப்பட்டுள்ளன. குலமரபுச் சின்னங்கள், பல்லவர் காசுகளின் மரபுப் பெயர்கள், அக்கசாலை, காசுகளின் மதிப்பு போன்ற பிற செய்திகளும் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன.

வலங்கை நூல்களில் மாடைக்காசு என்ற கட்டுரையில் இராச இராசன் மாடை, மதுராந்தகன் மாடை என்ற பெயர்களில் அன்று புழக்கத்தில் இருந்த மாடைக்காசுகளைக் கருத்திற் கொண்டு, அவற்றின் வரலாற்றுச் சிறப்புகள் வெளிப்படுத்தப்படுகின்றன. மேலும், வலங்கை நூல்கள், நாட்டுப்புறக் கதைப்பாடலாக அமைந்த வெங்கலராசன் கதை, வலங்கை ஆவணங்கள் முதலியவற்றின் துணையோடு மாடைக்காசு என்பது சான்றோர் சமுதாயத்தினர், சித்தர்களிடமிருந்து அறிந்து கொண்ட மூலிகை முறையினால் தங்கத்தை உருவாக்கும் இரசவாதத்திலிருந்து மாடைக்காசுகளை வெளியிட்டிருக்கலாம் என இக்கட்டுரை ஆசிரியர் எண்ணுகிறார்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் தாள் சுவடி ஆவணங்கள் என்ற கட்டுரை, தமிழில் எழுதப்பெற்ற அரியதாள் ஆவணங்களாகக் கருதப்படும் கடிதங்கள், கட்டுரைகள், ஆவணக் குறிப்புகள், அச்சு நூல்கள், வெளிவராது தாளில் எழுத்துருவில் உறங்கும் நூல்கள் முதலியவற்றின் முக்கியத்துவத்தைப் பழம்பொருள் நோக்கில் ஆய்வு செய்து, அவை எவ்வகையில் தொல்லியல் கலந்த ஆவணங்களாகப் பரிமளிக்கக் கூடியன என்பதைச் சிறப்பாக எடுத்துக் கூறுகிறது.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் பாதுகாத்து வரும் பல்துறை சார்ந்த சுவடிகளை நுணுகி ஆய்ந்து, பழம்பொருள் மற்றும் வரலாற்று நோக்கோடு அவற்றின் சிறப்புகள் வெளிப்படுமாறு கட்டுரையாசிரியர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஓலைச் சுவடிகள் என்ற தலைப்பில் அட்டவணையிட்டுப் பலருக்கும் பயன்படும் வகையில் தம் கட்டுரையை அமைத்துள்ளார்.

சோழங்க நல்லூர்ச் சுருணை ஆவணங்கள் என்ற கட்டுரையில் சுவடிகளின் வகைகளைப் பற்றி எடுத்துக்கூறி, சுருணைச் சுவடிகள் தரும் ஆவணங்கள் வாயிலாகப் பல்வேறு சமுகத் தகவல்களையும் வரலாற்றுச் செய்திகளையும் கட்டுரையாசிரியர் வகைப்படுத்தி ஆய்ந்துள்ளார். இவை போன்ற சுருணை ஆவணங்கள் எவ்வகையில் வரலாற்றுத் தகவல்களாக அமையவல்லன என்பதையும் குறிப்பாக விளக்குகின்றார்.

திருச்சி மாவட்ட ஓலை ஆவணங்கள் என்ற கட்டுரை திருச்சி மாவட்டம் லால்குடி வட்டத்தைச் சேர்ந்த நெரிஞ்சில் குடி ராமாராவ் என்பவரிடம் இருந்து பெறப்பட்ட அறுபத்து நான்கு ஓலைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட அச்சு நூலின் சுருங்கிய வடிவம் ஆகும். இக் கட்டுரை வாயிலாக அன்றைய மக்களின் வாழ்க்கைச் சூழல், அரசியல், அரசு இயந்திரம் பற்றிய பல குறிப்புகள் சுவையாகவும் தெளிவாகவும் கட்டுரையாசிரியரால் கூறப்பட்டுள்ளன.

ஓலைச் சுவடிகளில் ஆவணங்களும் பதிவேடுகளும் என்னும் கட்டுரை ஓலையில், எழுதப்பட்டுள்ள பொருண்மைகளை மூன்று கூறுகளாகப் பகுத்துக் கொண்டுள்ளது. அவை முறையே, ஆவணங்கள் - பதிவேடுகள், இலக்கியம் - இலக்கணம், மற்றும் கணிதம், மருத்துவம், விஞ்ஞானம் போன்ற பல்துறை சார்ந்த சுவடிகள் ஆகும். தாமஸ்மன்றோ கி.பி. *1792* ஆம் ஆண்டில் அறிமுகப் படுத்திய இரயத்துவரி முறை தொடங்கி இன்று வரை ஏற்பட்டுள்ள பல்வேறு வகைகளான ஆவணங்கள் பற்றியும் பதிவேட்டு முறைகள் பற்றியும் எடுத்துக் கூறுகிறது. இதனில் குறிப்பாக இராசராசன் காலம் தொடங்கி இன்றைய அரசு வரை பதிவேடுகள் பற்றிய பல்வேறு செய்திகள் இதில் இடம் பெற்றுள்ளன.

தமிழகத்தில் சமண சமயச் சிற்பக்கலை என்ற கட்டுரை சிற்பக் கலையின் தோற்றம் வளர்ச்சி பற்றி ஆய்வு செய்வதோடு, கோயில் வழிபாட்டு முறை காரணமாக இன்றைக்கு நமக்குக் கிடைக்கும் பலவகையான தானங்கள் பற்றியும், இறையலிகள் குறித்தும் கூறுகின்றது.

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள சில பல அரிய சுவடிகள் பற்றியும் அச் சுவடிகள் தமிழ்கூறு நல்லுலகத்திற்கு எவ்வகையில் பயன்படத்தக்கன என்பது குறித்தும், எடுத்துக்கூறும் சரசுவதி மகால் நூலக ஆவணங்கள் என்ற கட்டுரை விரிவான ஆய்வுக்கு வழிகாட்டுவதாக அமைந்துள்ளது.

பானை ஓட்டு எழுத்துக்களைப் பாதுகாத்தல் என்ற கட்டுரை இன்றைய அறிவியல் முறைகளைப் பயன்படுத்தித் தொன்மைப் பொருள்களை எவ்வாறு நீண்ட காலத்திற்குப் பாதுகாக்க முடியும் என்பதை விளக்கமாகக் கூறுகிறது. பானை ஓடுகளின் எழுத்தைப் பாதுகாக்க அவற்றை இன்றைய

அறிவியல் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி ஒளிப்படம் எடுத்தும், பதிவுரு நகல் எடுத்தும், இரசாயன முறைகளைக் கொண்டு, புதுமை செய்தும் பாதுகாக்கலாம் எனக் கூறுகிறது. ஆவணப் பாதுகாப்பு முறையைப் புதிய கண்ணோட்டத்தில் இக்கட்டுரை விளக்குகிறது.

ஆவணங்களில் திருவள்ளுவரும் திருக்குறளும் என்ற கட்டுரை கபில மலைச் செப்பேடு, பழனி வரமுடியாளர் செப்பேடு, பல்லடம் செப்பேடு, காரையூர்ச் செப்பேடு, பூந்துறை நாட்டார் மேலோலை, பழைய கோட்டை ஏடு, வலங்கைச் சரித்திரம், எல்லீசர் கல்வெட்டுக்கள் போன்ற பலதரப்பட்ட தரவுகளை வைத்துக் கொண்டு திருக்குறள் பற்றிய பல குறிப்புகளைத் தொகுத்துத் தருகிறது.

ஆவணங்கள் பாதுகாப்பு ஓர் அறை கூவல் என்ற கட்டுரையில் பாதுகாப்புச் சிந்தனை நம்மிடையே தோன்றிய காலகட்டத்தை நினைவு கூர்ந்து அன்றிலிருந்து இன்று வரை பாதுகாப்புத் துறையின் தோற்றம் வளர்ச்சியை எடுத்துக் கூறுகிறது, இன்றைய அறிவியல் - தொழில் நுட்பம் இத்துறைக்கு எவ்வகையில் எல்லாம் பயன்பட வல்லது என்பதை எடுத்துக் கூறி, தொல்லியற் பொருள்களைப் பாதுகாக்க நம்மிடையே ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்துவதாக அமைந்துள்ளது.

சோழநாட்டு ஆவணங்கள் என்ற கட்டுரை சோழ நாட்டின் ஆவணங்களைக் கொண்டு அதன் தொன்மையை வெளிப்படுத்துகிறது. சோழ நாட்டின் பழமையை வெளிக்கொணர இக்கட்டுரை ஆசிரியர் வட்டெழுத்து, தமிழ் கிரந்தம், வடமொழி போன்ற மொழிகளில் அமைந்த ஆவணங்களைத் தரவுகளாக எடுத்துக் கொண்டுள்ளார். அதன் பயனாகச் சோழர் காலத்தில் எழுத்து முறை பற்றியும் ஆய்வு செய்து பலவிதமான ஒற்றுமை வேற்றுமை களைச் சுட்டிக் காட்டிப் பல பயனுள்ள தகவல்களை நல்கியுள்ளார்.

# பொருளடக்கம்

# 1. இருபத்தோராம் நூற்றாண்டில் தமிழ்க் கல்வெட்டியல் கல்வியும் ஆய்வும்

முனைவர் எ.சுப்பராயலு

தமிழ்க் கல்வெட்டியல் ஒரு தனி அறிவுப்புலமாக உருவாகி நூறாண்டுகள் நிரம்பி விட்டன. *1886*இல் சென்னை மாகாண அரசு ஒரு தனிக் கல்வெட்டாய்வாளர் பதவியை நிறுவி, அதில் முதல் கல்வெட்டாய்வாளராக ஊல்சு (E. Hultzch) என்ற ஜெர்மானிய அறிஞரை அமர்த்தியது. இப்பதவி *1903*இல் 'இந்திய அரசின் கல்வெட்டாய்வாளர்' என்று உயர்த்தப்பட்டது. இக் கல்வெட்டாய்வாளர் அலுவலகம் காலப்போக்கில் ஏற்பட்ட சில மாற்றங்களோடு இன்றளவும் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் ஒரு பிரிவாக இயங்கி வருகிறது. முதலில் சென்னை மாகாணத்திலும், அதனை ஒட்டிய பகுதிகளிலுமே கல்வெட்டாய்வு செய்து வந்த இத்துறை, *1945*க்கு மேல் இந்தியா முழுவதும் தன் பணியை விரிவு படுத்தியது. இத்துறையின் கண்டுபிடிப்புக்கள் பற்றிய ஆங்கிலச் சுருக்கங்கள் மட்டும் ஆண்டறிக்கைகளில் வெளியிடப்பட்டன. கல்வெட்டுக்களின் பாடங்கள் தனித் தொகுதிகளில் வெளியிடப்பட்டன.

ஊல்சு பதவியில் இருந்த பதினேழு ஆண்டுகளுக்குள்ளாகவே மாமல்லபுரம், தஞ்சாவூர், கரூர் போன்ற பல முக்கிய ஊர்களில் இருந்த கல்வெட்டுக்கள் தொகுக்கப்பட்டு, படித்துப் பதிப்பிக்கப்பட்டுத் தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் என்ற வரிசையில் முதல் மூன்று தொகுதிகளில் வெளியிடப்பட்டன. *1950* முடிய உள்ள காலத்தில் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் ஒன்பது வெளியாயின. இவற்றில் பெரும் பகுதி தமிழ்க் கல்வெட்டுக்கள் ஆகும். இதே கால கட்டத்தில் வெளியான பிற முக்கிய வெளியீடுகள்: புதுக்கோட்டை சமஸ்தான கல்வெட்டுக்கள் *(1921)*, திருவிதாங்கூர் தொல்லியல் வரிசை *9* தொகுதிகள் *(1910-41)*, திருமலை திருப்பதி தேவஸ்தான கல்வெட்டு வரிசை *6* தொகுதிகள் *(1930-38)* ஆகியன. மைசூர் அரசு வெளியிட்ட எபிக்ராஃபியா கர்நாடிகா *(1886-1904)* வரிசையிலும் சுமார் ஓர் ஆயிரம் தமிழ்க் கல்வெட்டுக்கள் உள்ளன.

இவ்வெளியீடுகள் வாயிலாக முதன்முறையாகத் தமிழ்நாட்டு வரலாறு முறையாக எழுதப்பட வழியேற்பட்டது. குறிப்பாக, அதுவரை இலக்கியங்கள் மூலமும் செவிவழியாகவும் பல்லவர், சோழர் முதலிய அரச பரம்பரைகள் பற்றி அறிந்த விவரங்கள் எவ்வளவு அரைகுறையானவை என்னும் வகையில்

ஏராளமான செய்திகளை மேற்சொன்ன கல்வெட்டுக்கள் வழங்கின. ஆகவே, இவற்றை வரலாற்றாசிரியர் ஆர்வத்துடன் நாடத் தொடங்கியதில் வியப்பில்லை.

இம் முதல்கால கட்டத்தில் கல்வெட்டுக்கள் தொகுப்புப் பணிக்கு இணையாக அவற்றின் செய்திகளைப் படித்துச் செரித்தும், பகுப்பாய்ந்தும் கூட்டிணைப்புச் செய்து, பல அரசுகளின் வரலாறுகளை வரையும் பணியைக் கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், ஆர். கோபாலன், நீலகண்ட சாஸ்திரியார், A.அப்பாதுரை, வெங்கடரமணய்யா போன்ற பல வரலாற்றாசிரியர்கள் மேற்கொண்டார்கள். *1920*களில் பல்லவர் வரலாறும் பாண்டியர் வரலாறும் உருப்பெற்றன. அடுத்த பத்து ஆண்டுகளில் சோழப் பேரரசின் வரலாறும், விஜயநகரப் பேரரசின் வரலாறும் எழுதப்பட்டன. *1940*களில் தமிழாசிரியர் தமிழில் வர்லாறு எழுதும் போக்கும் வளர்ந்தது. இந்த வகையில் சதாசிவ பண்டாரத்தாரின் பாண்டியர் வரலாறு *(1940)* மற்றும் பிற்காலச் சோழர் சரித்திரம் *(1949-51)* ஆகியனவும் இராசமாணிக்கனாரின் பல்லவர் வரலாறும் *(1945)* சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இந் நூல்களே அன்றிக் கட்டுரைகள் பல ஆங்கில இதழ்களிலும் தமிழிதழ்களிலும் எழுதப்பட்டன. மதுரைத் தமிழ்ச் சங்கம் *1903* தொடங்கி நடத்தி வந்த செந்தமிழ் என்ற மாத இதழ் வரலாற்றுப் புலத்தில் மிகுந்த அக்கறை காட்டியது. இவ்விதழில் கல்வெட்டு ஆண்டறிக்கைகளை விளக்கஞ் செய்வதும் இயல்பான நடவடிக்கைகளாக இருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. கல்வெட்டுக்களையும் இலக்கியங்களையும் இணைத்துப் பார்க்கும் பணியை அவ்விதழின் பதிப்பாசிரியர் பெரும் புலவர் மு. ராகவையங்கார் தொடங்கி வைத்தார். கூடவே து.அ. கோபிநாத் ராவ், சடகோப ராமானுஜாசாரியார், சோமசுந்தர தேசிகர் முதலியோர் பல கல்வெட்டுக்களை இவ்விதழில் வெளியிட்டு விளக்கினர்.

நாடு விடுதலைக்குப் பின்னால் வந்த வெளியீடுகளில் முக்கியமானது தி.நா. சுப்பிரமணியம் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுச் சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் வெளியிட்ட தென்னிந்திய கோயிற் சாசனங்கள் *3* தொகுதிகள் *(1953-57)* ஆகும். ஆசிரியர், மூன்றாம் தொகுதியில் இணைத்துள்ள 'தமிழ் நாட்டுச் சாசனவியல்', 'தமிழ் எழுத்து வரிவடிவ வளர்ச்சி' மற்றும் 'சாசனச் சொல்லகராதி' ஆகியன கல்வெட்டியலார் யாவருக்கும் மிகவும் பயன்படும் கருவிகளாகும். இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப்பிரிவு தென்னிந்தியக் கல்வெட்டுகள் வரிசையில் தமிழுக்கென்று மேலும் *8* தொகுதிகளை இந்த ஐம்பது ஆண்டுகளில் வெளியிட்டது. இவை தவிர, கே.ஜி. கிருஷ்ணன் அவர்கள் பதிப்பித்த கரந்தைச் செப்பேடுகள் ஒரு சிறப்பிதழாக வெளியாகியுள்ளது.

*1960*-இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பண்டை வரலாறு மற்றும் தொல்லியலுக்கென்று ஒரு துறை துவக்கப்பட்டது. இத்துறையில் முதுகலைப் பட்டப்படிப்பு மாணவர்களுக்குக் கல்வெட்டியல் ஒரு சிறப்புப் பாடமாகக்

கற்பிக்கப்பட்டது. அதனால் பலர் தம் முனைவர் பட்ட ஆராய்ச்சிக்குக் கல்வெட்டுக்களை மிகுதியாகப் பயன்படுத்தும் வாய்ப்பு ஏற்பட்டது. எனினும், இத்துறை தானே கல்வெட்டுக்களைத் தொகுத்து வெளியிடும் பணியினைத் தீவிரமாக மேற்கொள்ளவில்லை என்ற குறை உண்டு.

*1961*-இல் தமிழ்நாடு அரசு தனியாக ஒரு தொல்பொருள் ஆய்வுத் துறையை நிறுவியது. *1965*-க்குப் பின் இத்துறை விரிவு பெற்றது. அப்போது, இத்துறை ஏற்பட முக்கிய தூண்டுகோலாக இருந்த திரு. சா. கணேசன் அவர்கள் இத்துறை மாவட்ட வாரியாக எல்லாக் கல்வெட்டுக்களையும் தொகுத்து விரைவில் வெளியிட வேண்டும் என்று ஒரு குறிக்கோளை முன் வைத்தார். அதற்கிணங்க வடகோடியில் சென்னை மாநகரிலும் தென்கோடியில் குமரி மாவட்டத்திலும் கல்வெட்டுக் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டுத் தொகுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் *1970-72*இல் வெளியிடப்பட்டன. அதற்குப்பின் அத்திட்டம் ஓரளவு சுணங்கிவிட்டது. கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் செங்கம் நடுகற்கள், தர்மபுரி மாவட்டம் மற்றும் பழைய தஞ்சை மாவட்டத்தில் மூன்று வட்டங்களைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் ஆகியனவே வெளியிடப்பட்டன. இருப்பினும் இத்துறை, கல்வெட்டியல் அறிவை, பரவலாக்கப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டது. கல்வெட்டியல் மற்றும் தொல்லியலில் ஓராண்டுப் பட்டயப்படிப்பு மூலம் ஆண்டு தோறும் சிலருக்கு நல்ல பயிற்சி கொடுக்கப்படுகிறது. பள்ளி, கல்லூரி ஆசிரியர்களுக்கென்று குறுகியகாலப் பயிலரங்குகள் பல நடத்தியதன் காரணமாக பல மூலை முடுக்குகளில் அதுவரை அறியப்பெறாத பல கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்க வழியேற்பட்டது. ஆங்காங்கு வட்டார வரலாற்றுக் கழகங்கள் தோன்றவும் அவற்றின் மூலம் கல்வெட்டு, தொல்லியல் ஆய்வில் ஆர்வத்தைத் தூண்டவும் இத்துறை பெரிதும் தூண்டுகோலாக இருந்தது என்பதையும் பாராட்டவேண்டும்.

*1982*-இல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஒரு தனித் துறை துவக்கப்பெற்றது. இந்த நிகழ்ச்சி கல்வெட்டியல் வரலாற்றிலேயே முக்கியமான ஒன்றாகும். இத்துறை முதலில் தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்களை முழுமையாகத் தொகுத்துப் பதிப்பிக்கும் பணியை மேற்கொண்டது. அடுத்து, பதினைந்தாம் நூற்றாண்டுக்குப்பின் உள்ள கல்வெட்டுக்களை அரச பரம்பரை வாரியாக அல்லது இடவாரியாக வெளியிடும் வகையில் சில சிறப்புத் திட்டங்களை மேற்கொண்டது. சேதுபதிகளின் செப்பேடுகள் தொகுதி சென்றாண்டு வெளியிடப்பட்டது. தொண்டைமான்களின் செப்பேடுகளும் சேலம் கல்வெட்டுக்களும் அச்சாகவேண்டும். இத்துறையின் வாயிலாகக் கொடுமணலில் மேற்கொண்ட அகழாய்வில் நூற்றுக்கு மேற்பட்ட மட்கலங்களில் கீறி எழுதப்பட்ட தமிழ் பிராமி கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன என்பது இன்னொரு முக்கியச் செய்தி.

இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையும் பிற துறைகளும் சேர்ந்து இந்தியா முழுவதும் கண்டறிந்து, தொகுத்துள்ள கல்வெட்டுக்கள் எண்ணிக்கை ஏறக்குறைய *60,000* ஆகும். இவற்றில் மூன்றில் இரண்டு பகுதி தமிழ், கன்னடம் மற்றும் தெலுங்கு மொழிகளில் எழுதப்பட்டவை என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டும். இம்மூன்று மொழிகளுள்ளும் தமிழே பெரும் எண்ணிக்கையைப் பெற்றுள்ளது. இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட தமிழ்க் கல்வெட்டுக்கள் சுமார் *24,000* ஆகும். கன்னட மொழியில் *11,000*மும் தெலுங்கில் *5000*மும் உள்ளன. மலையாள மொழிக் கல்வெட்டுக்கள் என்று ஒரு சில நூறே கிடைத்துள்ளன. காலவாரியாகப் பார்த்தால் தமிழ்க் கல்வெட்டுக்கள் கீழ்வருமாறு பிரிவுபடும்.

| | | |
|---|---|---|
| கிமு. *300* | - கிபி *550* | *400* (மட்கலக் கீறல்களையும் சேர்த்து) |
| கிபி. *550* | - *850* | *1000* |
| கிபி. *850* | - *1300* | *16000* |
| கிபி. *1300* | - *1600* | *4500* |
| கிபி. *1600* | - *1900* | *2500* |

இவற்றில் கருநாடகம், ஆந்திரபிரதேசம் ஆகிய மாநிலங்களில் உள்ளனவும் அடங்கும். இவை அல்லாமல் இலங்கையில் ஒரிரு நூறு கல்வெட்டுக்கள் உள்ளன. தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இதுவரை தெரிந்தவை ஆறே. எகிப்து நாட்டில் மூன்று மட்கலக் கீறல் கல்வெட்டுக்கள் அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மேற்குறிப்பிட்ட *24000* கல்வெட்டுக்களில் மூன்றில் ஒரு பகுதி மட்டும், அதாவது சுமார் *9000* மட்டும், செம்மையாகப் படித்து, பதிப்பிக்கப்பெற்று வெளியிடப்பெற்றுள்ளன. எஞ்சியுள்ளவற்றைப் பதிப்பித்து வெளியிடல் கல்வெட்டாய்வாளர் எதிர்கொள்ள வேண்டியுள்ள ஒரு பெரிய பணியாகும். இலக்கியங்களைப் பொறுத்த வரையில் ஒன்றுக்கு மேற்பட்ட சுவடிகள் கிடைக்குமாதலால் பாட வேறுபாடுகள் கொடுக்கப்பெறுவது வழக்கம். ஆனால், ஒரு கல்வெட்டுக்குப் பெரும்பாலும் ஒரு பாடம் மட்டுந்தான் இருக்க முடியும். ஆயினும் கல்வெட்டு எழுத்துக்கள் பல காரணங்களால் தேய்ந்தும் சிதைந்தும் காணப்பெறுவதால் மிகக் கவனமாகப் படித்துப் பதிப்பித்தால் ஒழிய படிப்பவர் திறமைக்கும் பொறுமைக்கும் ஏற்ப பாட வேறுபாடுகள் நுழைய வழியுண்டு. இக்குறைகளைத் தவிர்க்க கல்வெட்டாய்வாளர்கள் நல்ல பயிற்சி பெறல் கட்டாயத் தேவை. ஒவ்வொரு கல்வெட்டின் பாடமும் மைப்படி வழி இரண்டு மூன்று முறையாவது படிக்கப்பெற வேண்டும். சில நேரங்களில் மீண்டும் ஒரு முறை மூலக்கல்லை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டியிருக்கும். இப்படிச் செய்த பிறகே கல்வெட்டுப் பதிப்பு முழுமை பெறும். ஆகவே, பயிற்சி பெற்ற கல்வெட்டாய்வாளர் தமிழைப் பொறுத்தவரை

பலர் இருப்பதாகத் தோன்றினாலும் கல்வெட்டுக்களின் எண்ணிக்கையைக் கணக்கில் கொண்டால் அவர்கள் எண்ணிக்கை போதாது. மேலும், இன்னும் களத்தில் புதியனவாகக் கண்டறியப்பட வேண்டிய கல்வெட்டுக்கள் சில ஆயிரங்களேனும் இருக்கலாம்.

முறையாகப் படித்துப் பதிப்பிக்கப்பெற்றுள்ள கல்வெட்டுக்களும் கூட பல தொகுதிகளில் பலவாறு வெளியிடப்பட்டுள்ளன. சில பதிப்புக்களில் ஒவ்வொரு கல்வெட்டுக்கும் ஒரு சிறு விளக்க முன்னுரை கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வக் கல்வெட்டின் காலம், செய்தி போன்ற விவரங்கள் கொண்ட இம்முன்னுரை அவற்றை அணுகுவோருக்கு ஓரளவிற்கு வழிகாட்டியாக அமையும். சில பதிப்புக்களில் இம்முறை பின்பற்றப்படாதது ஒரு குறையாகும். சிறப்பு நோக்கீட்டுப் பட்டியல்களும் அட்டவணைகளும் ஓரளவு இக்குறையைப் போக்கலாம். *1917*-இல் வெளியான ரங்காச்சாரிய அவர்களின் இடவாரிப் பட்டியல். *1932*-இல் வந்த ராபர்ட் ஸீவல் அவர்களின் காலவாரிப் பட்டியல் ஆகியன பெரும்பாலும் காலாவதியாகி விட்டன. தமிழ் பிராமி கல்வெட்டுக்களுக்கு *1968*-இல் ஐராவதம் மகாதேவன் அவர்கள் வெளியிட்ட பட்டியலை அவரே இப்பொழுது புதுக்கி வெளியிடவுள்ளார். *1974*-இல் சோழர் கல்வெட்டுக்களுக்கு மட்டும் ஒரு பட்டியல் பேராசிரியர் கராஷிமா அவர்கள் குழுவினரால் வெளியிடப்பட்டது. செய்திகளைப் பகுப்பாய்ந்து குறியீடுகளாக மாற்றி இப்பட்டியலில் கொடுக்கப்பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. *1966-1972*-இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் T.V. மாகலிங்கம் அவர்கள் தலைமையில் உருவாக்கப்பட்ட 'தமிழ்நாடு மற்றும் கேரள கல்வெட்டுக்களுக்கான இடவாரிப் பட்டியல்' இந்திய வரலாற்றாய்வுக் கழகத்தால் அண்மையில் *10* தொகுதிகளில் வெளியிடப்பட்டுள்ளது. தமிழ்நாட்டு சமணர் கல்வெட்டுக்களுக்கு மட்டும் ஒரு தனிப் பட்டியல் A. ஏகாம்பரநாதன் குழுவினரால் செய்யப்பட்டுள்ளது. பி. ஆர். கோபால் குழுவினரால் செய்யப்பட்ட விஜய நகர கால கல்வெட்டுக்களுக்கான பட்டியலைக் கருநாடக அரசு தொல்லியல் துறை விரைவில் வெளியிடவுள்ளது. கடந்த இருபது ஆண்டுகளாகக் குடந்தை சேதுராமன் அவர்கள் வெளியிட்டு வரும் காலக்கணிப்புப் பட்டியல்களும் குறிப்பிடத்தக்கவை. இன்னும் இவைபோன்ற நோக்கீட்டுப் பட்டியல்களும் அட்டவணைகளும் பல உருவாக்கப்பெறவேண்டும். அதுவும் விளக்கக் குறியீட்டுப் பட்டியல்களாக அமைந்தால் உயர் வரலாற்றாராய்ச்சிக்கு மிகவும் பயன்படும்.

கல்வெட்டுக்கள் பெரும்பாலும் அடிப்படையில் அறக்கொடைச் செய்திகளைப் பற்றியன. கோயில் சுவர்களிலே பொறிக்கப்பட்டுள்ளன. ஆகவே, அவை ஆன்மீகத் துறைச் செய்திகளையே மிகைப் படுத்திக் கூறும் என்று கருத இடமுண்டு. ஆயினும் கொடைகள் புரிந்தோர் உலகியல் வாழ்க்கையைப் பெரிதும் விரும்பியவர்கள்; சமூகத்தில் மேல்நிலையிலிருந்தவர்கள். அதாவது

பெரும்பாலும் ஆளும் வர்க்கத்தினர். அதனால் அவர்களுடைய பொருளியல் மற்றும் சமூக வாழ்க்கையைப் பற்றிய பல செய்திகளை நேரடியாகவும் மறைமுகமாகவும் கல்வெட்டுக்கள் வழங்குகின்றன. சிலவற்றை ஊகித்துப் பெறலாம். கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் பதினாறாம் நூற்றாண்டு முடிய வேறு வரலாற்று ஆவணங்கள் அருகிக் கிடைக்கும் நிலையில், கல்வெட்டுச் செய்திகளை எப்படியும் பயன்படுத்த வேண்டிய கட்டாயத்தில் நாம் உள்ளோம். இச்செய்திகளை எப்படி முழுமையாக, அறிவியல் நெறியில் பயன்படுத்துவது என்பது தொடர்ந்து கேட்கப்பட வேண்டிய கேள்வி.

கல்வெட்டுக்களைத் தனித்தனியாக எடுத்துப்பார்த்தால் அளவில் சிறியவை; செய்திகளும் துணுக்குகளாகத் தான் இருக்கும். ஆகவே சில கல்வெட்டுக்களை மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுத்து இக்குறைகளைத் தவிர்க்க இடவாரியாக அல்லது காலவாரியாக கல்வெட்டுக்களைத் தொகையாக்கி ஆய்வு மேற்கொள்ள வேண்டும். இந்நெறிமுறையை எளிதாகக் கையாள கல்வெட்டுச் செய்திகளைப் பகுப்பாய்ந்து கால, இட முறைப்படி வகுக்கப்பட்ட பல்வேறு திரட்டுகள் அல்லது அடைவுகள் (Concordances) செய்யப்பட வேண்டும். எந்த நாட்டிலும் அறிவுத்துறை வளர்ச்சியைப் படம்பிடித்துக் காட்டுபவை அடைவுகள், அகராதிகள், களஞ்சியங்கள் முதலியன. இவ்வகையில் சீனம், ஜப்பானிய மொழி, ருஷிய மொழி, ஆங்கிலம், ஜெர்மானியம் போன்ற மொழிகளோடு ஒப்பிடும்போது இந்திய மொழிகள் மிகவும் குறைபாடுடையவை. தமிழ் அதற்கு விதிவிலக்கல்ல. *(1973-1975-*இல்*)* சோழர் கல்வெட்டுக்களில் உள்ள ஆள்பெயர்கள் திரட்டு ஒன்றை கராஷிமா அவர்களும் நானும் சேர்ந்து உருவாக்கி *1977*-இல் வெளியிட்டோம். இதற்கு முன்பும் பின்பும் கராஷிமா குழுவினர் சோழர், பாண்டியர் மற்றும் விஜயநகர அரசுகளின் வருவாய்த்துறைச் சொற்களைத் திரட்டுக்களாகச் செய்துள்ளனர். எங்கள் துறையில் வரலாற்று முறை நிலப்படத் தொகுதிக்காகக் கணிப்பொறியைத் துணைக்கொண்டு இடப்பெயர்த் திரட்டு ஒன்றை உருவாக்கும் பணியும் நடந்துவருகிறது.

கல்வெட்டு அகராதியைப் பொறுத்த வரையில் *1957*-இல் தி. நா. சுப்பிரமணியம் செய்த அகராதியை மேம்படுத்தும் வகையில் ஒன்றும் வெளியாகவில்லை. இருபது ஆண்டுகளுக்கு முன் மர்ரே ராஜம் அவர்களின் வரலாற்று முறை தமிழ் அகராதித் திட்டத்துக்காக என்னால் செய்யப்பட்ட கல்வெட்டு அகராதி இன்னும் வெளியிடப்படவில்லை. கூடியவிரைவில் அதைப் புதுக்கி வெளியிட வேண்டும். மதுரைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட சி. கோவிந்தராஜனாரின் கல்வெட்டுச் சொல் அகர முதலி *(1987)* அளவில் சிறியது; மேலும் செம்மையாக்கப்பட வேண்டும். தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையும் கல்வெட்டு அகராதிப் பணியில் ஒரு சில ஆண்டுகளாக ஈடுபட்டுள்ளது.

அடுத்து, கல்வெட்டு எழுத்துக்களைப் பற்றி நிறையச் சொல்லலாம். கல்வெட்டு எழுத்துக்களைப் பொறுமையாக விருப்பு வெறுப்பின்றி ஆராய்ந்தால் தமிழ் எழுத்து வளர்ச்சி பற்றிய பல அரைகுறை விவாதங்களுக்கு விடை காணலாம். *1924*-இல் இந்திய அரசு கல்வெட்டாய்வாளர் ஆக இருந்த கே.வி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் தமிழ்நாட்டு பிராமி எழுத்துக் கல்வெட்டுக்கள் தமிழ் மொழியில் தான் எழுதப்பட்டுள்ளன என்று ஐயந்திரிபற நிறுவினார். அதற்குப் பின் தமிழ் எழுத்து வளர்ச்சி பற்றிய நம்முடைய அறிவு மிகவும் வளர்ந்துள்ளது. இதிலும் தி.நா. சுப்பிரமணியம் அவர்கள் பங்களிப்பு நிகரற்றது. *1938*-இல் அவர் பண்டைத் தமிழ் எழுத்துக்கள் என்ற சிறந்த நூலை வெளியிட்டார். *1965* தொடங்கி தமிழ் பிராமி வளர்ச்சி குறித்து ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஆராய்ந்து சில முக்கிய கருத்துக்களை வெளியிட்டுள்ளார். இன்னும் ஒருசில மாதங்களில் அவர் ஆய்வுகள் ஒரு முழுநூலாக வெளியிடப்படும் என்பது மகிழ்ச்சியான செய்தி. எங்கள் துறை ஆய்வு மாணவர் திரு. இரா. கோவிந்தராஜன் செய்து தமிழகத் தொல்லியல் கழகம் வெளியிட்டுள்ள தமிழ்நாட்டு எழுத்து வளர்ச்சி என்ற நூல் ஒரு சிறிய ஆனால் ஆழமான ஆய்வேடு ஆகும். இந்த நூலின் கால எல்லை கி.பி. *5*ஆம் நூற்றாண்டு முதல் *10*ஆம் நூற்றாண்டு முடிய மட்டும்தான். ஆகவே இதை மேலும் தொடர்ந்து விரிவு படுத்த வேண்டும். எழுத்துவளர்ச்சி தொடர்பான அரசியல், சமூக, பண்பாட்டுக் கூறுகளையும் நிறைய ஆராயவேண்டியுள்ளது.

தமிழ்க் கல்வெட்டுக்களில் வட்டெழுத்து, தமிழ், கிரந்தம் என்ற மூன்று வகை எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதில் வட்டெழுத்து பத்தாம் நூற்றாண்டுக்குப் பின் தமிழ்நாட்டில் வழக்கிலில்லை. கிரந்த எழுத்துக்கள் வடமொழிச் சொற்களை எழுதப் பயன்படுத்தப்பட்டன. கிரந்த எழுத்து அறிவு இப்பொழுது மிகவும் அருகிவிட்டது. ஆகவே அச்சில் பயன்படுத்துவது கடினமாக உள்ளது. இதற்கு மாற்றாக, கிரந்த எழுத்துக்களின் திரிந்த வடிவமான மலையாள எழுத்துக்களை அச்சில் பயன்படுத்தலாமா என்பதைக் கருதிப் பார்க்கலாம். அல்லது வருக்க எழுத்துக்களுக்கு எண் குறியீடு பயன்படுத்தவேண்டும்.

கல்வெட்டுக்களைக் கால இடப் பரிமாணங்களில் எளிதில் வகைப் படுத்தலாம் ஆதலால் அவை மொழி வளர்ச்சியை ஆராயப் பெரிதும் பயன்படும். கல்வெட்டுத் தமிழ் முதன்முதல் இலங்கை ஆய்வாளர் கணபதி பிள்ளை அவர்களால் *1934*-இல் லண்டன் பல்கலைக்கழகத்தில் ஆராயப் பெற்றது. இந்த ஆய்வுப்பணி ஏறக்குறைய *20* ஆண்டுகள் இடைவிட்டு பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களால் சென்னைப் பல்கலைக்கழகத்திலும் அடுத்து அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் அறிமுகப்படுத்தப்பட்டது. அவருடைய ஆய்வு மாணவர் சிலர் கல்வெட்டுத் தமிழைக் காலவாரியாக

ஆராய ஊக்கப்படுத்தப்பட்டனர். பேராசிரியர் 1965-இல் வெளியிட்ட தம் தமிழ்மொழி வரலாற்றில் மேற்குறிப்பிட்ட ஆய்வுகளின் முடிவுகளை ஓரளவு பயன்படுத்தியுள்ளார். இவ்வாய்வு தொடர்பாக அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட ஒரு நல்ல நூல் பேராசிரியர் அகத்தியலிங்கம், முனைவர் சே.வை. சண்முகம் ஆகியோர் கூட்டாக வெளியிட்ட 1250-1350-இல் 'தமிழ்க் கல்வெட்டு மொழி' என்ற ஒரு ஆய்வு நூலாகும். கல்வெட்டுமொழியாய்வு கேரளப் பல்கலைக்கழகத்திலும் ஓரளவு நடந்தது. 1976-இல் திருவனந்தபுரம் திராவிட மொழிகள் கழகத்தில் ஆ. வேலுப்பிள்ளை அவர்கள் செய்து வெளியிட்ட கல்வெட்டுத் தமிழில் கிளை மொழிகள் என்ற நூலுக்குப் பின் மொழியியலார் கல்வெட்டுக்களை அவ்வளவாகப் பார்க்கவில்லை. இது வருத்தத்துக்குரியது. தமிழுக்கு வரலாற்று முறை அகராதி இல்லை என்பது ஒரு பெரிய குறை. மர்ரே ராஜம் அவர்கள் நிறுவனத்தில் செய்யப்பட்டு வந்த பெரிய அளவிலான வரலாற்று முறை அகராதித் திட்டம் முடிந்தும் முடிவுறாமல் உள்ளது. அவரும் மறைந்துவிட்டார். தமிழ்ப் பல்கலைக்கழகமாவது இத்திட்டத்தை ஏற்று முடிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இவ்வகராதி வேலைக்குக் கல்வெட்டு மொழி மிகவும் உதவும் என்பதைக் குறிப்பிடத் தேவையில்லை.

தொகுத்துச் சொன்னால் கல்வெட்டியலில் இதுவரை ஏற்பட்டுள்ள முன்னேற்றம் ஓரளவு நிறைவைக் கொடுத்தாலும் இன்னும் செய்யவேண்டிய பணிகள் நிறைய உண்டு. முதலில் நாள்தோறும் அழிந்து வரும் முக்கியமான கல்வெட்டுக்கள் உள்ள கற்களையாவது காப்பாற்ற வழிசெய்யவேண்டும். கள ஆய்வில் தொகுக்கப்பட்டு ஆங்காங்கே வெளியிடாமல் தேங்கிக் கிடக்கும் கல்வெட்டுக்களைப் பதிப்பித்து வெளியிட வழி வகை செய்யப்பட வேண்டும். வெளியிடப்பட்டுள்ள மற்றும் வெளியிட வேண்டிய கல்வெட்டுக்களின் பாடங்கள் கணிப்பொறியில் ஏற்றினால் அவற்றை எளிதில் பாதுகாக்கலாம். மேலும் கணிப்பொறியில் உள்ள பாடங்கள் வரலாற்றாய்வுக்கும் மொழியாய்வுக்கும் மிகவும் உதவி செய்யும். இந்த முயற்சியை எங்கள் துறை சில மாதங்களாக சோதனை முறையில் செய்து வருகிறது. ஆய்வாளர் ஒருவர் பல்லவர் கல்வெட்டுக்கள் முழுவதையும் கணிப்பொறியில் ஏற்றி வருகிறார். பலர் கூட்டாகச் செய்தால் தான் தமிழ்க் கல்வெட்டுக்கள் யாவற்றையும் கணிப்பொறியில் ஏற்றமுடியும்.

ஆர்வமுள்ள மாணவர்களைக் கல்வெட்டியலில் ஆய்வு மேற்கொள்ள ஊக்கங்கொடுக்க வேண்டும். தமிழ்க் கல்வெட்டுக்கள் தமிழ்ப் பண்பாட்டின் எச்சங்களாக மட்டுமில்லாமல் தென்னகப் பண்பாட்டின் எச்சங்களாகவும் உள்ளன. ஆகவே, தமிழ்க் கல்வெட்டியலார் பிற திராவிட மொழிக் கல்வெட்டுக்களைப் படித்துப் புரிந்துகொள்ளும் திறமை கட்டாயம் பெறவேண்டும் என்று வற்புறுத்துவேன். சிறப்பாக, பழங் கன்னட மொழியறிவு

பெறவேண்டும். கன்னடக் கல்வெட்டுக்கள் பல நேரங்களில் தமிழ்க் கல்வெட்டுப் பாடங்களை விளக்க உதவுகின்றன. எடுத்துக்காட்டாக, அய்யப் பொழில் ஐநூற்றுவர் என்ற பெரிய வணிகக்குழுவின் கல்வெட்டுக்கள் தென்னகம் முழுவதும் சிதறிக்கிடக்கின்றன. கன்னடம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலும் உள்ளன. இவற்றில் பல பகுதிகளுக்கு ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டுப் பார்த்தால் தான் சரியான விளக்கம் கிடைக்கிறது.

மேற்குறிப்பிட்ட வணிகக் குழுவினர் தங்களை மிகப் பெருமையாக 'பதினெண்பூமி தேசத் திசை விளங்கு திசையாயிரத்து ஐநூற்றுவர்' என்று சாற்றிக்கொள்வதும் வழக்கம். இவ்வணிகக் குழுவில் எல்லா திராவிட மொழிகள் பேசுவோரும் இருந்தார்கள். கடற்கரைப் பட்டினங்களில் அரபு மொழியினரும் கலந்து உறவாடினார்கள். இவர்கள் கடல்கடந்து இலங்கை, கடாரம், ஸ்ரீ விஜயம், சீனம் என்று பல நாடுகளுக்குச் சென்று வணிகஞ் செய்து அரிய பொருள்களைத் தென்னகத்துக்குக் கொணர்ந்தார்கள். அவர்கள் அறிவின் எல்லை மிகவும் பரந்துபட்டிருந்தது. இருபத்தோராம் நூற்றாண்டில் நுழையவுள்ள நாம் அவர்களை ஓரளவேனும் பின்பற்றுவோமாக.

* * *

# 2. சோழர்காலக் கோயிற் பணியாளர் சமூகமும் பொருளாதார நிலைகளும்

முனைவர் சூ. நிர்மலாதேவி

சோழர்கள் காலத்தில் கோயிலை மையமாகக் கொண்டு பல்வேறு சமுதாயப் பணிகளும் இயங்கி வந்ததைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. கோயில் இறைவன் குடிகொண்டுள்ள இல்லம் என்பதுடன்,




பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இக்கட்டுரை தஞ்சைப் பெருவுடையார் கோயிற் பணியாளர் சமூகம் பெற்றிருந்த பொருளாதார நிலைகளை அக்கோயிற் கல்வெட்டுக்கள் வழி நின்று புலப்படுத்துகின்றது.

## கோயிற் பணியாளர் சமூகம்

| | | | |
|---|---|---|---|
| *1.* | தளிச்சேரிப் பெண்டிர் | - | (கோயிலைச் சேர்ந்த பெண்டிர்) |
| *2.* | திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வோர் | - | (தேவாரப் பதிகங்களைப் பாடுபவர்கள்) |
| *3.* | நிவந்தக்காரர் | - | (கோயிற் கைங்கரியம் செய்பவர் கோயிலுக்குரிய பல்வேறு தொழில் புரிவோரும் இதில் அடங்குவர்) |
| *4.* | ஸ்ரீபண்டாரிகள் | - | (கோயிற் கருவூலப் பொறுப்பாளர் (கஜானா அதிகாரி) |
| *5.* | கரணத்தார் | - | (கரணம் எனும் நியாயசபை உறுப்பினர்) |

6. திருப்பரிசாரகர் - (கோயிற் சமையற் காரியம் பார்க்கும் பிரமச்சாரிகள்)

7. திருமெய்காப்பார் - (கோயிற் காவலாளிகள்)

என்ற ஏழு நிலைகளில் கோயிற் பணியாளர்கள் குறிக்கப்பட்டுள்ளனர்.[1]

## கோயிற் பணியாளர் ஊதிய விவரம்

"பேரால்" (ஓர் ஆளுக்கு) இவ்வளவு பங்கு என்ற நிலையில் ஒவ்வொரு நிலையினருக்குமுள்ள ஊதிய விவரம் குறிக்கப்பட்டுள்ளது.

ஒரு பங்கு என்பது "இரண்டு அல்லது இரண்டரை ஏக்கர் நன்செயும், பதினாறு ஏக்கர் புன்செயும் கொண்ட நில அளவு"[2] எனத் தெரிகின்றது.

இதன்படி, கோயிற் பணியாளர் பெற்ற பங்குகள் எவ்வளவென்பது தஞ்சைக் கோயிற் கல்வெட்டுக்களை அடிப்படையாகக் கொண்டு முறைப்படுத்திக் கீழே தரப்பட்டுள்ளது.

I

1. மாராயன்[3] (நிருத்த மாராயன், வாத்ய மாராயன் என அமையும்).

2. பேரையன்[4] (நிருத்தப் பேரையன், வாத்யப் பேரையன் என அமையும்)

3. தனிச்சேரிப்பெண்டிர், காந்தர்விகளுக்கு (பாடும் பெண்டிர்) நாயகம் செய்பவர் இவர்களுக்குத் தலைமை பூண்டவர்)

4. கணிதாகி ராஜன் அல்லது பெருங்கணி (தலைமைக் கணக்கர்)

என்ற இந்நால்வகை நிலையினரும் இரண்டு பங்கு பெற்றிருக்கின்றனர்.

II

1. நாடகமய்யன் (நாடகத்தார் தலைவன்)

2. சாக்கைக்கூத்துத் தலைவன்

3. உடுக்கை வாசிப்பவன்

4. வீணை வாசிப்பவன்

5. ஆரியம் பாடுபவன்

6. தமிழ் பாடுபவன்

7. கொலினமை செய்வான் (கோலிகன்? நெசவுத் தொழில் செய்பவன்)

8. ரத்நத் தய்யான் (ரத்தினங்களை இழைத்துத் தைப்பவன்)

9. தச்சார்யம் (தச்சுத்தொழில் புரிவார் தலைவன்)

என்ற இவ்வொன்பது வகையினரும் பெற்றது $1\frac{1}{2}$ பங்கு.

III

1. கொட்டி மத்தளமடிப்பான்

2. முத்திரைச் சங்கூதுவான்

3. ஆனைப்பாகன்

4. கடிகை மாராயன்.

5. திருப்பள்ளித் தொங்கல் பிடிப்பார் தலைவன் (கோயில் இறைவனுக்குச் சாத்தப்படும் மாலைகளைத் தயார் செய்பவர் தலைவன்)

6. தலைமைக் குயவன்

7. விளக்குடையார் தலைவன் (கோயில் திருவிளக்கேற்றும் பணி செய்பவர் தலைவன்)

8. வண்ணத்தார் தலைவன் (ஈரங்கொள்ளி எனப்படும் வண்ணார் தலைவன்)

9. அம்பட்டர் கோன் அல்லது பெருநாவிசன்

10. தய்யன் தலைவன் (தையற்காரர்களின் தலைவன்)

11. பெருங்கன்னான் இரும்பு வேலை செய்பவர் தலைவன்)

12. பெருந்தட்டான் (பொற்கொல்லர் தலைவன்)

13. தளிச்சேரிப்பெண்டிர்

என்ற இப்பதின்மூன்று நிலையினரும் பெற்ற ஊதியம் ஒரு பங்கு.

## IV

1. பக்க வாத்யன்
2. காந்தர்வர்
3. வலங்கை வேளைக்காரர் - (தமக்கிடப்பட்ட உரிய பணியைச் செய்ய இயலாவிடின் உயிரை மாய்த்துக் கொள்வதாக விரதம் பூண்ட பணியாளர்)
4. பரிக்காரர் - (குதிரை நடத்துவோர், குத்துக் கோற்காரர்)
5. கணக்கர் - (கணக்கெழுதுபவன்)
6. சன்னாலியன் - (பொருள் தெரியவில்லை)
7. தச்சன்

என்ற இவ்வெழுவகை நிலையினரும் பெற்றது ¾ பங்கு.

## V

1. தன்னேற்றம் ஆள் - குறிப்பிட்ட தொழில் செய்பவன் தன் இனத்தார்களையும் உதவியாளர்களாக நியமித்துக் கொள்வர். இத்தகு ஆட்கள் 'தன்னேற்றம் ஆள்' எனப்பட்டனர்.
2. திருப்பள்ளித் தொங்கல் பிடிப்பார்
3. நீர் தெளிப்பவர்
4. விளக்கேற்றுபவர்
5. குயவர்

என்ற இவ் ஐவகை நிலையினரும் ½ பங்கு பெற்றனர்.[5]

## VI

தவிர இவ்விதம் பங்கு என்ற நிலையில் ஊதியம் பெறாது, கோயிலில் பணி புரியும் பதியம் பாடுபவர்கள் (நாற்பத்தெண்மர்) திருப்பதிகம் பாடப்படும்பொழுது உடுக்கை வாசிப்பவன், கொட்டிமத்தளம் வாசிப்பவன் (இருவர்) என்ற இவர்கள் நாளொன்றுக்குப் பெற்றது முக்குறுணி (24படி) நெல் எனத் தெரிகின்றது.[6]

VII

ஸ்ரீபண்டாரி ஆண்டொன்றுக்கு எத்தனை கலம் நெல் பெற்றான் என்பது குறிக்கும் கல்வெட்டு வரிகள் சிதைந்துள்ளன.[7]

பரிசாரகஞ் (சமையற்தொழில்) செய்யும் மாணி நாளொன்றுக்குப் பதக்கு (16படி) நெல்லும் ஆட்டை (ஆண்டு) வட்டன் காசு நாலும் பெற்றிருக்கிறான்.[8]

கரணத்தார் எனும் நியாயசபை உறுப்பினன் ஓராண்டுக்கு இருநூற்றுக் கல நெல்லை ஊதியமாகப் பெற்றமை தெரிகின்றது.[9]

## ஊதியத்தைத் தொர்ந்து பெற அமைக்கப்பட்ட விதிமுறைகள்

அவ்வவர் ஆற்றும் பணிக்கு மேற்கூறிய விகிதங்களில் ஊதியம் அளிக்கப்பட்டிருப்பதுடன் அவற்றைப் பெறுவதில் சில விதி முறைகளும் பின்பற்றப்பட்டுள்ளமை தெரிகின்றது.

*(1)* ஊதியம் பெறுவோன் இறந்துவிட்டாலோ, குறிப்பிட்ட மன்னனின் ஆட்சிக்குப்படாத வேறு தேசத்திற்குச் சென்றுவிட்டாலோ, அவனது வாரிசினர் அவ்வூதியத்தைப் பெற்றுப் பணி செய்யலாம் என்பது முதல் விதி. இதனை,

> "இவர்களில் செத்தார்க்கும் அனாதேசம் போனார்க்
> குந் தலைமாறு அவ்வவர்க்கு அடுத்தமுறை கட
> வார் அந்நெல்லுக்குப் பெற்றுத் திருப்பதியம் விண்
> ணப்பஞ் செய்யவும்"[10]

இப்படிப் பங்குபெற்ற இவர்களில் செத்தார்க்கும் அனாதேசம் போனார்க்குந் தலைமாறு இவ்விவர்க்கு அடுத்தமுறை கடவார் இக்காணி[11] பெற்றுப் பணி செய்யவும்"[12]

என்ற கல்வெட்டு வரிகள் இதனைத் தெளிவுபடுத்துகின்றன.

கோயிற் பணி செய்வாரின் பரம்பரை தொடர்ந்து நல்வாழ்வு வாழ அக்கறை காட்டியமை இவ்விதியால் புலனாகின்றது.

கல்வெட்டு வெட்டப்பட்ட காலத்திலேயே குறிப்பிட்ட நபர் இறந்ததால் வழிபட்ட உறவினர்க்கு இவ்வுரிமை வழங்கப்பட்டதையும் கல்வெட்டு வரிகள் உறுதிப்படுத்துகின்றன.

> "இவன் செத்தமையில் இவன் மகளைக் கொண்ட இவன்
> ——— ப ——— மகன் அரையன் சதாசிவனுக்குக் காணி யாகவும்"[13]

"இவன் செத்தமையில் இவன் தம்பி கீர்த்தி
கிளைதாங்கிக்குக் காணியாகவும்"[14]

"இவன் செத்தமையில் இவன் தம்பி நூற்றெண்
....... ள ...........க்குக் காணியாகவும்"[15]

என அமைவனவற்றைச் சான்று காட்டலாம்.

*(2)* இரண்டாவது விதியாக, அடுத்த வாரிசினர் தொழில் செய்வதற்குரிய தகுதியில்லாதவராயிருப்பின் தகுதி உடைய ஓர் ஆளை இட்டு, ஊதியத்தை ஆளிட்ட அவனே பெற்றுக் கொள்ளலாம் என அமைகின்றது. இது, "அவ்வவர்க்கு அடுத்த முறை கடவார் தாந்தாம் யோக்யர் அல்லாது விடில் யோக்யராயிருப்பாரை ஆவிட்டுத் திருப்பதியம் விண்ணப்புஞ் **செய்வித்து** அந்நெல்லுப் பெறவும்"[16]

"அடுத்த முறை கடவார் தாந்தாம் யோக்யர்
அல்லாது விடில் யோக்கியராய் இருப்பாரை ஆளிட்டுப்
பணி செய்வித்துக் கொள்ளப் பெறவும்"[17]

என்றமையும் கல்வெட்டு வரிகளால் தெளிவாகின்றது.

இவ்விதியால் தொழில் செய்யும் திறமை, தகுதியைப் பெறாதவர் வேறு ஆளை அதற்கென நியமித்துவிட்டுத் தொடர்ந்து அத்தொழில் செய்வதால் கிட்டும் காணியை அதாவது பரம்பரை உரிமையைப் பெற வழி கிடைத்திருக்கின்றது. இதனால் உழைப்பவன் ஒருவன் உழைக்கச் செய்து அதனால் வரும் ஊதியத்தைப் பரம்பரையாக அனுபவிப்பவன் வேறொருவன் என்ற நிலை வளர எது இருந்திருக்கின்றமை புலனாகின்றது.

தொழில் செய்ய ஆள் நியமிக்கப்பட்டபோது,

*1.* அவன் பரம்பரையும் நலனோடு வாழவேண்டும்.

*2.* பணி தொடர்ந்து நடைபெற வேண்டும்

என்ற இருவகை நன்னோக்கங்கள் மட்டுமே கருத்தில் கொள்ளப்பட்டு விதி அமைக்கப்பட்டுள்ளது. பணியைச் செய்பவன் யார்? பணியைச் செய்பவனே பலனை அனுபவிக்கிறானா? என்பன பற்றிய கவலை இவ்விதிக்கு இல்லை.

இதனால்
- தொழில் செய்யத் தெரியாதவர்கள்
- தொழில் செய்ய விருப்பமில்லாதவர்கள்
- பணி செய்து கிட்டுவதைவிடப் பணி செய்வித்துக் கிட்டும் பொருளில் இன்பம் கண்டவர்கள்

என்ற இத்தகையோர்களும் தொடர்ந்து குறிப்பிட்ட பணி செய்வதற்கான ஊதியத்தைப் பெற இவ்விதி இடம் தருகின்றது.

3. மூன்றாவது விதியாக.

"அடுத்த வாரிசு இல்லாதொழியின் அத்தொழிற்
துறைக்குரிய நியாய சபையிலுள்ளார், குறிப்பிட்ட
அப்பணியைச் செய்ய ஒருவரை நியமித்து
அவ்வாறு நியமித்த அந்நியாயசபை உறுப்பினனே
அவ்வூதியத்தைப் பெறும் உரிமை பெறுவானாக"

என அமைகின்றது. அதாவது,

"அவ்வவர்க்கு அடுத்த முறை கடவாரின்றி யொழி
யில் அந்த நியாயத்தாரே[18] யோக்யராயிருப்பாரைத்
திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய இட்டு, இட்ட
அவனே அவ்வவர் பெறும்படி நெல்லுப் பெறவும்"[19]

"அடுத்த முறை கடவார் இல்லாது விடில் அவ்வவர்
நியாயங்களுக்குத் தக்கவரில் அவ்வவர்
நியாயங்களிலாரே யோக்யராய் இருப்பாரை
ஆளிட்டு இட்ட அவனே காணி பெறவும்"[20]

எனக் கல்வெட்டு வரிகள் அமைவதைக் காண்கிறோம்.

சோழர்கள் காலத்தில் அடிமை முறை பரவி வளர்ந்திருந்தமைக்கு இத்தகு விதிமுறைகளும் முக்கிய காரணம் எனலாம்.

சில காசுகள் கொடுத்து வாங்கி அடிமைகளைக் கோயிலில் குறிப்பிட்ட தொழில் செய்யுமாறு விட்டுவிட்டு, அப்பணிக்கெனக் கிட்டும் கோயிற் மானியத்தைத் தாங்களே பெற்று வாழ இவ்விதிகளில் வழி இருந்திருக்கிறது.

கோயிற் பணிக்கென அடிமைகள் விற்கப்பட்ட செய்திகளைப் பன்னூற்றுக் கணக்கான கல்வெட்டுக்கள் சான்றுகளாக நின்று உறுதிப் படுத்துகின்றன.

வயலூர்க் கோயிலுக்கு ஒரு கோயில் அலுவலாளர் திருப்பதிகம் பாடுவதற்காகவும் ஈசனுக்கு வெண்சாமரம் வீசுவதற்காகவும் மூன்று பெண்களை விலைக்கு வாங்கியதாகத் தெரிகின்றது.[21]

திருவடந்தை என்ற ஊரிலுள்ள கல்வெட்டு (கி.பி.1002) பன்னிரெண்டு குடும்பத்துச் செம்படவர் ஸ்ரீவராகி தேவர் கோயிலுக்கு இரு அரசாங்க அலுவலர்களால் விற்கப் பெற்றதைக் குறிப்பிடுகின்றது. இவர்கள் நெய்தல், மீன்பிடித்தல் போன்ற தொழில்களில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றனர்.[22]

கி.பி.1119-இல் திருவல்லத்துக் கோயிலுக்குச் சூலம் பொறித்த சில பெண்கள் தேவரடியார்களாக விற்கப்பட்டதாகத் தெரிகின்றது.[23]

இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் கி.பி.1175-இல் 4 பெண்கள் திருவாலங்காட்டுக் கோயிலுக்கு 700 காசுக்கு விற்கப்பட்டதைத் திருச்செங்காட்டங்குடிக் கோயிற் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[24]

தஞ்சை மாவட்டம் மேலப்பெரும்பவளத்திலுள்ள கோயிலுக்கு அடிமைகளாக அறுவரைப் பதின்மூன்று காசுக்கு நாங்கூர் அந்தணன் ஒருவன் விற்றமை அவ்வூர்க் கல்வெட்டிற் பொறிக்கப்பட்டுள்ளது.[25]

சூலமங்கலத்தில் கணக்கர் இருவர் தம் அடிமைப் பெண்கள் இருவரை 'ஆள்விலைப் பிரமான இசைவுதீட்டு' எழுதிக் கோயிலுக்கு விற்றதாகத் தெரிகின்றது.[26]

அரசியல் தலைவனாகிய வயிராதரன் என்பான் தன்னுடையவும், ஸ்ரீதனமாக வந்த தன் மனைவியருடையவுமான அடிமைகளுள் 36 பேரை கி.பி.1208-இல் திருவாலங்காட்டுக் கோயிலுக்கு அடிமைகளாக விற்றமையை அவ்வூர்க் கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது.[27] இத்தகைய அடிமைகளுள் யாரேனும் ஓடிவிட்டால் அவர்களைத் தேடிப்பிடித்து வந்து, மீண்டும் அடிமைப் பணிபுரியச் செய்ய வேண்டும்மென்று மூன்றாம் குலோத்துங்கன் செய்த கட்டுப்பாடு ஒன்றும் இக்கோயிற் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

முன் குறிப்பிடப்பட்ட வயிராதரனே சென்னை திருவொற்றியூர் ஆதிபுரீஸ்வரர் கோயிலுக்கு நெல்குத்து சாலையில் நெல் குத்தத் தாய் அவளின் 4 மகள்களையும் வழிவழி அடிமைகளாகப் பணிபுரியுமாறு ஆக்கிய செய்தியை அக்கோயிலுள்ள இராஜராஜனின் 19-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது.[28]

இவ்வாறு இராஜராஜன் காலத்தும் பின்வந்த சோழ அரசர்கள் காலத்தும் அடிமை முறை கிளைத்து வளர்ந்திட, கோயிற் பணியாளர்களுக்கு இடப்பட்ட விதிமுறைகளின் நெகிழ்ச்சியும் குறிப்பிடத்தக்க ஒரு காரணமாக இருந்திருக்கிறது எனலாம்.

## கோயிற் பணியாளர் சிலருக்கு வேண்டிய தகுதி

பூமி சம்பத்து (நில உடமையாளன்) பந்து சம்பத்து (உயர்மட்ட நிலையிலுள்ள உறவினர்களை உடையவன்) அர்த்த சம்பத்து (பொன். பொருள் உடைய செல்வந்தன்) உடைய ஆட்களே, ஸ்ரீபண்டாரம், திருப்பரிசாரகர், கரணத்தார் என்ற கோயிற் பணியாளர்களாக ஆக இயலும்.

"அவ்வப் பிரம்மதேயங்களில் பூமிசம்பத்தும், பந்து சம்பத்தும் அர்த்த சம்பத்தும்உடையராயிருப்பாரை

ஸ்ரீபண்டாரஞ் செய்ய பிராமணரையும்
திருப்பரிசாரகஞ் செய்ய மாணிகளையும்
கணக்கெழுத கரணத்தார்களையும்

சந்திராதித்தவல் இடக்கடவார்களாக உடையார் ஸ்ரீராஜராஜதேவர் திருவாய் மொழிந்தருள"[29] எனக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

இதனால் பணபலம் உடையவனே சில பதவிகளில் அமர முடியும் என்ற நிலை இருந்தமை தெரிகின்றது. திறமையும், தகுதியுமிருப்பினும் பூமி, பந்து, பணபலம் அற்றவன் அப்பதவிகளை எண்ணிப் பார்க்கவும் இயலாதவனாக இருந்திருக்கின்றான். உழைப்பும், திறமையுமற்றோன் செல்வந்தன் என்ற ஒரே தகுதிக்காகக் குறிப்பிட்ட பதவிகளில் அமரவும் இவ்விதிமுறை இடமளித்திருக்கின்றது.

### இனமும், பண்பும்

சில கோயிற் பணிகள் குறிப்பிட்ட இனத்தார்களுக்கென்றே வரையறுக்கப்பட்டிருக்கின்றன. வேறு இனத்தார்கள், அவர்கள் வேறு இனத்தவர்கள் என்ற ஒரே காரணத்துக்காக அப்பணிக்குத் தகுதியற்றவர் களாக ஒதுக்கப்பட்டிருக்கின்றனர்.

ஸ்ரீபண்டாரிகளாக அந்தணர்களே நியமிக்கப்பட வேண்டும் என விதிமுறை இருந்திருக்கின்றது.

"ஸ்ரீபண்டாரஞ் செய்ய பிராமணரையும்"[30] என விதி வகுக்கப் பட்டுள்ளது. இதன்படி அந்தணர்களே ஸ்ரீபண்டாரங்களானதை,

"அருமொழி தேவ வளநாட்டு மங்கலநாட்டு மங்கலத்து
சபையார் இடக்கடவ ஸ்ரீபண்டாரஞ் செய்யும்
பிராமணன் ஒருவன்"[31]

"ஸ்ரீவீரநாராயணச் சதுர்வேதிமங்கலத்து சபையார்
இடக்கடவ ஸ்ரீபண்டாரஞ் செய்யும் பிராமணன் ஒருவன்"[32]

"உறையூர் கூற்றத்து
ராஜாசரயச் சதுர்வேதி மங்கலத்து சபையார்
இடக்கடவ ஸ்ரீபண்டாரஞ் செய்யும் பிராமணந்
ஒருவன்"[33]

என்று பல்வேறு இடங்களிலும் அமையும் கல்வெட்டு வரிகள் இதனைத் தெளிவாக்குகின்றன.

கோயிற் பண்டாரம் அல்லது நிதி நிர்வாகப் பொறுப்பைக் கஜானா அதிகாரிகளாக இவ்வினத்தாரே இருந்து நிர்வகித்திருக்கின்றனர்.

இவர்களே பிற அனைத்துக் கோயிற் பணியாளர்க்கும் ஊதியம் வழங்கும் தகுதிக்குரியராகவும் அமைக்கப்பட்டிருக்கின்றனர்.

பூமி, பந்து, அர்த்த சம்பத்துடைய திருப்பரிசாரகர், கரணத்தார்களும் கூட உள்ளூர்ப் பண்டாரத்திலும், நாட்டுப் பண்டாரத்திலுமே ஊதியம் பெற்றிருக்கின்றனர்.[34]

## அறியவருவன

1. கோயிலை மையமாகக் கொண்டே பல்வேறு சமுதாயப் பணிகளும் இயங்கி வந்திருக்கின்றன.

2. கோயிற் பணிக்கென எழுவகைப்பட்ட நிலைகளில் பணியாளர்கள் அமர்த்தப்பட்டிருக்கின்றனர்.

3. குறிப்பிட்ட விகிதங்களில் அவ்வவர்க்கேற்ற ஊதியம் வழங்கப்பட்டிருக் கின்றது.

4. கோயிற் பணி செய்வாரின் பரம்பரை நலன், பணி தடங்கலின்றி எவ்வாறாயினும் நடைபெறல் வேண்டும் என்ற இரு நன்னிலைகளை உட்கொண்டு விதிமுறைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

5. ஆயின் கோயிற் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளவர்களின் பரம்பரையினர் அவ்வப் பணிக்குரிய ஊதியத்தைத் தொடர்ந்து பெற்றிருக்கின்றனர் எனக் கருத இயலுகின்றதே தவிர, அவர்களே அப்பணியைச் செய்தனர் எனக் கருத இயலவில்லை. செய்வித்து ஊதியம் பெற விதிமுறையில் வழிகள் உள்ளதால் ஆண்டான் - அடிமைச் சமுதாயம் உருவாக ஏது இருந்திருக்கின்றது.

6. பணபலம் படைத்தவர்களே குறிப்பிட்டசில பதவிகளைப் பெற இயலும் என்ற சூழல் நிலவியிருந்திருக்கின்றது.

7. குறிப்பிட்ட சில முக்கியப் பணிகள் குறிப்பிட்ட இனத்தாருக்கென அளிக்கப்பட்டு, பிற இனத்தால் ஒதுக்கப்பட்டிருக்கின்றனர்.

இத்தகு நிலைகளையெல்லாம் "சோழர் காலம் பொற்காலம்" என்ற கருத்துக்களில் விழுந்த கரிக்கோடுகளாவே கருத வேண்டியுள்ளது.

## குறிப்புக்கள்

1. (ப.ஆ) இரா. நாகசாமி, தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் (முதற் பகுதி), தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை வெளியீடு, பக். 48-128

2. Tamil Lexicon Vol. iv, Part-I, (1930, p.2389)

3. மாராயன் அதாவது பெரும் ராசன் என்ற பொருளில் தலைமை நட்டுவனார், தலைமை வாத்தியக்காரருக்குத் தரப்பட்ட பட்டம். தலைவன் என்பதை இது குறிக்கும்.

4. பெரிய ஐயன். அதாவது பெரும் தலைவன். இதுவும் நட்டுவத்தில், வாத்தியத்தில் சிறந்த தலைமை நட்டுவனார், வாத்தியக்காரருக்கு அளிக்கப்பட்ட பட்டங்களாகும்.

5. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், முதற்பகுதி, பக்.55-99-லிருந்து இவ்விவரங்களனைத்தும் திரட்டி முறைப்படுத்தப் பட்டுள்ளன.

6. மேற்படி, நூல், பக். 48-49

7. மேற்படி, ப.101

8. மேற்படி,

9. மேற்படி,

10. மேற்படி, ப.49

11. பரம்பரை உரிமை.

12. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், ப.55.

13. மேற்படி, நூல், ப.91

14. மேற்படி, ப.93

15. மேற்படி,

16. மேற்படி, ப.49

17. மேற்படி, ப.55

18. நியாயத்தார் - நியாய சபையார்

19. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், ப.49

20. மேற்படி, நூல், ப.55

21. A.R.E. (Archaeological Report of Epigraphy II 21)

22. மேற்படி, 274, 1910

23. மேற்படி, 230, 1921

24. A.R.E. Reports 80 of 1913

25. A.R.E. Reports 216 of 1925

26. A.R.E. Reports 94 of 1926

27. M.E.R. (Manual Epigraphical Report) 296 of 1911

28. "திருவொற்றி ஊருடைய நாயனாற்கு நெற் குறு சாலைக்கு நெற்குறக் கொண்டுவிட்ட பெரியநாச்சியையும் இவள் மகள் மாரியையும் - இவள் தங்கை கவுத்தாழ் வியையும் இவள் தந்தை திருண்டையையும் இவள் தங்கை வடுகாழ்வியையும் அகப் பேர் ஐவரையும் இன்னாயனார் நெற்குறு சாலைக்கு இவர்களும் இவ்வழியில் உள்ளாரும் சந்திராதித்தவரை நெற்குறுவதாகக் கொண்டு சிலாலேகை பண்ணிக் குடுத்தேன். - கல்வெட்டு (இதழ்-4), (ப.ஆ.) இரா. நாகசாமி, ப.35

29. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், ப.101

30. மேற்படி,

31. மேற்படி, ப.102

32. மேற்படி, ப.111

33. மேற்படி, ப.114

34. திருப்பரிசாரகஞ் செய்யும் மாணிகள் பெறு நெல்லுங் காசும் உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறவும்

பண்டாரிகளுங் காரணத்தார்களும் உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார் நாட்டுப் பண்டாரத்தே பெறவும் - தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு, ப*102*

## பயன்பட்ட நூல்கள்


1. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள், முதற்பகுதி (ப.ஆ.) இரா. நாகசாமி, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு *(1969)*
2. சோழர் வரலாறு, டாக்டர் கே.கே.பிள்ளை, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், *1977*
3. மூன்றாம் குலோத்துங்க சோழன், விரா. இராமசந்திரதீக்ஷிதர், பாரி நிலையம், சென்னை - *1, 1941*
4. சோழர், கால வரலாறு, டாக்டர் ஏ. சுவாமிநாதன், மோகன் பதிப்பகம், சென்னை - *5, 1991*
5. சென்னை மாநகர்க் கல்வெட்டுகள், (ப.ஆ) இரா நாகசாமி, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, வெளியீடு, *1970*
6. South Indian Temple Inscription, Vol. III, Part-II, 1957
7. கல்வெட்டு இதழ்கள், *1,2,3,4* (ப.ஆ.) டாக்டர் இரா. நாகசாமி, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, வெளியீடு


* * *

# 3. முன்னூர்க் கல்வெட்டுகளில் அரசாணைகளும் பிற ஆவணப் பண்புகளும்

கோ. உத்திராடம்

விழுப்புரம் மாவட்டம் திண்டிவனம் - மரக்காணம் சாலையில் அமைந்த ஊர் முன்னூர். இது பண்டையத் துறைமுகமாகக் கருதப்படும் மரக்காணத்திலிருந்து (எயிற்பட்டிணம்) உள்நாட்டிற்கு வரும் சாலையில் அமைந்த ஊரும் கூட. நல்லூர் நத்தத்தனார் என்ற சங்கப்புலவர் ஒய்மாநாட்டுத் தலைவனான நல்லியக் கோடனின் ஆட்சியில் அடங்கிய ஊராகக் குறிக்கும் மூதூர் இன்றைய முன்னூர் என்று கருதலாம்.[1] கல்வெட்டுகளிலும் இவ்வூர் ஒய்மாநாட்டைச் சார்ந்ததாகவே குறிக்கப் படுகிறது. ஆனால் முன்னூர் என்றில்லாமல் 'முஞ்ஞார்' என்று குறிக்கப் பட்டுள்ளது. இவ்வூருக்கு இராஜநாராயணச் சதுர்வேதிமங்கலம், ஸ்ரீபண்டித சதுர்வேதிமங்கலம், புருஷோத்தம நல்லூர் என்ற பெயர்களும் வெவ்வேறு காலங்களில் இருந்தபோதிலும் அனைத்திலும் 'முஞ்ஞா ரான' என்று முதலில் குறிக்கப்பட்டே அப்பெயர்கள் பின் தொடர்கின்றன.[2]

தொன்மையான இவ்வூரில் ஆடவல்லேஸ்வரர் கோயில், அருளாளப்பெருமாள் கோயில் ஆகிய இரு கோயில்கள் உள்ளன. அவற்றில் 50-கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் தொன்மையானவை முதலாம் இராசேந்திர சோழனின் தூண்கல்வெட்டுகளாகும். சோழர், பிற்காலப் பாண்டியர், காடவராயர் என்ற பிற்காலப்பல்லவர், விஜயநகரர், கஜபதி வம்சத்தினர் கல்வெட்டுகளாக இக்கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இக்கல்வெட்டுகளின் ஆங்கிலக் குறிப்புகள் மட்டுமே இதுவரை வெளியிடப் பட்டுள்ளன. இக்கோயிலைப் பற்றித் தொல்பொருள் ஆய்வுத்துறையின் கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவனாக ஆய்வு செய்யும் நல்வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போது இக்கல்வெட்டுகளில் 33-கல்வெட்டுகளின் வாசகங்களை நேரில் படித்து எழுதினேன். இக்கல்வெட்டுகளின் வாசகங்களில் காணப்படும் ஆவணப்பண்புகள் சிலவற்றைப் பற்றி இங்குக் காண்போம்.

## அரசாணைகள்

ஏறத்தாழ ஆறு கல்வெட்டுகள் அரசாணை பற்றியவையாகும். கோயிலுக்குக் கொடுக்கப்படும் கொடைகளில் நிலவருவாய், வரிவருவாய் தொடர்பான கொடைகளுக்கு அரசாணைகள் தரப்பட்டுள்ளன

இவ்வரசாணைகள் வரிச்சலுகைகளைக் கொண்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் அரசாணைகள் 'திருமுகம்' என்றும் 'பிரசாதம்' என்றும் குறிக்கப் பெற்றுள்ளன. திருவாய்கேள்வி, கோனெருமை கொண்டாள் ஆகிய சொற்றொடர்கள் வரும் கல்வெட்டுகளும் அரசாணைகளாகவே உள்ளன. வரிவிலக்கு, வரிச்சலுகை என்பதால் வரியிலார், வரிபொருத்தம் போன்ற அதிகாரிகளின் கவனத்துக்கு இவ்வாணைகள் சென்று அவர்களது ஒப்பம் பெற்று வெளியிடப்பட்டுள்ளன. சில வேளைகளில் அரசனின் நெருங்கிய அதிகாரியான திருமந்திரவோலை என்பவரின் கையெழுத்தும் *(ஒப்பம்)* பெற்று வெளியிடப்பட்டுள்ளன.

இவ்வரசாணைகள் சோழ காலத்தியவையாகும். கோப்பெருஞ் சிங்கன் மற்றும் விஜயநகரக் கால அரசர்கள் வரிவருவாய்களைக் கொடையாகக் கொடுத்துள்ளனர். ஆனால் இவை கல்வெட்டுகளில் அரசாணைகள் போல் இல்லாமல் அவர்கள் தந்த ஆவணங்கள் போல் காணப்படுகின்றன. சோழர் கால அரசாணைகள் மற்றும் செய்திகளை இங்குக் காண்போம்.

## ஆயிரம் கலம் நெல்லுக்கான ஆணை

இரண்டாம் குலோத்துங்க சோழனின் கி.பி.*1145*-ஆம் ஆண்டு கல்வெட்டு அவனுடைய நேரிடையான ஆணையைக் குறித்துள்ளது.[3] இதனைக் கோனோருமை கொண்டான் என்ற சொற்றொடரால் அறியலாம். இந்த ஆணை, கோயில் மாகேஸ்வர கண்காணி செய்வார், தேவகன்மிகள் ஆகியவருக்கு அனுப்பப்பட்டது. தினசிந்தாமணி சதுர்வேதி மங்கலத்தில் ஒரு குறிப்பிட்ட நிலத்திற்கான வரியாக ஆயிரம் கலம் நெல் இறையிலியாகத் தரப்பட்டது. மேலும் அந்நிலம் கோயிலுக்கான தேவதான நிலமாகத் தரப்பட்டுள்ளது. அரசனைப் பெருமைப் படுத்துவதற்காகக் கோயிலுக்குத் தந்த நிலப்பகுதி குலோத்துங்க சோழநல்லூர் என்று பெயரும் சூட்டப்பட்டது. இந்த வரிவிலக்கு, வரி என்ற பதிவேட்டில் பதிவு செய்யப்பட்டு அதற்குச் சான்றாக 'உள்வரி' என்ற ஆவணமும் தரப்பட்டிருக்கின்றது. அரசன் வாய்மூலம் வழங்கிய ஆணை, திருமந்திரவோலை அதிகாரியால் எழுத்து மூலம் தரப்பட்ட செய்தியும் இதனில் குறிக்கப்பட்டுள்ளது.

## முன்னாளில் வழங்கிய கொடைக்குப் பின்னாளில் கல்வெட்ட ஆணை

இரண்டாம் இராஜராஜ சோழனின் கி.பி.*1164*-ஆம் ஆண்டு கல்வெட்டு அரசாணை என்பதைக் குறிப்பதற்கு, 'திருவாய்கேள்வி முன்னாக' என்ற சொற்றொடர் மூலம் தொடங்குகிறது.[4] இக்கல்வெட்டில் வரிவிலக்கு தொடர்பான செய்திகள் ஏதுமில்லை. ஆனால் இக்கல்வெட்டின் காலத்துக்கு சுமார் ஏழு ஆண்டுகளுக்கு முன் கோயிலுக்குக் கொடுக்கப் பட்ட விளக்குகள் தொடர்பாக ஆடுகள் கொடையாகக் கொடுக்கப்பட்டதைக் கல்வெட்டில் பொறித்துக்

குறிப்பிடுகிறது. எனவே, முன்னாளில் கொடுத்த கொடைகள் பின்னாளில் கல்வெட்டில் வெட்டுவதற்காக அரசன் வழங்கிய ஆணையைக் குறிக்கிறது.

## சிற்றரசுக்கு அனுப்பிய ஆணைகள்

அரசன் பெயர் குறிக்கப்படாமல் மற்றொரு கல்வெட்டு ஒன்று சம்புவராயர்க்கு எழுதப்பட்ட திருமுகம் பற்றியதாகும்.[5] கல்வெட்டின் இறுதிப் பகுதியில் 'பிரசாதம்' செய்தருளிவிட்ட பிரசாதம், என்ற சொற்றொடரும் காட்டப்பட்டுள்ளது. பிரசாதம் என்ற வடமொழிச் சொல்லுக்கு அரசனின் ஆணை என்ற பொருள் உண்டு. அரசனின் வாய்மூலம் ஆணையை மீனவன் மூவேந்த வேளான் என்ற திருமந்திரவோலை அதிகாரி எழுத்து மூலம் கொடுத்துள்ளான். இந்த ஆணை கங்கேயராயன், பங்களராயன் ஆகியோரின் வேண்டுதலுக்கு இணங்க முன்னூர்க் கோயில் இறைவன் ஆடல்வல்லானுக்கு வரிச்சலுகையாக நிலம் கொடுக்கக் கோரி சிற்றரசாக இருந்த சம்புவராயர்க்கு அனுப்பியதாகும்.

மூன்றாம் இராஜராஜ சோழனின் கிபி1256-ஆம் ஆண்டுக் கல்வெட்டு 'திருவாய்கேழ்வி முன்னாக' என்று அரசாணை குறிப்பிட்டுத் தொடங்குகிறது.[6] இராஜநாராயண சம்புவராயன் என்பவன் முன்னூர் ஆடவல்ல நாயனார், சித்திரை மாதத்தில் திருவேட்டை என்ற திருநாள் நிகழ்த்துவதற்காக ஒரு குறிப்பிட்ட நிலத்தின் எல்லா ஆயங்களையும் இறையிலியாக நீக்கிக் கொடுத்துள்ளான். சம்புவராயன் சிற்றரசன் என்பதால் பேரரசன் இராஜராஜன் மூலம் ஒரு சம்பிராயத்திற்காக ஆணையைப் பெற்று இருக்க வேண்டும். அதையே 'திருவாய்கேழ்வி முன்னாக' என்ற சொற்றொடர் குறிப்பிட்டுள்ளது.

## தேவர் எழுதின திருமுகம்

மூன்றாம் குலோத்துங்க சோழனின் கிபி1216-ஆம் ஆண்டு முன்னூர் கல்வெட்டு அம்மன்னனின் ஆணையைப் பதிவு செய்துள்ளது. 'தேவர் எழுதின திருமுகப்படி திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரி மேல் கொண்டான்' என்ற சொற்றொடர் அரசனின் ஆணையைத் தெளிவாக உணர்த்துகிறது.[7] வர்த்தராயன் என்பவன் முன்னூர் ஆடவல்லநாயனார் கோயிலில் அரசன் பெயரால் 'திருபுவன வீரன்' ஆவணித்திருநாள் கொண்டாடவும் அதற்காக 50-வேலி நிலத்தின் வரிவருவாயில் பாதியை ஒதுக்கித்தர, கேட்டதற்கு இணங்கத் தரப்பட்ட ஆணையாகும். இவ்வாணை வரிதொடர்பானது என்பதால் 'செய்ய பண்ணுவதாக வரியிலார்க்கும் வரிபொத்தக உடையார்க்கும் சொன்னோம்' என்ற சொற்றொடர் மூலம் வரியிடும் அதிகாரிகளுக்கும் உத்தரவு அரசனால் தரப்பட்டுள்ள செய்தி கல்வெட்டில் காட்டப்பட்டுள்ளது. அரசனின் வாய்மூலம் தரப்பட்ட இந்த ஆணையைத் திருமந்திரவோலை என்ற அதிகாரி எழுத்து மூலம் வெளியிட்டுள்ளான். இக்கல்வெட்டில் திருமந்திரவோலை அதிகாரியின் பெயர் குறிப்பிடப்படவில்லை.

## அரசாணையை மறுப்பது குற்றம்

கி.பி.1198-ஆம் ஆண்டைச் சேர்ந்த இரண்டாம் குலோத்துங்க சோழனின் கல்வெட்டு ஒம்படைக் கிளவியாக 'இத்தன்மத்துக்கு அழிவு செய்வார் திருவாணை மறுத்தார் பட்டது படக்கடவாராகவும்' என்று குறிப்பிடுகிறது.[8] இது அரசாணைகள் எவ்விதம் போற்றி மதிக்கப்பட்டன என்பதையும் அதை மறுத்ததற்குத் தண்டனையும், கடுமையாக இருந்தன என்பதை நமக்குத் தெளிவாக உணர்த்துகிறது.

## நிலவிலை ஆவணங்கள்

முன்னூர்க் கல்வெட்டுகளில் நிலங்கள் விற்கப்படுவதைக் குறிக்கும் செய்திகள் காட்டப்படும் போது நிலத்தின் அளவுகள் மற்றும் நிலத்தின் எல்லைகள் மிகத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. குறிப்பாக ஒருவாய்க் காலிலிருந்து பிரிந்துவரும் சிறியகாலான கண்ணாற்றமன பாசனத்தில் 11-வது சதிரத்தில் உள்ள நிலம் குறிக்கப்படுவதைச் சொல்லலாம்.[9]

இரண்டாம் குலோத்துங்க சோழனின் கி.பி.1144-ஆம் ஆண்டு கல்வெட்டு ஊர் ஆளுங்கணத்தைச் சேர்ந்த ஒருவர் கோயில் சிவபிராமணர்களுக்கு ஒரு குறிப்பிட்ட நிலத்தை எட்டுகாசுக்கு விற்றதைச் சொல்லும் சோழ 'ஆளுங்கணத்தாருள் பாசிண்டிபுரத்து ஞானமூர்த்தி பட்டன் நிலவிலை ஆவணம் இவர் சிவபிராமணர் பாரதுரஜி பட்டன் உள்ளிட்டார்க்கு நான் விற்றுக்கொடுத்த நிலமாவது'[10] என்று நிலம் விற்றவரே பேசுவது போலச் சொல்லியும் இந்த ஆவணத்திற்கு 'நிலவிலை ஆவணம்' என்று தலைப்பு தந்தும் உள்ளது. மேலும் இக்கல்வெட்டில் கோயில் பூசை செய்யும் சிவபிராமணர்கள் ஒரு குடும்பத்தினர் என்பதால் குடும்பத்தின் தலைவர் பெயர் மட்டும் குறிப்பிட்டு மற்றோரை 'உள்ளிட்டார்' என்று குறித்துக் குடும்பத்தின் அனைவரையும் உரிமையாளர்களாகச் சுட்டிக் காட்டியுள்ளது இதன் சிறப்பாகும்.

## சில ஆவண மரபுகள்

கல்வெட்டுகள் ஒவ்வொன்றும் பண்டையநாளில் கோயில் தொடர்பாக எழுதப்பட்ட ஆவணங்களே ஆகும். மேலே கண்ட அரசாணைகள் மற்றும் விலை ஆவணங்கள் ஆகியவை நேரிடையாகக் குறித்துக்காட்டப் பட்டுள்ளன. ஏனைய கல்வெட்டுகளில் ஆவணம் பற்றிய நேரடிக்குறிப்பு இல்லை. எனினும் அவை ஆவணங்களே என்று அறிவதற்கு அவற்றின் வாசகங்களே எடுத்துக்காட்டுகளாக உள்ளன. கொடை கொடுத்தவர்கள் நேரிடையாகப் பேசுவது போலவே அவ்வாசகங்கள் தன்னிலையில் உள்ளன. எடுத்துக் காட்டாக, கீழ்க்கண்ட வரிகளைக் காட்டலாம்.

"அமுதுசெய்ய கடவதாக இந்நிலம் கொண்டுவிட்டேன் பாலகண்ணன் காமன் அகதீஸ்வர முடையானேன்"[11]

"இத்திருநந்தா விளக்கு சந்திராதித்தவரை செலுத்த கடவார்களாக விட்டேன்..........மீகாம பல்லவரையனேன்"[12]

"கைக்கொண்டோம் இக்கோயில் காளியாளராக சிவபிரமணரோம்"[13]

"ஒரு சந்திவிளக்கு செலுத்த கடவோமானோம் இக்கோயில் காணியாளர்களான சிவபிராமணரோம்"[14]

"இவ்விளக்கு மூன்றும் சந்திராதித்தவரை ஏரிக்கடவோமானோம் இக்கோயில் திருவுண்ணாழிகை சபையோம்"[15]

"இத்தேவர்க்கு திருநந்தவனத்துக்கும் திருமேல் பூச்சுக்கும் திருபரி சட்டத்துக்கும் திருவிளக்கெண்ணெய்க்கும் விட்டேன் செங்கோணி அம்மையப்பன் ராஜநாராயண சம்புவராயனேன்"[16]

"நீர்வார்த்து கொடுத்தேன் கூடல் ஆளப்பிறந்தான் தேவாரமழகியானான வாணராயனேன்"[17]

என்று குறிப்பிடுகிறது. அதாவது பொழுது சாய்ந்து இருள் புலப்படும்போது விளக்கு ஏற்றப்பட்டுக் கோயிலில் இறுதிப் பூசையான அர்த்தசாம பூசை முடிந்து, கோயில் கதவுகள் மூடப்படும் வரை எரியவேண்டும் என்று தெளிவாகக் குறிக்கப்படுகிறது. 'அந்தியம் பொழுதுடங்கி திருவாத்தசாம மிறுதியாக எரியக்கடவதாக' என்று கல்வெட்டில் காணமுடிகிறது.[18]

மேலே கண்ட செய்திகளிலிருந்து முன்னூர்க் கல்வெட்டுகளில் காணப்படும் ஆவணப் பதிவுகளைத் தெரிந்து கொண்டோம். இப்படி ஒவ்வொரு கோயில் கல்வெட்டுகளிலிருந்தும் ஆவணப்பதிவுகளை அறியும் போது பண்டைய தமிழக மக்கள் கோயில் கொடைகளைப் பேணிக்காப்பதற்காக ஆவணங்களை எழுதியும் அவற்றைக் கல்வெட்டாகப் பொறித்தும் காத்துள்ளார்கள் என்பதைத் தெளிவாக அறிந்துக்கொள்ள முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. சிறுபாணாற்றுப்படை, வரி - *201*
2. இந்தியக்கல்வெட்டு ஆண்டறிக்கை *1919* கல்வெட்டு எண்கள்-*69,* தூண்கல்வெட்டு
3. மேலது எண் - *75*

4. மேலது எண் - 70

5. மேலது எண் - 73

6. மேலது எண் - 52

7. மேலது எண் - 50

8. மேலது எண் - 66

9. மேலது எண் - 69

10. மேலது எண் - 69

11. மேலது எண் - 65

12. மேலது எண் - 67

13. மேலது எண் - 76

14. மேலது எண் - 72

15. மேலது எண் - 55

16. மேலது எண் - 57

17. மேலது எண் - 85

18. மேலது எண் - 80

துணை நூல்

Documentation in Tamil Nadu upto 1350 AD. Unpublished Ph.D Thesis. S. Rajagopal, Madurai Kamarajar University, 1994.

* * *

# 4. ஏரிகளில் கல் ஆவணங்கள்

முனைவர் கொடுமுடி சண்முகன்

தமிழ்நாட்டு ஏரிகளைச் சீராக்கும் பொருட்டுப் பல வெளிநாட்டு நிறுவனங்கள் நிதியுதவி செய்கின்றன. அவர்கள் வரும்போது ஏரிகளின் சரியான வரலாறு கொடுக்க முடிவதில்லை. எல்லா ஏரிகளையும் வெள்ளையர் ஆட்சிக்கு முந்தியது (பிரி பிரிட்டிஷ்) என்று கூறுகிற நிலை இருந்தது. இத்துயரத்தைத் தவிர்க்கும் வகையில் அப்போது விழுப்புரம் கோட்டச் செயற்பொறியாளராக இருந்த கொடுமுடி சண்முகன் ஒரு தீவிர முயற்சி மேற்கொண்டார். எல்லா ஏரிகளையும் தானே நேரில் பார்வையிட்டு, பல அரிய கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்தார். தனது சார்நில்ல அலுவலர்களுக்கும், கல்வெட்டு எங்கெங்கு இருக்கும் எனத் தேடுவதில் பயிற்சி நிலையங்களில் பயிலவரும் பொறியாளர்களுக்கும் கல்வெட்டுப்பற்றிய அடிப்படைக் கல்வியைப் புகட்டினார். அத்துடன் ஏரிகளில் காலத்தை நிர்ணயிக்கும் வகைகளைப் பற்றியும் பயிற்றுவித்தார். இம்முயற்சிகளுக்கு நல்ல பலன் கிடைத்தது.

ஏரிகளின் பழைய மதகுத் தூண்களில் கல்வெட்டு வாசகம் பொறிக்கப்பட்டிருக்கும். பெரிதும் முயன்று அக்கல்வெட்டுக்களைக் கொண்டு வந்து, பொதுப்பணி வரலாற்றகம் அமைத்தார். விழுப்புரம் செயற்பொறியாளராக இருந்தபோது விழுப்புரம், திண்டிவனம் ஆகிய இடங்களில் வரலாற்றகம் அமைத்திட விழுப்புரம் கோட்டத்தின் *1051* எஸ்/இவஅ*2*/கோ *255* எண் கொண்ட *21.05.92* நாளிட்ட நடைமுறை எஸ்ஸில் ஆணையிட்டார். பின்னர் சேலத்தில் சேலம் தருமபுரி வட்டக் கண்காணிப்புப் பொறியாளராகப் பொறுப்பேற்றபின் சேலம் ஆய்வு மாளிகை வளாகத்திலும் ஒரு வரலாற்றகம் அமைத்தார். பின்னர் இவை தரமணியிலுள்ள நீராய்வு நிலைய இயக்குநரால் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

தற்போது நிதியுதவி நல்கும் வெளிநாட்டினர் நமது ஏரிகளின் பழைமையை எளிதில் அறியும் வகை செய்யப்பட்டுள்ளது. கல்வெட்டு வாசகம் தற்கால எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. ஏரிகட்டின ஆண்டு கி.பி.யில் கொடுக்கப்பட்டுள்ளது.

பல ஏரிகள் சோழப் பெருவேந்தர் காலத்தில் அமைக்கப்பட்டவை. ஒருசில ஏரிகளின் வரலாற்றை அறிவது சோழப் பெருவேந்தர்கள் பாசனத்திற்கு அளித்த முதன்மையைக் காட்டுவதாக அமையும். பல கல்வெட்டுகள்

புதியனவாகலின் தேர்ந்தெடுக்க சில கல்வெட்டு வாசகங்கள் முழுமையாகத் தரப்படுகின்றன.

## மேல்வாலை ஏரி

விழுப்புரம், திருவண்ணாமலைச் சாலையில் மேல்வாலை என்னும் ஊரில் அமைந்துள்ள ஏரியின் மதகில் இருந்த கல்வெட்டு.

ஸ்வஸ்திஸ்ரீ
மதிரை கொண்ட கோ விராஜகேசரி பன்மற்கு
யாண்டு பதினஞ் சாவது
சேதிப் பற்றான இவ்வேரியும்
இக் கழனியும் இத் தூம்பும் கண்டான்
கற்பூண்டி நாட்டுக் கருத்துஉருடைய
இலாடபன்மற் மகல் லடாம்பி.

கி.பி.*920* ஆம் ஆண்டு. இப்பகுதி திருக்கோவலூர் அருகில் உள்ள சேதி நாட்டின் பகுதியாக இருந்தது.

## ஆயந்தூர் ஏரி

திருக்கோவலூர் வட்டம் ஆயந்தூர் ஏரியில் உள்ள பழைய மதகின் கல் குறிப்பிடத்தக்கது. அதன் ஒரு பக்கம் கி.பி.*4* அல்லது *5*- ஆம் நூற்றாண்டு எழுத்திலும் மறுபக்கம் *13*-ஆம் நூற்றாண்டு எழுத்திலும் உள்ளன.

நான்காம் நூற்றாண்டு வாக்கில் அமைக்கப்பட்ட ஏரி தொடர்ந்து பாசனத்திற்குப் பயன்பட்டு வந்தது. *13*-ஆம் நூற்றாண்டில் பழுதுபார்த்த போதும், அதே தூண்கள் மீண்டும் பயன்படுத்தப்பட்டுள்ளதென்பது தெளிவு.

முதல் பக்கம்

ஸகர விசாதரப் பெண்

மறு பக்கம்

வக்கரன் பாக்கமுடையான் கொங்கராயன்

ஏரிகளின் தொடர்ச்சியான பயன்பாட்டிற்கு மிக நேர்த்தியான சான்று. இக்கல்வெட்டு விழுப்புரம் வரலாற்றகத்தில் உள்ளது.

## காட்டிடையார் ஏரி

உளுந்தூர்ப் பேட்டை வட்டத்தில் காட்டிடையாறு என்னும் ஊரில் உள்ள ஏரியின் பழைய மதகுத்தூண் கல்வெட்டு வாசகம் வருமாறு.

ஸ்வஸ்திஸ்ரீ
கிளியூர் மலையமாந்
பெரிய உடையாந்
சேதிராயந் செங்கள்ஸ்ரீ

சோழர்காலத்தில் சிற்றரசாக இருந்தவர். மலையமான்களின் தலைநகரங்களில் ஒன்று கிளியூர். இதுவும் சேதிநாட்டுப் பகுதியாகும். ஏரி அருகில் உள்ள சிறு கோவில் தூணில் செங்கண்ஸ்ரீ அவர்களின் வடிவம் செதுக்கப்பட்டுள்ளது. கல் இன்னும் ஏரியிலேயே உள்ளது.

## ஆமூர்ப் பெரிய ஏரி

திருக்கோவிலூர் வட்டம் ஆமூர் அருகில் உள்ள ஏரியின் மதகுத் தூணில் காணப்படும் கல்வெட்டு,

ஸ்வஸ்தி ஸ்ரீ
திரிபுவநச் சக்ரவர்த்திகள்
ஸ்ரீ திரிபுவன வீரதேவற்கு
யாண்டு *36* வது
இத்தூம்பு செய்வித்தால்
நம்புகநவப் பேரையிட்டு,
*2*வது குறுப்பேரித் தூம்பு
இவ்வூர் கரணத்தார் கண்டு
செய்வித்தது.

கி.பி.*1214*ஆம் ஆண்டு கட்டப்பட்டது. இந்த ஏரிக்கு இரண்டு மதகுகள். முதல் மதகு "நம்புகநவர்" என்பாரின் பேரில், பெற்ற நிதியுதவியைக் கொண்டு கட்டப்பட்டது. இரண்டாவது மதகை இந்த ஏரியைப் பேணிப் பாதுகாக்கும் ஊர்க் கரணத்தார் தம்பொது நிதியிலிருந்து கட்டியுள்ளனர். சோழப் பெருவேந்தர்காலத்தில் ஏரியைப் பாதுகாக்கும் "கரணத்தார்" இருந்தமைக்கு இக்கல்வெட்டு சான்றாகும். இவர்கள் குடவோலை முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர் ஆவர். இக்கல் விழுப்புரம் வரலாற்றகத்தில் உள்ளது.

## சென்னகுணம் ஏரி

திருக்கோவிலூர் வட்டத்தில் சென்னகுணம் என்ற ஊரிலுள்ள ஏரியின் மதகில் இருந்த கல்வெட்டு, வழக்கத்திற்கு மாறாக, ஏரியிலிருந்து நீர் வெளியேற அமைக்கப்பட்டிருக்கும் வட்டத்துளை அமைந்த படுக்கைக் கல்லில் இரண்டு வரியாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ கடம்பப் பெருன் தேவி
செய்பித்த தூம்பு - ஸ்வஸ்த

ஸ்வஸ்த என்பதை முதலில் எழுத மறந்து விட்டதால் இறுதியில் சேர்த்துவிட்டார்கள். இது கி.பி. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டாக இருக்கலாம். கடம்பக்குலம் கோவாவுக்கு அருகில் கன்னட நாட்டில் இருந்த அரச குலம். அக்குலப் பெண் இவ்வூர்ச் சிற்றரசன் மனைவி என்பதுவும் இக்கல்வெட்டால் அறிகிறோம். இது சேலம் வரலாற்றகத்தில் உள்ளது.

## ஆலூர் ஏரி

திருக்கோவிலூர் வட்டம் ஆலூர் என்ற ஊரில் உள்ள ஏரியின் பழைய மதகுத் தூணில் கல்வெட்டு உள்ளது கல்வெட்டு வாசகம் வருமாறு:

பாவடங்குடையாந் மகந்
கண்டந் வாளறாயந்
செய்பிச்ச தூம்பு

கி.பி. பதினோராம் நூற்றாண்டாக இருக்கலாம். உள்ளூர் வள்ளல் கண்டன் வாளறாயன் என்பவர் கொடுத்த நிதியால் எழுந்த தூம்பு. இக்கல் இன்னும் ஏரியிலேயே உள்ளது. வரலாற்றகம் வரவில்லை.

## செங்குறிச்சி ஏரி

உளுந்தூர்ப் பேட்டை வட்டம் செங்குறிச்சி ஏரியில் மதகுக்கல்லில் உள்ள கல்வெட்டு. விக்ரம சோழன் காலம் கி.பி.1118-1135 இக்கல்வெட்டு கி.பி.1127-இல் பொறிக்கப்பட்டது.

ஸ்வஸ்தி ஸ்ரீ
விக்ரம சோழறெக்கு
யாண்டு ஒன்பதாவது
மோகந் ஆண்டாந்

கடில நதிக்கரையில் உள்ளது சேந்தமங்கலம். இது காடவராயர் வமிசத்தாரின் தலைநகரம். "மோகன் ஆண்டான்" அந்த வமிசத்து அரசன் அவன். இவனுக்கு எழிசைமோகன் என்ற பெயரும் உண்டு. இவனுக்குப் பின்னர் ஆட்சியேற்ற சகலபுவநச் சக்கரவர்த்திகள் கோப்பெருஞ்சிங்கன் காடவராயன், கடைசிச் சோழ வமிசத்து அரசனைச் சிறைப்பிடித்துச் சேந்தமங்கலம் சிறையில் அடைத்து விட்டான். இச்சோழனுக்குப் பெண் கொடுத்த போசள மன்னன் படையெடுத்து வந்து, மருமகனை மீட்டு, சோழ அரியணையில் இருத்தினான். எனினும் பின்னர் சுந்தரபாண்டியனால் அழிக்கப்பட்டான். சோழ வமிசம் அழிந்தது.

இந்தக் கல்வெட்டு இன்னும் ஏரியிலேயே உள்ளது. ஊர் மக்கள் இக்கல்லை வரலாற்றகத்திற்குத் தர மறுத்துவிட்டனர். இக்கல்வெட்டு வாசகம் எழுதிய கல், தென்பெருஞ் சாலையில் நடப்பட்டுள்ளது

## நத்தமேடு ஏரி

கல்பட்டு அருகில் நத்தமேடு ஊர் உள்ளது. அங்குள்ள ஏரிக்கரை அருகில் ஓர் அய்யனார் கோயில். அதனருகில் உள்ள மொட்டைப் பாறையில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது.

ஸொத்தி ஸ்ரீ மூன்றாவது
நெல்வாய்ப் பாக்கத்தில்
ஏரியிடைக் கட்டுக்குக் கிழக்கு
ஏரிவெட்டுவித்தார்களும்
ஆவணி ஆளப்பிறந்தான் தூம்பும்
குன்ற முடையான் கலிங்கும்
தென்கடயில் மதகும் இட்டுத்
திரிபுவனத் திராசாக்கள் தம்பிரான் காலகண்டர்களும்
குன்ற முடையான் மலயகுலராயனுங்
கோவலராயனும்

இக்கல்வெட்டிலிருந்து பல அரிய செய்திகள் தெரிகின்றன. இதில் மூன்று அரசர்கள் குறிப்பிடப்படுகிறார்கள். 'அவணி ஆளப் பிறந்தான்' காடவராயர் குலத்தரசனின் பட்டப்பெயர். குன்றமுடையாள் மலைய குலராயனும் கோவலராயனும் என்பது அவ்வூரின் பழைய பெயர். தூம்பிற்கு 'அவணி ஆளப் பிறந்தான்' பெயர் சூட்டப்பட்டுள்ளது. கலிங்கிற்கு 'குன்றமுடையான்' பெயர் சூட்டப்படுகிறது. தூம்பு, மதகு இரண்டு பெயர்களும் வருவதால், இரண்டும் ஒன்றல்ல என்றும் தொழில் நுட்பத்தில் சிறிது வேறுபாடு இருக்கக்கூடும் என்றும் உணரலாம். 'அவணி ஆளப் பிறந்தான்' என்ற பட்டப் பெயர் கொண்ட காடவராயனின் மூன்றாம் ஆட்சியாண்டாக இருக்கலாம். அந்தக் கால அரசியல் நிலவரம் அறிய உதவுகிற மிகச்சிறந்த கல்வெட்டு இதுவாகும்.

## பழங்கூர் ஏரி

திருக்கோவிலூர் வட்டம் பழங்கூர் என்னும் ஊரில் உள்ள ஏரியின் பழைய மதகுக் கல்வெட்டு வருமாறு:

ஸ்வஸ்தி ஸ்ரீ
இத்தூம்பு திட்டிட்டு வென்றால்

இது இடுவித்தான் மலையந்
பலையங்கூரு
குலோத்துங்க சோழக் கோவலராஜன்

தூம்பின் பெயர் **திட்டிட்டு வென்றால்,** இதைக் கட்டியவன் மலையமான் குடியைச் சேர்ந்த கோலராஜன். இவர் குலோத்துங்கசோழனின் அரசு அதிகாரி ஆவர். பழங்கூர் முன்பு பலையங்கூர் என்று அழைக்கப்பட்டது. **திட்டிட்டு வென்றான்** என்பது யாருடைய பட்டப்பெயர் எனத் தெரியவில்லை. இக்கல்வெட்டு இன்னும் ஏரியில் உள்ளது.

## கொளத்தூர் ஏரி

திருக்கோவிலூர் வட்டம் திகொளத்தூரில் உள்ள மதகுக்கல் வாசகம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ
சகரபந்தம் *1296* ஆங்கி *(ர)* ஜ வருஷ*(ம்)*
இந்தப் பெரிய பிராட்டி ஏரியும் மதகும், ஷேத்ரமும்
இக்குளத்தூர் அகரத்து
பாங் கொளத்தூர் நாராயணவித்து
ஸோமயாஜியார் ஆத்ரசை
ஸ்ரீபந்மத்து ரம்மம்

காலம் கிபி*1364,* பெரிய பிராட்டி என்பது சேந்தமங்கலத்து சகலபுவனச் சக்கரவர்த்தி காடவராயன் கோப்பெருஞ்சிங்கன் தாயார். கடைசிச் சோழ வேந்தன் காலம். விழுப்புரம் வரலாற்றகத்தில் காணலாம்.

## திருவம்பட்டு ஏரி

செஞ்சி வட்டத்தில், திருவம்பட்டு என்னும் ஊரில் உள்ள ஏரியின் மதகுத்தூண் கல்வெட்டு வாசகம்.

ஸ்ரீ இராஜராஜ தேவற்கு
யாண்டு இருபத்திரண்டாவது
வலிவளங்கிழான் வேளாண் சூற்றி
இடுவித்த தூம்பு

கிபி*1007*-ஆம் ஆண்டு “சூற்றி” என்ற வேளாளன் உதவியால் இந்த மதகு கட்டப்பட்டது.

ஸ்வஸ்தி ஸ்ரீ
இராசேந்திர சோழ தேவற்கு
யாண்டு *21* ஆவது

அமனாட்டு அருஜமயான் தாங்கி ஆனாரான
செம்பியன் உத்தர மந்திரி
இடுவித்த தூம்பு

உத்தர மந்திரி என்ற சொல் தலைமை அமைச்சரைக் குறிக்கும். இவை திண்டிவனம் வரலாற்றகத்தில் உள்ளன.

## தேவதானம்பேட்டை ஏரி

செஞ்சி வட்டத்தில்உள்ள ஊர் தேவதானம்பேட்டை. இங்குள்ள ஏரியில் மதகுக்கல்லில் ஒரு விநாயகர் வடிவம் செதுக்கப்பட்டிருந்தது. விநாயகர் தாமரை மீது அமர்ந்துள்ளார். தாமரையின் மேல்மட்டம் நிறையேரி மட்டமாகும். தாமரை தெரியத் தெரிய நீர் குறையும் அளவு தெரிந்து கொள்ளலாம்.

பொறிஞர் கொடுமுடி சண்முகன் அங்குச் செல்லுமுன்னரே அத்தூணை உடைத்து விட்டனர். விநாயகரை மட்டும் தனியாக உடைத்து ஒரு வீட்டில் வைத்திருந்தனர். அதை உரிய வழியில் பெற்று வந்து திண்டிவனம் பொதுப்பணித்துறை வரலாற்றகத்தில் சேர்த்துள்ளார். *12* அல்லது *13*-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

## பெருமுக்கல் ஏரி

திண்டிவனம் மரக்காணம் வழியில் உள்ளது பெருமுக்கல். அங்குள்ள ஏரிக்கரை மீதுதான் நெடுஞ்சாலை செல்கிறது. அந்த ஏரியில் உள்ள பழையை மதகுத் தூணில் உள்ள வாசகம்;

ஸ்வஸ்தி ஸ்ரீ
இராஜராஜ வளநாட்டு
பொய்யில் கூற்றத்து
கொங்கூருடையான்
ஆரயந் காக்குநாகந்

சுமார் *11*-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம். இக் கல் ஏரியிலேயே உள்ளது.

## கிடங்கில் ஏரி

திண்டிவுனம் நகரை அடுத்துள்ள ஊர் கிடங்கில். பத்துப் பாட்டில் மூன்றாம்பத்து இடங்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. பாட்டுடைத் தலைவன் நல்லியக்கோடன். அவனது தலைநகரம் கிடங்கில் ஆகும்.

இங்கு ஓர் ஏரி உள்ளது. அதன் மநகு ஒன்றின் பழைய தூணில் உள்ள வாசகம் வருமாறு:

ஸ்வஸ்தி ஸ்ரீ
இம்மடையும் அடைத்துத் தூம்பும் செய்தான்
பபைன்புன்கிழார் தம்பிகுமரன்

எழுத்தமைதி கொண்டு இதனை *12* அல்லது *13*-ஆம் நூற்றாண்டில் வைக்கலாம். இந்த வாசகத்தில் ஒரு தொழில்நுட்ப மாறுதல் சுட்டிக் காட்டப் படுகிறது. ஏரி கட்டுமானம் பற்றி அறிய இச்செய்தி உதவுகிறது.

திண்டிவனம் பொதுப்பணித்துறை வரலாற்றகத்தில் பல்லவர் கால ஏரிமதகுகள் பலவுண்டு. அச்செய்திகள் இங்குத் தரப்படவில்லை. இக் கல் திண்டிவனம் வரலாற்றகம் வந்துவிட்டது.

**சலவையாளர் பங்கு**

வாழப்பாடிக்கு அருகில் உள்ளது பேரூர். அங்குள்ள சின்ன ஏரியில் ஒரு கல்லின் இருபக்கம் இரண்டு கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. அந்த ஏரியில் இரண்டு மதகுகள். **பிச்சன் சொக்கன்** என்ற சலவையாளரும் அவரது மனைவி **தாழி வடுகி** என்பாளும் ஆளுக்கொரு மதகு வீதம் நிதியுதவி செய்துள்ளனர். மதகு என்பது நீரைக் கட்டுப்படுத்தும் ஏற்பாடு கொண்டது. கட்டுப்பாடு இல்லாத மடையாக இருக்கும்போது, ஒரு வருடத்து மழை மழுவதும் ஒரு திங்களுக்குள் செலவாகி ஏரி வறண்டுவிடும். மதகு வைத்துக் கட்டி விட்டால் *3* அல்லது *4* திங்கள் தண்ணீரைக் கட்டுப்படுத்திப் பாய்ச்சலாம். சலவையாளருக்கும் நீண்ட நாட்கள் தண்ணீர் கிடைக்கும். பயிரும் தொடர்ந்து கதிர் முற்றும்வரை தண்ணீர் பெறும். இக்கல்வெட்டு கொங்கு *15.374* இதழில் வெளியாயிற்று. புது.பொ. வெங்கடராமன் கண்டுபிடிப்பு, கி.பி.*1111* ஆண்டு. சேலம் பொதுப்பணி வரலாற்றகத்தில் உள்ளது.

**முதற்பக்கம்**

ஸ்வஸ்தி ஸ்ரீ
கொலோத்துங்க சோழ தேவற்கு
யாண்ட *41*வது
மிலாடாகிய ஐந்தாத வளநாட்டுத்
துறவி நாட்டு வெளியூரான் ஏரியில்
எறிவிரப்பட்டணத்து
வண்ணாந் பிச்சான் சொக்கன்
இடுவித்த தூம்பு.

**மறுபக்கம்**

ஸ்வஸ்தி ஸ்ரீ
மிலாடாந ஜனனாத வளநாட்டுத்

துரவி நாட்டு வெளியூர்
வண்ணாத்தி தாழிவடுகி
இட்ட தூம்பு

(கொங்கு 15.274 இதழ்-புது.பொ. வெங்கட்ராமன்) இன்றைய பேளூரின் பழைய பெயர் வெளியூர்.

## ஆயிரம் ஆண்டு ஏரி

ஓமலூர்-தருமபுரி சாலையில் பூசாரிப்பட்டி அருகில் உள்ளது. தாச சமுத்திரம் ஏரி. பேரரசன் இராசராசனின் பதினொன்றாம் ஆண்டு இந்த ஏரி கட்டப்பட்டது. கிபி996-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட இந்த ஏரி தற்போது ஆயிரம் ஆண்டைக் கடந்து விட்டது. அதன் ஆயிரம் ஆண்டு விழா ஓமலூர் பொதுப் பணித்துறை அலுவலகத்தில் உள்ளூர் மக்களால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அந்தக் கல்வெட்டு சேலம் பொதுப் பணித்துறை அத்தம்பட்டி வளாகத்திலுள்ள வரலாற்றகத்தில் உள்ளது. அதற்குப் பதிலாக இத்தகவலைக் கூறும் புதிய தகவல் எழுதி அந்த ஏரியில் நடப்பட்டுள்ளது.

கல்வெட்டு வாசகத்திலிருந்து அரிய தொழில் நுட்பச் செய்தியும் பண்பாட்டுச் செய்தியும் தெரிகின்றது. ஏரியை அமைத்தவர் கச்சிப்பள்ளி ஊர்த்தலைவர் பொங்கிலன் அமந்தான் களி அவனும் அவன் தம்பியும் தாமும் கூட இருந்து வேலை செய்துள்ளனர். தம்பியின் பெயர் பின்னர் கல்லில் சிதைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இந்த ஏரியை அழியாமல் காப்பவர்களின் "கால் என் தலைமேல்" என்கிறான். இதற்கு அவர்களின் பாதம் பணிவேன் என்று பொருள்படும்.

ஸ்வஸ்தி ஸ்ரீ
ராஜராஜ சோழ தேவற்கு
திருவெழுத்திட்டுச் செல்லா நின்ற
திருநல்லியாண்டு பதிநொந்றாவது
வடபூவாணிய நாட்டு
கச்சிப் பள்ளிக் காமிண்டந்
பொங்கிலந் அமந்தாந் களியும்
எந்தம்பி ..............................ம்
இவ்விருவே மெங்கள் கையால்
மணலொழுக்கி இவ்வேரி கட்டிநோம்.
இந்த நம் அழிவு படாமற் காத்தாந்
காலெந் தலை மேலின.

இக்கல்வெட்டினைக் கண்டுபிடித்தவர் புலவர் வெ.இரா.துரைசாமி இந்த ஏரியின் கொள்ளளவு *13.07* மில்லியன் கனஅடி. ஆயக் காட்டு *130*ஏக்கர்.

## குந்தவைப் பேரேரி

திருக்கோவிலூர் வட்டத்தில் உள்ள ஊர் தின்றாங்கோட்டை. திருநறுங்கொண்ட என்ற சமணத்தலத்தின் பெயர் இவ்வாறு திரிந்து விட்டது. இங்குக் குந்தவைப் பேரேரி என்ற ஏரியை வெட்டுவித்தான் பற்றிய குறிப்பு கல்வெட்டு ஆண்டறிக்கை எண்.*320/1938-40*இல் வெளியாகியுள்ளது. இது ஒரு பாடல் கல்வெட்டு.

மாட மதிளாறை மன்னுபுகழ் பெருமாள்
நீடு நறுங்கொண்டை நெல்விளையப் - படார்ந்த
காருக்கு நேராக மண்கையன் கார்கடல் போல்
ஏரிக்குத் தூம்பமைத்தான் இன்று.

காடவராயர் வழியில் ஒருத்தனின் பெயர் பெருமாள் ஆகும். அவன் காலத்தில் அமைக்கப்பட்ட ஏரி.

## திருமயம் வட்டம்

பாண்டிய நாட்டில் இராசேந்திர சோழன் காலத்து ஏரி ஒன்று திருமயம் வட்டத்தில் அரசமலையில் உள்ளது. அக் கண்மாயில் உள்ள கல்வெட்டு, மேலப்பனையூர் ஆசிரியர் கரு. இராசேந்திரன் கண்டுபிடிப்பு.

ஸ்ரீ ராஜேந்திர தேவற்கு
யாண்டு *7*
ஸ்வஸ்தி ஸ்ரீ
இக்குமுழிஇன் பேர்
சீகரநல்லூர் உடையான் பிராந்தக தேவநான
செம்பியன் குன்றியூர் நாட்டு
மூவேந்த வேளாந் ஸ்ரீ
இது செய்வித்தான்
இவ்வூர் உடையாந் பிடக்கன் மூவேந்தநான
சோழ சிந்தாமணிப் பேரரையன் ஸ்ரீ

## குளத்தூர் வட்டம்

புதுக்கோட்டை குளத்தூர் வட்டம் அரியூர் மேலக் கண்மாய் பெரிய மடையின் தூணில் "ஸ்ரீ ராஜராஜன்" என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

கீழக்கண்மாயின் *3* மடைகளில் நடுமடையில் ஒரு கல்வெட்டு உள்ளது. மேலப்பனையூர் கரு.இராசேந்திரன் கண்டுபிடிப்பு.

ஸ்வஸ்தி ஸ்ரீ
திரிபுவனச் சக்ரவத்திகள்
ஸ்ரீ கொலோத்துங்க சோழ தேவற்கு
யாண்ட *47* ஆவது
கால நாடான விருதராயசப் பயங்கர வளநாட்டு
கால நாட்டுக் கோட்டியூர் அரையன்
பெரியான் உட்கார கண்டனான
கொலோத்துங்க சோழக் கண்டாரயஜனேன்
எங்கள் முதலிகள்
மும்முடிச் சோழன் சிங்களராத்தி முத்தரையர்
இவ்வூர் குமிழி புதுக்கினேன்
சோழக் கன்கராஜனேன்.

**திருச்சிக்கு அருகில் குண்டூரில்** உள்ள ஏரிமதகில் காணும் கல்வெட்டு. (காண்க தினந்தந்தி *14.6.90* மேலப்பனையூர் கரு. இராசேந்திரன் கண்டுபிடிப்பு) இதில் வரும் குவாவன் என்பது முத்தரைய மன்னர்களின் சிறப்புப் பெயர்களில் ஒன்றாகும் என்று தமிழகத் தொல்லியல் துறையினர் கருதுகின்றனர். பெருந்தட்டான் எனவருவது **பெருந்தச்சன் (தலைமைப் பொறியாளர்)** என்பதன் மாற்றாகக் கொள்ள வேண்டும் என்றும் குவாவன் என்பதைக் குலாலன் என்று படிக்கவேண்டும் என்றும் கொடுமுடியார் கருதுகிறார். "பெருந்தச்சன் மாறன் குலாலன்" எனப் பொருள்படும்.

ஸ்ரீ கோ ராஜ கேசரி பன்மற்கு
யாண்டு *13*
குண்டூர் பெருந்தட்டான் மாறன் குவாவன்
செ(ய்)வித்த கற்குமிழி.

இங்குக் கொடுக்கப்பட்ட கல் ஆவணங்கள் பெரும்பாலும் புதியவை. இன்னும் மய்ய, மாநிலத் தொல்லியல் துறைகளால் பதிப்பிக்கப்படாதவை. எனவே முழுமையாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இக்கல் ஆவணங்களிலிருந்து பல அரிய செய்திகள் கிடைக்கின்றன.

1. ஏரிகள் அமைக்கப்பட்ட காலம் அறிய முடிகிறது.
2. ஏரிகள் அமைக்கும் தொழில் நுட்பம் அவ்வப்போது மாறி முன்னேறிய வடிவமைப்புகள் தோன்றியுள்ளன.
3. எல்லோராலும் ஏரிகளின் தூம்புகள் அமைக்க உதவிகள் நல்கப்பட்டமை தெரிகின்றன.

4. கரையும் கலிங்கும் பொது நிதியிலிருந்து அமைக்கப்பட்டுள்ளன. பின்னர் தூம்பு பல்வகை மக்களின் உதவியால் அமைந்தன.

5. மடை, தூம்பு, மதகு என்ற மூன்று வித கட்டுமானங்கள் இருந்தன.

6. ஏரிகளைப் பராமரிக்க "கரணத்தார்" என்ற மக்கள் குழு இருந்தது.

7. இன்னொருவர் பெயரில் தூம்பு அமைக்கப் பணம் வழங்கப்பட்டது.

8. தூம்புகள் தனிப்பெயர் பெற்றிருந்தன.

9. அரசர்கள் பற்றிய குறிப்புகளும் வரலாற்றிற்குப் பெரிதும் உதவக் கூடியன.

இவ் வாய்வுரையில் பெரும்பாலும் சோழர் காலத்து ஏரிகள் இடம் பெற்றுள்ளன. தமிழகத்தில் தொன்று தொட்டு எல்லாப் பகுதிகளிலும் ஏரிகள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றைத் தொகுத்து ஒரு சிறு பட்டியல் அணியமாக்கி இணைக்கப்படுகிறது.

**பட்டியல்**

| | | | நூற்றாண்டு கி.பி. | |
|---|---|---|---|---|
| 1. | ஆயந்தூர் ஏரி | தெ.ஆர்க்காடு மாவட்டம் திருக்கோவிலூர் வட்டம் | 4 | சகரவிசாதரப் பெண் |
| 2. | குணமிலி ஏரி | தெ.ஆர்க்காடு மாவட்டம் செஞ்சி வட்டம் | 6 | மகேந்திரவர்மன் |
| 3. | பெரிய சக்கி-லிச்சி ஏரி | சேலம் - ஓமலூர் வட்டம் | 6 | புலியார் மகன்நல்லி |
| 4. | வைரமேகத்-தடாகம் | உத்திரமேரூர் | 7 | பல்லவர் |
| 5. | சித்ரமேகத்-தடாகம் | மாமண்டூர் | 7 | சாருதேவி பல்லவர் தேவி |
| 6. | இராஜதடாகம் | மாமண்டூர் | 7 | பல்லவர் |
| 7. | திரையன் ஏரி | மாமண்டூர் | 7 | சாருதேவி பல்லவர்தேவி |
| 8. | மகேந்திர தடாகம் | சோழிங்கர் | 7 | பல்லவர் |

| | | | | |
|---|---|---|---|---|
| 9. | பனைமலை ஏரி | தெ.ஆர்க்காடு மாவட்டம் விழுப்புரம் வட்டம் | 8 | இராஜசிம்மப் பல்லவன் கிபி700-720 |
| 10. | ஓங்கூர் ஏரி | திண்டிவனம் வட்டம் | 8 | கிபி745 நந்திவர்மன்II |
| 11. | வீராணம் ஏரி | சிதம்பரம் வட்டம் தெ.ஆர்க்காடு மாவட்டம் | 9 | பராந்தக சோழன் |
| 12. | பெருமாள் ஏரி | சிதம்பரம் வட்டம் தெ.ஆர்க்காடு மாவட்டம் | | பராந்தக சோழன் |
| 13. | குண்டூர் ஏரி | திருச்சி | 9 | மாரன் குவாலன் ஆதித்த சோழன் காலம் |
| 14. | மேல்வாலை ஏரி | திருக்கோவிலூர் வட்டம் தெ.ஆர்க்காடு மாவட்டம் | 920 | மதுரைகொண்ட கோப்பரகேசரி |
| 15. | கண்ணனூர் பெரிய குளம் | புதுக்கோட்டை | 9 | கோச்சடைய பன்மர் |
| 16. | சேத்திமுத்தி பட்டிக்கண்மாய் | புதுக்கோட்டை | 9 | குலாலன் மணவாட்டி |
| 17. | இடையாத்தூர் தெற்குக் கண்மாய் | புதுக்கோட்டை | 9 | இராசகேசரி பன்மர் |
| 18. | விசலூர் பெரிய கண்மாய் | புதுக்கோட்டை | 9 | விண்ணக்கள் நிறை சந்திரன் |
| 19. | கொடும்பாவூர் கண்மாய் | புதுக்கோட்டை | 9 | சாத்தண்ணீலன் |
| 20. | ஆலூர் பெரிய-ஏரி | திருக்கோவிலூர் வட்டம் | 10 | பாவடங்குடையார் மகன் கண்டன் வாலறாயன் |
| 21. | அரசமலைக் கண்மாய் | திருமயம் வட்டம் | 11 | இராசேந்திர சோழன் 7-ஆம் ஆண்டு |

| | | | | |
|---|---|---|---|---|
| 22. | மேலக் கண்மாய் | குளத்தூர் வட்டம் | 11 | இராஜராஜன் |
| 23. | மேலப்பனயூர் சிறுத்தாண்டிக் கண்மாய் | திருமயம் வட்டம் | 11 | ஸ்ரீ அரங்கன் பெரியான் |
| 24. | உப்பிலிக்குடி பெரிய கண்மாய் | திருமயம் | 11 | பலமுடி கொண்ட சோழப் பேரரயன் ஆட்டுவித்த மணவாளன் |
| 25. | பெருமக்கல் ஏரி | திண்டிவனம் | 12 | அரயந்காக்கு நாகந் |
| 26. | செங்குறிச்சி ஏரி | உளுந்தூர் தெ.ஆர்க்காடு மாவட்டம் | 1127 | விக்ரமசோழர் / மோகந் ஆண்டாந் |
| 27. | தாசசமுத்திரம் | சேலம் / ஓமலூர் | 1229 | இராஜராஜ சோழன் |
| 28. | ஆமூர் ஏரி | திருக்கோவிலூர் தெ.ஆர்க்காடு மாவட்டம் | 1214 | திருபுவன வீரதேவன் |
| 29. | குணலைக் கல்பாளையம் குளம் | முசிறி வட்டம் திருச்சி மாவட்டம் | 13 | புத்தாம் படையான் பழுவேட்டரையர் |
| 30. | பழங்கூர் ஏரி | திருக்கோவிலூர் தெ.ஆர்க்காடு மாவட்டம் | 13 | திட்டிட்டு வென்றான் கோவலராயன் |
| 31. | கிடங்கில் ஏரி | திண்டிவனம் தெ.ஆ.மா. | 13 | பனைப்பூங்கிழார் தம்பி குமரன் |
| 32. | ராசிபுரம் பெரியகண்மாய் | குளத்தூர் வட்டம் புதுக்கோட்டை | 13 | சேமன் |
| 33. | கலிநாட்டுக் கண்மாய் | புதுக்கோட்டை வட்டம் | 13 | 2-ஆம் குலோத்துங்கன் 14-ஆம் ஆண்டு |
| 34. | பேயால் கண்மாய் | குளத்தூர் வட்டம் | 13 | 3-ஆம் குலோத்துங்கன் 7-ஆம் ஆண்டு |

| | | | | |
|---|---|---|---|---|
| 35. | கோட்டியூர் | திருமயம் வட்டம் புதுக்கோட்டை | 13 | 3-ஆம் குலோத்துங்கன் 47-ஆம் ஆண்டு |
| 36. | பனையக் கண்மாய் | திருமயம் வட்டம் புதுக்கோட்டை | 13 | இறங்கல் மீட்டான் |
| 37. | நெய்வேலி பெரியகண்மாய் | திருமயம் வட்டம் புதுக்கோட்டை | 13 | நக்கன் ஒற்றி |
| 38. | தி.கொளத்தூர் பெரட்டேரி | திருக்கோவிலூர் தெ.ஆ.மா. | 1367 | நாராயணவித்து சோயமாஜியார் |
| 39. | நெய்குப்பி ஏரி | திண்டிவனம் தெ.ஆ. | 1486 | கம்பண்ண உடையார் |

* * *

# 5. கோணேசர் கல்வெட்டு
# இலங்கைத் திருகோணமலை

**மூ. பரிமணன்**

கோணேசர் கல்வெட்டு என்னும் கோணேசர் சாசனம் குளக்கோட்டு மன்னர் கோணேஸ்வரத்தில் (திருகோணமலை) நிறைவேற்றிய திருப்பணிகளையும், சட்ட திட்ட நியமங்களையும் தீர்க்க தரிசனங்களையும் கூறுவதாக அமைந்துள்ளது.

குளக்கோட்டு மன்னர் கோணேசர் கோவிலைப் பற்றியும், அதனை நிருவாகம் செய்யும் முறைமைகள் பற்றியும், விரிவாகக் கூறியுள்ள செய்திகள் செப்பேட்டுப் பெரிய வளமைப் பத்தியில் செய்திகளைத் தொகுத்தும், விரித்தும் கவிராஜ வரோதயர் ஐம்பது விருத்தப் பாடல்களால் பாடியுள்ளார். இவையே கோணேசர் கல்வெட்டாகும். இந்த ஏட்டுப் பிரதி காலங்காலமாகப் பிரதி செய்யப்பட்டுப் பாதுகாக்கப் பட்டு வந்துள்ளது என்கிறார் இந்நூல் பதிப்பாசிரியர் இ. வடிவேல் அவர்கள்.

"திருமருவு மனுநீதி கண்ட சோழன்
செகமகிழ வருராம தேவன்" (பாடல்-1)

—— என்ற முதல் பாடலில் மனுநீதிகண்ட சோழன் வழியில் வந்த சிறந்த அரசரான 'வரராமதேவன்' திருகோணேஸ்வரம் என்னும் திருகோணமலையின் சிறப்பைக் காண்பதற்காக வருகின்றார். அப்போது அங்கே குடி கொண்டுள்ள இறைவன் கோணேஸ்வரனைக் கண்டு வணங்கி, அவ் இறைவனின் பெருமைகளை அறிகின்றார். பின் இத்திருக்கோவிலுக்குத் திருப்பணிகள் செய்ய வேண்டும் என்ற நினைவோடு சோழ நாடு மீள்கின்றார். பின்னர் அவருடைய மகனாகிய 'இராச சிருங்க மகராசன்' என்னும் 'குளக்கோடனை' கோணேஸ்வரத்திற்கு அனுப்பி வைக்கிறார். அவர் திருக்கோணேஸ்வரம் வந்து சிறப்பு மிகுந்த ஆலயமும், கோபுரங்களும், மதில்கள் சூழ்ந்த மண்டபங்களும், நீர் நிறைந்த சுனைகளும் (பாவநாசச் சுனை) அல்லைக்குளம், வெண்டரசன் குளம், கந்தளாய் குளம் முதலிய குளங்களையும் அமைக்கின்றார்.

### சிற்றரசுகளும், கோவில் பணியாளர்களும்

கோணேஸ்வரத்தை நிருவகிக்க வன்னிமை (சிற்றரசு)கள், தொழும்பு (கோவில் பணி)கள் செய்வதற்காகத் தானத்தார், வரிப்பத்தார் என்பவர்களையும்

நியமிக்கின்றார். அடுத்துக் கோணேசப் பெருமானுடைய பூசைகளும், அவை நடைபெறுவதற்கான விதிமுறைகள், நித்திய பூசைகளுக்காகச் சோழ நாட்டிலிருந்து 'செம்பூச்சம்பா' அரிசியைக் கொண்டு வந்து இறைவனுக்கு அமுது படைத்தல், இக்கோவிலைப் பராமரிப்பதற்காக மருங்கூரி (தமிழ்நாடு)லிருந்து முப்பது குடிமக்களைக் கொண்டு வந்து குடியமர்த்துதல், இதற்கு நிரந்தரமான வருவாய் வரக்கூடிய வழிமுறைகள் போன்றவற்றைப் பற்றிச் சிந்திக்கின்றார். அதன்படி குளங்களை வெட்டி, வயல்வெளிகளை உண்டாக்கி, உற்பத்தியைப் பெருக்குவதற்கும் திட்டமிடுகின்றார். இதற்காகத் தமிழ்நாட்டிலிருந்து மக்களைக் கொண்டு வந்து இங்குக் குடியமர்த்தவும் அவர்களைப் பரிபாலிக்கவும், உற்பத்திப் பொருளை ஆலயத்திற்கும், மக்களுக்கும் பகிர்ந்தளிக்கவும் பொறுப்பதிகாரிகளையும் ஏற்படுத்துகின்றார்.

## கருகுலக்கணக்கும் - இராயர் பட்டமும்

திருக்கோயிலின் திருவறைகளில் களஞ்சியங்கள் அமைக்கப்பட்டிருந்தன. தினமும் வரும் பொருட்களின் வரவுகளையும், பூசைகளுக்குச் செலவாகும் பொருட்களையும் விபரமாக எழுத கருகுல கணக்கரை நியமிக்கின்றார். அத்துடன் இறைவன் திருவிழா வரும்போது தானத்தார் குடியைச் சேர்ந்த பெண்கள் ஆலாத்தி எடுக்க வேண்டுமென்றும், இன்னின்ன குடியைச் சேர்ந்தவர்கள் நடனமாடவும், பன்றி குத்தவும், அரசனுக்குப் பட்டாடை இட வேண்டுமென்றும், 'முப்பது' குடிகளில் 'ஏழு' குடிகளுக்கு 'இராயர்' என்ற உயர்ந்த பட்டத்தையும் அரசர் கொடுக்கின்றார்.

"அத்தர் முன்னர் ஆலாத்தி நடனமிடல்
பன்றிகுத்தல் அதிகப்பட்ட அரனுக்கீதல்
இத்தனையும் தானத்தார் செய்வீரென எழுகுடிக்கு
இராயர்பட்டம் ஈந்தான் வேந்தன்" (பாடல்.6)

என்ற பாடல் கூறுகின்றது.

## காரைக்கால் மக்களும் - பணியும்

தமிழ்நாட்டிற்கு வந்து காரைக்கால் சென்று பரம்பரையாக ஆலயப்பணி செய்துவரும் நன்மக்களாகிய வரிப்பத்தார் என்பவர்களில் இருபத்தொரு குடிகளை அழைத்து வந்து வைகாசி மாதம் 10-ஆம் தேதி பூர்வபட்சம், சுவாதி நட்சத்திரம் கன்னி முகூர்த்தம் பொருந்திய நன்னாளில் கோணேசப் பெருமானுக்கு ஆலயப் பணிகள் செய்வதற்காக அமர்த்துகின்றார்.

"வேந்தனின்றும் அரன்தொழும்புக்கு ஆட்போதாதென
நினைத்து மீண்டே காரை

வாய்ந்த வளநாடுசென்று வரிப்பிடித்தான் மூவேழு
குடிவாழ்வோரை" (பாடல்7)

## வரிப்பத்தார்கள் செய்ய வேண்டிய பணிகள்

கோணேசர் பெருமானுடைய சன்னதியில் சிறப்பு வாய்ந்த நல்லபட்டு வஸ்திரங்களைக் கொய்து பிடித்தல், புஷ்பங்கள் (மலர்கள்) எடுத்தல், தூய்மையாக அவைகளை நிறைத்து வைத்தல், பிரகாசிக்கும்படி நிறைவாக விளக்கேற்றுதல், தினமும் நெல்லுக்குற்றிச் சிறப்பாக அரிசி சேர்த்தல், சாணி தெளித்தல், விறகு சேர்த்தல், சன்னதியில் நடனமாடும் பெண்களுக்கு இசைக்கருவி வாசித்தல், பாடுதல், சுற்றுப் பலிக்குப் பாவாடையிடுதல், சுண்ணம் இடித்தல், கொடி ஏற்றுதல், கொடி இறக்குதல், சந்தனம் அரைத்தல் முதலிய ஆலயப் பணிகளை மனத்தூய்மையோடு செய்ய வேண்டும் என்றும் இதற்காக இவர்களுக்கு நீர்பாயும் வசதி உள்ள நெல்விளையும் நல்ல கழனிகளையும் கொடுத்துப் 'பண்டாரத்தார்' என்ற பட்டமும் கொடுத்துச் சிறப்பு செய்கின்றார் மன்னர்.

## தனியுண்ணாப் பூபாலன்

தானத்தார் வரிப்பத்தார்களைப் பாதுகாக்க மதுரைக்குச் சென்று சந்திர வமிசத்தில் தோன்றி இராமனை ஒத்த சீலம் நிறைந்தவரான தனியுண்ணாப் பூபாலன் என்பவரை அழைத்து வந்து திருகோணமலை நகரத்தை அரசாட்சி செய்யும்படியாக நியமனம் செய்கின்றார் மன்னர்.

## நீதியைக் காப்பாற்றும் நெறி

கீர்த்திபொருந்திய பாசுபத நெறியில் வாழும் அந்தணர்களுடைய மனம் நோகாமலிருக்கும் படியாகவும், அவர்கள் செய்யும் சில பூசைகளிலும் ஒழுக்கத்திலும் தவறு செய்தாலும் அதனைக் குற்றமாகக் கருத மாட்டேன் என்றும், அவர்கள் செய்யும் தவறால் கோபப்பட்டு அதை அவர்கள் கோணேசரிடம் சொன்னால் அதனால் பிரமகத்தி தோஷம் ஏற்பட்டு வம்மிசம் முழுவதையும் சுற்றிப் பற்றும், எனவே அவர்களை விடுத்து மற்றவர்களுக்கு உரிய நீதிகளைக் கூறுகின்றேன் என மன்னர் கூறுவதைக் காணலாம்.

## குற்றத்திற்கு உரிய தண்டனை

தூய ஒழுக்கம் நிறைந்த வன்னிமைகளே! ஆலயப் பணிகள் செய்பவர்கள் தன்பணியை முறையாகச் செய்யாமல் குற்றஞ் செய்தால் விலங்கிட்டுக் கசையடி கொடு; உயிர்பறிக்கப்படும்; குற்றம் செய்தால் மரண தண்டனை கொடு; நடனமாடும் பெண்கள் குற்றம் செய்தால் நிறைந்த நீருள்ளே நிற்க வைத்துத் தேங்காய் வாங்கு; ஏனைய குலமாதர்கள் குற்றம் செய்தால் தலையிலே மண் கடகத்தை ஏற்றி வைத்து அவர்கள் செய்த குற்றத்திற்கேற்ப கசையடி கொடு, இப்படியான நீதிபரிபாலனத்தைச் செய்வாயாக

என்று கூறி வன்னிமையைக் குளகாட்டு மன்னர் இரத்தின மணி இழைத்த ஆசனத்தில் இருத்தி வைத்து நீதி பரிபாலனம் செய்த முறைமை எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

### சிற்றரசனுக்கு அறிவுரை

பூமியுள்ளோரால் புகழ்ந்து போற்றப்படும் வன்னிமையே, மனு தர்மப்படி நீதியைப் பரிபாலனம் செய்வாயாக, தவறு செய்யாதே, கோபம் பாவத்தைத் தரும், உனது மனைவியே உனக்கு மனைவி. அயலவர்களின் மனைவியர் உனக்குத் தாயராவார். சத்தியத்தை ஏற்றுக் கொள், பொய்யை விட்டுவிடு என்று கூறிச் செல்கின்றார் மன்னர்.

### கட்டுக் குளத்துக்காரர்களின் பணிகள்

நிலாவெளியூரில் உள்ள கட்டுக் குளத்தூரர்களில் பெரியவர்கள் இறைவனுடைய சன்னதியில் முன்னின்று காப்பணிந்து திருவிழாக்களை நடத்துதல், ஆறு ஆவணம் சுத்தமான நெல்லை ஆலயத்தில் ஒப்படைத்தல், பால், தயிர், நெய் கொடுத்தல், சுங்கத்தீர்வை, கடற் பிரயோசனத்தின் லாபங்கள் முதலானவைகளைக் கோணை ஈசனுக்குக் கொடுத்தல் போன்றவற்றைச் செய்ய வேண்டும் என்றும் மன்னர் கட்டளை யிடுகின்றார்.

### மகாட்டியாப்புரப்பற்றின் மக்கள் கோணேசருக்குப் செய்யும் பணி

இவர்கள் கோணேசர் கோவிலுக்குப் பாக்கும், வெற்றிலையும், வாழைப்ப பழமும், சந்தனமும், குற்றமற்ற பால், தயிர், நெய், நூறு ஆவணம் அரிசி கொடுத்துவர வேண்டும் என்று கட்டளையிடுகின்றார்.

"ஆனதுவரைக் காயினுடன் வெள்ளிலையும்
அருங்கதலி கனியும் சாந்தும்
ஊனமறு பால்தயிர் நெய்அரிசி
ஒருநூறு ஆவணம் உகந்தே ஈதல்" *(பாடல்.16)*

வேண்டும் என்று கூறுகிறது.

### எண்ணெய் சேமிப்பு

ஆமணக்கு, இலுப்பை, புண்ணைப் பருப்புகளை இறையாத் தீவில் உள்ளவர்களிடம் ஒப்புவிக்க வேண்டும். அவைகளை அவர்கள் செக்கிலிட்டு ஆட்டி எண்ணெய் வகைகளைத் தனியே எடுத்துச் சென்று கெவுலி முனையிலுள்ள (சம்புருக்கருகில்) ஓடக்காரரிடம் கொடுக்க வேண்டும். அவர்கள் அவற்றை ஓடங்களில் ஏற்றி வந்து கோணேஸ்வரத்தில் உள்ள கருக்குலக்கணக்கில் பதிவு செய்து ஒவ்வொரு வகை எண்ணெயையும் அவைகளைச் சேமித்து வைப்பதற்குரிய தனித்தனிக் கிணறுகளில் ஊற்றி வைக்க வேண்டுமென்று மன்னர் கூறுகின்றார்.

## அதிகாரிகளும் - எண்ணெய்க் கிணறுகளும்

கோணேசர் கோவில் வாசலின் தென்கிழக்குப் பக்கமாக எண்ணெய் வகைகளையும் நெய்யையும் சேமித்து வைப்பதற்காக ஏழு கிணறுகளைக் கட்டி அவற்றுக்குக் குற்றமற்ற துலாக்கோல் போட்டு வாளியுமிட்டுக் கிணறுகளைப் பாதுகாக்கச் சுற்றுமதில்களும் கட்டிக் கதவுகளுமிட்டார். எண்ணெய், நெய்யை ஏற்கவும், கொடுக்கவும் எண்ணெய் அதிகாரம் எனப் பொறுப்பதிகாரிகளையும் நியமித்து எண்ணெய் நெய் எக்காலத்திலும் குறையாமலிருக்கச் செய்தார் குளக்கோட்டு மன்னர்.

## திருப்பணிகள்

கலியுகம் பிறந்து ஐந்நூற்றுப் பன்னிரெண்டு ஆண்டுகள் சென்றபின்பு வைகாசி மாதம் பத்தாம் தேதி பூரணையாகிய நன்னாளில் திரக்கோணேஸ்வரத்தில் சிறப்புமிக்க ஆலயமும், கோபுரங்களும், தேரோடும் வீதியும், அழகிய மதில்களும் பாவநாசச் சுனையும் மன்னனின் திருப்பணிகளாக நிறைவேறின.

> "திருந்து கலிபிறந்து ஐந்நூற்று ஒருபதுடன் இரண்டாண்டு
> சென்ற பின்னர்
> புரிந்த இடப மாதத்தில் ஈரைந்தாந்தேதி திங்கள் புணர்ந்த நாளில்
> தெரிந்தபுகழ் ஆலயமாம் சினகரமும் கோபுரமும் தேரூர் வீதி
> புரிந்து ரத்ன மணிமதிலும் பாவநாசச் சுனையும் பகுத்தான்
> மேலோன்"
>
> *(பாடல்.22)*

என்ற பாடல் மேற்கண்ட கருத்துக்கு அரணாக அமைந்துள்ளது.

## திருமால் அழைப்பு

குளம் வெட்டுவதற்குப் பாசுபதர்களைக் கோணேஸ்வரனிடம் அனுப்பி உத்தரவு வாங்கி வருமாறு அனுப்புகிறார் மன்னர். பின் கோணேஸ்வரனின் ஆசியோடு திருக்குளம் நான்கு ஆண்டுகளில் வெட்டி முடிக்கப் படுகின்றது. பின்பு குளத்திற்கு நீர்வரும் கால்வாய்கள் அமைத்து முறையாக்கப் படுகின்றது. குளமும் மழைநீர் நிரம்பி அதில் மீன்களும் துள்ளி விளையாடுகின்றன. பின்பு முதன் முலாக மதகைத் திறப்பதற்குத் திருமாலை அழைக்கின்றார் மன்னர்.

---

**குறிப்பு**

கலியுகம் *5090*. இதில் *512* வருடங்களைக் கழித்தால் *4478* வருடங்களுக்கு முன்னால் திருப்பணி செய்தாக இங்குக் கூறப்படுகிறது.

"........... மதகு திறப்பது யாரென்று
பாலாழி தனிற்துயிலும் பச்சைமுகில்தனை நினைத்தான்"
(பாடல்-23)

அப்போது திருமால் தோன்றி 'நான் மதகு திறக்கிறேன்' என்று கூறியதாகப் பாடல் வருகிறது.

## குளத்தின் காவல் தெய்வங்கள்

திருக்குளத்திற்குக் காளமுனி, அண்ணமார், வதனமார், ஐயனார், சந்திக் காவலர்களும், மங்கலமும், பூதங்களும், வயிரவரும் காவலாக இருப்பார்கள். இக்காவல் தெய்வங்களுக்கு ஒரு வருடம் பழம், பாக்கு, வெற்றிலை முதலியவைகளால் படையுமிட்டு திருவிளக்கும் நல்ல தூபமும் இட்டு மாறி மாறி வருடா வருடம் பூசைபலி தரவேண்டும் என்றும், பச்சைப் பட்டுகட்டிப் பூசை படையிட்டால் வயலில் நல்ல மழை பெய்யும் சிவப்புப் பட்டு கட்டிப் பூசை செய்தால் மிகுந்த வெயிலெரிக்கும் துன்பம் இன்றி சோர்வடையாமல் திருக்குளத்தைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் இருபத்தொண்ணுழி சென்ற பின்னர் யாம் இங்கு வந்து உங்கள் குறைகளைத் தீர்ப்போம் என்று கூறினார் திருமால்.

## காவல் தெய்வங்களுக்குச் சிறப்பு செய்தல்

இதனால் மன்னரும் மகிழ்ந்து 120 எருமைகளைக் கட்டி அவற்றின் பாலில் தேவதைகளுக்குப் பாற்பொங்கலும் பழம், பாக்கு, வெற்றிலை மடையும், திருவிளக்கும் வைத்து வணங்கி வந்தார். இவ்வேள்விகளை ஆண்டுதோறும் சிறப்பாகச் செய்து வந்தார். தனக்குப் பின்பும் செய்துவர ஆணையிட்டார்.

## கோவில் சொத்தை அபகரித்தால் வரும் தீமைகள்

கடல்படு திரவியங்கள் நிறைந்த கடலால் சூழப்பட்ட இலங்கை மன்னர்கள் யாரேனும் சோழ வம்மிசத்தாராகிய குளக்கோட்டு மன்னன் கோணேசப் பெருமானுடைய பூசைகள் விதிமுறைப்படி நடத்துவதற்காக வழங்கப்பட்ட பொன்னையும் (பணம்) நெல், பால், தயிர், நெய் முதலிய

---

**குறிப்பு**

திருமால் கூறியபடி குளக்காட்டிற் காவல் புரிகின்ற தேவதைகளுக்குப் பாற்பொங்கல், மடை முதலியன அரசன் ஆணைப்படி இன்றும் செய்து வருகின்றார்கள். மழையோ, வெயிலோ தேவைப்படும் காலங்களில் பட்டு நேர்கடன் செய்கின்ற வழக்கம் இன்றும் உள்ளது. தம்பலகாமம் கொட்டியாபுரம், கட்டுக்குளப்பற்றில் உள்ளவர்கள் பட்டுக்கட்டி நேர்கடன் செய்து வருகின்றார்கள். தெய்வ நம்பிக்கையற்ற சிலரால் இதைக் கைவிட்டதால் இக்குளம் 1985-ஆம் ஆண்டு உடைபெடுத்து ஊரும் அழிந்து உயிர்களும் பொருள்களும் அழிந்தன என்று கூறுகின்றார் இந்நூல் பதிப்பாசிரியர் இ. வடிவேல் அவர்கள். (பக். 70,71).

பல்வேறு திரவியங்களையும் எடுத்துத் தான் அனுபவித்து அழிவு செய்வார்களானால், கொடிய குட்டநோய்க்கு ஆட்பட்டு அவர்கள் செல்வமெல்லாம் கள்வர்களால் சூறையாடப்பட்டு, கயவர்களும் இப்பூமியை ஆள்வார்கள் என்று செப்புப் பட்டயத்தில் பொறிக்குமாறு ஆணையிடுகின்றார். இதனால் அமைச்சர்களும் அரசர்களும், பிரதானிகளும், அறவோரும், அந்தணர்களும் கற்பு நெறிவழுவாத பெண்களும் தத்தமது ஆசாரங்களுக்குரிய நெறியில் நின்று கோணேசப் பெருமானை வழிபட்டு வந்தனர்.

## கோணேசரும் மன்னரும்

குளக்காட்டு மன்னர் சிறப்பு மிக்க பாவநாசச் சுனையில் குளித்துவிட்டுத் திருநீறணிந்து மேலான பட்டாடை தரித்து அன்றலர்ந்த பூக்களைக் கையிலேந்தி கோணேசப் பெருமானைத் தரிசிக்கச் செல்கிறார். கோவில் உள்ளே சென்ற மன்னர் திரும்பி வரவேயில்லை. மன்னர் கோவில் உள்ளே மறைந்து விட்டதாகவும், கோணேசரின் திருவடியில் அழகிய சிவப்பிரகாசம் நிறைந்த மலர்மட்டும் மலர்ந்து ஒளி வீசியதாகக் கோவில் பூசை செய்யும் பாசுபதர்கள் வந்து கூறுகின்றனர். இதைக்கேட்ட அனைவரும் மன்னரை வாழ்த்தி கோணேசப் பெருமானுக்குப் பணி செய்து மகிழ்ச்சியோடு வாழ்ந்திருந்ததாகக் கோணேசர் கல்வெட்டுப் பாடல்கள் முற்றுப் பெறுகின்றன.

## நிறைவுரை

மனுநீதி கண்ட சோழன் வழியில் வந்தவர் வரராமதேவன். இவர் மகன் குளக்கோடன் என்னும் இராசசிருங்க மகாராசன்.

இம்மன்னன் திருகோணமலையில் சிறந்த சிவாலயம் ஒன்றுக்கு *4478* வருடங்களுக்கு முன்னால் திருப்பணிகள் செய்ததையும் பின் அக்கோவிலைப் பராமரிப்பதற்காக தமிழகத்தின் காரை *(காரைக்கால்)* மருங்கூர், காஞ்சி, மதுரை போன்ற இடங்களிலிருந்து குடிமக்களை அழைத்துப் போய் குடியமர்த்தியதையும் அறிகின்றோம்.

சிற்றரசுகளை ஏற்படுத்தி நீதி நிர்வாகம் செவ்வனே நடைபெற வழி வகுத்திருக்கின்றார்.

குற்றம் செய்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுக்குக் கடுமையான தண்டனை வழங்கப்பட்டிருக்கிறது.

இம்மன்னர் ஆற்றிய பணிகளுள் கந்தளாய்க் குளம் சிறப்பு வாய்ந்ததாகும். இக்குளத்தை ஆதாரமாகக் கொண்டு பல விளை நிலங்களை ஏற்படுத்தி விவசாயம் நடைபெற வழி வகுத்திருக்கின்றார்.

இச்செய்திகள் யாவும் திருகோணமலைவாழ் மக்களின் பாரம்பரியத்தையும், இந்துசமய கலாச்சாரத் தொன்மையையும் கூறும் ஒரு சாசனமாகத் திகழ்கின்றன.

## இக்கட்டுரை எழுத **ஆதாரமாக இருந்த நூல்கள்**

1. அ. வடிவேல் (பதி.)
கோணேசர் கல்வெட்டு (கவிராஜவரோதயன் இயற்றியது)
இந்து சமய கலாசார அலுவல்கள், திணைக்களம்,
கொழும்பு. 1993.

2. டாக்டர் ஆ. தசரதன் (பதி.)
வலங்கைச் சான்றோரும் சோழரும்
தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்
திருவான்மியூர், சென்னை 41, 1995.

3. ஆ. சிங்காரவேலு முதலியார்
அபிதான சிந்தாமணி
ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ்
புதுதில்லி. 1981.

* * *

# 6. மானவீரவள நாட்டுக் கல்வெட்டுகள்

முனைவர் ஆ. தசரதன், அ. கணேசன்

## முன்னுரை

மானவீர வளநாடு அல்லது மானாடு எனக் கூறப்பெறும் பகுதி தற்போது திருநெல்வேலி மாவட்டத்தின் தென்கீழ்ப்பகுதியும் தூத்துக்குடி மாவட்டத்தின் தென்பகுதியும் சேர்ந்த நிலப்பரப்பாகும்; திருச்செந்தூர் வட்டத்தில் உள்ளது. இந்நிலப்பரப்பு *40* கி.மீ. சதுர சுற்றளவு கொண்டது. இதன் பெரும்பாலான பகுதி மணல் நிறைந்த தேரிப் பகுதியாகும். நன்செய் நிலங்கள் குறைவாகவும் புன்செய் நிலங்கள் கூடுதலாகவும் பெற்று விளங்கும் இப்பகுதி கிழக்கும் தெற்கும் குடாக்கடலையும் வடக்கே தாமிரபரணி ஆற்றையும் எல்லையாகக் கொண்டது.

## பெயர்க்காரணம்

மானாடு என்பது 'மாறநாடு' என்பதிலிருந்து திரிந்தது என்று ஒரு சாராரும், 'மானவீரவள நாடு' என்ற தொடர் குறுகி 'மானாடு' என ஆயிற்று என ஒரு சாராரும் கூறுகின்றனர். கி.பி. *8-9*-ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த மாறன் இராசசிம்மன் என்பான் பெயரில் ஏற்பட்ட 'மாறநாடு' என்பது பின்பு 'மானாடு' என ஆயிற்று என்று கூறுவதற்குரிய கல்வெட்டுச் சான்றுகள் எதுவுமில்லை. அதனால் 'மானவீரவள நாடு' என்பதே 'மானாடு' எனத் திரிந்தது எனக் கொள்வது பொருத்தமாகத் தெரிகிறது. அதற்கேற்ப கி.பி. *16*-ஆம் நூற்றாண்டிலிருந்து அப்பகுதியில் பாடப்பெற்றுவரும் வில்லுப் பாடல்களில் 'மானவளவீர நாடு' எனும் தொடர் பயன்படுத்தப் பெறுவதைக் காணலாம்.

## மானாட்டின் பழமை

மானவீர நாட்டில் எல்லையிலமைந்துள்ள திருச்செந்தூர் 'அலைவாய்' எனச் சங்க இலக்கியத்தில் கூறப் பெறுகின்றது. அதனருகிலுள்ள குலசேகரப் பட்டினம் காரைக்காலம்மையார் கதையோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகிறது. 'திருநெல்வேலி சரித்திரம்' என்ற நூலில் கால்டுவெல் பாதிரியார் மானவீர நாட்டுப் பகுதிகளில் மண்ணுக் கடியில் சிப்பிகளின் உறைவுகள் (Fossils) உள்ளதாகக் கூறுகின்றார். புதிய கற்காலத்தைச் சேர்ந்ததாக இங்குள்ள மணலின் தொன்மையைத் தொல்லியல் ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர். கி.பி. *9*-ஆம் நூற்றாண்டில் (கி.பி. *862-885*) வாழ்ந்த வரகுண பாண்டியன் என்பான் திருச்செந்தூர் முருகன் கோயிலுக்கு அளித்த கொடைகளுக்கான

கல்வெட்டுகள் அக்கோயிலில் காணப்பெறுகின்றன. இலங்கை வரலாற்றைக் கூறும் மகாவம்சம், சூளவம்சம் எனும் நூல்கள் மானாட்டுப் பகுதிகளைச் சுட்டுகின்றன. கி.பி. 10-ஆம் நூற்றாண்டுக்கு முன் மானாட்டுப் பகுதியைப் பாண்டியர்களும், அதன்பின்பு சோழர்களும் ஆண்டதாகச் சோழர் வரலாறு குறிப்பிடுகின்றது. பிற்காலச் சோழர்களைத் தொடர்ந்து ஐந்து பாண்டிய சிற்றரசர்களும், பின்பு நாயக்கர் திருவாங்கூர் அரசர்கள், ஆங்கிலேயர் என்போர் அப்பகுதிகளை ஆண்டதாகச் சரித்திர நூல்கள் குறிப்பிடுகின்றன. ஆயினும் மானவீர வளநாட்டின் சிலபகுதிகள் சுதந்திரமாகச் சில ஆட்சியாளர்களால் ஆளப் பெற்று வந்ததாகக் கதைகளிலிருந்தும், வாய்மொழி வரலாற்றுச் செய்திகளிலிருந்தும் தெரிய வருகின்றன. தற்போது அவற்றிற்கான கல்வெட்டு ஆதாரங்கள் கிடைத்து வருகின்றன.

## மானாட்டின் நிலப்பிரிவு

பிற்காலச் சோழர்கள், தம் ஆட்சிக்குள் இடம்பெற்ற நிலப் பரப்பை மண்டலம், வளநாடு, நாடு, பற்று எனப் பிரித்திருந்தனர். முதலாம் இராசராசன் காலத்தில் பாண்டிய நாடு இராசராச பாண்டிமண்டலமாக அழைக்கப்பெற்றது. அம் மண்டலத்தின் தென்பகுதியாகிய தென்பாண்டி மண்டலத்தின் கூறாக மூன்று வளநாடுகளிருந்தன. அவை *1.* உத்தமசோழ வளநாடு *2.* மானவீர வளநாடு *3.* திருவழுதி வளநாடு. இவற்றுள் தாமிரபரணி ஆற்றுக்கு வடக்கே திருவழுதி வளநாடும், தாமிர பரணி ஆற்றுக்குத் தெற்கே மானவீர வளநாடும், அதற்கும் தென்மேற்கில் கோட்டாறுவரை உத்தமசோழ வளநாடும் இருந்தன. உத்தம சோழவள நாட்டை மதுராந்தகச் சோழன் ஆண்டான். திருவழுதி வளநாடு சோழர் படை அதிகாரிகளின் ஆட்சியின் கீழிளிருந்தது. மானவீர வளநாட்டை ஆண்டவர்களின் பெயர் தெரிந்திலது. ஆனால் சோழனின் உறவினர்களின் ஆட்சியின் கீழ் அப்பகுதி இருந்ததாக நம்பப்படுகிறது. அதற்கான சான்றுகளடங்கிய கல்வெட்டுகளோ, பட்டயங்களோ கிடைத்தில. ஏனாதி, பணிக்கன், ஆதித்தன், நாடாதி நாடாக்கள், மார்த்தாண்டர், நிலமைக்காரர், முக்கந்தர், வெள்ளை நாடர் போன்ற பட்டங்கள் கொண்ட ஆட்சியாளர்கள் அப்பகுதியிலிருந்ததாகத் தெரிகிறது.

## மானாட்டின் வடபற்று - தென்பற்று

மானவீர வளநாடு பல பற்றுகளை உள்ளடக்கி இருந்தது. அவை **வடபற்று - தென்பற்று** எனும் இரு பிரிவுகளுக்குள் அடங்கும். தற்போது, தண்டுப்பத்து, பள்ளிப் பத்து, நயினாப்பத்து, சீருடையார் பத்து, செட்டியா பத்து போன்ற பெயர்களில் பற்று (பத்து)கள் இருப்பதால் வடபற்று - தென்பற்றுகளில் பல ஊர்கள் அடங்கியிருந்தன எனத் தெளிவாகின்றது. வடபற்றுகள் மொத்தம் பத்து இருந்ததற்கான சான்று கி.பி. *1639*-இல் தேரியில் நாட்டப் பெற்ற கல்தூண் கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது. இதைப் போன்றே

தென்பற்றுப் பகுதியில் பல பற்றுகள் இருந்தன. அவற்றில் அஞ்சு பற்று நாடுகள் எனும் பகுதி தென்பற்றில் அடங்கியிருந்ததாகத் தெரிகிறது.

## கல்வெட்டுகள்

தென்பற்றில் அடங்கும் நங்கைமொழி என்ற ஊரில் அமைந்துள்ள காளத்தீசுவரர் கோயிலில் சில கல்வெட்டுகள் உள்ளன. அவை முதலாம் குலோத்துங்கன் காலத்தவை. அதைப்போன்றே குலசேகரப் பட்டினத்திலும், மானாட்டு ஊரிலுள்ள சுந்தர நாச்சியார் கோயிலிலும் சில கல்வெட்டுகள் கண்டறியப் பட்டுள்ளன. வடபற்றுகளிலுள்ள கருக்கு வேலய்யனார் கோயிலிலும், மூலப் பொழியிலும் பிற்காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுகள் உள்ளன. காயாமொழி ஏரிக் கரையிலும், வீரபாண்டியன் பட்டினத்தின் அருகிலும் ஆதித்தர்கள் தொடர்பான கல்வெட்டுகளிருப்பதாகக் கூறப்படுகிறது. அவை இதுவரை கண்டறியப்படவில்லை. மானவீர வளநாட்டுக் கல்வெட்டுகளில் கி.பி. *1639*-இல் பொறிக்கப்பட்ட நாடாதி நாடாக்கள் பற்றிய தேரிக் கல்தூண் கல்வெட்டும், கி.பி.*1785*-இல் குலசேகரப் பட்டினத்தில் பொறிக்கப்பட்ட நிலமைக்காரர்கள் பற்றிய கல்வெட்டும் இக்கட்டுரைக்குப் பெரிதும் பயனுடையனவாயுள்ளன. கல்வெட்டுகளையன்றி, செப்புப் பட்டயங்களும் வரலாற்றுக் கருத்துகளடங்கிய ஓலைச் சுவடிகளும் அப்பகுதியில் கிடைக்கின்றன. ஆயினும் அவை இங்கே ஆராயப் பெறவில்லை.

## மானாட்டு ஆட்சியாளர்கள்

மானவீரவளநாடு கி.பி.*9* ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. *16*-ஆம் நூற்றாண்டு வரை வழக்கிலிருந்ததாகக் கூறப்படுகிறது. அவ்வாறெனின் பிற்காலச் சோழர்கள் காலத்திலும், அதற்குச் சற்றுப் பின்பும் ஆங்குச் சோழ ஆட்சியாளர்கள் செயல்பட்டிருந்தனர் எனக் கூறலாம். *16*-ஆம் நூற்றாண்டிற்குப் பின் கிடைக்கும் கல்வெட்டுகளிலிருந்து அச்சோழ ஆட்சியாளர்கள் அருகி, மிகச் சிலரே நாயக்கரிடம் அதிகாரம் பெற்று அரசோச்சியதாக கி.பி.*1639*-ஆம் ஆண்டினதான தேரிக் கல்வெட்டும், கி.பி.*1785*-ஆம் ஆண்டைச் சேர்ந்த குலசைக் கல்வெட்டும் குறிப்பிடுகின்றன.

## ஏழுகரை தண்டிகைக்காரர்

மானாட்டு ஆட்சியாளர்களில் ஏழுகரை தண்டிகைக்காரர் எனும் முக்கந்தர் வடபற்று நிலங்களுக்குரியவர்களாக அறிய முடிகிறது. இவர்கள் தண்டிகைக்காரர் என்பதால் பல்லக்கில் செல்லும் அதிகாரம் பெற்றிருந்தனர். இவர்களைப் பற்றி எந்தக் கல்வெட்டிலும் குறிப்பிடப்படவில்லை. மாறாக, கி.பி.*1700*-ஐச் சேர்ந்த குமாரசாமி நாடான் கதை, கி.பி.*1800*-ஐச் சேர்ந்த மூலப்பொழி மண்டக் ராஜன் கதை, கி.பி.*1800*-ல் கான் சாயுபு சண்டை போன்ற நூல்கள் இவர்களைக் குறிப்பிடுகின்றன. இவர்கள் பெயர்களாவன *1.* வெற்றி

கொண்ட நாடன், 2. சிமிளி 3. குமாரக்கரையான் 4. புன்னங்கரையான் 5. அத்திப் பெரியவன் 6. அறம் வளர்த்தாண்டான் 7. சரவணப் பெரியவன். இவர்கள் சோழமரபினரா அல்லது பாண்டியர் மரபினரா எனத் தெரிந்து கொள்ள எவ்வகைச் சான்றுகளும் இல்லை.

## ஏனாதியர்

ஏனாதி என்போர் பூர்வ அரச மரபினர் எனச் சீவக சிந்தாமணியின் மிகப் பழைமையான உரை கூறுகிறது என்றும், கி.பி. 17-ஆம் நூற்றாண்டினதான திருமுருகன் பூண்டிச் செப்புப் பட்டயத்தில் ஏனாதி என்போர் சான்றோர் சமூகத்தில் ஒரு பிரிவினர் என்றும், இவர்கள் வேளிர் எனப்பெறும் சங்ககாலக் குறுநில மன்னர்களில் சிலர் என்றும் வரலாற்று ஆராய்ச்சியாளர் நெல்லை நெடுமாறன் குறிப்பிடுகின்றார். ஏனாதி நாதர் பெரிய புராணத்தில் சுட்டப்பெறுகின்றார். கி.பி. 1600-ஐச் சேர்ந்த வலங்கை மாலையின் ஆசிரியரான மானாட்டுச் சுந்தரம் என்பவர் தம்முடைய ஆசானாக ஏனாதி ஆனந்தனைக் குறிக்கின்றார். அதைப் போன்றே கி.பி.1620-ஐச் சார்ந்த அருதனக் குட்டி அடிகளார் என்பவர் தாம் பாடிய சீவக சிந்தாமணி அம்மானையில் இந்த ஏனாதி ஆனந்தனையே தம் குருவாகக் கொள்கின்றார். ஏனாதி என்போர் போர்க்கலை ஆசிரியர்களாவர் என்பதற்குப் பெரிய புராணத்தில் கூறப்பெறும் ஏனாதி நாதர் கதையே சான்றாகும். ஆயினும் மானாட்டில் இதுவரை கிடைக்கப்பெற்ற கல்வெட்டுகளில் ஏனாதி பற்றிக் குறிப்பிடப்படவில்லை.

## வெள்ளை நாடார்

கி.பி.1453-ல் கல்லிடைக் குறிச்சியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டில் வெள்ளை நாடன் எனும் ஆட்சியாளன் விக்கிரம ஆதித்தனும் அவனுடனிருந்தோரும் குறிப்பிடப்படுகின்றனர். ஆதித்தன் எனும் பட்டப் பெயர் கொண்ட சில வமிசத்தினர் படுக்கப்பத்து, காயாமொழி போன்ற மானாட்டு ஊர்களில் அதிகாரம் படைத்தவர்களாக இருந்துள்ளனர். விக்கிரம ஆதித்தன் ஆதித்த வர்ம பணிக்கன் போன்ற வெள்ளை நாடர் கல்லிடைக் குறிச்சியில் வலுவிழந்த பின்னர் மானாட்டில் குடியேறியிருக்கலாமெனத் தெரிகிறது. ஆயினும் கி.பி.1639-இல் தேரிக் கல்தூண் கல்வெட்டில் மட்டுமே ஆதித்த நாடன் என்ற பெயரில் ஒருவர் வடபற்று நாடாதி நாடர்களில் ஒருவராகச் சுட்டப்பெறுகின்றார்.

## ஆதித்தர்

காயன் எனும் பெயருடையவர்களாக இருந்ததால் இவர்களிருந்த ஊர் காயன்பொழில் என வழங்கலாயிற்று என்பர். ஆதித்தர்கள் சோழ ஆட்சி மரபினர் என்றும், முதலில் மலைநாட்டுப் பகுதிகளை ஆண்டு, பின்

மானாட்டிற்கு வந்தனர் என்றும் நம்பப்படுகின்றது. கி.பி.1623-இல் அரங்கேற்றப்பட்ட பெருமாள் சுவாமி கதையின் ஆசிரியர் அருதனக்குட்டி அடிகளார் வஞ்சி ஆதித்தன் என்ற மலைநாட்டு ஆட்சியாளனை மிகவும் போற்றுகின்றார். அப்பகுதி வருமாறு:

"வஞ்சிக் கொடியார்கள் மதனென வந்த மன்னன்
திருவஞ்சி ஆதித்த மன்னன் செங்கோலின் நீதிகேளும்
ஆறிலொரு கடமை கொண்டு ஆண்டிருந்த சேரர் பூமி
கூறிலொன்று தான் பிரிந்த கொற்றவர்கள் மலைநாடு
பிரமவழி மறையோடும் பெண்ணீதி குன்றாமல்
மரபுநெறி யழியாமல் மாதேவர் பூசைகளும்
தெய்வநெறிகுன்றாமல் செங்கோலின் முறை நடத்தும்
வையத்தில் நெறி நடக்கும் வளநாடு தென்னாடு"

மலைநாட்டுப் பகுதிகளை ஆண்ட ஆதித்தர்கள் மானாட்டுப் பகுதிகளை மருதூர் எனும் ஊரிலிருந்து முதலில் ஆண்டதாகவும் பின் காயாமொழிக்காக்க வந்ததாகவும் கூறப்படுகிறது. அதற்கேற்ப கி.பி.1639-இல் அமைந்த தேரிக் கல்வெட்டில் வரும் பத்து நாடாதி நாடாக்களில் ஆதித்த நாடன் என்போன் பெயரே முதலில் வருகின்றது. மானாட்டின் வடபத்து நிலங்களுடைய ஆட்சியாளர்களுக்குத் தலைமையாக இந்த ஆதித்த நாடன் அமைந்துள்ளான். ஆதித்தர்கள் பற்றி வீரபாண்டிய பட்டினத் தருகே கண்டறியப்படாத கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

### செண்பகராம பணிக்கன் (கல்தொட்டிக் கல்வெட்டு)

பணிக்கன் மரபினர் போர்க்கலை ஆசான்களாகத் தென்னாட்டில் பல இடங்களில் வாழ்ந்திருந்தனர். இவர்களைப் பழைய பணிக்கன்மார் எனக் கூறுவர். கி.பி.1453-ஆம் ஆண்டைச் சார்ந்ததான கல்லிடைக் குறிச்சிக் கல்வெட்டில் வன்மக் கலையில் சிறந்தவனான ஆதித்த வர்மப் பணிக்கன் என்பவன் இடம் பெறுகின்றான். கல்லிடைக்குறிச்சிப் பகுதிகளிலும், திருவிதாங்கூர் போன்ற தென்பகுதிகளிலும் பணிபுரிந்த பணிக்க ஆசான்கள் மானாட்டிலும் வாழ்ந்ததாகத் தெரிகிறது. கி.பி.1600-இல் மானாட்டிலுள்ள மருதூர் சுந்தர நாச்சியார் கோயில் கல்தொட்டியில் செம்பிராப் பணிக்கன் தன்மம் என்றுள்ளது. செம்பிராப் பணிக்கன் என்பது செண்பகராம பணிக்கன் என்ற பெயரின் திரிபு ஆகும். செண்பகராம பணிக்கன் கி.பி.1600-ல் மானாட்டில் பெயர்பெற்றவனாக இருக்கலாம். மானாட்டில் பணிக்கன் மொழி என்ற பெயரில் ஓர் ஊர் இருப்பதும் இங்குக் குறிப்பிடத் தகுந்தது. கி.பி.1854-ஐச் சார்ந்த மாலணைந்த நாடன் கதையில் வருபவனும் இவ்வூரைச் சார்ந்தவனாகவே கூறப்படுகின்றான்.

## நாடாதி நாடாக்கள் (கல்தூண் கல்வெட்டு)

மானாட்டின் வடபற்றுக் குட்பட்ட பத்துப் பகுதிகளை ஆட்சி செலுத்த கி.பி.1639-இல் நாயக்க மன்னன் பிரதிநிதியான வடமலையப்பபிள்ளையிடம் அதிகாரம் பெற்ற நாடாதி நாடாக்களின் பெயர் வருமாறு: 1. ஆதித்த நாடன் 2. கோவிந்தப் பணிக்க நாடன் 3. வீரப்ப நாடன் 4. தீத்தியப்ப நாடன் 5. பிச்ச நாடன் 6. அய்யாக் குட்டி நாடன் 7. திக்கெல்லாங் கட்டி நாடன் 8. நினைத்தது முடித்த நாடன் 9. அவத்தைக் குதவி நாடன் 10. குத்திபுண்டநாடன் ஆவர். இவர்கள் மானாட்டின் வட பற்றுக்களில் வரியைக் கூட்டவோ, குறைக்கவோ நீக்கவோ அதிகாரம் பெற்றிருந்தனர். இதைக்கூறும் சாசனக்கல் மானாட்டுத் தேரியின் மையத்தில் நாட்டப்பெற்றது. காலங்காலமாக ஆங்குச் சேர்ந்த மணல் காரணமாக மூடுண்டுபோன இச்சாசனக் கல் தற்போது எள்ளு விளை என்ற ஊருக்கருகில் உள்ளது. ஏறக்குறைய 5 அடி உயரமும் 2 அடி சுற்றளவும் கொண்ட இக் கல்தூண் கல்வெட்டு வரிகளைச் சரிவர தற்போது படிக்க முடியாதபடி மங்கிக் கொண்டிருக்கிறது. கி.பி. 1908-இல் வெளிவந்த பி.ஜே. குலசேகரராஜ் என்பாரின் நூலில் முதன்முதலாக இக்கல்வெட்டுச் செய்திகள் இடம்பெற்றன. இக்கல்வெட்டுத்தூணில் அம்மன் உருவம் முத்திரையாக அமைந்துள்ளது.

நாடாதி நாடாக்கள் பதின்மரில் ஆதித்த நாடன், அன்னாரின் சந்ததியினர் வரலாறு முறையாகத் தொகுக்கப் பெற்றுள்ளது. மீதியுள்ள ஒன்பது பேரில் கோவிந்தப் பணிக்க நாடானுக்குரிய பங்காக, பணிக்கன் மொழி நிலங்களும், வீரப்ப நாடனுக்குரியதாக வீரப்ப நாடன் குடியிருப்புப் பகுதிகளும் கண்டறியப்பட்டுள்ளன. மீதியுள்ள எழுவரின் ஆட்சிக்குரிய பகுதிகள் கண்டறியப்பட இயலாதுள்ளன. ஒரு வேளை இவர்களுடைய பகுதிகளைத் தேரிமணல் மூடிவிட்டதால் அவர்களுடைய சந்ததியார் வேறிடங்களுக்குக் குடி பெயர்ந்திருக்கலாம் எனத் தெரிகிறது. மானாட்டில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து பல குடும்பங்கள் வறட்சி, வணிகம் காரணமாக வேறிடங்களுக்குக் குடிபெயர்ந்துள்ளன.

## நட்டாத்தியர்

மானவீர வளநாட்டின் வடக்கேயுள்ள திருவழுதி வளநாட்டை நட்டாத்தியரின் முன்னோரான சோழப் படைவீரர்கள் ஆண்டதாகக் கூறப்படுகிறது. நட்டாத்தியர் மரபில் வந்த சிலர் மானாட்டின் தென்பற்றுப் பகுதிகளில் அஞ்சு பற்று நாடுகளை முறையே மானாட்டு ஊர், நங்கைமொழி, சித்துவிளை, வல்லநாடு, அடப்பநாடு எனும் ஊர்களிலிருந்து அதிகாரம் செலுத்தியதாகவும் அவர்கள் குமாரசாமி நாடன் எனும் தங்கள் உறவினனை கி.பி. 1650-இல் நாயக்கர் பிரதிநிதியிடமிருந்து ஆட்சி அதிகாரம் வாங்கச் செய்து ஆட்சி செய்ய வைத்ததாகவும் குமாரசாமி நாடன் கதை கூறுகின்றது.

நட்டாத்தியர் பற்றிய கல்வெட்டுகள் திருவழுதிவளநாட்டுப் பெருங்குளத்தில் கண்டறியப்பட்டுள்ளன.

## வெங்கலராசன்

கி.பி. *1606*-இல் பாடப்பெற்ற வெங்கலராசன் கதையில், இலங்கையிலிருந்து குடி பெயர்ந்து முதலில் நாஞ்சில் நாட்டிலும் பின்பு மானவீரவளநாட்டிலும் வாழ்ந்த வெங்கலராசன் என்போன் வீரசோழன் என்பானின் மகன் என அறியமுடிகின்றனது. இவன் கி.பி. *14*-ஆம் நூற்றாண்டினன். வெங்கலராசன் மானவீரவள நாட்டின் வடக்கு எல்லையில் வாழ்ந்தான். இவனைப் பற்றிக் கல்வெட்டுகள் உள்ளதாகக் குறிப்பிடுகின்றனர். ஆயினும் அவை இதுவரை கண்டறியப்பட வில்லை. வெங்கலராசன் எனும் மற்றொரு நாயக்க ஆட்சியாளன் படைசெலுத்தி வந்ததாகத் தென்பாண்டி நாட்டில் அறியக் கிடக்கின்றது.

## மண்டக்ராசன்

கி.பி. *18*-ஆம் நூற்றாண்டின் இறுதியில் திருவிதாங்கூர் மண்டைக்காடு பகுதியிலிருந்த சோழ ஆட்சியாளர்களில் ஒரு பிரிவினரான மண்டக்ராசன் குடும்பத்தினர் மானாட்டின் வடகீழ்ப்பகுதியில் குடியேறினர். இவர்களைக் குறித்து ஆதிபூர்வ மண்டங்குடி நாட்டு மன்னன் வரலாறு என்னும் பெயரில் ஒரு நூல் வெளியிடப் பெற்றுள்ளது. இவர்கள் தற்போது மூலப்பொழி எனுமிடத்தில் வாழ்கின்றனர். இவர்களுக்குரிய நிலத்தில் நடப்பெற்றுள்ள கல்சாசனம் ஒன்று இவர்களுக்கு அந்நிலம் சொந்தமெனக் கூறுகிறது. இது மிகவும் பிற்காலத்திய கல்வெட்டு ஆகும்.

## மார்த்தாண்டர்கள்

மானவீரவளநாட்டின் தென்மேற்கு எல்லையிலமைந்துள்ள குட்டம் எனும் ஊரிலிருந்து மானாட்டின் தென் எல்லைப் பகுதிகளை ஆட்சி செய்த மர்த்தாண்டர்கள் என்போர் கி.பி. *18*-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பிரபலமடைந்திருந்தனர். இவர்களின் முன்னோடிகளான சந்திர மார்த்தாண்டன், வீர மார்த்தாண்டன் என்போர் பற்றிய கல்வெட்டொன்று குலசேகரப்பட்டினத்தில் கண்டறியப்பட்டுள்ளது. இதன் காலம் கி.பி. *1785* ஆகும். குட்டம் முதல் குலசேகரப் பட்டினம் வரை உள்ள ஊர்களில் இவர்கள் அதிகாரம் பெற்றிருந்ததாக உரிமை வழங்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில்தான் முதன் முதலாக நிலமைக்காரர்கள் பற்றிய செய்தி ஒன்று இடம் பெற்றுள்ளது.

## மானாட்டின் பிற ஆட்சியாளர்கள்

மானவீரவள நாட்டு ஒலைச்சுவடி ஆவணங்களிலிருந்து பல ஆட்சியாளர்களை அறிந்து கொள்ள முடிகிறது. அவர்களில் பரமன்

குறிச்சியைச் சார்ந்த குமரப்பராசன் குடும்பத்தாரைப் பற்றித் தோட்டுக்காரி அம்மன் கதை குறிப்பிடுகின்றது. அதைப் போன்றே சோழ அரசர்களுக்குப் படைவீரர்களாகவும் உறவினர்களாகவுமிருந்த உய்யக் கொண்டார், நாடாள்வார்கள், வலங்கைப் படைவீரர்கள் பற்றிய பல வரலாற்று முக்கியத்துவம் பெற்ற செய்திகளை அறியமுடிகிறது.

**வலங்கைச் சான்றோர்**

இதுவரை கூறப்பெற்ற ஏனாதி, பணிக்கர், ஆதித்தர் மண்டக்ராசர், வெங்கல ராசன், மார்த்தாண்டர், வெள்ளை நாடர், நாடாதி நாடாக்கள் போன்றோர் பிற்காலச் சோழர்களின் உறவினர்களாகவோ, படைவீரர்களாகவோ போர்க்கலை ஆசான்களாகவோ இருந்தாலும் அவர்கள் அனைவரும் சோழனின் வலங்கைப் பிரிவின் கீழ் வருவதாலும் அவர்களனைவரையும் வலங்கைச் சான்றோர் என்று கூறுவது தவறாகாது. இவர்களுக்கு முற்றிலும் மாறுபட்டவர்களாக மானவீர வளநாட்டிலும் அதனருகிலும் நிலமைக்காரர் என்போர் அரசனுக்குரிய உரிமைகளைப் பெற்றவர்களாகக் கல்வெட்டுகளில் அறியப்படுகின்றனர்.

**நிலமைக்காரர்**

நிலமைக்காரர் என்பதிலிருந்து அவர்கள் நிலையாக விளங்கும் நிலவுடைமைக்காரர் என்பது தெற்றென விளங்கும். இவர்கள் *64* ஊரினர். இந்தப் பகுப்பின் கீழ் சில வலங்கைச் சான்றோரும் இடம் பெறுவது தற்போது கண்டறியப்பட்டுள்ளது. நிலமைக் காரர்களும் வலங்கைச் சான்றோர்போல தெய்வ வழிபாடும், வீரமும் பாரம்பரியமும் உடையவர்கள் தாம். அவர்கள் காணி ஆட்சியும் கால்பங்கு உரிமையும், ஆறு, குளங்களின் உரிமையும், வரிவிலக்கும் கொண்டவர்களாகப் பிற்காலத்துக் கல்வெட்டுகளில் சுட்டப்பெறுவதாக நெல்லை நெடுமாறன் குறிப்பிடுகின்றார்.

கி.பி. *1785*-ஐச் சேர்ந்த குலசேகரன் பட்டினம் கல்வெட்டில் கூறுவதிலிருந்து நிலமைக்காரருக்கு வரிவிலக்கு ஏற்புடைத்து என அறியப்படுகின்றது. நிலமைக்காரர்கள் *64* ஊரினர் ஆதலால் அவர்களின் சில கூட்டத்தினர் மானவீர வளநாட்டுப் பகுதிக்கும் அப்பாலுள்ள அண்டை ஊர்களிலும் வாழ்ந்து வருகின்றனர். நிலமைக்காரர்களின் வரலாறும் வாழ்க்கை முறையும் இன்னும் சரியாக ஆராயப்பெறாத அளவில் கல்வெட்டுச் சரித்திர சான்றுகள் மிகுதியாகக் கிடைக்கப் பெறாமலுள்ளன.

* * *

# 7. தென்பாண்டி நாட்டுச் சாத்தூர் செப்பேடு

ச.கிருஷ்ண மூர்த்தி

சாத்தூர், நென்மேனி, வடமலைபுரம், வணித சேகரம் என்ற ஊர்களில் வாழ்ந்த வித்துவ மகாஜனங்கள், மாகானத்தார், தலத்தார் பல்வேறு சாதியர் ஒன்று கூடி தானம் தந்த செப்பேடு இதுவாகும்.

**அமைப்பு :** இச்செப்பேடு *25* செ.மீ. நீளமும் *15.5* செ.மீ. அகலமும் கொண்டது. முதல் பக்கத்தில் சாத்தூர் என்று செப்பேடு தொடங்கி *48* வரிவரை எழுதப்பட்டுள்ளது. வரி *49* முதல் *100*வரி வரை பின் பக்கம் எழுதப்பட்டுள்ளது.

**காலம் :** சாலிவாகன சகாப்தம் *1701*-க்கு மேல் செல்லா நின்ற கொல்லம் *955*-க்கு விகாரி வருஷம் கார்த்திகை மாதம் *22* ஆம் தேதி தசமியும் குருவாரமும் உத்திர நட்சத்திரமும் கூடிய நன்னாளில் தானம் வழங்கப்படுகிறது. சக ஆண்டும் கொல்லமாண்டும் விகாரி வருடமும் பொருந்தவில்லை. எனினும் பஞ்சாங்கக் குறிப்பின்படி *2.12.1779* எனலாம். எனவே சக ஆண்டு *1721* ஆக இருக்க வேண்டும். வேறோர் சாத்தூர் செப்பேடும் ஏறக்குறைய இதே காலத்தில் கி.பி.*1779*இல் வெளியிடப் பட்டுள்ளது.

**செய்தி :** தானம் வழங்கப்பட்ட காலம் குறிப்பிட்டபின் திருச்செந்தூர் எங்குள்ளது என்ற விபரம் தரப்படுகிறது. நவகண்ட பூமியாகிய பாரத கண்டத்தில் பிரிந்த குமரிக் கண்டத்தில் சேர சோழ பாண்டிய பூமியில் பாண்டி மண்டலத்தில் லீலா வினோதப் பிரியரான மீனாட்சி சுந்தரேஸ்வரர் எழுந்தருளியிருக்கும் மதுராபுரிக்குத் தென் திசையாகிய திருச்செந்தூர் என்று வீரபாண்டிய கட்டபொம்மன் செப்பேட்டிலும் இதே மாதிரி கூறப்படுகிறது.

திருச்செந்தூரைச் சுப்பிரமணியத் தலம் என்றே இச்செப்பேடு கூறுகிறது. தேவர் சேனாபதியாகிய சிவகுமாரன் செந்தில் அதிபதியாகிய ஆறுமுக நயினார் சுப்பிரமணிய சுவாமி என்று கோயில் சுட்டப்படுகிறது. திருக்கோபுரத் திருப்பணிக்கு நடுவுமண்டலம் வணித சேகரம் என்ற நிட்சேபநதி தீரம் உள்ள ஊர் வழங்கப்படுகிறது. இது சோழ வள நாட்டில் கூடியது. சாத்தூர், நென்மேனி, வடமலைபுரம் என்ற வணித சேகரம் என்ற மூன்று ஊர்களில் வாழ்ந்த பல்வேறு சாதியைச் சேர்ந்தோர் தானம் வழங்க முடிவு செய்கின்றனர். அச்சாதிகளின் விவரம் வருமாறு:

| | |
|---|---|
| 1. ஆறாறுகாளப் பிள்ளைமார் | 2. முதலிமார் |
| 3. நாயக்கமார் | 4. கவரைச் செட்டியார் |
| 5. ரெட்டியார் | 6. தொட்டியர் |
| 7. கொங்கள் தேவமார் | 8. கவுண்டமார் |
| 9. சேடர் | 10. கைக்கோளர் |
| 11. கம்மாளர் அஞ்சுசாதியார் | 12. வாணியர் |
| 13. காவல்காரர் | 14. விற்றுவாங்கிசர் |
| 15. தாசியர் | 16. பணிக்கமார் |
| 17. சவளகாரர் | 18. குசவர் |
| 19. நாடார் | 20. வண்ணார் |
| 21. நாவிதர் | 22. செம்மார் |
| 23. பள்ளர் | 24. பறையர் |
| 25. சக்கிலியர் | |

'இது முதலாகிய நான்கு சாதியினரும் கூடித் தானம் வழங்க உடன்படுகின்றனர்' என்று செப்பேட்டில் காண்கிறோம். ஒவ்வொரு வீட்டுக்கும் ஆறு கால்படி கொண்ட குறுணி நெல் வழங்க வேண்டும். 'வீட்டுத்துகை வரி' என இக்கொடை சுட்டப்படுகிறது. இவ்வுத்திரவுபடி வர்த்தகம் செய்யும் மகாஜனங்கள், நாட்டாண்மைக்காரர், கணக்குப் பிள்ளைமார், தண்டல்காரர் முன்னின்று வசூலிக்க வேண்டும். நிலுவை விடாமல் சேகரித்துச் சன்னிதான முத்திரை மனுடர், வந்தவர்களுக்கேற்ப அளந்து கொடுக்க வேண்டும். சன்னிதானம் என்பது திருவாவடுதுறை ஆதீன குருமகானைக் குறிக்கும். செப்பேடு வழங்கப்பட்ட காலத்தில் கி.பி.1799 இல், பதினாலாவது பட்டத்தில் இருந்த வேளூர் சுப்பிரமணிய தேசிகரே குருமகான் ஆவார். இக்குரு மகான் உத்தரவு பெற்ற முத்திரை மானுடர் என்போர், ஆதீன அலுவலர்கள் எனலாம்.

தானம் பரிபாலிப்பவர் எய்தும் பலன்களும் இடையூறு செய்பவர்கள் எய்தும் துன்பங்களும் பின் காண்கிறோம்.

வித்துவ மகாசனங்கள் எனப்பிராமண மக்கள் அழைக்கப் பட்டுள்ளனர். வர்த்தக மகாசனங்கள் வணிகர்கள் எனவும் குறிக்கப் பட்டுள்ளனர். பட்டயம் எழுதியவர் பிரசன்னவரதயன் குமாரன் கிராமக் கணக்கு சீதாராமய்யன் ஆவார். செப்பேட்டில் மாகானத்தார், தலத்தார் கூறியபின், பல்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்கள் குறிக்கப்படுகின்றனர்.

**சாத்தூர் மகாசனங்கள் ஒப்பம்**

1. சுப்பராயர் மக தேவய்யன் குமாரன் சுப்பராயர்,
2. தென்கரை மகாராசவய்யன்,
3. பட்டாபிராமய்யன்,
4. பாரிச்சிவாரம் பட்ட வெங்கிஷ்டிரங்கய்யன்,
5. சுப்பய்யன்,
6. கோனப்பய்யன்,
7. அனந்த நாராயண அய்யன்,
8. முத்தய்ய நம்பியார் சங்கரய்யன்.

**நென்மேனி மகாசனங்கள் ஒப்பம்**

1. சேஷய்யன் குமாரன் சங்கரய்யன்,
2. ஆதி வெங்கிட சுப்பய்யன்,
3. கூடப்பய்யன்,
4. சுப்பராயர் முத்தனந்தய்யன்,
5. பெருமாளய்யன்,
6. கூடப்ப சங்கரனய்யன்,
7. வைகுண்டபதி அய்யன்,
8. கணக்குச் சுப்பய்யன்,
9. ஆண்டி அய்யன்,
10. தம்மராய பட்டர்,
11. வாரணப்பட்டர்.

**வடமலைபுரம் மகாசனங்கள் ஒப்பம்**

1. அப்பாசாமி அய்யன்,
2. முத்தய்யன்,
3. வேம்பூர் ஆண்டி அய்யன்,
4. இராமசாமி அய்யன்,
5. வெங்கிட சுப்பய்யன்,

6. மேல்காந்தை கோபாலய்யன்,
7. நாகப்பய்யன்,
8. சிறுகுளம் அனந்தய்யன்,
9. முடித்தலை வெங்கிடாசலவய்யன்,
10. கொசுகுண்டு சுப்பய்யன்,
11. மெட்டிலோட்டி அன்னாவய்யன்
12. சாமி அய்யன்.

**பிராமணர் அல்லாத ஊரார்**

1. சாத்தூர் வணிக மணியம் வேதப்ப முதலியார்,
2. சொக்கப் பிள்ளை,
3. சங்கரலிங்கம் பிள்ளை,
4. மதுர நாயகம் சாத்தூரப்பன் சேர்வை,
5. நாட்டுக் கணக்கு அய்யாப்பிள்ளை.

1. அயப்ப நாயக்கர்,
2. சங்கர மூர்த்தி முதலி,
3. ஒற்றைகால் சங்கரப்ப நாயக்கர்,
4. புதூர் குமார ரெட்டி,
5. சாத்தூர் கணக்குச் சாமி முதலி,
6. மொட்டை மலைப் பெருமாள் நாயக்கர்,
7. லிங்க நாயக்கர்,
8. கணக்கு வீரப்ப முதலி,
9. சின்னக்காமன் பட்டி போடி நாயக்கர்,
10. மாயினாபுரம் ராமய நாயக்கர்,
11. மேட்டுப்பட்டிக் கெங்கா நாயக்கர்,
12. சிறுகுளம்பெருமான் நாயக்கர்,
13. திருமால் நாயக்கர்,

14. கொசுகுண்டு கோடாங்கி நாயக்கர்,
15. அப்பா நாயக்கர்,
16. மாவிலிப்பட்டி எல்லப்ப நாயக்கர்,
17. நாகலாபுரம் போடி நாயக்கர்,
18. ராசாப்பட்டி ராச நாயக்கர்,
19. தேசத்தாரில் வலா குரு செட்டி,
20. கபிலாசபுரம் வாரணப்ப நாயக்கர்,
21. வல்லக்க நத்தம் வெங்கிடபதி நாயக்கர்,
22. கருப்பூர் வீரப்ப நாயக்கர்,
23. மாசாரிப்பட்டி அறியாத் தேவன்,
24. வடமலைபுரம் வாரணப்ப நாயக்கர்,
25. அச்சங்குளம் சிச்சய்ய நாயக்கர்,
26. முத்திலாபுரம் அழகிரி நாயக்கர்,
27. மேல் காந்தை கோபால நாயக்கர்,
28. வேம்பூர் தம்பணக் கவுண்டன்,
29. அக்கா நாயக்கர்,
30. மெட்டிலோட்டி பப்புலு நாயக்கர்,
31. சூரப்ப நாயக்கர்,
32. கருதுகுளம் சங்கரக்கோன்,
33. திசைகால கச்சிவஸ்மணியம்.

இச்செப்பேட்டின் வாசகத்தை எழுதி நயினார் சந்நிதானத்திற் காகப் (திருவாவடுதுறை குருமகான் பொருட்டு) பெற்றவர் குமாரவேலுப் பண்டாரம் ஆவார்.

14ஆவது குருமகான் காலத்தில் அருணாசலப் பண்டாரம் என்பவர் தம்பிரானாக இருந்தது போல், குமாரவேலுப் பண்டாரமும் தம்பிரானாக இருந்திருக்க வேண்டும். செப்பேட்டை வெட்டிய ஆசாரி அய்யம்பெருமாள் குமாரர் புன்னைவனம் ஆவர்.

திருச்செந்தூர் திருப்பணி என்றால் திருவாவடுதுறை ஆதீனத்திடம் தானம் வழங்கிவிட வேண்டும் என்று அக்காலத்தில் மக்கள் கருதினர்.

அதற்கேற்பத் திருவாவடுதுறையின்கட்டளைகளில் திருச்செந்தூர் கோயிலுக்கு மிகுதியாகக் கட்டளைகள் இன்றும் இருப்பதை இங்கே குறிப்பிட வேண்டும். செப்பேட்டில் குறிப்பிடப்படும் வித்துவ மகா ஜனங்கள் என்போர், பிராமணர்கள் என்பது அவர்கள் பெயர்கள் மூலமும் உறுதிப்படுகின்றன. முதலில் நென்மேனி மகாசனங்கள் என்ற பிராமணர்கள் ஒப்பம் இட்டுள்ளனர்.

இரண்டாவதாக வடமலைபுரம் மகா ஜனங்கள் என்ற பிராமணர்கள் 11 பேர் ஒப்பம் இட்டுள்ளார்கள். வணித சேகரம் என்ற சாத்தூரைச் சேர்ந்த 12 பிராமணர்கள் ஒப்பம் இட்டுள்ளனர். பின் முதலியார், பிள்ளைமார், நாயக்கர் என்ற நாட்டாண்மைக்காரர் ஒப்பம் இட்டுள்ளனர். இறுதியாக நாயக்கர், முதலி, ரெட்டி, பிள்ளை, செட்டி, தேவர், கவுண்டர், கோன் ஆகியோர் ஒப்பம் இட்டுள்ளனர். இங்குக் கோன் என்று முடியும் பெயருடையவர் நாடாராக இருக்கலாம். சில கல்வெட்டுகளில் இடையர் எனப்படும் யாதவரைக் 'கோன்' என்ற சொல் குறிப்பிடுவதுண்டு.

1. உ சாத்தூர் நென்மேனி வடலைபுரம் சேகரம்
2. பட்டையம் உ சுவஷ்திறி சாலிவாகன சகாப்தம்
3. 1700-க்கு மேல் செல்லாநின்ற கொல்லம் 955 ௵
4. விகாரி ௵ கார்த்திகை மாதம் 20 உ தசமியுங் குரு
5. வாரமும் உத்திர நட்சத்திரம் ஆயுஷ்ட்டினினான யோ
6. கமும் கெச கரணமும் தாசத வேளையும் சுக்கிற வோ
7. ரையும் கூடின மங்கள் சுபதினத்தில் மகாமேருவின்
8. சுற்றுடைத்தான நவ கண்டப் பிறிதிவிலப் பாரத கண்
9. டத்தில் பிரிந்த குமரி கண்டத்திலிச் சேர சோழ
10. பாண்டியர் பூமியில் பாண்டி மண்டலத்தில் லீலா வினோ
11. தப் பிரியரான மீனாட்சு சுந்தரேசுராள் எழுந்த
12. ருளியிருக்கும் மதிராபுரிக்குத் தென் திசையாகிய
13. திருச்செந்தூர்ச் சுப்பிரமணியத்தலம் தேவர்
14. சேனாபதியாகிய(ாகிய) சிவகுமாரன் செந்திலாதிபதியாகிய
15. ஆறுமுக நயினார் சுப்பிரமணிய சுவாமி பரிபூரன கிடாஷ்
16. விஷ்ட்டணமாக எளுந்தருளியிருக்கும் சன்னித

17. ளத் திருக்கோபுரத் திருப்பணித் தற்மம் சிவ புண்ணிய
18. த்துக்கு நடுவு மண்டலம் வணித சேகரம் சோள வ
19. ளனாடான நிட்ஷேப நதி தீரம் சாத்தூர் நென்மேனி
20. வடமலைபுரம் வணித சேகரம் அஷ்க விற்றுவ மகாசன
21. ங்களும் மகானத்தார் தலத்தார் ஆறாறு காள பிள்ளை
22. மார் முதலிமார் னாயக்மார் கவறைச் செட்டியள்
23. ரெட்டியள் தொட்டியர் கொனங்கள் தேவமார்
24. கவுண்டமார் சேடர் கைக்களர் கண்மாளர் அஞ்
25. சு சாதியாரும் வாணியக் காவல்க்காறர் விற்று வா
26. ங்கிசர் தாசியள் பணிக்கமார் சவளகாறர் குசவர் னா
27. டாக்கள் வண்ணார் னாவிதர் செம்மான் பள்ளன் பறை
28. யன் சக்கிலியன் யிது முதலாகிய னாங்கு சாதியிலுள்
29. ளவர்களோம் சகல சன சம்மதியாக ஆறுமுக நயின
30. ர் சன்னிதானத் திருக்கோபுரத் திருப்பணித் தற்ம
31. ம் சிவபுண்யித்துக்குத் தானசாதனப் பட்டையமா
32. வது எங்கள் சேகர வணிதம் மூன்றுக்கும் வஸ 1-க்கு கட்
33. டின வீட்டுக்கு வஸ 1-க்கு ஆறுங்கால்ப்படிக்குக் குறு
34. ணித் தவச வீதம் வீட்டுத் துகைவரி ஓலைப்படிக்கு
35. ப் பிற வத்தகஞ் செய்யிற மகாசனங்கள் நாட்டா
36. ண்மைக் காறர் கணக்கப்பிள்ளைமார் தண்டல்க்கா
37. றர் முன்னின்று தவசம் நிலுவை விடாமல்ச் சேகரஞ்
38. செய்து சன்னிதான முத்திரை மனுடர் வந்தவர்களு
39. க் கேற்ப அளந்து குடுத்து வருவோமாகவும் இந்தபடி
40. க்குச் சகல சன சம்மதியாகத் தற்ம சாதனப் பட்டை
41. யமெளுதிக் குடுத்தபடியினாலே அட்ஷரம் தப்பாமல்
42. நடந்து கொள்வோமாகவும் இந்த தற்மம் இகபர
43. ம் ரண்டுக்கும் திகட்டாத கனியாகச் சுவாமி வரை

44. ய்த் தடுத்தாள்க் கொண்டருளிய படியினாலே
45. யிந்தத் தற்மத்துக்கு யாதாமொருதர் பரிபாலி
46. னம் பண்ணினவர்கள் தவசம் நிலுவை விடாம
47. ல்ச் சேகரஞ் செய்து விசேஷ்டமாக வந்த வி

## இரண்டாம் பாகம்

48. ரவுஞ் செய்து குடுத்தவர்கள் புத்திர பவுத்திர பார
49. ம்பரையாக யிகத்திலே பாக்கியமு பரத்திலே மோ
50. ட்ஷமும் பெறுவார்கள் யிந்தத் தற்மத்துக்கு யாதா
51. மொருதர் விகாதம் பண்ணினவர்கள் துள பத்திர சே
52. து வரவார்கள் தர்மத்தைப் பரிபாலனம் பண்ணி
53. ணவர்கள் சிவக்கியானமும் தீர்க்காயிசும் பெற்று
54. ச் சிரஞ்சீவியாக யிருப்பார்கள் யிந்தப்படிக்கு
55. ச் சம்மதித்துத் திருக்கோபுரத் திருப்பணித் தற்மத்
56. துக்குத் தான சாதனப் பட்டையம் எளுதிக் குடுத்
57. தோம் சாத்தூர் நென்மேனி வடமலைபுரம் சேகர
58. ம் அசேஷட் விற்றுவ மகாசனங்கள் முதலாகிய
59. ஊரார்களோம். யிப்படிக்கு யிந்தப் பட்டையம் எ
60. ளுதினேன் பிறசன்ன வரதய்யன் குமாரன் கிறாம
61. க் கணக்குச் சீதாராமையன் உ யிந்தப்படிக்குச் சா
62. த்தூர் மகாசனங்கள் ஒப்பம் உ சுப்பாராயர் மகா
63. தேவய்யன் குமாரன் சுப்பாராயர் தென்கரை மகா
64. ராசாவய்யன் பட்டாபிராமய்யன் பாரிச்சி வார
65. ம் பட்டா வெங்கிஷ்டி ரங்கயன் சுப்பயன் கோனப்
66. பய்யன் அனந்தனாறாயணய்யன் முத்தய நம்பியார்
67. சங்கரய்யன் தென்மேனி மகாசனங்கள் ஒப்பம்

68. சேஷய்யன் குமாரன் சங்கரய்யன் ஆதி வெங்கிட
69. சுப்பய்யன் கடப்பய்யன் சுப்பராயர் முத்தனந்த
70. ய்யன் பெருமாளய்யன் கடப்ப சங்கரனாறணய்ய
71. ன் வைகுண்டபதி அய்யன் கணக்குச் சுப்பய்யன்
72. ஆண்டி அய்யன் தம்மராயப் பட்டர் னாறணப்பட்டர் வட
73. மலைபுரம் மாகசனங்கள் ஒப்பம் அப்பாசமி அய்யன்
74. முத்தய்யன் வேம்பூர் ஆண்டி அய்யன் ராமசுவாமி
75. அய்யன் வெங்கிட சுப்பய்யன் மேல்க் காந்தைக் கோ
76. பால அய்யன் னாகப்பய்யன் சிறுக்குளம் அனந்தய்ய
77. ன் முடித்தலை வெங்கிடாஷலமய்யன் கொசுகுண்டுச்
78. சுப்பய்யன் மெட் 79 மபடி லோட்டி அண்ணாலய்யன் சாமி அய்ய
79. ன் சாத்தூர் வணிதம் மணியம் வேதப்ப முதலியார்
80. சொக்குப் பிள்ளை சங்கரலிங்கம் பிள்ளை மதுரநாயகம் சா
81. த்தூர்ப்பன் சேருவை னாட்டுக் கணக்கு அய்யனா பிள்ளை சா
82. த்தூர் வணித சேகரம் மூன்றுக்கும் நாட்டாண்மைக்காரர்
83. ஒப்பம் ளடந்தால் அய்யப்ப னா(ய)க்கர் கணக்குச் சங்கரமூர்த்தி முதலி
84. ஒற்றையால்ச் சங்கரப்ப னாயக்கர் புதூர்க் குமாரு ரெட்டி
85. சாத்தூர்க் கணக்குச் சாமி முதலி மொட்டமலைப் பெருமாள்
86. னாயக்கர் ஸலிங்க நாயக்கர் கணக்கு வீரப்ப முதலி சின்னக்காமன்
87. பட்டிப் போடி னாயக்கர் மாயினாபுரம் ராமய னாயக்கர் மேட்டுப்பட்டிக்கெ
88. ங்கா னாயக்கர் சிறுக்குளம் பெருமாள் நாயக்கர் திருமால் னாயக்கர் கொசு
89. குண்டுக் கோடாங்கி நாயக்கர் அப்பா நாயக்கர் மாலிலிப்பட்டி எல்லப்ப னாயக்கர்

90. நாகலாபுரம் போடி னாயக்கர் ராசாப்பட்டி ராசனாயக்கர் தேசத்தாரில்

91. வால குருவன் செட்டி கயிலாசபுரம் னாறணப்ப நாயக்கர், வல்லக்க

92. நத்தம் வெங்கிடபதி நாயக்கர் கருப்பூர் வீரப்ப னாயக்கர் மாசாரிபட்டி அழி

93. யாத்தேவன் வடமலைபுரம் னாறணப்ப னாயக்கர் அச்சங்குளம் கிச்சய னாயக்கர்

94. முத்திலாபுரம் அளகிரி னாயக்கர் மேல்க்காந்தைக் கோபால நாயக்கர்

95. வேம்பூர்த் தம்பணக் கவுண்டன் அக்கா நாயக்கர் யேபடி லோட்டி

96. பப்லுனாயக்கர் சூர்ப்பனாயக்கர் கருதுக்குளம் சங்கரக்கோன் திசை

97. கால் கச்சிவஸ் மணியம் உ யிந்த தாம்பிர சாதனம் எளு

98. தி நயினார் சன்னிதானத்துக்கு வாங்கினேன் குமார

99. வேலுப் பண்டாரம் யிந்தத் தாம்பிர சாதனம் எழுதி மே

100. னன் அய்யம்பெருமானஆசாரி குமாரன் புன்னைவனம்

101. குமரன் துணை உ.

* * *

# 8. தஞ்சை நாயக்கர் செப்பேடுகள்

குடவாயில் பாலசுப்பிரமணியன்

கி.பி.*1529*இல் விசயநகரப் பேரரசராக அச்சுததேவராயர் முடிசூடியபின்பு கி.பி.*1535*இல் தமிழகத்து அரசியலில் சில மாற்றங்கள் நிகழ்ந்தன. அதுவரை மகாமண்டலேசுவரர்கள் என்ற அலுவல்சார்ந்த தலைவர்களால் நிருவகிக்கப் பெற்று வந்த ஆட்சிமுறைக்குப் பதிலாக முப்பெரும் நாயக்க அரசர்களின் ஆளுகையின் கீழ் செஞ்சி, மதுரை, தஞ்சை மண்டலங்கள் திகழத் தொடங்கின. தஞ்சையின் முதல் நாயக்க மன்னராகப் (மகாநாயன்கார) பொறுப்பேற்ற செவ்வப்பநாயக்கர், பேரரசர் அச்சுத தேவராயரின் தேவி திருமலாம்பாவின் தங்கை மூர்த்தி மாம்பாவின் கணவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். செவ்வப்பநாயக்கர் *(கி.பி.1535-1590),* அவர்மகன் அச்சுதப்பநாயக்கர் *(கி.பி.1564-1614),* அவர்மகன் இரகுநாதநாயக்கர் *(கி.பி.1600-1645),* அவர்மகன் இராமபத்ரநாயக்கர் *(கி.பி.1628-1630)* அவர் தமையன் விஜயராகவநாயக்கர் *(கி.பி.1631-1675)* என்ற மன்னர்களால் தஞ்சை நாயக்க அரசு பொலிவோடும், வளமோடும் திகழ்ந்து வரலாறு படைத்தது.

தஞ்சை நாயக்கர் செப்பேட்டு ஆவணங்களாக இதுவரை *16* செப்பேட்டுச் சாசனங்களும், பொன்னோலையில் எழுதப்பெற்ற கடிதம் ஒன்றும், வெள்ளியேட்டில் எழுதப்பெற்ற சாசனம் ஒன்றும் கிடைத்துள்ளன. இவற்றின் வாயிலாகத் தஞ்சைநாயக்க அரசின் வரலாறு, அறக்கொடைகள், கலை, திருக்கோயில்கள், தலபுராணங்கள், சமுதாயம், நாட்டுப்பிரிவு, ஊர்ப்பெயர்கள், காசுகள், விந்தை நிகழ்வுகள் எனப் பல்வேறு கூறுகள் பற்றி விரிவாக அறிய இயலுகின்றது.

### *1.* முடிகொண்டான் செப்பேடு *(கி.பி.1564)*[1]

சக ஆண்டு *1486,* ரக்தாட்சி, கார்த்திகை மாதம் புதன்கிழமை எழுதப்பெற்ற இச்சாசனம் வடமொழியில் நாகரி எழுத்துக்களில் வரையப் பெற்றதாகும். செவ்வப்பநாயக்கரின் மகனான அச்சுதப்பநாயக்கர், திருவாரூர் உசாவடியில் உள்ள குலோத்துங்க சோழவளநாட்டு, திருப்பனையூர்நாட்டு முடிகொண்டான்புத்தூர் எனும் ஊரினை வேங்கடராயர் என்பவருக்கு ராமராயர் என்பவரின் வேண்டுகோளுக்காக அளித்ததை இச்சாசனம் விவரிக்கின்றது. இச்செப்பேட்டில் "திருவாரூர் உசாவடி" என்ற விசயநகரா ஆட்சிக்காலத்து நாட்டுப் பகுப்புப்பெயர் காணப்படினும் சோழர் காலத்துப் பகுப்பில் அமைந்த

பெயர்களான குலோத்துங்க சோழவளநாடு, திருப்பனையூர்நாடு, முடிகொண்டான் புத்தூர் என்பன மாற்றம் பெறாமல் உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## 2. அருமொழிமங்கலம் (அருவிழிமங்கலம்) செப்பேடுகள் *(கி.பி.1577)*[2]

தஞ்சையில் செவ்வப்பநாயக்கர் அரசோச்சும் நாளில் கும்பகோணத்திலிருந்து மத்வமடத்தின் பொறுப்பைப் பதின்மூன்றாவது மடாதிபதியாக விஜயேந்திரதீர்த்தர் என்பவர் ஏற்றார். அவருக்காகச் செவ்வப்பரின்மகள் அச்சுதப்பநாயக்கர் சோழநாட்டில் அருமொழி மங்கலம் எனும் ஊரினைத் தானமாக அளித்தார். இக்கொடைக்கு கி.பி. *1577*இல் பேரரசர் ஸ்ரீரங்கதேவராயர் ஒப்புதல் அளித்தார். எனவே அச்சுதப்ப நாயக்கரின் கொடை மூன்று செப்பேடுகளில் சாசனமாக நாகரி எழுத்துக்களில் எழுதப் பெற்று, ஒரு வளையத்தில் கோக்கப்பெற்ற விசயநகர அரசு இலச்சினையோடு மத்வமடத்திற்கு அளிக்கப்பெற்றது.

இச்செப்பேட்டுத் தொகுதியில் சோழமண்டல ராஜ்யம், ஓகையூர்ப்பட்டாக்கா, திருவாரூர் சாவடி, கீழ்குறிச்சி, குலோத்துங்க சோழவளவாடு, பருத்தியூர், வல்லக்கிராமம், கோவில்புத்து, திருவட்டச்சேரி, வடபேர் காவிரி, புத்தாறு, கப்பலுடையான்குளம் ஆகிய இடப்பெயர்கள் காணப்பெறுகின்றன. அருமொழிமங்கலம் எனும் ஊர்ப்பெயர் "அச்சுதப்ப சமுத்திரம்" எனப் பெயர் மாற்றம் செய்யப் பெற்றதையும் இச்சாசனம் விவரிக்கின்றது. இச்சாசனத் தொகுதியில் கூறப்பெறும் அருமொழிமங்கலம் அருவிழிமங்கலமாகவும், திருவட்டச்சேரி திருவிடச்சேரியாகவும், வடபேர் வடவேர் என்றும் தற்போது மக்கள் வழக்கில் அழைக்கப்பெறுகின்றன.

## 3. நஞ்சன்கூடு செப்பேடுகள்[3]

கர்நாடக மாநிலம் நஞ்சன்கூடு மத்துவ மடத்தில் மூன்று தொகுதிகளாகத் தஞ்சை நாயக்கர் செப்பேடுகள் உள்ளன. இரண்டு இரண்டு ஏடுகள் உள்ள முதலிரண்டு தொகுதிகளும், மூன்று ஏடுகள் கொண்ட மூன்றாம் தொகுதியும் சமஸ்கிருத மொழியில் அமைந்து கன்னட எழுத்துக்களால் எழுதப்பெற்றுள்ளன. செவ்வப்ப நாயக்கர் விஜயேந்திர தீர்த்தர் மடத்திற்குச் சோழநாட்டில் அளித்த நிலக்கொடை பற்றி அவை விவரிக்கின்றன. முதல் சாசனம் சகம் *1502* இல் *(கி.பி.1580)* கும்பகோணம் கும்பலிங்கத்தின் மகன் சபாபதியாலும், இரண்டாம் தொகுதி சகம் *1536*இல் *(கி.பி.1614)* மன்னார்குடி இராஜகோபாலன் மகன் தியாகராஜனாலும், மூன்றாம் தொகுதி கும்பகோணத்துக் கும்பலிங்கம் என்பவராலும் வடிக்கப்பெற்றன எனக் குறிப்புகள் காணப்பெறுகின்றன.

அச்செப்பேட்டுச் சாசனங்களில் கூறப்பெறும் வரலாற்றுத் தகவல்களும் ஆண்டுக்குறிப்புகளும் ஊர் பற்றிய செய்திகளும் பிழைகளோடும் முரண்பாடுகளோடும் காணப்பெறுகின்றன. அவற்றைத் துல்லியமாக ஆராய்வோமானால் மூலசாசன ஓலைகள் அழிந்துபட்டுப் பின்னர் எழுதப்பெற்ற செப்பேட்டுச் சாசனங்களாக இருத்தல் கூடும் எனக் கருத வேண்டியுள்ளது.

## 4. அதிராம்பட்டினம் தர்காச் செப்பேடு[4]

சகம் *1453*இல் குறிக்கப்பெற்ற செப்பேடு ஒன்று அதிராம்பட்டினம் ஹஜரத் ஹாஜா அலாவுதீன் ஜிஸ்தியா வலியுல்லாஹ் தர்காவிலிருப்பதைப் புலவர் செ. இராசு அவர்கள் கண்டு கட்டுரை ஒன்றினை வெளியிட்டார். *1531*இல் வெளியிடப்பெற்ற செவ்வப்பநாயக்கரின் முதல் செப்பேடு என்றும் குறிப்பிட்டுள்ளார். நஞ்சன்கூடு செப்பேடுகள் போன்றே இச்செப்பேட்டின் உண்மைத்தன்மை பற்றி ஐயப்பாடுகளே எழுகின்றன. கிபி. *1535*இல்தான் தஞ்சை நாயக்க அரசு உதயமானது என்பதாலும், அச்சுதஜீவப்ப நாயக்கர் என்று இச்செப்பேடு குறிப்பிடும் அரசர் செவ்வப்பநாயக்கர் என்று ஏற்றுக்கொள்வது தவறு என்றும், விசயநகரப் பேரரசர் பெயர் குறிக்காமல் 'ஸ்ரீராய' என்ற குறிப்பு இருப்பதும், நூற்றுக்கு நூறு சைவனாகவே வாழ்ந்த செவ்வப்பநாயக்கரின் சாசனம் "இராமானுஜய நம:" என்று தொடங்குவதும் ஏற்புடையவையாக இல்லை என்ற கருத்தை இந்நூலாசிரியர் தன் "தஞ்சை நாயக்கர் வரலாறு" எனும் நூலில் தெளிவாக விளக்கியுள்ளார்.[5]

## 5. திருக்கண்ணமங்கை ஓவியச்செப்பேடு[6]

திருவாரூர் மாவட்டம், திருக்கண்ணமங்கை திருக்கோயிலில் இரகுநாத நாயக்கர் அளித்த செப்பேட்டுச் சாசனமொன்று உள்ளது. *34.5 25.5* செமீ. அளவுடைய செப்பேட்டின் முதல் பக்கத்தில் முக்கால் பங்கு அளவு வரை கோட்டு ஓவியங்களும், கால்பங்கு சாசனமும் உள்ளன. பின்புறம் முழுவதும் சாசனத்தின் தொடர்ச்சி காணப்பெறுகின்றது. இச்செப்பேட்டின் அமைப்பைக் கொண்டு இதனை நான்கு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

முதற் பகுதியான ஓவியப் பகுதியில் அத்திருக்கோயிலில் காணப்பெறும் தெய்வத்திருமேனிகளின் உருவங்களும், மன்னர் இரகுநாதநாயக்கர் அத்திருக்கோயிலுக்கு வந்து இறைவனை வணங்கும் காட்சியும் இடம் பெற்றுள்ளன. முழுவட்டமாகச் சூரியனும், பிறைவடிவில் சந்திரனும் திகழ, நடுவே பெரும்புறக்கடல் எனும் கண்ணமங்கை பெருமான் ஆழியும் சங்கும் ஏந்தி ஸ்ரீதேவி பூதேவி உடனுறையக் காட்சி தருகின்றார். இடதுபுறம் ஆண்டாளும், வலதுபுறம் கண்ணமங்கைத் தாயாரான அபிஷேகவல்லியும் திகழும் கோலம் இடம் பெற்றுள்ளது. திருவிளக்குகளும், தீவட்டிகளும் அருகே ஒளிருகின்றன. இக்காட்சிகளுக்குக் கீழாக ஒரு நீண்ட வரிசை ஓவியங்கள்

உள்ளன. சூரியன் நின்ற கோலத்திலும், அடியார் இருவர் வணங்க, அருகே நின்ற கோலத்தில் சிவபெருமானும் திகழ, காளியனாம் பாம்பின் மேல் கண்ணன் ஆடுகின்றான். அடுத்து நம்மாழ்வார், நான்முகன் அடியவர்மூவர் நின்று வணங்கும் காட்சிகள் உள்ளன.

இவ்வரிசைக்குக் கீழாகவுள்ள தொகுதியில் பெரியதிருவடி (கருடன்) மாடமொன்றில்நின்று வணங்க, எதிரே கொடிமரமும், பலிபீடமும் உள்ளன. இடதுபுறம் கண்ணமங்கை இறைவனை இரகுநாதநாயக்கர் இருகரம் கூப்பி வணங்க, வைணவர் ஒருவர் பூரணகலசம் ஏந்தி எதிர்கொண்டு அழைக்கின்றார். கைமணி ஏந்திய பட்டர், வாளேந்திய காவலர்கள் சிலரும் நிற்க ஓவியப்பகுதி நிறைவு பெறுகின்றது.

"ஸ்ரீராமாநிவேகதி", "ஸ்ரீராம ஜெயம்" என்ற இரண்டு தெலுங்கு எழுத்துக்களில் அமைந்த சொற்றொடர்களோடு தமிழில் சாசனம் காணப்பெறுகின்றது. விசயநகர அரசமரபு, இரகுநாதநாயக்கரின் சிறப்புப் பட்டங்கள் அடங்கிய இப்பகுதியே இரண்டாம் பகுதியாகும்.

மூன்றாம் பகுதியில் தலமகாத்மியம் கூறப்பெற்றுள்ளது. திருப்பாற் கடலில் பிறந்த திருமகளை மாலவன் கண்ணமங்கையில் மணம் புரிந்த தாகவும், ருத்திரன் சாபம் இங்கு நீங்கியதாகவும், பிரம்மன், பிருகுமகரிஷி, புருவசு, சூரியன், சோமன், மார்க்கண்டேயன் ஆகியோர் இங்கு நலம்பெற்றனர் என்பதையும் இப்பகுதி விரித்துரைக்கின்றது.

நான்காம் பகுதியில் சகம் *1530*, கலி *4709*, சௌமிய வருடம் பங்குனி மாதம் பதினெட்டாம் நாள், வியாழக்கிழமை இராமநவமி நாளில் இத்திருக்கோயிலுக்கு வந்த அச்சுத விசைய இரகுநாதநாயக்கர் *60* வேலி நிலம் கொடையளித்ததை விவரிக்கின்றது. செப்பேட்டை வடித்த கலைஞனின் பெயர் 'தஞ்சாவூர் லஷ்மண ஆசாரிமகன் வெங்கடாசல ஆசாரி' என்று கூறப்பெற்றுள்ளது.

## *6.* இரகுநாத நாயக்கர் டென்மார்க் அரசருக்கு அனுப்பிய பொன்னோலை[7]

ரௌத்ரி வருடம் சித்திரை மாதம் *20*ஆம் நாளில் (கி.பி.*1620* ஏப்ரல் *16*) எழுதப்பெற்ற தங்கஓலை ஒன்று கோபன் ஹேகன் ராயல் ஆவணக் காப்பகத்தில் உள்ளது. தமிழில் எழுதப்பெற்றுத் தெலுங்கில் இரகுநாதநாயக்கரின் கையொப்பத்துடன் திகழும் இக்கடிதம் டென்மார்க் அரசர் நான்காம் கிருஸ்டியனுக்கு நட்புறவுடன் எழுதப்பெற்றதாகும். இக்கடிதத்தில் காணப்பெறும் தமிழ்நடை சுவை பயப்பதாகும். மொழியியல் ஆய்வுக்குப் பயன்படுவதாகும்.

## 7. திருவாரூர்ச் செப்பேடு[8]

ஆனந்தவருடம் ஆனிமாதம் ஏழாம்நாள் சுக்கிரவாரம், அஸ்த நட்சத்திரமும், சப்தமியும் கூடிய புண்ணிய நாளில் ஸ்ரீமன் ராசாதிராச மார்த்தாண்டன் ரெகுநாதநாயக்கர் அய்யன் திருவாரூர் திருக்கோயிலுக்குச் சுக்கிரவார கட்டளையாக அளித்த நிலக்கொடை பற்றி அத்திருக்கோயிலிலுள்ள செப்பேடொன்று விவரிக்கின்றது. அச்சாசனத்தில் விசயநகரப் பேரரசர் வேங்கடபதிராயரின் பெயர் குறிக்கப்பெற்றுள்ளது. இச்சாசனம் கி.பி. *1614*ஆம் ஆண்டு ஜூன் ஐந்தாம் நாளில் எழுதப் பெற்றதாகும்.

## 8. தஞ்சாவூர்ச் செப்பேடு

ஆனந்த வருடம் கார்த்திகை மாதம் *13*ஆம் நாளில் எழுதப்பெற்ற இரகுநாதநாயக்கர் காலத்துச் செப்பேடொன்று தஞ்சையை அடுத்த வல்லத்தில் தனியார் ஒருவரிடம் உள்ளது. தமிழக அரசின் தொல்லியல்துறை அலுவலர் சொ. சந்திரவாணன் என்பவரால் கண்டறியப்பட்ட இச்செப்பேட்டில் காணப்படும் செய்திகளுடன் தொடர்புடைய வரலாற்றுச் சின்னங்களை இக்கட்டுரை ஆசிரியர் கண்டு வரலாற்றுலகம் அறியுமாறு செய்துள்ளார்.

இச்செப்பேட்டில் விசைய இரகுநாதநாயக்கர் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்று விவரிக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூரிலிருந்து பக்கிரிசா என்ற முகமதியப்பெரியவர் ஒருவர் வல்லம் நோக்கி, காட்டுப் பாதையில் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு பிராமணப் பெண் வல்லத்திலிருந்து தஞ்சாவூருக்கு அதே பாதையில் வந்து கொண்டிருந்தாள். அப்போது கள்ளர் சிலர் அப்பிராமணப் பெண்ணை இடைமறித்துக் கெடுக்க முயன்றனர். அவ்வழி வந்த பக்கிரிசாயபு, அவர்களை நோக்கி அப்பிராமணப் பெண் உங்களுக்குத் தெய்வம் போன்றவள் அவளைத் தொடவேண்டாம் எனத் தடுத்தார். இதனால் கோபமுற்ற ஒருவன் பக்கிரிசாயபுவை கத்தியால் குத்தினான். இறந்த சாயபுவைக்கண்ட அப்பெண் "எனக்கொசர அல்லோ சாயபெ குத்தி போட்டார்கள்" என்று கூறி தன் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு அவ்விடத்திலேயே உயிர்விட்டாள். தவறு இழைத்தவனுக்கு உடன் கண்தெரியாமல் போனது. அப்போது அவர்கள் "நாங்கள் அரிஞ்சு அரியாமல் செய்துபோட்டோம், எங்களுக்கு கண் வெளிச்சம் தந்திகளே ஆனா உங்களுக்கு கோயில் கட்டுவிச்சு கெணறும் வெட்டுவிச்சு கொளமும் வெட்டுவிக்கிறோம்" - என்று வேண்டினர். நான்கு சாமம் கழித்துக் கண்பார்வை வந்தது. அதன்படி அவர்களைப் புதைத்த இடத்தில் நினைவுச்சின்னமும், கிணறும் குளமும் வெட்டி வைத்தனர். பின்னர் இரகுநாதநாயக்கர் ஆனந்த வருடத்தில் *1500* குழி நஞ்சை நிலத்தை அந்நினைவு மண்டபத்தில் பராமரிப்பிற்காகக் கொடையாக அளித்துள்ளார்.

இச்செப்பேட்டில் இறுதியில் இம்மானியம் கல்லும் காவிரியும், புல்லும் பூமியும் உள்ளவரை நடப்பிக்கவேண்டும் என்றும், இந்நிகழ்ச்சி நிகழ்ந்தபாதை காசி ராமேஸ்வரத்துப் பாதை என்றும், மக்கா மதினத்துப் பாதையென்றும் கூறி, துலுக்கனாய் இருந்து இதற்கு அழிவு ஏற்படுத்தினால் அவன் பன்றி தின்ற பாவத்தையும், சூத்திரனாய் இருந்து இதற்கு அழிவு ஏற்படுத்தினால் கங்கைக் கரையில் பசுவின் கழுத்தை அறிந்த பாபத்திற்கும் ஆளாவான் என்று கூறுகின்றது. இம்மானியத்தை எல்லா உரிமைகளோடும் இரகுநாதநாயக்கர் அளித்தார் என்றும் விவரிக்கின்றது.

இச்செப்பேடு எழுதப்பெற்ற ஆனந்த ஆண்டு கி.பி.*1614* அல்லது *1674* ஆம் ஆண்டாக இருத்தல் கூடும். அதில் கூறப்பெற்றுள்ள நிகழ்ச்சியைக் கற்பனை என்று ஒதுக்க முடியாது. தனிவழி வந்த பெண்ணைக் காக்க முயன்ற பெரியவர் இறக்கவே அப்பெண்ணும் தற்கொலை செய்து கொண்டு இறந்திருக்கிறாள். இவைகளுக்குக் காரணமாய் இருந்தவனுக்கு உடன் கண் பார்வை இழந்து நான்கு சாமங்களுக்குப் பிறகே பார்வை மீண்டுள்ளது. இது அறிவியல் அடிப்படையில் சாத்தியமான ஒன்று. திட்டமிட்டு செய்த கொலை அல்ல. எதிர்பாராமல் நிகழ்ந்த இரண்டு உயிர் இறப்புகளும், அவர்கள் மதம் சார்ந்த வழிபாட்டுக் குரியவர்கள் என்பதாலும், கொலை நிகழ்த்தியவனது மூளையைப் பாதிக்கக் கூடிய சூழல் ஏற்பட்டது. அது அவனது பார்வை நரம்புகளைக் குறிப்பிட்ட நேரம் பாதித்துக் கண் தெரியாமல் செய்துள்ளது. பார்வை மீண்ட பிறகு அதற்குத் தெய்வத்தன்மை கருதி அவன், நினைவுச் சின்னம் எடுத்துள்ளான்.

இச்செப்பேடு கூறும் நினைவுச் சின்னங்களும், குளமும், கிணறும், தஞ்சை வல்லம் சாலையில் உள்ள மருத்துவக் கல்லூரி வளாகத்தில் இன்றும் வழிபாட்டில் உள்ளன. இரகுநாதநாயக்கர் அளித்த நிலமானியமும் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கச் செய்திகளாகும்.

## *9.* வேளாளர்கள் அளித்த அரித்துவாரமங்கலம் செப்பேட்டுத் தொகுதி[10]

தஞ்சாவூர் மாவட்டம் அரித்துவாரமங்கலம் பாதாளீஸ்வரசுவாமி திருக்கோயிலில் மூன்று ஏடுகள் இணைக்கப்பெற்ற அரிய செப்பேட்டுத் தொகுதி ஒன்று உள்ளது. இக்கட்டுரை ஆசிரியரால் இச்செப்பேட்டுத் தொகுதி முதன்முதலில் வரலாற்றுலகுக்கு அறிமுகமானது. கதவின் கீல்கள் போன்று இம்மூன்று ஏடுகளும் இணைக்கப்பெற்று ஒன்றின் மீது ஒன்றினை மடித்துவைக்கும் அமைப்பில் இத்தொகுதி வடிவமைக்கப் பெற்றுள்ளது. கி.பி. *1633*ஆம் ஆண்டு ஜனவரி *13*ஆம் நாளுக்குரிய பஞ்சாங்கக்குறிப்புகள் இச்சாசனத்தில் காணப்பெறுகின்றன.

திருக்கண்ணமங்கை செப்பேடு போன்றே இச்சாசனத்திலும் விசயநகர அரசர் மரபு, இரகுநாத நாயக்கரின் புகழ், அரதைப் பெரும்பாழி எனும் அரிவீரராகமங்கலத்தின் தலப்பெருமை, தலமான்மியம், வேளாளர் பெருமை, தமிழகம் முழுதுமுள்ள வேளாளப் பெருமக்கள் இணைந்து இரகுநாத நாயக்கரிடம் அளித்த அறக்கொடை ஆகியவை கூறப் பெற்றுள்ளன.

அரதைப்பெரும்பாழி என்னும் அரிவீரராகமங்கலம் சோழமண்டலத்து, திருவாரூர் சாவடி ஆவூர்பற்று, குலோத்துங்க சோழவள நாட்டு கரம்பை நாட்டில் இருப்பதாக இச்செப்பேட்டுச் சாசனம் கூறுகின்றது. பிரம்மா விஷ்ணு ஆகியவர்கள் இத்தலத்தில் ஐக்கியம் செய்தது, கமலாகரன் என்பவனது மூப்பு நீங்கி இளமை எய்தியது, இலிங்கம் என்பது தெரியாமல் அதன் சிரசில் சந்தனம் அரைத்தவனுக்கு முக்தி கொடுத்தது, உபமன்யுமகரிஷிக்காக இறைவன் திருநடன மாடியது என்பது போன்று தலபுராணம் கூறப்பெற்று,

"மனத்துக் கெட்டாத சிதம்பரத்திற்குச் சமமான
தேவார மூவர் திருப்பாட்டு பெற்ற அரதைப்பெரும்பாழி
அரிவீரராகமங்கல மாகிய சமிவனம் எனும் புரி" - என்றும் இத்தலப்பெயர் கூறப்பெற்றுள்ளது.

தொண்டை மண்டல சதகம், திருக்கை விளக்கம், ஏரெழுபது எனும் நூல்களில் கூறப்பெற்றுள்ள. வேளாளர் பெருமைகளை இச்செப்பேட்டுத் தொகுதியும் விரித்துக் கூறுகின்றது. வடக்கே திருக்காளத்தி மலை, தெற்கே கன்னியாகுமரி, கிழக்கே நாகப்பட்டினம், மேற்கே மலைநாடு ஆகிய நான்கு எல்லைகளுக்கு உட்பட்ட நாட்டில் உள்ள தொண்டை மண்டலத்து வேளாளர், சோழியவெள்ளாளர், காரைக் காட்டு வெள்ளாளர், செயின் வெள்ளாளர், காரமணிமாள் வெள்ளாளர், கொடிக்கால் வெள்ளாளர், ஊற்றுத்தூர் வெள்ளாளர், துளுவ வெள்ளாளர், மிழலைக் கூற்றத்து வெள்ளாளர், வெண்பா நாட்டு வெள்ளாளர், தென்மண்டலத்து வெள்ளாளர், மேலும் வெள்ளாளர் என்று அழைக்கப் பெற்ற யாதொரு குலத்தாரும் இவ்வறக் கொடைக்கு உதவ வேண்டும் என்று குறிப்பும் காணப்பெறுகின்றது.

வேளாளப் பெருமக்களில் பல்லக்கு வைத்திருப்பவர்கள் பத்துப்பணமும், தண்டிகை வைத்திருப்பவர்கள் ஐந்து பணமும், குதிரையும் குடையும் வைத்திருப்பவர்கள் மூன்று பணமும், அட்டவணை பதவி வகிப்பவர்கள் ஒரு பணமும், பயிர்த்தொழில் புரிவோர் ஏர் ஒன்றுக்குக் கால் பணமும், பயிர் செய்யாத குடிகள் அரைக்காற் பணமும் வருஷ வர்த்தனையாக, பாதாள ஈஸ்வர சுவாமிக்கு அளிக்க வேண்டும் என்றும் கூறுகின்றது.

இவ்வறக் கொடையைப் பேணிக் காத்தால் ஏற்படும் நற்பலன்களைக் கூறி இதனை அழிக்க முற்பட்டால் வெள்ளாளர் விருதும், மேழிக்கொடியும், நாழிக் குவளையும், பாலாறும், பெண்ணையாறும், காவிரியாறும் துறந்து சிவத்துரோகி, செனத்துரோகி, உறவின் முறைத் துரோகி, குருத்துரோகி ஆகிய மகத்துக்களால் சொல்ல ஒண்ணாப்பாவங் களில் போகக்கடவான் என்றும் கூறி, இச்சாசன நகல் கச்சி ஏகம்பன் ஆலயத்துக்கு முகப்படைக் கல்வெட்டில் இருப்பதாகக் கருதிக் கொள்ளப் பணிக்கப் பெற்றுள்ளது.

## 10. திருவாவடுதுறை ஆதீனச்செப்பேடு[11]

திருப்பெருந்துறை (ஆவுடையார் கோயில்) திருக்கோயிலுக்குரிய செப்பேடொன்று திருவாவடுதுறை ஆதீனத்திலுள்ளது. கி.பி.1634ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற அச்சாசனத்தில் விசயநகரப் பேரரசர்களின் பட்டியலும், இரகுநாதநாயக்கரின் பெயரும் குறிக்கப்பெற்றுள்ளன. நாயக்கரின் அனுமதியோடு வெளியிடப்பெற்ற இச்செப்பேட்டில் நிலக்கொடை பற்றி விவரிக்கப்பெற்றுள்ளது.

## 11. சிவபுரம் செப்பேடு[12]

தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்தில் காணப்படும் செப்பேடொன்று இரகுநாதநாயக்கரின் ஆணை பற்றி விவரிக்கின்றது. இரண்டு ஏடுகள் இருந்த இத்தொகுதியில் முதல் ஏடு காணப்படாததால் ஆண்டுக் குறிப்புகள் பற்றிய செய்திகளை அறிய முடியவில்லை. சிவபுரம் மகாஜனங்களுக்காக நாயக்கர் செய்த அறக்கொடையும், ஆணையும் இச்செப்பேட்டில் குறிக்கப்பெற்றுள்ளன.

## 12. சென்னை அருங்காட்சியகச் செப்பேட்டுத் தொகுதி[13]

தஞ்சை நாயக்க மன்னர் வரிசையில் கடைசியாகத் திகழ்ந்த விஜயராகவ நாயக்கர் கி.பி.1656ஆம் ஆண்டில் அலர்மேலுமங்கமாம்புரம் எனும் ஊரினை ஸ்ரீவைஷ்வணர்களுக்குக் கொடையாக அளித்ததை மூன்று செப்பேடுகளில் சாசனமாக்கித் தந்துள்ளார். இத்தொகுதியின் மூன்றாம் ஏட்டில் ச்சாசன நிறைவுப் பகுதியில் விஜயராகவ நாயக்கரின் தெலுங்குக் கையொப்பம் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும். வடமொழியில் அமைந்த இச்சாசனம் தெலுங்கு எழுத்துக்களில் எழுதப்பெற்றுள்ளது.

## 13. படேவியா வெள்ளிச்சாசனம்[14]

அச்சுத விஜயராகவ நாயக்கர் டச்சுக்காரர்களுக்கு நாகப்பட்டினத்தில் வணிகமையம் அமைக்க அனுமதி அளித்ததை வெள்ளித் தகட்டில் தெலுங்கு மொழியில் சாசனமாகத் தந்துள்ளான். கி.பி.1658 ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற

இச்சாசனம் தற்போது ஹாலந்து நாட்டு படேவியா அருங்காட்சியகத்திலுள்ளது. இதன்படி புத்தூர், முட்டம், வாலச்சேரி அந்தோணிப்பேட்டை, கருவேப்பங்காடு, அழிஞ்சிலமங்கலம், சங்கமங்கலம், நிருந்தினமங்கலம், மஞ்சக்கொல்லை, நரியங்குடி, ஆகிய *10* கிராமங்களின் உரிமை டச்சுக்காரர்களுக்குக் கிடைத்தது. இவ்வெள்ளியேட்டில் டச்சுக்காரர்கள் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளும், செலுத்தவேண்டிய தொகை பற்றிய விவரங்களும் கூறப்பெற்றுள்ளன.

## 14. புதுக்கோட்டை அரசு அருங்காட்சியகச் செப்பேடுகள்[15]

புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் உள்ள இரண்டு தனித்தனிச் செப்பேட்டுச் சாசனங்கள் சகம் *1581* விக்கிரம ஆண்டு சிரவணமாதம் பௌர்ணமி நாளில் எழுதப்பெற்றவையாகும். இவை தெலுங்கு சமஸ்கிருத மொழிகளில் தெலுங்கு எழுத்தில் எழுதப்பெற்றவையாகும். ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலருக்கு ஸ்ரீசண்பக மன்னார்புரம் எனும் ஊரில் அளித்த நிலக்கொடை பற்றி ஒரு சாசனமும், *42* ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அம்பலக்குடி, கோயிறு ஆகிய ஊர்களில் நிலக்கொடை அளித்ததை மற்றொரு சாசனமும் விவரிக்கின்றது. இவ்விரண்டு சாசனங்களில் கிபி*1659* ஆண்டுக்குரியவையாகும்.

## *15.* இராஜகோபாலச்சக்கரம் பற்றிக் குறிப்பிடும் செப்பேடுகள்[16]

விஜயராகவநாயக்கர் மன்னார்குடி இராஜகோபாலனின் பக்தராகத் திகழ்ந்ததால் தனது உருவத்தையும், இராஜகோபாலனின் உருவத்தையும் பொறித்த தங்க, வெள்ளி, செம்புக் காசுகளை வெளியிட்டார். அதற்கு இராஜகோபாலச்சக்கரம் எனவும் பெயரிட்டார். அவர் வெளியிட்ட இராஜகோபாலச் சக்கரம் பற்றிக் குறிப்பிடும் விஜயராகவ நாயக்கர் காலத்திய செப்பேடுகள் இரண்டு கிடைத்துள்ளன.

கிபி*1657* ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற செப்பேடொன்று, சாளுவம் பேட்டை எனும் ஊரின் பாதி உரிமையை நமச்சிவாய உடையான் என்பவர் சிதம்பரத்துடையான் என்பவருக்கு *350* இராஜகோபாலச்சக்கரத்திற்கு விற்ற செய்தியினை விவரிக்கின்றது. இதுபோன்றே கிபி*1669* ஆம் ஆண்டாகிய சகம் *1591,* கலி *4769* சௌமிய வருடம் வைகாசி மாதம் *17* ஆம் நாள் திங்கட்கிழமையன்று திருவையாறு சீமையைச் சார்ந்த காருகுடி கிராமத்தினை ஜெயங்கொண்ட சோழவளநாடு காவிரி, முடிகொண்டான் ஆற்றின் தென்கரையிலுள்ள பாபநாசத்திலிருக்கும் பாபநாச நம்பி அய்யன் என்பவருக்கு வேங்கடபதி அய்யன் *430* இராஜகோபால சக்கரத்திற்கு விற்ற செய்தி கூறப்பெற்றுள்ளது.

தஞ்சை நாயக்கர் செப்பேடுகள் அனைத்தையும் தொகுத்து நோக்கும்போது வடமொழி, தெலுங்கு, கன்னடம், தமிழ் ஆகிய மொழியில் சாசனங்கள் எழுதப்பெற்றதை அறிகிறோம். சிறப்பாக வெளிநாட்டு மன்னருக்கு எழுதிய கடிதத்தைத் தங்க ஒலையிலும் வெளிநாட்டு வணிகர்களுக்குக் கொடுத்த அனுமதிச் சாசனத்தை வெள்ளியிலும் எழுதியது குறிப்பிடத்தக்கதாகும். தொடக்கத்தில் விஜயநகரப் பேரரசின் ஒப்புதல் பெற்று வெளியிடப்பெற்ற அருவிழிமங்கலம் செப்பேட்டிற்குப் பிறகு எந்த ஒரு ஆவணமும் பேரரசின் ஒப்புதல் பெறவில்லை என்பதால் நாயக்கர்களின் அதிகாரம் உயர்நிலை பெற்றதை அறிகிறோம். தமிழில் எழுதிய பொன்னோலையில் இரகுநாதநாயக்கரின் கையொப்பமும், செப்பேடொன்றில் விஜயநாதநாயக்கரின் கையொப்பமும் காணப்பெறுவதும் சிறப்பு அம்சங்களாகும். சோழர் காலத்து நாட்டுப் பிரிவு அமைப்புகள், தஞ்சை நாயக்கர் ஆட்சிக்காலம் முழுவதும் பெயர் மாற்றம் பெறாமல் இருந்ததும் அறிகிறோம்.

இலக்கியச் செய்திகள், புராணச் செய்திகள், சமுதாயச் செய்திகள், கலைப் படைப்புகள், வணிகம் எனப் பல்வேறு மக்கள் வாழ்க்கை தொடர்புடைய செய்திகளையும் இச்செப்பேடுகள் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

## குறிப்புகள்


1. Annual Report For Epigraphy, A.No. 9 of 1951-52
2. Epigraphia Indica, Vol. XII. No. 38
3. Epigraphia Carnatica Vol. III Nos. 116, 117 & 118. Institute of Kannada Studies, University of Mysore 1974.
4. புலவர் செ. இராசு அவர்கள் எழுதிய கட்டுரை, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.
5. தஞ்சை நாயக்கர் வரலாறு, குடவாயில் பாலசுப்பிரமணியன், சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர்.
6. Studies in Ancient Tamil law and Society Dr. R. Nagaswamy. Dept. of Archaeology, Tamil Nadu p. 116.
7. Tarangampadi, Dr. R. Nagaswamy, Department of Achaeology, Tamil Nadu. The Hindu Nov. 6th 1980, The Saga of Indo-Danish Friendship, By Dr. R. Nagasamy.

8. திருவாரூர் திருக்கோயில், குடவாயில் பாலசுப்பிரமணியன், திருக்கோயில் வெளியீடு, செப்பேட்டு எண்.6

9. தொல்லியல் கருத்தரங்கு தொகுதி ஒ, தமிழ்நாடு தொல்பொருள், ஆய்வுத் துறை வெளியீடு. ஒரு செப்பேட்டின் கதை, சொ. சந்திரவாணன், பக்.1 - 9.

10. தஞ்சை நாயக்கர் வரலாறு, குடவாயில் பாலசுப்பிரமணியன்.

11. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடுகள், ஆதீனவெளியீடு.

12. தஞ்சை நாயக்கர் வரலாறு, குடவாயில் பாலசுப்பிரமணியன்.

13. ARE - 10 (A) of 1921 - 22.

14. Proceedings of the Indian Historical Records Commission. 1937.

15. ARE 29 & 30 of 1949-50.

16. ARE No.17 of 1945-46.

* * *

# 9. சேதுபதி மன்னர் செப்பேடுகள்

எஸ்.எம். கமால்

இதிகாசங்களும், இலக்கியங்களும் நாளும் குறிப்பிடுகின்ற புனித சேதுவைக்கொண்ட சேதுநாடு பாண்டிய நாட்டில் கிழக்குக் கடற்கரையை ஒட்டிய பாலையும், நெய்தலும், முல்லையும், மருதமும், குறிஞ்சியும் மயங்கிய ஐந்திணைப்பகுதியாகும். தமிழ் மறவர் மிகுதியாக இங்கு வாழ்ந்து வந்த காரணத்தினால், வரலாறு இந்த நிலக்கூறினை மறவர் சீமையென வரையறுத்துள்ளது.

தொன்று தொட்டு இந்தப் பகுதியின் முடியுடை மன்னராக, மறவர் குலத்தின் மூத்த குடியினரான செம்பிநாட்டு சேதுபதிகள் ஆட்சிபுரிந்து வந்தனர். ஸ்ரீஇராமபிரான் அமைத்துச் சேது என்ற திருவணையின் காப்பாளர் என்ற முறையில் இவர்கள் சேதுபதிகள் என வழங்கப்பட்டமை போன்று. இவர்களது தாயகமான சோழ வளநாட்டைக் குறிக்கும் வகையில் "செம்பியர் கோன்" போன்ற பல சிறப்புப் பெயர்களாலும் இந்த மன்னர்கள் வழங்கப் பட்டனர். இவர்களது கொடையும், வீரமும் புலவர்களது பாடு பொருளாக அமைந்து, அவர்களது புகழ் பரப்பின. ஒருதுறைக் கோவை, தளசிங்க மாலை, பணவிடு தூது, விறலி விடு தூது, வேட்டைக்காதல் போன்றவை அவர்களது புகழ் கூட்டும் படைப்புகள்.

இந்த இலக்கியங்களுக்கு இவர்களே பாட்டுடை நாயகர்களாக விளங்கியதுமல்லாமல், இந்த மன்னர் வழியினர் சிறந்த புலவர்களாகவும் பாவாணர்களாகவும் இருந்து வந்துள்ளதை இவர்களது படைப்புக்களான பல சிற்றிலக்கியங்களும், தனிப்பாடல்களும் சான்று பகர்கின்றன. நீதிபோதம், பாவ போதம், வள்ளிமணமாலை, சல்லாபமாலை, சடாக்கரப்பதிகம், மதுரை சொக்கநாத பதிகம், காமாட்சி பதிகம், இராமநாதர் பதிகம், காவடிச் சிந்து என்பன இந்தப் புரவலர் புலவர்களது படைப்புகளாகும்.

மேலும், சென்ற நூற்றாண்டில் இந்த அரச வழியினரான இரண்டாவது முத்துராமலிங்க சேதுபதி, பொன்னுச்சாமித்தேவர், பாண்டித் துரைத் தேவர், பாஸ்கர சேதுபதி ஆகியோர் மிகச் சிறந்த இசைக் காவலர்களாகவும் விளங்கினர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மன்னர் இரண்டாவது முத்துராமலிங்க சேதுபதியும்அவரது தமையனார் பொன்னுசாமித் தேவரும் பல கீர்த்தனைகளை இயற்றி வெளியிட்டுள்ளனர். ரசிக ரஞ்சனம்,

காயப்பிரியா என்பன இரண்டாவது முத்துராமலிங்க சேதுபதியின் இசைப் பாடல் தொகுப்புகளாகும். இசைவாணராக மட்டுமல்லாமல் தமிழ், தெலுங்கு, இந்துஸ்தான் ஆகிய மொழிகளில் இசைப் பாடல்கள் இயற்றிய இசை ஆசிரியர்களுங்கூட. இத்தகைய மிகச் சிறந்த தமிழ்க் குடியினரையும் அவர்களது சமுதாயப் பணிகளையும் தமிழ் மக்களாம், தமிழார்வலர்களும் மறந்துவிட்ட நிலையில், நமது உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் அவர்களை நினைவு கூர்ந்து, அவர்களது செப்பேடுகள் பற்றிய கட்டுரையைப் படிக்குமாறு என்னைக் கேட்டுக் கொண்டதற்கு நன்றியுடையவனாக, எனது கட்டுரையைத் தொடர்கிறேன்.

இந்த முதுபெரும்குடியினரான சேதுபதி மன்னர்கள் தமிழுக்கு மட்டுமல்லாமல், தமிழ்ச் சமுதாயத்தின் பலதரப்பட்ட புலவர்கள், பண்டிதர்கள், அவதானிகள், இசைக்கலைஞர்கள், நாட்டிய வல்லுநர்கள், மல்லர்கள் ஆகியோரது பணி தொடர்ந்து இந்தச் சமுதாயத்திற்குப் பயன்பட வேண்டும். அவர்கள் வறுமையில் சிக்காமல் வாழ வேண்டும் என்ற பெரும்போக்கில் வளமையான ஊர்கள் பலவற்றை அவர்களுக்குச் சர்வ மானியமாக வழங்கி உதவினர். இத்தகைய முற்றூட்டு ஊர்கள், இறையிலிகள், சதுர்வேத மங்கலங்கள், அகரங்கள் எனப் பகுத்து வழங்கப்பட்டன. இராமநாதபுரம் சமஸ்தான மானுவல்லின்படி இந்தச் சர்வ மான்ய கிராமங்களின் எண்ணிக்கை *933* என்று தெரியவருகிறது. மற்றும் நிலமானியக் கணக்கு, கல்வெட்டுக்கள் ஆகியவைகளில் கண்ட பிரங்களையும் ஒன்று சேர்த்தால், சேதுபதி மன்னர்களது அறக்கொடை கிராமங்களின் எண்ணிக்கை *1089* ஆகிறது. அதாவது இராமநாதபுரம் சீமையில் அமைந்து இருந்த மொத்தக் கிராமங்களில் ஏறத்தாழ சரிபாதி என்று கணக்கிடப்படுகிறது. இது முழுமையான மான்ய கிராமங்கள் பற்றிய கணிப்பு மட்டும்தான். ஆனால் சேதுபதி மன்னர்கள் சமுதாயத்திற்குப் பயன்படும் பஞ்சாங்கம், வைத்தியம், சிறப்பான பறவைகள், விலங்குகளைப் பிடித்து வருபவர்கள், புலமைத்தனம், அம்பலம், தலங்காவல், திசைக்காவல், அரண்மனை ஊழியம், புரோகிதம், அடைப்பம், நாட்டுக்கணக்கு, அவதானம் என்று பல்வேறு நிலைகளில் மக்களுக்கு உதவி வந்த கோயில் ஊழியர்களுக்கும், அரசு ஊழியர்களுக்கும் அவர்களது வாழ்க்கை வளமாக அமைய ஊர்ப் பகுதிகளைக், காணிகளைத், துண்டு மானியங்களாக, அர்ச்சனா பாகங்களாக வழங்கி வந்தனர். இவைகளைப் பற்றிய முழுமையான விபரங்களை அளிக்கக்கூடிய ஆவணங்கள் கிடைக்கவில்லை. என்றாலும், இராமநாதபுரம் சமஸ்தான மேனுவல், நிலமானியக் கணக்கு, மற்றும் சமஸ்தானப் பதிவேடுகள், அரசு இனாம் பதிவேடுகள் ஆகியவைகளின் பதிவுகளில் இவைபற்றி அறிய முடிகிறது. இந்த மானியங்கள் பற்றிய சேது மன்னர்களது ஆணைகள் அனைத்தும் தமிழ் ஆவணங்கள் என்பதும், அவை ஓலை முறிகளிலும் செப்புப் பட்டயங்களிலும் தமிழில் வடித்து வழங்கப்பட்டன என்பதும் வெள்ளிடை.

இந்த ஆட்சியாளரது ஆட்சித் தொடக்கம் எப்பொழுது ஏற்பட்டது என்பதைத் துலக்கக் கூடிய தொன்மை ஆவணம் எதுவும் இதுவரை கிடைத்தில. என்றாலும் இராமேஸ்வரம் திருக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களைப் பரிசீலித்து வரலாற்று வல்லுநர்களான ராபர்ட் சுவெல்லும், ஜேம்பர்ஜசும், உடையான்சேதுபதி, சின்ன உடையான் சேதுபதி ஆகிய சேது மன்னர்கள் கி.பி. பதினைந்தாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இராமேஸ்வரம் திருக்கோயிலுக்கு வழங்கிய நிலக்கொடைக் கல்வெட்டுக்களைக் குறிப்பிடுவதில் இருந்து இவர்களது தொன்மையைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் இந்த மன்னர்கள் பற்றிய செய்திகள் கி.பி.*1604* முதல் வரலாற்றில் தொடராகக் கிடைக்கின்றன.

"ஈதல், இசைபட வாழ்தல்" என்ற இருபெரும் இலக்குகளை இவர்களது வாழ்வின் வரலாற்றுச் சுவடுகளாகப் பதிவு செய்துள்ள பல ஆவணங்கள் *(தமிழ் ஆவணங்கள்)* நமக்குக் கிடைக்காமல் காலத்தால் அழிந்துவிட்டன. இராமநாதபுரம் சமஸ்தானப் பதிவேடுகளில் இவை அக்கினி உபாதையால் அழிந்துவிட்டன*;* காடல் குடியான் கலகத்தில் அழிந்துவிட்டன*;* மருது கலகத்தில் அழிந்துவிட்டன*;* என்ற குறிப்புகள் அவைகளுக்கான காரணங்களாகப் பதிவு பெற்றுள்ளன. கிடைத்துள்ள சில ஆவணங்கள் அனைத்தும் செப்பேடுகள் - அரசு ஆணைகள், இசைவு, முறி, பிடிபாடு, தானசாசனங்கள், தீர்ப்புரை என்ற பகுப்பில் அடங்குவன. பொதுவான இந்தச் செப்புப் பட்டயங்களை வழங்கிய சேதுபதி மன்னர்கள் இவைகள் தானச் சாசனம் என்று குறிப்பிட்டாலும் சில பட்டயங்களில் தர்மசாசனம், மகாசாசனம், கற்பகமடல் என்று பொறித்து உள்ளனர். இவை செவ்வக வடிவில் நடுவில் மட்டும் தாமரை மொக்கு போன்ற கைப்பிடியுடன் காணப்படுகின்றன. பெரும்பாலான செப்பேடுகளில், மன்னர் ஆணை இரண்டு பக்கங்களிலும், ஓரிரு பட்டயங்களில் நீண்ட வாசகங்களை இரண்டு இதழ்களாக மூன்று அல்லது நான்கு பக்கங்களிலும் பொறிக்கப்பட்டுள்ளன.

இதுவரை கிடைத்துள்ள சேதுபதி மன்னர் செப்பேடுகளில் அளவில் பெரியது *43* x *13* செ.மீ.லும் சிறியது *18* x *14* செ.மீ.லும் அமைந்தவை களாகும். இதனைப்போன்ற மிகுதியான வரிகளைக் கொண்ட செப்பேடு *(கி.பி.1714)* முத்து விசய ரகுநாத சேதுபதி அவர்களால் இராமேஸ்வரம் திருக்கோயிலுக்கு வழங்கப்பட்ட தானங்கள் பற்றியதாகும். மொத்தம் எண்பத்து ஒன்பது வரிகளைக் கொண்டது. இருபத்து நான்கு வரிகளைக் கொண்ட *(கி.பி.1764*ல் வழங்கப்பட்ட*)* இன்னொரு செப்பேடுதான் எண்ணிக்கைக் குறைவ்ான வரிகளைக் கொண்டது.

முன்னரே குறிப்பிட்டது போல் திருக்கோயில்கள், திருமடங்கள், அன்னச் சத்திரங்கள், முஸ்லீம் புனிதர்களது அடக்க இடங்கள், கிறித்துவ

வழிபாட்டுத் தேவாலயங்கள் ஆகிய நிறுவனங்களுக்கு வழங்கப்பட்ட தான சாசனங்கள், தனியார்களுக்கு வழங்கப்பட்ட காணியாட்சி, அறக்கொடை களுக்கான சர்வமானிய சாசனங்கள், குடிமக்கள் பிடிபாடாகக் கொண்டு வரைந்த இசைவு முறிவுகள், அரசு ஆணைகள், தீர்ப்புரை எனப் பகுத்துக் கொள்ளலாம். பொதுவாக இந்தச் செப்பேடுகளின் வாசகம் கல்வெட்டுக்களின் அமைப்பு போன்று "ஸ்வஸ்திஸ்ரீ" என்ற மங்கலச் சொல்லுடன் தொடங்கப் பெறுகிறது. அடுத்து செப்பேடு வழங்கப்பட்ட ஆண்டு, மாதம், நாள், நட்சத்திரம், திதி ஆகியவைகளுடன் சேதுபதி மன்னரது விருதாவளிகளுடன் செப்பேடு பெற்றவர் பெயரும், இன்ன காரியத்துக்காகக் கொடை வழங்கப்பட்டது என்ற விபரமும் பொறிக்கப்பட்டு இருக்கிறது. இறுதியாக வழங்கப்பட்ட அறக் கொடையைப் பரிபாலித்தவர்களுக்கு ஏற்படும் பலன்களும் மாறுபட்டவர்களுக்கு எய்தப்பெறும் பாதகங்களும் ஓம்படைக் கிளவியாகப் பொறிக்கப்பட்டு, பட்டயம் பொறித்தவரின் ஊர், பெயருடன் நிறைவு பெறுகிறது. இவையனைத்தும் சேது மன்னரது எல்லாச் செப்பேடுகளிலும் காணக்கூடிய இயல்பான அமைப்பு. சில செப்பேடுகள் வடமொழி சுலோகங்களுடன் முற்றுப்பெற்றுள்ளன.

இந்தச் செப்பேடுகளின் வாசகங்களில் இருந்து சேதுபதி சீமையையும் சேதுபதி மன்னர்களைப்பற்றிய பொதுவான பல செய்திகளையும் சிறப்பான சில செய்திகளையும் அறிந்து கொள்ள முடிகின்றன. இந்த வகையில் இவை வரலாற்றுக்குப் பயன்படும் தமிழ் ஆவணங்கள் என்பது உறுதி. இந்த ஆவணங்கள் அளிக்கும் செய்திகளைப் பார்ப்போம்.

### 1. மன்னரது விருந்தாளிகள்

அறக்கொடைகளை ஆணையிடும் அனைத்துப்பட்டயங்களிலும் மங்கலச் சொற்றொடரையும், காலத்தைக்குறிப்பிடும் தொடர்களை அடுத்து, மன்னரது விருதாவளிகள் (சிறப்புப்பெயர்கள்) பொறிக்கப்பட்டுள்ளன. இவை அந்த மன்னரைப் பற்றியதும் அவரது மூதாதையருக்கு உரியதும் ஆகும். இவையல்லாத, மதுரை மாவலி வாணாதி ராயர், மதுரை நாயக்க மன்னர்களது சிறப்புப் பெயர்களும் இந்தச் சேது மன்னர்களது விருதாவளியாக இடம்பெற்றுள்ளன. இதுவரை கிடைக்கப்பெற்ற பட்டயங்களில் மிகவும் அதிகமாக நூற்று ஒரு பெயர்கள். பட்டயம் எண் *58*லும், மிகவும் குறைவாக மூன்று சிறப்புப் பெயர்கள் மட்டும், பட்டயம் எண் *26*லும் பொறிக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டின் ஆளவந்தார்களாக வாணாதிராயர் களும், மதுரை நாயக்கர்களும் ஒரு சில கால வரம்பில் இருந்ததாலும், அதே ஆட்சிப் பரப்பின் ஒரு பகுதிக்கு மன்னர்களாகச் சேதுபதிகள் இருந்தாலும், அதே சிறப்புப் பெயர்களை இந்த மன்னர்களும் சூட்டிக் கொண்டனர் என்று சொல்வது பொருத்தமாகும்.

தேவை நகராதிபன் சிவபூஜா துரந்தரன் சுந்தமாதனகிரியான், சேதுக்கரைப்புலி, சேதுமூலதுரந்தான், அறிவுக்கு அகத்தியன், பொறுமைக்கு தர்மன், பக்தி நாடகப்பிரியன் என்பன போன்ற பொதுவான சிறப்புப் பெயர்கள் அனைத்துச் செப்பேடுகளிலும் காணப்படுகின்றன. மேலும், நாடுகலக்கிய வாகன் புருஷன், தாலிக்குவேலி, ஹிரண்ய கர்ப்பயஜி போன்ற சிறப்புப் பெயர்கள், திருமலை ரகுநாத சேதுபதிக்கு *(கி.பி1645-78)* உரியன. இதனைப் போன்று பரராஜசிங்கம், பரராஜ கேசரி, வேற்றரசு தம்பிரான் ஆகிய விருதாவளிகள் கிழவன் ரெகுநாத சேதுபதிக்கு மட்டுமே பொருந்துவன.

பொதுவாக இந்த விருதாவளிகள், பெரும்பாலானவை சேது மன்னர்களுக்குப் புகழ்ச்சியுரையாக அமைந்து இருந்ததாலும், சில சிறப்பபுப் பெயர்கள் அந்த மன்னர்கள் சம்பந்தப்பட்ட வரலாற்று நிகழ்வுகளைக் குறிக்கும் சொற்றொடர்களாக அமைந்துள்ளன.

## 2. சேதுபதி சீமை

இந்த மன்னர்களது சீர்மிகு செங்கோல் நிலைத்து இருந்த பகுதி. சேதுபதி சீமை அல்லது மறவர் சீமை என வழங்கப்பட்டது. பாண்டிய நாட்டின் கிழக்குக் கடற்கரையை ஒட்டிய நீண்ட பகுதி என்பதனையும் முந்தைய பாண்டிய மன்னர்களது நிலக் கூறுகளான முத்தூர் கூற்றம் துகவூர் கூற்றம், அரும்பூர் கூற்றம், மிழலைக் கூற்றம், அடங்கிய கீழ் செம்பி நாடு, செவ்விருக்கை நாடு, கைக்கி நாடு, தேர்ப்போகி நாடு, தென்னாலை நாடு, முத்தத்து நாடு, அளக்குடி நாடு, புனல் பரளை நாடு, பொலியூர் நாடு, வடதலைச் செம்பி நாடு, கிடாத்திருக்கை நாடு, வேம்பு நாடு, அளந்து நாடு, பருத்திக்குடி நாடு, கருநிலக்குடி நாடு, ஆப்பனூர் நாடு என வழங்கப்பட்ட பரந்த பகுதியாகும். இந்தப் பகுதியின் உட்பிரிவுகளாக வளநாடு, பற்று, புரவு என்பன இருந்ததையும் அறிய முடிகிறது.

## 3. நிலப்பாகுபாடு

சேதுபதி சீமையின் மண்வளம் பற்றி இராமநாதபுரம் சமஸ்தான மேனுவல் ஆசிரியர், இந்தச் சீமையின் வடபகுதி பொட்டல், வண்டல் பகுதி என்றும், கிழக்குப் பகுதி மணலாகவும், தென் பகுதியும் மேற்குப் பகுதியும் கரிசலாகவும், வெப்பலாகவும், செவ்வலாகவும் இருப்பதாகக் குறிப்பிட்டு உள்ளார். ஆனால், இந்தச் செப்பேட்டு ஆவணங்களில் நிலம், பொட்டல், நஞ்சை, புஞ்சை, தட்டு, தேட்டு, திட்டு, வயல், தோட்டம் செய், ஆக்கள் என்று தரப்படுத்தப்பட்டு உள்ளன. இவைகளின் தொகுதி கொத்து, சேர்வை, கோர்வை என்றும் இவைகளின் எல்லைகள் பொலி, புரவு, வரம்பு, வரப்பு என்றும் வகுக்கப் பெற்று இருக்கின்றன. இவைகளின் பெருநான் கெல்லையைக் குறிப்பிட குழிக்கல், குத்துக்கல், சூலக்கல், திருவாழிக்கல்,

சிலுவைக்கல் ஆகியன நாட்டப்பட்டிருந்தன. கிருத்துவத் தேவாலயத்திற்கு வழங்கப்பட்ட கிராம எல்லையைப் பகுத்துக்காட்ட சிலுவைக்கல் சேதுநாட்டில் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## 4. நீர் ஆதாரங்கள்

பொதுவாக, நன்செய் நிலங்களில் வேளாண்மைத் தொழில் நடைபெறுவதற்கு மழை, வெள்ளநீர் பயன்படுத்தப்பட்டது. மாரிக்காலத்துப் பொழிவான மழை நீரைத் தேக்கி வைக்க ஏரி, கண்மாய், ஏந்தல், ஊருணி, குளம், குட்டை, குண்டு என்ற பெரிதும் சிறிதுமான நீர்த்தேக்கங்கள் அமைக்கப்பட்டு இருந்தன. ஆற்றுவெள்ளத்தை இந்த நீர்த்தேக்கங்களுக்குக் கொண்டு வர நீண்ட குறுகிய கால்கள் அமைக்கப்பட்டு இருந்தன. இவை நீர், வாங்கி, திருவாங்கி, வாய்க்கால், வகுத்துக்கால் என்று குறிக்கப் பட்டுள்ளன. மழைநீரை எடுத்துச் செல்லும் வாய்க்கால், கால் அல்லது ஓடை என வழங்கப்பெற்றன.

கண்மாய் போன்ற நீர்த்தேக்கங்களில் மிகுதியான அல்லது கொள்ளளவிற்குக் கூடுதலான நீர் வந்துவிட்டால் அதனை வெளியேற்றுவதற்கு கலுங்கு அல்லது மடை என்ற அமைப்பு பயன்பட்டது. இது தவிர, இக்கண்மாய்களுக்கு வரப்பெற்ற கூடுதலான நீர், தானே வெளியேறுவதற்கு ஏற்றாற் போல அந்தக் கண்மாய்களில் ஓர் இடத்தில் இடைவெளி ஒன்று கொடுத்து அமைக்கப்பட்டது. இதன் வழி கண்மாயின் கொள்ளளவிற்கு மேல் உள்ள நீர், தானே வழிந்து செல்லும் வகையில் அமைக்கப்பட்டிருந்தது. இது "தாம்போகி" அல்லது "தான்போகி" என்று குறிக்கப்பட்டுள்ளது, இதற்கு எதிர்மறையாக நீரைக்கொண்டு வரும் கால் நீர் வாங்கி எனப்பட்டது.

இங்கு, கண்மாய் சம்பந்தமான செப்பேடுகளில் காணப்பெறும் சிலவகைச் சொற்களையும் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் என எண்ணுகிறேன்.

ஒரு கண்மாயின் நீண்ட கரை இன்னொரு கண்மாயுடன் இணைந்து முடிவடையும் வகையில் அமைக்கப்பட்டிருந்த பகுதிக்கு, பொருத்துக் கரை (இணைப்பு) என்று பெயர் வழங்கப்பட்டுள்ளது. பொருக்கால் என்ற வழக்கும் இத்தகைய பொருளில் வழக்குப்பெற்றது.

கண்மாய்க் கரையின் தொடக்கம் அல்லது கடைசிப்பகுதி கொம்பு அல்லது கடைக்கொம்பு எனப்பட்டது.

கண்மாயின் நீர் நிறையும் பகுதி கண்மாய் உள்வாய் அல்லது நீர்ப்பிடி, இதனை ஒட்டிய பகுதி குளம்கோர்வை என்றும் இதில் செய்யப்படும் வேளாண்மை, முழுமால் விவசாயம் என்றும் வழங்கப்பட்டது.

நீர் நிரம்பியுள்ள கண்மாய்க்கரையைக் கண்காணிக்கவும் அந்த நீரைச் சீராகக் கால்வாய் வழி நஞ்சை நிலங்களுக்குக் கிடைக்குமாறு செய்யவும் மடையான் அல்லது நீர்கண்டி என்ற பணியாள் கிராமங்களில் நியமனம் செய்யப்பெற்று இருந்தார். வேளாண்மைக்குக் கண்மாயின் கலுங்கை முதலில் திறந்து நீரை வாய்க்காலில் விடுவதற்கு முன்னர், ஆட்டுக்கிடாய் ஒன்று பலியிடப்பட்டது என்றும், அந்த ஆட்டுக்கிடாயைத் தவறாமல் கொடுக்க மடைக்கிடாய் முக்கந்தர் என்றவர் கிராமங்களில் நியமிக்கப்பட்டிருந்தார், என்றும் இராமநாதபுரம் மேனுவல் தெரிவிக்கிறது. பொதுவாக, இந்த நீர்த்தேக்கங்களும், வாய்க்கால்களும், அமைத்தவர்கள் அல்லது வெட்டுவித்தவர்கள் பெயரினால் வழங்கப்பெறுவது இயல்பு. எடுத்துக்காட்டாக கிழவன் ஏரி, மறவன் ஏரி, புலிக்குத்திக் கண்மாய், வலையன் கண்மாய் நரசிங்கன் ஏந்தல், வயிரவன் ஏந்தல், பெரிய கூத்தன் ஊரணி, முத்திருளப்ப பிள்ளை ஊரணி, ஆதி நாராயணமடை, இராஜ சூரிய மடை, கூத்தன் கால், திருமலைத்தேவர் கால் ஆகியவைகளைக் குறிப்பிடலாம். ஆனால் இராஜசூரியமடை கிராமத்திற்கும் திருப்புல்லாணி கிராமத்துக்கும், இடையில் அமைந்து இருந்த ஏரியொன்று, பரம வைணவப் பெரியாரான ஸ்ரீராமானுஜர் பெயரால் இராமானுஜப் பேரேரி என்று பெயரிடப்பட்டு வழங்கப்பெற்றுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## 5. நிர்வாகம்

ஏறத்தாழ இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட சதுரமைல் பரப்பும் இருநூறு கல் தொலைவிலான நீண்ட கடற்கரையையும் கொண்ட இந்தச் சேது நாட்டின் அரசியல், நிர்வாகம், பாதுகாப்பு, நீதி வழங்கல், பற்றிய செய்திகள் கிடைத்துள்ள செப்பேடு ஆவணங்களில் காணப்படவில்லை. ஆனால் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில செப்பேடுகளில் சேது நாட்டு அரசு அலுவலர் பெயர்கள் மட்டும் இடம்பெற்றுள்ளன.

அமைச்சர், தளகர்த்தர் பணியைமேற்கொண்ட பிரதானியும், அரசு செயலராக ராயசமும், பொருளாளராகப் பொக்கிஷமும், அரசுக் கணக்கராக முத்திரைக் கணக்கும், மன்னரது தனிப்பணியாளராக அடப்பம், மற்றும் சேர்வைக்காரர்களும் இருந்து வந்தனர். ஊர் நிர்வாக அளவில் பாளையப்பட்டு சேருவைக்காரன், மணியக்காரன், வழிமறிக்காரன், தண்டல்காரன் ஆகியோரும் செயல்பட்டு வந்தனர் என்பது தெரியவருகிறது. இவர்களைப் போன்ற பணியாளர்கள் பலர் பல நிலைகளில் பணியாற்றி இருக்கவேண்டும் என்பதும், இவர்களின் செயல்பாடுகளிலும் அப்போதைக்கப்போது மாற்றங்கள் இருந்து இருக்க வேண்டும் என்பதும் ஊகிக்கப்படுகிறது. திருமலை ரெகுநாத சேதுபதி,

கிழவன் சேதுபதி, விஜய ரெகுநாத சேதுபதி, ஆகிய மன்னர்கள் ஆட்சி நிர்வாகத்தில், பெரும் மாற்றங்கள் செய்யப்பட்டதை இராமநாதபுரம் சமஸ்தான மேனுவல் குறிப்பிடுவதை இதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம்.

## 6. மக்கட் சமுதாயம்

இந்த நாட்டுச் சமுதாயத்தின் அங்கமாக இருந்தவர்கள் ராசாக்கள், ராஜபுத்திரர், சூத்திரர், கருநாடகத்தார், கவறையர், வெலமா, மல்லக செட்டிகள், வெள்ளாள செட்டிகள், மதுரைச் செட்டிகள் மஞ்சப்புத்தூர் செட்டிகள், கோமுட்டிகள், பட்டுநூல் செட்டிகள், சலுப்பர், வலசை இடையர், வடுகக் குசவர், விவியார், இடையர் கோவுண்டமார், தொட்டியக் கம்பளத்தார், நாட்டு இடையர் என கிபி*1715*ம் வருடத்திய செப்பேடு குறிக்கின்றது. திருமலை சேதுபதி மன்னரது கிபி*1659*-ம் வருடச் செப்பேடு ஒன்று சேதுநாட்டில் மீனவர், சாணார்குடி, இடைக்குடி, வாணியக்குடி, துலுக்கர், சோனகர், பட்டு நூல்காரர், இளம் பஞ்சக்காரர், வள்ளுவர், பறையர் மற்றும் பதினெண் குடிகளைக் காட்டுகிறது. மேலும் கிபி*1755*-ம் வருடச் செல்லமுத்து சேதுபதியின் பட்டயத்தில் நாயக்கமார், ராவுத்தர், துரைமக்கள் தேவமார், பாளையக்காரர், தண்டடிக்காரர், ஊழியக்காரர், நாட்டு வகுப்பார் என்ற சமூகத்தினர் சொல்லப் பட்டுள்ளனர்.

இவர்கள் தவிர இந்த நாட்டின் குடிமக்களாக இருந்த பிராமணர்கள், குருக்கள், பட்டர், நம்பிகள், ஐயர், ஐயங்கார், மகா ஜனங்கள் என்ற பெயர்களில் குறிக்கப்பட்டு உள்ளனர். மேலும் ராஜாக்கள், தொட்டியர், கம்பளத்தார், வடுகக் குசவர், கவறையர், வெலமா நாயக்கர் என்று குறிக்கப்பெறும் சமூகத்தினர் அனைவரும் ஆந்திர மாநிலத்தவர். கருநாடகத்தார், சிவியர் என்ற சமூகத்தினர் கன்னட மாநிலத்தவர், என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. சோழர் காலச் சமுதாயத்தினராகக் குறிக்கப்பட்ட இந்து சமயப் பிறபட்ட வகுப்பினரான இடங்கை, வலங்கைச் சாதியினர் சேதுபதி மன்னர் பட்டயங்களின் பதினெண் சாதியினர் என்றும், சூத்திரர் என்றும் குறிக்கப்பட்டுள்ளனர். சோனகர், துருக்கர் என்ற சொற்கள் முஸ்ஸிம்களைக் குறிப்பன என்றாலும், கடல் வணிகத்தில் ஈடுபட்ட முஸ்ஸீம்கள் சோனகர் என்றும் உள்நாட்டில், வணிகம், அரசுப் பணிகளை மேற்கொண்டிருந்த முஸ்ஸீம்கள் துலுக்கர் என்றும் குறிக்கப்பட்டுள்ளனர்.

இடைக்குடி மக்களில் *(1)* நாட்டு இடையர் *(2)* வலசை இடையர் *(3)* சிவியார் *(4)* ஸ்ரீபாதந்தாங்கி, **கோவுண்டமார்** என நான்கு பிரிவாக இருந்தனர் என்பது தெரிகிறது. சிவியார், கோவுண்டமார் இரு வகையினரும் பல்லக்குத்தூக்கிகள் என்பதும் நாட்டு இடையர், வலசை இடையர் இருவரும் ஆடுமாடுகளைப் பராமரித்து வந்தனர் என்பதும், அவர்களது தொழில் கீதாரம்

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. கிரிதாரியான கிருஷ்ணனைப் போற்றுபவர் என்ற பொருளில் அவர்களது தொழில் கீதாரம் என வழங்கப்பெற்றது. சேதுநாட்டில் மக்கள் தொகுப்பின் ஆதிகுடிகளான மறவர், இடையர், பள்ளர், பறையர் ஆகியவர்களைத் தவிர சமணர்களும், முஸ்லீம்களும், கிறித்தவர்கள் ஆகிய வேற்றுச் சமயத்தினர்கள் கூட்டாக வாழ்ந்து வந்தனர் என்பதே இந்த ஆவணங்கள் வழங்கும் செய்தியாகும். சேதுநாட்டின் வடகிழக்குப் பகுதியில் தாழங்குடியிலும், அனுமந்தக்குடியிலும், பனஞ்சாயலிலும் சமயப்பள்ளிகள் இருந்து வந்ததை இந்த ஆவணங்கள் தெரிவிக்கின்றன. இன்னும், இராமேஸ்வரம் அருகேயுள்ள மெய்யம்புளி, காளையார் கோவில் அருகில் உள்ள சாத்தப்புளி என்ற ஊர்கள் முறையே மெய்யன்பள்ளி, சாத்தன் பள்ளி என்ற பெயர்களின் திரிபு என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மேலும், நாகரின, நாகமுகுந்தன்குடி, நாகமங்கலம் முகிழ்த்தகம், தற்போது, சாத்தணி, சாத்தனூர், சாத்தன்குடி, சாத்தமங்கலம், சாத்தன்குளம், குணங்குடி, குணபதி மங்கலம் என்ற சேதுநாட்டு ஊர்களும் முன்னர் சமணர் குடியிருப்புகளாக இருந்தவையே.

அடுத்து முஸ்லீம்கள், சேதுநாட்டில் நிலைபெற்று இருந்ததை பிற்காலப் பாண்டியரது திருப்புல்லாணி, தீர்த்தாண்டதான, கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன. சேதுபதிகளது ஆட்சியிலும் இந்த மக்கள் பரவலாகக் குடியிருந்ததைச் செப்பேடுகள் உறுதி செய்கின்றன. இராமநாதபுரம், இராமேஸ்வரம், ஏர்வாடி ஆகிய நகர்களில் அமைந்துள்ள இஸ்லாமிய இறை நேசரது அடக்க இடங்களுக்குச் சேதுபதிகள் வழங்கிய அறக்கொடை ஆவணங்கள் அவை.

கி.பி.16வது நூற்றாண்டு முதல் கிறித்துவ சமயம் சேதுநாட்டின் கடற்கரையில் கால் ஊன்றத் தொடங்கியது. கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் ஜான் டி பிரிட்டோவின் உயிர்ப்பலியினால் இங்கு அம்மதம் புத்துயிர் பெறத்துவங்கியது.

வழிபாட்டுத்தலங்களை அமைக்கவும், சமயப் பணிகளைத் தொடரவும் சேதுமன்னர்கள் அவர்களுக்கு அனுமதி வழங்கினர். அவர்கள் முத்துப்பேட்டையில் அமைந்த சர்வேஸ்வரம் ஆலயத்திற்கு கி.பி.1792-இல் முத்துராமலிங்க சேதுபதி மன்னர் இரண்டு ஊர்களைச் சர்வமான்யமாக வழங்கினர். இங்ஙனம் சமயப் பொறைக்கும், சமரச மனப்பான்மைக்கும் நிலைக்களனாக விளங்கிய சேதுமன்னர்களது சீமையில் பல சமய, இன மொழி மக்கள் நட்புடனும், நல்லிணக்கத்துடனும் வாழ்ந்தனர் என்பதை இந்தச் செப்பேடுகள் மறைமுகமாகக் குறிக்கின்றன.

## 7. வரிப்பாடுகள்

சேது நாடு நீர்வளம் குறைந்தநாடு ஆதலின் வேளாண்மையை மட்டும் பெரிதும் நம்பி இராமல் அரசினர் பல்வேறு வரிப்பாடுகளை மக்களிடமிருந்து வசூலித்து வந்தனர். பதினேழாம் நூற்றாண்டில் சேதுநாட்டு மக்கள், பள்வரி, பலவரி, சொர்ணாதாயம், கோசாலை வரி, நன்மாட்டு வரி, மகா நவமிக்கிடால் வரி, மனோம்புக்கிடாய்வரி, செம்புவரி, களஞ்சிய வரி, மடத்து வரி, கவடி வரி, எழுத்தாணி வரி, கம்பள வரி, கீதாரம், கலவ ஈழம், புஞ்சை வரி, கொல்லர் வரி, தச்சர் வரி, சாணார் வரி, பனங்கடமை, திருவை வரி, பாசி வரி, பலபட்டடை வரி, எருதுவரி, சுரபிக்காத நன்மாட்டு வரி, கத்திப்பெட்டி வரி, செக்கு வரி, உழக்குவரி, நிலவரி, மனைவரி, கூரைவரி, கல்வரி, தட்டுவரி, கொடிக்கால் வரி, புகையிலை வரி, சொத்துக்கணக்கு வரி, வேண்டுகோல்வரி, வரிசைவரி என்ற வரிப்பாடுகள் இருந்தன.

இதேபோலப் பதினெட்டாம் நூற்றாண்டில் அம்பலம், காடுகாவல், இடைகுடி வரி, கீதாரி வரி, தறிக்கடமை, செக்குவரி, கடைவரி, பறைவரி, முள்வரி, காணிக்கைவரி, இடங்கை வரி, வலங்கைவரி, சுங்கம் ஆகிய வரிப்பாடுகள் குடிகளிடமிருந்து தண்டல் செய்யப்பட்டன. வேளாண்மைக்கு அடுத்த கால்நடை பராமரிப்பும், நெசவும் சிறப்பான தொழில்களாக அப்பொழுது இருந்து வந்தமை தெரியவருகிறது.

## 8. அளவைகள்

சேதுநாட்டில் தானியதவசங்களையும், எண்ணெய் ஆகியவைகளையும் அளந்து கணக்கிட முகத்தல் அளவை பயன்படுத்தப் பட்டது. அந்த அளவைகள், மாகாணி, உழக்கு, படி, நாழி, குறுணி, மரக்கால், கலம் என வழங்கப்பட்டன. உப்பு அளங்களில் விளைந்த உப்பை அளக்க 'பொதி' 'கண்டி' என்ற நிறுத்தல் அளவு பயன்படுத்தப்பட்டது. அத்துடன் 'பலம்' 'வீசை' என்ற அளவீடுகளும் பயன்பாட்டில் இருந்தன. மேலும் இந்த அளவீடுகளில் அமையாத ஒரு அளவும் நடைமுறையில் இருந்தது தெரியவருகிறது. அதாவது இரு உள்ளங்கைகளையும் இணைத்தவாறு தானியம் போன்றவைகளை அள்ளி எடுப்பதை 'கையெடுப்பு' என்று வழங்கினார்.

## 9. விழாக்கள்

விஞ்ஞானம் வளர்ச்சி பெறாத பதினேழு, பதினெட்டாவது நூற்றாண்டுகளில் சேதுபதி சீமையில் வீர விளையாட்டுக்களான மல்போர், மஞ்சு விரட்டு, வாள்வீச்சு, வளரி, ஈட்டி வீசுதல் ஆகியன ஆங்காங்கு மக்களது பொழுதுபோக்காக இருந்தன. ஆனால், குடிமக்கள் மிகுதியான தொகையில் கலந்துகொள்ளும் பொழுதுபோக்குகளாகக் கோயில் திருவிழாக்கள் அமைந்து

இருந்தன. குறிப்பாக இராமேஸ்வரம் திருக்கோயில் கார்த்திகை, மாசி, ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் திருவிழாக்களும், இராமநாதபுரம் அரண்மனையில் புரட்டாசித் திங்களில் நடைபெறும் நவராத்திரி உற்சவமும் திருவிழாவும், இராமநாதபுரம் துர்க்கை பங்குனி மாத திருவிழாவும் இவை தவிர தனுக்கோடியிலும், திருப்புல்லாணி, சேதுக்கரையிலும் ஆடி, தை மாதங்களில் அமாவாசையன்று நடைபெற்ற கடல் நீராடலிலும் மிகுதியான மக்கள் பங்கு கொண்டனர்.

மேலும், சேது நாட்டின் புனித, புண்ணியத் தலங்களான திரு உத்திரகோச மங்கை, திருப்பெருந்துறை ஆகிய திருக்கோயில்களில் நடைபெற்ற திருவிழாக்களை விளக்கக் கூடிய செப்பேடுகள் இதுவரை கிடைக்கப் பெறவில்லை.

## 10. சுங்கமும், ஆயமும்

இந்த வரிப்பாடுகளைத் தவிர வேறுசில வருவாய்களும் சேது நாட்டுக் கருவூலத்தில் சேர்ந்தன. கடல் வழியாகக் கடல் துறைகளில் தோணிகள் வழி வந்து இறங்கிய ஏற்றுமதியான பொருட்களுக்கு விதிக்கப் பட்ட தீர்வை சுங்கம் எனப்பட்டது. அப்பொழுது சேதுநாட்டில் இராமேஸ்வரம் தீவில் அக்கினித் தீர்த்தக் கரை, கல்லடிச்சாலை, புளியடிச்சாலை, புங்கடி, பாம்பன் ஆகிய கடற்கரை ஊர்களில், துறைமுகங்கள் இருந்ததைச் செப்பேடு எண்:*15* தெரிவிக்கின்றது. மற்றும் இராமேஸ்வரம் தீவின் எதிர்க்கரையான வங்காளக் குடாக் கடல் கரையில் அமைந்து இருந்த தொண்டி, தேவிப்பட்டினம் ஆகிய பெருந்துறைகளும், மன்னார் வளை குடாக்கரையில், கீழக்கரையில் ஒரு துறைமுகமும் இருந்தன.

ஆனால் கீழக்கரை துறைமுக ஏற்றமதி இறக்குமதிப் பொருட்கள் பற்றிய விபரங்களை கிபி*1678*-ம் ஆண்டுச் செப்பேடு ஒன்று பட்டியலிட்டுத் தெரிவிக்கின்றது. அங்குச் சுங்கத் தீர்வைக்கு உட்படுத்தப்பட்ட பொருட்கள் *1.* நவதானியம் *2.* நெல் *3.* அரிசி *4.* பாக்கு *5.* மிளகு *6.* பலசரக்கு *7.* செம்பு *8.* துத்தநாகம் *9.* பட்டுப்புடவை *10.* பன்னீர் *11.* ஏலக்காய் *12.* கிராம்பு *13.* சாதிக்காய் *14.* சாதிபத்திரி *15.* பட்டுநூல் *16.* கருப்புக்கட்டி *17.* பினாட்டு *18.* புளி *19.* கருப்புக்கட்டிக் கொட்டான் *20.* கொட்டைப்பாக்கு *21.* தேங்காய் *22.* சங்கு.

மற்றும் இப்பொழுது இருப்பது போல சேதுநாட்டில் நெடுஞ்சாலைகள் அப்பொழுது இல்லை. சேது நீராடலுக்குப் பயன்படுத்திய சேது மார்க்கங்கள் என்று சொல்லக்கூடிய மூன்றுநெடு வழிகள் இருந்தன. இவற்றின் ஒரு நெடுவழி, மதுரை இராமேஸ்வரம் நெடுவழி என்று செப்பேடு எண்.*30* குறிப்பிடுகிறது. இதனை விடத் தொலைவில் நீண்ட நெடுவழி திருநெல்வேலி

சீமையிலிருந்து தொடங்கி சேதுநாட்டின் வழியாக வடக்குக் கோடியைத் தொட்டுச் சோழநாடு சென்றது. இந்த நெடுவழியில் பதினைந்து அல்லது இருபது கல் தொலைவிற்கு ஒன்றாக அமைக்கப்பட்டிருந்த சுங்கச் சாவடியைப் பொருட்களை எடுத்து வரும் பொதி வண்டிகள் கடக்கும் பொழுது அங்குப் பொருட்களுக்கு விதிக்கப்படும் தீர்வையைச் செலுத்திய பிறகுதான் செல்லமுடியும் இந்த வருவாய்கள் **ஆயம்** எனப்பட்டன.

## சூரிய சந்திர கிரணங்கள்

சேதுபதி மன்னர்கள் பற்றிய செப்பேடுகள் கிபி*1607* முதல் கிபி*1809* வரையான காலத்தைச் சேர்ந்த தொண்ணூற்று மூன்று செப்பேடுகள் இதுவரை கிடைக்கப்பெற்றுள்ளன. அவைகளில் மூன்று பட்டயங்களைத் தவிர எஞ்சிய பட்டயங்களில் தமிழ்ப் பஞ்சாங்க அடிப்படையில் சேது மன்னர்கள் அறக்கொடை வழங்கிய ஆண்டு, திங்கள், நாள், நட்சத்திரம், திதி ஆகியன சரியாக கணக்கிடப்பட்டு, குறிக்கப் பட்டுள்ளன. இந்தக் காலக்கணிப்பில், நமக்கு மேலும் முக்கிய இரண்டு செய்திகள் கிடைக்கின்றன.

சேது நாட்டில் கிபி*1673*-க்கும் கிபி*1762*-க்கும் இடைப்பட்ட ஒரு நூற்றாண்டு காலத்தில் நிகழ்வுற்ற சூரிய சந்திர கிரகணங்களைப் பற்றியவை அவை. *10.2.1676, 17.10.1762, 20.4.1688* ஆகிய நாட்களில் சூரிய கிரகணங்களும் *12.5.1673, 25.3.1737* ஆகிய நாட்களில் சந்திர கிரகணங்களும் ஏற்பட்டுள்ளன. விஞ்ஞான உதவியின்றிப் பாரம்பரிய கல்வித் திறனைக்கொண்டு, பஞ்சாங்கத்தில் தெளிவும் தேர்ச்சியும் மிக்கவர்களால் இந்த நிகழ்வுகள் பதிவுபெற்று இருப்பது வியப்பிற்குரியதாக உள்ளது. இந்தப் பஞ்சாங்கக் கணக்கர்களுக்குச் சேது வேந்தர்கள் ஆங்காங்கு துண்டு மானியங்களாக, காணிகளைக் கொடையாக வழங்கி இருப்பது சமஸ்தான ஆவணங்களில் இடம்பெற்றுள்ளது. இவர்களது வழியினர், இன்றும் கிராமங்களில் கிராம தேவதைகளுக்குக் காப்புக்கட்டுதல், விவசாயத்திற்கு ஏரிடுதல், வித்திடுதல், மற்றும் திருமணங்கள் ஆகியவற்றிற்கு நாள்குறித்துக் கொடுக்க வருவதுடன் இராமநாதபுரம் சமஸ்தான பஞ்சாங்கத்தையும் கணித்து வெளியிட்டு வருகின்றனர்.

## வல்லமைக்கு வாழ்த்து

பேராண்மையும் பெருவீரமும் படைத்தவர்கள் இந்தச் சீமைக்குடி மக்கள். கி.பி.*1702*-ல் மதுரை ராணிமங்கம்மாளது எழுபத்து இரண்டு பாளையங்களின் பெரும்படையும் கிபி*1709*, கிபி*1771*-ல் தஞ்சை மராத்தியப் படைகளும் சேதுநாட்டைத்தாக்கி அழித்த பொழுது ஆக்கிரமிப்பாளர்களைச்

சேதுமன்னரது தலைமையில் நின்று நிர்மூலமாக்கியதுடன் மதுரை மண்டலத்தில் கி.பி.*1658*-ல் கன்னடப்படையெடுப்பு ஏற்பட்ட பொழுது திருமலைநாயக்கரது அபயக்குரலுக்கு இசைந்து சென்று கன்னடப் படைகளுடன் போராடி அவர்கள் புறமுதுகிட்டு ஓடும்படி செய்தவர்கள். இத்தகைய குடிமக்களில் ஒருவரான இராமேஸ்வரம் விஜயன் சேர்வை என்பவர், இராமேஸ்வரம் வீதிகளில் கூத்தன் சேதுபதி மன்னர் அமர்ந்து உலா வந்த யானையின் வாலைப்பிடித்து, மேலும் ஒரு அடி கூட எடுத்து நடக்க முடியாமல் தனது வலிமையினால் அதனை, தடுத்து நிறுத்திவிட்டார்.

சேர்வைக்காரரது வலிமையைக் கண்டு மகிழ்ந்து சேது மன்னர் அவருக்கு நாள்தோறும் திருக்கோயிலில் இருந்து உணவு வழங்கி உதவுமாறு உத்திரவிட்டார். சேதுபதி மண்ணில் வல்லமைக்கு வாழ்த்துக் கூறியதுடன் அமையாமல் அந்த வல்லவர்களையும் ஆதரித்து உதவினர் என்பதற்குச் சிறந்த சான்றாக இந்தச் செப்பேடு அமைந்துள்ளது. இந்த ஆணையைக் கொண்ட செப்பேடு சென்னையில் உள்ள தமிழ்நாடு அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது.

## நல்ல தீர்ப்பு

சேதுபதி மன்னர் காலத்தில் நியாயத் தீர்ப்பு சிறப்பாக வழங்கப் பட்டதை கிபி*1745*-ல் வெளியிடப்பட்ட தீர்ப்புரை ஒன்றிலிருந்து புரிந்துகொள்ள முடிகிறது. இராமேஸ்வரம் நகருக்கு மேற்கே உள்ள இலட்சுமண தீர்த்த அனுபவம், பரிபாலனம் சம்பந்தமாக இராமேஸ்வரம் திருக்கோயிலில் பணிபுரிகின்ற மராட்டாபிராம்மண குருக்களுக்கும் தமிழ் ஆரியர்களுக்கும் ஏற்பட்ட இந்த வழக்கினை, விசாரித்து முடிவு செய்ய சேதுபதி மன்னர் ஒரு நடுவர் குழுவினை ஏற்படுத்தினார். வேதத்திலும் மனு தர்மத்திலும் தேர்ந்த வாதி, பிரதிவாதிகளது உரிமைப் பிரச்சினையை முடிவு செய்ய சேதுநாட்டின் பல பகுதிகளிலும் உள்ள பிராம்மண வைசிய, ஆரியவைசிய, இசுலாமிய, பிராம்மணரல்லாத வகுப்பினைச் சேர்ந்த இருபது நடுவர்களும், மன்னரது பிரதானி தளகர்த்தர், சித்திரமணியக்காரர், இராமேஸ்வரம் கோவில் ஆதிக்க கர்த்தர் ஆகிய நால்வரது முன்னிலையில் இந்த வழக்கினை விசாரித்தனர்.

மனுதார், எதிர்மனுதார் ஆகியவர்களது வாக்குமூலங்கள் அவர்களது முறிநறுக்குச் செய்தி அட்டவணைகளைப் பரிசீலித்து இராமேசுவரம் திருக்கோயிலில் இருந்து முறிநறுக்குச் செய்தி அட்டவணைப் பட்டயங்களையும் அதற்கு முந்தைய *314* வருட நடப்புக்களையும் கேட்டறிந்து தீர்ப்பு வழங்கப் பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டில் சேது நாட்டில் நியாயத் தீர்ப்பு வழங்கப்பட்ட விவரத்திற்கு ஒரு அரிய எடுத்துக் காட்டாக இந்தத் தமிழ் ஆவணம் அமைந்துள்ளது.

இராமேசுவரம் திருக்கோயிலின் பிரதான பணியான "பூஜை" யினை நிறைவேற்றி வரும் (இன்றளவும்) மகாராஷ்டிர பிராம்மணர்கள், இராமேசுவரத்தில் கி.பி.1430 முதல் நிலைத்துவிட்ட ஒரு வரலாற்று உண்மையையும் இந்தத் தீர்ப்புரை மறைமுகமாகத் தெரிவிக்கின்றது.

சேதுநாட்டு அதிபதிகளாக விளங்கியசேது மன்னர்களது, வரலாறு, சமுதாயப்பணிகள் போன்ற வரலாற்றுச் செய்திகளை விவரிக்கும் ஆவணங்கள் அரிதாகிவிட்ட இன்றைய நிலையில் அந்த வரலாற்று நாயகர்களைப் பற்றிய உண்மைகளை வெளிப்படுத்தும் அரிய ஆவணங்களாக இந்தச் செப்பேடுகள் அமைந்து உதவுகின்றன என்பதில் ஐயமில்லை.

**கட்டுரைக்குப் பயன்பட்ட நூல்கள்**

1. இராமநாதபுரம் சமஸ்தான நிலமான்ய ஒலைக் கணக்கு

2. Manual of Ramnad Samasthanam by T. Rajaram Row (1891)

3. தமிழகமும் முஸ்லீம்களும் - Dr. S.M. LUôp (1990)

4. சேதுபதி மன்னர் செப்பேடுகள் - Dr. S.M. LUôp (1994)

5. Boards Misc. Registerd (1811 - Tamilnadu Archives, Chennai)

* * *

# 10. கொங்குநாட்டுச் சமுதாய ஆவணங்கள்

நெல்லை நெடுமாறன்

## முன்னுரை

சமுதாய ஆவணங்களில் ஒன்றாக விளங்கும் பட்டயங்கள் கி.பி.17 ஆம் நூற்றாண்டளவில், நாயக்க ஆட்சியாளர்கள் காலத்தில் மிகுதியாகத் தோற்றம் பெற்றன. அதிலும் கொங்கு நாட்டிலேயே மிகுதியான பட்டயங்கள் கிடைத்து வருகின்றன. இவ்வாறான சமுதாய ஆவணங்கள் மூன்று வகைப்படும் *1.* ஆட்சியாளர்கள் வழங்குவது *2.* தாமே எழுதி வைத்துக் கொள்வது *3.* குடிமக்கள் பலர்சேர்ந்து கோயில்களுக்கோ ஊர் காரணமாகவோ எழுதிக் கொடுப்பது. கொங்கு நாட்டில் செப்புப்பட்டய சமுதாய ஆவணங்கள் மிகுதியாகக் கிடைத்து வருவதற்கான காரணங்கள் பல. அவற்றை ஆராய்ந்தால், அப்பகுதியின் வரலாறு, குடிகளின் நிலை, கொங்கு நாட்டின் நிலச்சூழல் போன்ற பல்வேறுபட்ட கருத்துக்களை அறிந்து கொள்ள முடியும்.

## கொங்குநாடு

தமிழகத்தை மூவேந்தர்கள் ஆண்டுவரும்போதே கொங்கு நாடும் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். சங்ககாலப் புலவர்களின் வருணிப்பின் பெரும் பகுதி கொங்கு நாட்டில் நிகழ்ந்த நிகழ்வாகவே தோன்றுகிறது. தகடூர் யாத்திரை, கொங்கு மாக்கதை, பண்டைய அந்நிய ஆட்சியாளர்களின் படையெடுப்பு போன்ற வரலாற்று முக்கியத்துவம் பெற்ற பல நிகழ்ச்சிகள் கொங்கு நாட்டுடன் தொடர்பு கொண்டதாகவே உள்ளன. இவற்றின் காரணமாகவே மிகுதியான வரலாற்றுக்கிடமாகக் கொங்கு நாடு அமைந்து விட்டது எனலாம். தருமபுரி முதல் கோவை வரையிலும் நெடுகப் பரந்திருக்கும் கொங்கு நாட்டில் மலைகளும், ஆறுகளும், நீர் நிலைகளும் நிரம்பிச் சிறந்திருந்த காரணத்தினாலேயே அதிகமான குடியேற்றங்களும் குடி மக்களும் அப்பகுதியில் அமைந்து விட்டனர் எனத் தோன்றுகிறது. அதன் காரணமாகவே மிகுந்த சமுதாய வரலாற்றுப் பின்னணிகள் தவிர்க்கவியலாதாயின.

## கொங்குநாட்டுப் பட்டய ஆவணங்கள்

முனைவர் புலவர் இராசு அவர்கள் அரிதின் முயன்று பல சமுதாய ஆவணங்களைக் கண்டறிந்தும் கண்டறிந்திருந்த ஆவணங்களைப்

படியெடுத்துமாக ஒரு சிறந்த நூலைத் தமிழ்ப்பல்கலைக் கழகம் வழியாக. வெளியிட்டுள்ளார். ஆயினும் இன்னும் கண்டறியப்படாத செப்புப்பட்டயங்கள் அதிகமாக அப்பகுதியில் உளதாகப் புள்ளி விவரங்கள் குறிப்பிடுகின்றன. இப்பட்டய ஆவணங்கள் பலவற்றிலும் ஒரே மாதிரியான தொடக்கம் இருப்பதும், சரித்திர-புராண வரலாறுகள் மிகுதியாகச் சொல்லப் பெறுவதும் சமகாலச் செய்திகள் குறைவாக இறுதியில் இடம்பெறுவதும் இறுதியில் எழுதுவித்தவர், எழுதினவர், சாட்சிகள் போன்றோர் பெயர்கள் இடம் பெறுவதையும் காணமுடிகின்றது. இதிலிருந்து கொங்கு நாட்டில் ஒரு காலக்கட்டத்தில், அதாவது கிபி. *18*-ஆம் நூற்றாண்டிலும் அதற்குச் சற்றுப் பின்பும் பட்டயங்கள் எழுதி வைத்துக் கொள்வதும் வழங்குவதும் ஒரு தூண்டுதலாகவே பல சமுதாயத்தினரிடையே அமைந்துவிட்டிருத்தலைக் காண முடிகிறது.

## கொங்குநாட்டுச் சான்றோர் புட்டய ஆவணங்கள்

கொங்குநாட்டில் வழங்கப்பட்ட பட்டய ஆவணங்கள் ஏககாலத்தில் எழுந்தவையானாலும் அவற்றுள் சான்றோர் சமுதாயம் பற்றிய பட்டயங்கள் தமிழகத்தின் பிற பகுதிகளில் அச்சமுதாயத்திற்குரிய பட்டயங்களோடும், அதற்குரிய மெய்க்கீர்த்திகள், கல்வெட்டுகள், ஓலைச் சுவடிகள், இலக்கியங்கள் ஆகியவற்றில் சொல்லப் பெறும் கருத்துகளுடனும் ஒற்றுமையுடையனவாக இருக்கின்றன. கொங்கு நாட்டுச் சான்றோர் சமுதாய ஆவணங்கள் புற்றீசல்கள் போல் புறப்பட்ட பிற ஆவணங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டு அங்கு வாழ்ந்த சான்றோர் சமுதாயம் தமக்கென உரிய தகுதிகளைத் தக்கவைத்துக் கொள்வதற்கும் பிறருக்குணர்த்துவதற்கும் தம் சந்ததியாருக்கு வழிகாட்டிடவுமே தோன்றியுள்ளன. வேறு எந்தச் சமுதாயத்திற்குமில்லாத வகையில் கல்வெட்டு ஆவணங்களையும், ஓலைச்சுவடிக் கதைகளையும் பெற்றிருப்பதால், இச்சமுதாயம் தொன்றுதொட்டே ஒரு பின்னணியுடன் தொடர்ந்து வந்து கொண்டிருப்பதாக அறிய முடிகின்றது.

இந்த அடிப்படையிலேயே, கொங்குநாட்டில் கண்டறியப்பட்டுள்ள சான்றோர் சமுதாயச் செப்புப் பட்டய ஆவணங்களில் சில ஈண்டு அறிமுகப் படுத்தப் பெறுகின்றன. சமுதாய வரலாற்று ஆய்வுக்கு மிகவும் இன்றியமையாத இவ் ஆவணங்கள் விரிவாக ஆராயப் பெறுமானால் தமிழக வரலாறு செம்மை பெறும்.

## கருமாபுரம் சான்றோர்குல செப்புப் பட்டயம்

சேலம் மாவட்டம் திருச்செங்கோடு வட்டம் கருமாபுரம் சான்றோர் மடத்தில் இச்செப்புப் பட்டயம் உள்ளது. இதன் காலம் அதன் எழுத்தமைதியைக்

கொண்டு கி.பி. 17ஆம் நூற்றாண்டு என அறிய முடிகிறது. இப்பட்டயம் அடியிற் கண்ட செய்திகளைக் கூறுகிறது. நாடார் சமூகம் இச் செப்பேட்டின் மூலம் 'சான்றோர் குலம்' என மிகத் தெளிவாக அறியக் கிடக்கின்றது.

ஆதிநாளில் நின்றசீர் நெடுமாற பாண்டியன் சமணனாக இருந்து சைவனாக மாற்றம் பெற உபதேசம் செய்த திருஞான சம்பந்தரின் மறுஉருவமாக அமைந்த அவரது கௌண்டின்யக் கோத்திரத்துச் சிவாச்சாரியர் ஆண்ட சிவசுப்பிரமணிய குருக்களை நாடார்கள் குலகுருவாக ஏற்று அளித்த செப்புப் பட்டயம் என்று இச்செப்பேட்டில் சுட்டிக் காட்டப்படுகின்றது.

நாடார்கள் தங்களை வளர்த்த தாயாக வீரமாகாளியையும், தாங்கள் சப்த கன்னியர்களின் பிள்ளைகள் என்றும் பெருமைப் படுகின்றனர். நாடார்கள் இயல்பாகவே வெள்ளைக்குடை, வெண்சாமரம், வெண்பரி, வெண்குஞ்சரம் உடையவர்கள். அரசருக்குரிய சிங்கக் கொடியுடைய சாணகுலதீரன், ஏனாதி வம்சத்தவர் என்றும் தங்களைக் குறிப்பிடுகின்றனர். அவர்கள் பல அசுர குலத் தலைவர்களை வென்ற அரச மரபினர். சேரநாட்டில் மூப்பர் பட்டமும், வடநாட்டில் நாயக்கர் பட்டமும், சோழநாட்டில் கவுண்டர் பட்டமும், பாண்டிய நாட்டில் நாடாள்வார் என்றும் தாடாள்வார் என்றும் பட்டம் பெற்றவர்கள். தாடாள்வான் குலம் என்பது திருவிக்ரமனாகிய மகாவிஷ்ணுவின் குலம் எனப்படும். எண்ணற்ற தமிழ், வடமொழி நூல்களில் விஷ்ணுவே அரசகுலமாகச் சொல்லப்பட்டிருக்கின்றார். இதனையே நாடார்கள் தம் செப்புப் பட்டயத்திலும் தம்மைத் தாடாள்வான் குலத்தினர் என்றும் அரச குலத்தவர் என்றும் தெளிவாக்குகின்றனர்.

நாடார்கள் மாடக்காசு வழக்கம் செய்தவர்கள்; சமயச் சங்கும் (நீதிச்சங்கு), சமர்சங்கும் (போரில் முழக்கமிடும் சங்கு) உடையவர்கள். வாளால் வழிதிறந்தவர்கள்; (வாளால் வழிதிறந்த விக்ரம பாண்டியனைத் தாமாகக் கூறுதல்) அவர்கள் பூவேந்திய சோழன் என்ற பெருமைக்குரிய சோழ குலத்தோர்கள். அந்தணரான ஆதி சங்கராச்சாரியருக்கு உபதேசம் செய்தவர்கள் என்பதும் அவருக்குப் போர்க்கலையைக் கற்றுக் கொடுத்தவர்கள் என்றும் பெருமைப்படுகின்றனர்.

சான்றோர் குலத்து நாடார்கள் நிலவுடமைச் சமூகத்தினர் என்பதற்கு அடையாளமாக, ஏரிவரி, சுங்கம் அரசுக்குத் தந்திடாத இராஜகுலவர் என்றும், முடிசூடும் தலையில் கூடை வைத்து மண் சுமந்திட மாட்டோம் என்றும் பழம் பெருமை பேசுகின்றது இப்பட்டயம். தங்கள் இனத்து மரபினருக்கு வேறு சமூகப் பெண்ணிடம் பிறந்த பிள்ளைகளுக்குத் தங்கள் குலநாமத்தை வழங்கியவர்கள். தங்கள் சமூகத்திற்கு அடிமைகள் இருந்ததையும் இப்பட்டயம் மூலம் நினைவூட்டுகின்றனர்.

பிறப்பும் வளர்ப்பும் சிறப்பும் உடைய இக்குலத்தோர் பதினெட்டு வாத்தியங்களை உடைய மரபினர் என்ற முக்கியக் குறிப்பினை இச்செப்பேட்டிலிருந்து அறிகின்றோம், 'எங்கள் குலம் சாணகுலம்', 'சாணகுல தீரன்' என்று குறிப்பிடுவதுடன் இப்பட்டயத்திலேயே 'சாணகுலம்' என்பதுடன் சான்றோர் குலம் என்னும் குறிப்பினையும் காண்பதால் சாணகுலமே சான்றோர் குலம் என்று தெளிவாகிறது.

சான்றோர்குலப் பட்டயங்களிலேயே இச்செப்புப்பட்டயமே மிகப்பெரியது என்பது குறிப்பிடத்தக்கது.

## அவல்பூந்துறை சான்றோர்குலச் செப்புப் பட்டயம்

கி.பி. *17* ஆம் நூற்றாண்டினைச் சார்ந்த சான்றோர் குலகுரு சுவாமிகளுக்கு நல்கிய இச்செப்பேடு தற்போது ஈரோடு அவல் பூந்துறை சான்றோர்குல குரு திருமிகு செல்வரத்தின குருக்கள் அவர்களிடம் சான்றோர் மடத்தில் உள்ளது. இப்பட்டயத்தைக் கண்டறிந்தவர்கள் எஸ்.டி. நெல்லை நெடுமாறன் மற்றும் எஸ். இராமச்சந்திரன் ஆவர்.

இப்பட்டயத்தின் அடிப்படையில் பல வரலாற்றுச் செய்திகள் விளக்கம் பெற்றுள்ளன. பத்திரகாளி மைந்தர்களாகச் சொல்லப்படும் நாடார்கள் தங்களை ஈஸ்வர குமாரர்கள் என்றும் அழைத்துக் கொள்வதைப் பார்க்கின்றோம். அசுரகுலத் தலைவன் சம்பரன் என்ற சூரனை வென்ற குலத்தவர் என்றும், சூரிய குலத்தவரோடு தொடர்புபடுத்திக் கூறுவதும், அதன் தொடர்பால் அமரர் சிறை மீட்டவர்கள் என்றும், தேவேந்திரனுக்கு முடிசூடி வைத்தவர்கள் என்றும் பெருமைப்பட்டுக் கொள்ளுகின்றனர். வாலியை வென்ற இராமனின் குலமான ஆதித்த குலத்தவர் என்றும் தமது குலத்தைக் குறிப்பிடுகின்றனர். "பூவேந்திய சோழன்" குலத்தினர் என்று சோழனுடன் உரிமை கொண்டாடுகின்றனர். இதுபோன்று சோழவள நாட்டில் தம்பித்துணை நாடகம் நடத்திய செய்தியும் இடம் பெறுகிறது. கல்வெட்டுக்களிலும், ஓலைச் சுவடிகளிலும் தம்பித்துணை வளநாடு அமைந்திருப்பதைப் பார்க்கின்றோம். "சமரசங்கு, சமயசங்கு, மோகினி சங்கு" என்னும் மூன்று சங்குடையவர்கள்.

வடபகுதித் தொடர்பால் நாயக்கர் பட்டமும், கருமாபுரம் பட்டயத்தில் கூறப்பட்டிருப்பது போல் பலநாடுகளில் பல பட்டங்களும் பெற்றவர்கள். சந்திர குலத்தில் சமய நாராயணர் பட்டமும் பெற்றவர்கள் என்று கூறுவதாலும் நாடார்கள் ஆதித்த குலத்தினராகவும் சந்திர குலத்தினராகவும் சொல்லப்பட்டிருப்பது வரலாற்றில் எண்ணத்தகுந்த சான்றாகும். கி.பி.*15,16* நூற்றாண்டுகளில் மாவலி வாணர்கள் மதுரை, இராமநாதபுரம் பகுதிகளில்

வைகைக் கரையைக் கைக்கொண்டு ஆண்டார்கள். அப்பகுதிகளில் "முகுந்தன்" என்னும் பெயரில் கடற்கரைப் பகுதிகளில் வாழ்ந்தவர்கள் நாடார்கள் என்றும் கூறப்பட்டிருப்பதும் நோக்கத் தக்கது. அதுவே முக்கந்தன் என்று அழைக்கப்படும் பட்டமாகும். அரசருக்குரிய கொடியாகிய சிங்கக்கொடியும் பிறகொடிகளையுமுடையவர்கள். வெள்ளானை வேந்தன் என அரசகுல சின்னம் சொல்லப்பட்டுள்ளது. கருமாபுரம் பட்டயத்தில் குறிப்பிட்டதைப் போன்று மாடக்காசு, மரகதக்கொடி *(பச்சை)*. பொற்காசு சர்வமும் படைத்தவர்கள் என்றும், வேதப்பனையை விரலால் வளைத்து, அமிர்தம் இறக்கி, சிவனுக்கும் உமையாளுக்கும் கொடுத்த மகாதேவன் புத்திரன் என்றும் கூறப்பட்டுள்ளது. நாடார் குலத்தில் பிறந்தவன் விக்ரமாதித்தன் *(சத்திரயன்)* என்றும், வலங்கைப் பிரதாபன், எழுநூற்றுவர் வங்கிசத்தோர் *(சோழர் மரபினர்)*, குலத்தால் முப்புரி நூல் உடைய அரச மரபினர் என்றும் கூறப்படுகிறது. ஆனூர் அம்மன் கோயிலில் செல்ல மூப்பன் சிலை பூணூலோடு காட்சி அளிக்கிறது. நாடார்களில் ஆட்சி மரபினர், கொங்கன் *(சேரநாடு)*, நாடான் *(சோழநாடு)*, மதுரையான் *(பாண்டியநாடு)*, கல்யாணியான் *(சாளுக்கிய நாடு)*, ஈழன் *(இலங்கை)* என்று அழைக்கப்பட்ட பஞ்சவர் மரபு ஆகும்.

இச்செப்புப் பட்டயத்திலும் உலகைக் காக்கும் விஷ்ணுவின் குலமான தாடாள்வான் குலம் சொல்லப்பட்டிருக்கின்றது. மட்டுமில்லாமல் மேலே சொன்ன நாடுகளின் தொடர்புடைய அரசகுலத்தவரான நாடார்கள் தம் பெயர்களைக் கையொப்பமிட்டுச் சாட்சியிட்டு உள்ளனர். குறிப்பாகப் பாண்டியநாடன், அகளங்கநாடன், குணவீர நாடன், குலோத்துங்க நாடன் என்றும் மருதகாளி நாடான், காளிநாடான் எனவும் குறிக்கப்பட்டுள்ளனர். எனவே நாடன் எனப்படுவோனே நாடான் எனத் தெளிவாக உணரப்படும். இது மட்டுமன்று; தேவரடியார் வைத்து இருக்கும் பழக்கம் உடைய உயர்ந்த மரபாகவும் குறிக்கப்பட்டுள்ளனர்.

## திருமுருகன் பூண்டி சான்றோர்குலச் செப்புப் பட்டயங்கள்

கி.பி.*1670*-இல் எழுதப்பட்ட இரு செப்புப் பட்டயங்கள் கோவை மாவட்டம் அவிநாசி வட்டம் திருமுருகன் பூண்டி ஈஸ்வரன் கோவில் சான்றோர் குலகுருவான சிவாச்சாரியாரிடம் தற்போது உள்ளன.

நாடார்களில் அடக்கமுடையார் *(சான்றோர்)*, போர்முடையார் என்ற இருபிரிவிலும் அமைந்தோர் இருந்துள்ளனர். அடக்கமுடையாராகிய நாடார்கள் நாடாதி நாடான் *(சோழன்)*, நாட்டுவன் *(நட்டாத்தி)*, மதுரையான் *(பாண்டியன்)*, போர்முடையாராகிய நாடார்களில் கோநடான் *(கொங்குச்சோழன்)*, சங்கன் *(சங்காழ்வார்)*, கொங்கன் *(சேர மரபினர் கங்கன், கொங்கணி)* என்றும்

ஏனாதி என்ற தலைமைப் பொறுப்பும் பெற்றிருந்த பெருமைக்குரிய வீர அரச மரபினர் என விளக்கப் பட்டுள்ளனர். மேலும் இவர்கள் புலிக்கொடி, கருடக்கொடி, சிங்கக்கொடி, அன்னக்கொடி, அனுமக்கொடி, மீன்கொடி (மகரத்தோரணம்) மற்றும் வெள்ளைக்குடையும் பிறப்பால் பெற்ற உரிமை மரபினர். சந்திரனை வாளாகப் பெற்றவர்கள் என்று கூறுவது பாண்டிய குலத்தினை நினைவூட்டுகின்றது. மதுரைவள நாடர், சோழவளநாடர், கரிகால் சோழ நாடாதிபதி, சீர்கொண்ட மதுரை நாடர் என்றும் பெயர் பெற்றவர்கள் எனவும் சுட்டிக் காட்டியுள்ளனர். மேலும் இப்பட்டயங்களில் கையொப்பமிட்டவர்கள் நாடன், நாட்டுவன், நாடாதி, மதுரையான் என்று இட்டுக் கொண்டிருப்பது குறிப்பிடத் தகுந்தது.

இப்பட்டயங்களில் கூறப்படும் நாடார்களைச் சோழவள நாடர், மதுரைவள நாடர் என்று கூறப்படுவதை நோக்கின் நாடர் என்பதுவே நாடார் என்று தெளிவாக்கப்படுவதுடன் வளநாடர் என்ற சொல் அரசரையும் குறித்து நாடர் மரபினரையும் குறித்து நிற்பதை இதன் மூலம் அறிய முடிகிறது.

## பெருந்துறை சான்றோர்குல செப்புப்பட்டயம்

கருமாபுரம் சான்றோர் குல ஜகத்குரு ஸ்ரீமது ஆண்ட சிவசுப்பிரமணிய குருக்கள் வழிவந்த சான்றோர் மடத்தின் தாயாதிகளான பெருந்துறை சான்றோர் குல குருக்களுக்கும் கருமாபுரப் பட்டயமே சான்றுப் பட்டயமாகத் திகழ்கின்றது. அன்றியும் 'பெருந்துறை சான்றோர் குலகுரு' என இலச்சினையும், சான்றோர் குல வரலாறுள்ள பனை எழுபது என்பன போன்ற ஓலைச்சுவடிகளும், காளிகோயிலும் இப்பெருந்துறை சான்றோர் மடத்தில் உள்ளன.

## திங்களூர் பூமன்குல நாடார் செப்புப் பட்டயம்

இச்செப்புப் பட்டயம் அதிவீர பாண்டியன் என்ற பாண்டிய குல சிற்றரசனால் வழங்கப்பட்டது. ஐந்நூறு ஆண்டுகளுக்கும் முற்பட்ட செப்பேடு ஆகும். இப்பட்டயம் திங்களூர் சென்னியம் பாளையம் மொட்டையப்ப நாடார் வகையறாக்களிடம் உள்ளது.

இப்பட்டயத்தின் மூலம் நாடார்களாகிய மூப்பனார்களுக்குக் காணிநிலம், தேர் தொட்டுக் கொடுக்கும் உரிமை, கோவில் தீபம் மற்றும் கம்பங்களிலும் தீபம் ஏற்றும் உரிமையும் இதற்கான காணிஉரிமை தனித்தனியாகவும் வழங்கப்பட்டுள்ளது தெரிகிறது. சில மரியாதைகளை நாடார் குல மக்கள் கொங்கு நாட்டில் இழந்துவிட்டாலும் உரிமைக்காணியும் உயர்குல மரியாதையும், செப்புப் பட்டயத்தில் சுட்டிக்காட்டப் பட்டிருக்கின்றன. இப்பிரிவினர்

கொங்க நாடான் என்று அழைக்கப் படுவோராவர். இன்றும் கொங்கு நாட்டில் நாடார்களுக்குக் கோவில் மரியாதை வழங்கப்படுகின்றது. தேரினைத் தொட்டுக் கொடுக்கும் உரிமையுடையோர் ஆதித்த குலத்தவர் என்று எண்ணற்ற நூல்கள் குறிப்பாக, பாகவதம், கூர்ம புராணம், அகிலத்திரட்டு போன்றவை கூறுகின்றன. திருச்செந்தூரில் ஆதித்த குலத்தவரே தேரினைத் தொட்டுக் கொடுக்கும் உரிமை இன்றளவும் உள்ளவர்கள். இதைப் போன்று சேலம், தாரமங்கலம், பெரியோம்பட்டி மற்றும் பல இடங்களில் நாடார்களுக்குத் தேர் தொட்டுக் கொடுக்கும் சட்டபூர்வமான உரிமை உள்ளதை அறிகின்றோம்.

...... தொடர்ச்சி

# இணைப்பு

## கருமாபுரம் சான்றோர் செப்பேடு

தார ணிக்கொரு தாயுமை யாள்பரி

பூர ணச்சிவ னேயருள் புத்திரன்

ஆர ணப்பொரு ளான்திருக் காஞ்சியின்

வார ணத்தின் மலர்ப்பதம் போற்றுவாம்!

கடல் சூழ்ந்த நெடிய பூமியின் கண்ணே நீர் வளம் பொருந்திய கழனிகளில் சென்னெல்லும் கன்னலும் வாழை கமுகு தெங்கு மாதுளை புன்னை கோங்கு மா பிலா சண்பகம் தேவதார் முதலான பல விருட்சங்களும் நந்தவனம் பூஞ்சோலைகளும் வாவி கூடம் தடாகங்களும் இப்படி யனேகம் சிறப்புப் பொருந்திய அனேக நவரத்தினங்களாலே விசித்திரமாகச் செய்திராநின்ற மாடமாளிகைக் கூட கோபுரங்கள் முதலான வலங்காரம் பொருந்திய வாலையங்களு மின்னம்பல வினோதமாயுள்ள பள்ளியறைகளிலும் வாசஞ்செய்யப்பட்ட பிரம்ம க்ஷத்திரிய வசிய சூத்திரர்களென்னும் நாலு வருணத்தார்களும் சூழ்ந்திராநின்ற ஸ்ரீகாஞ்சிபுரமென்னும் நகரத்தில்,

தேவர்களும், நவகோடி சித்தர்களும், அஷ்ட்ட வசுக்களும், நாற்பத்தெண்ணாயிரங்கோடி தெய்வ கணங்களும், சந்திர சூரியரும், சப்த கன்னியர்களும் லட்சுமிதேவியும், பனுவலாட்டியும், பார்வதா தேவியும், அஷ்ட்ட திக்கப் பாலகரும், சன்னதித் தலைவர்களும், நந்திகேசுவரரும், மக்களிருவரும், பிரமா விஷ்ணுவும் மற்றும் பல தேவர்களும் ஏவல் பணிவிடை கேட்க்க பேரிகை முதலிய பதினெட்டு மேள வாத்தியங்களும் தொனிக்க கெந்தருவர் புஷ்பமாரி பொழிய,

உமையுங் கலந்த மெய்கர முக்கட் பரமன் மானும் மழுவும் திருக்கரம் பிடித்து, செஞ்சடை தன்னில் சிறுபிறை தோன்ற, நீல கண்டமும் நிறைந்த வெண்ணீரும், சதுர்புஜ மழகும் சர்ப்பா பரணமும், முப்புரி நூலும், சங்கத் திகளும் தமிழ்த்திரு வாயும், துங்கஞ் சிறந்த தொப்பைசூழ் வயிறும், பொன்னுரு மருங்கில் பூம்பட்டிலங்க, புலித்தோலுடையும் கரித்தோ லணிந்த கூவிலளந் தும்பை கொன்றை மலரும், வெள்ளெருக்கத்தி விதமுடன் சுட்டி, வீரவெண்

டயமும் மிகுந்தபொற் பதத்தில், சீருடன் அணிந்தம் சீதக் களப திசையெல்லாம் வித கனக மயமான சித்திரமணி மண்டபத்தில் வீற்றிருக்கப்பட்ட யேகாம் பரனாதரும் காமாக்ஷியம்மனுடைய சன்னிதானத்தில்.

நாக கன்னியர்கள் நாரித்திலகம், நமனாரிகுஞ்சரி, கனகரேகை, மதனசௌந்தரி, கமலகேதனி, கனககேயூரி, கமலலோசனி 7 பேருக்கும் நாயகராகிய பரமேசுபரருக்குப் புத்திரரும் வீரமாகாளிக்குப் பாலகருமாகிய நாரித்திலகன், நமனாரிகுஞ்சரன் கனகரேகன், மதனசௌந்தரன், மகலகேதன், கனகேயூரன், கமலலோசனனென்று சொல்லி யாதியிலுண்டான நாங்கள் வமுசத்தாரும் சேரன் சோழன் பாண்டியன் மூவராஜாக்கள் வணிகர் வெள்ளாளர் சகலரு முன்பாக யேகாம்பரனாதருக்குப் பூசை செய்யும் குரு பீடாதிபதிகளில் ஆதி சைவச்சாரியராகிய கௌண்டின்ய கோத்திரம் ஸ்ரீகருணாகர பண்டிதரவர்களுக்கு எழுதிவைத்துக் கொடுத்த செப்பேடு சாசனமாவது.

சான்றோர் குலத்தில் நாரி திலகனென்னும் ஏனாதி முதலிய ஏழு பட்டத்தாருக்கு முபதேச கர்த்தாவராய்க் காரண குருவாயிருந்து ரக்ஷிக்க வேணும் சுவாமியென்று வணங்கிக் கேட்டுக் கொண்டு ஆதினா ளுபதேசஞ் செய்ய திருஞான சம்பந்த ரூபமாய் வந்த சுப்பிரமணிய பீடமும் கறபாண்டனாதரையும் யெங்கள் தாயாயகிய வீர மாகாளியையும் கைக்கொண்டு பூசித்துக் கொண்டு யெங்கள் வம்சம் உத்தாரமாக வேணுமென்று கலியுக சகாப்தம் *3523* இதில்மேல்*(ச்)* செல்லா நின்ற செய வருஷம் தை மாதம் *11* தேதி குருவாரமும் பஞ்சமியும் மூல நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் என் சிவபூசையும் கொடுத்து ஆண்ட சிவசுப்பிரமண்ய பண்டிதரென்று பேருங்கொடுத்து உடல் பொருள் ஆவி மூன்றும் குருவுக்குத் தத்தமென்றும் ஏழு பட்டத்தாரும் தம்பிரான் பாதம் மறவோமென்ற பிராணதாரை கொடுத்துத் தக்ஷிணை தாம்பூலங் கொடுத்து வணங்கி,

எங்கள் வமுசப் பிரதாபங்களாகிய ஸ்ரீமது சகலகுண சம்பன்னரான, வெகுஜன போசகரான, மாந்துளிர் மேனியும் மகாதேவர் புத்திரரான, ஏழு கன்னிகை யீன்ற பரிபாலகரான, பத்திரகாளி

வரபுத்திரரான, தீண்டா வரிசையும் சிவ குருஞானியார் ஆண்ட தம்பிரான் பாதம் அனுதினம் மறவாதவரான, வெள்ளைக் குடையும் வெண்சாமரமும் வெண்பரியும் வெண்சங்கும் வெண்குஞ்சமுள்ளவரான, இரட்டைச் சங்கும் இரட்டைமனவாரியும் வண்டை வீணையுமுள்ளவரான, வாடாத மாலையும் வண்ணத் தடுக்கும் வலம்புரிச் சங்கும் உள்ளவரான, சந்தனம் குங்குமமு மகிழ மாலையுமுள்ளவரான, சிங்கக் கொடியும் சிறந்த மாலையுமுள்ளவரான, ஏரொளியோங்கும் சம்ரோழி கிரியுமுள்ளவரான, ஏனாதி

வம்சவரான, இளவரசு காத்த சாணகுல தீரரான, சிங்கத்தை வங்கத்திலேத்தி சிங்கள தேசத்தில் சென்று மும்முலைத் தாடகைக்கும் சிங்களராசனுக்கும் மணம்புணர வைத்தவரான, விகடாதி சூரனை செயங்கொண்ட விமலியுட மக்களை மணம் புணர்ந்த விமலி அபிமானங் காத்தவரான, சம்பராசூரனை வென்ற தேவர் சிறை மீட்டு தெய்வலோகங் குடியேற்றி தேவேந்திர பட்டம் நிலைநிறுத்தி வைத்தவரான, சமர சங்கும் சமைய சங்குமுள்ளவரான உத்திரதேசத்திலயோத்திமானகரில் சக்கிரவர்த்தியால் முடியது சூட்டி நாயக்கர்ப் பட்டம் நலம்பெறப் பெற்றவரான, கொங்கு மண்டலம் கொடகு ராச்சியத்தில் சேரமான்றனது சிவனாயகராய் மூப்புப் பட்டம் பெற்றவரான,

திராவிட தேசத்தில் சௌந்தர பாண்டியன் தனது மண்டலத்தில் நாடாளுவாரென்றும், நாடாழ்வாரென்றும், சோழ மண்டலத்தில் கண்டப் பட்டந்தனைப் பேர் பெற்றவரான, சான்றோர் குலத்தில் சமைய னாராயணப் பட்டம் பெற்றவரான, அறியதள விபாடன் கெசவேட்டை கண்டருளிய கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொடாதவரான, நகர்ப்புறஞ் சென்று னாடான் கோட்டை கட்டிக்குடியிருந்து கோரக்கரருளால் ரசவாதமுங் கற்றுப் பிசகாத நாட்டுக்குள் மாடக்காசு வளக்கஞ் செய்த பெரியோரான ஒரு குடை நிழலின் கீழ் உலக முழுதும் ஆண்டவரான ராஜாதிராஜ ராஜமார்த்தாண்டன் ராஜநாராயணன் நாகக் கொடியும் சிங்கக் கொடியும் மரகதக் கொடியும் சமைய விசேஷமுள்ளவரான, ஈழநாடும் இலங்காபுரியுமுள்ளவரான, வாளால் வழி திறந்து மேருவை மதியாத மன்னரை மகுடஞ் செகற்று பதிசூரைக் கொல்லும் பாக்கியப்பிரதாபரான,

மதுராபுரியில் பாண்டியனிடத்தில் வாளது பயிற்றி மதுரை மண்டலீகர் சோழ மண்டலமும் திராவிட தேசமும் கம்பை மாநதியும் காஞ்சிபுரமும் கல்யாணிபுரியும் காணிபெற்றவரான, சுறபாண்டனாதரைத் தொழுது பணிந்தரான, வையகம் புகழ மழை பொழிய வைத்தவரான, தெய்வலோகம் போய்க் கருமல்லிகைப் புஷ்பம் கொண்டு வந்து பூவேந்திய சோழனென்னும் பேர் பெற்றவரான, செட்டிகள் தோளேறிய செல்வக்குமரன் அமந்திகாசூரனையும் சந்திராதிகளையும் வெட்டி நிலையிட்டவரான, ஒரு னொடி யுலகம் உண்மையர் ஆண்டவன் வருகிற துன்பமும் வண்மையாய் நீக்கினோன், பத்தரை மாத்துப் பசும்பொன்னடையோன், உத்திரதேசத்தி லுயர்ந்த கம்பட்ட முள்ளவரான, கோடைக் காலத்தில் சூழ்ந்த வனத்தில் சிவனுமையும் எழுந்தருள தாகத்துடனே தயவுகின்ற வேளையில் வேதப் பனையை விரலால் வளைத்துப் போதவே யமிர்தம்பிடி சொம்பாலெறக்கி நாதனுமைக்கும் நன்றாய்க் கொடுக்க மனது மகிழ்ந்து மகிழ்கூஷியா யிருந்து விந்திரனைப் போலே வாழ்ந்துண்டிருப்பீரென்று,

மந்திர வாளும் வரிசையும் கொடுத்துத் துலங்க மகுடமுடி சூட்டியிலங்காபுரிக்கும் ஈழந் தனக்கும் வணங்காதேயென்ற வைத்த

வங்கிஷத்தோன், மன்னருக்கும் மன்னனாம் சங்கராச்சாரியர்க்கு தயஉடனுபதேசம் தானருளிச் செய்தவன் சாணகுல தீரன். சகலமுமுள்ளவன். பதினெட்டு வாத்தியம் பரிவுடனுள்ளவன். பிறப்பும் வளர்ப்பும் பிரபல முள்ளவன். சுத்த சங்கீதம் சுபமங்களமுள்ளவன். பத்திரகாளி பாங்குட னருளால் கத்தி, கட்டாரி, வளைதடி சக்கரம் வல்லையம் வில்லும் வாங்குகேடயமும் நெரிசம் சொல்லிய பதினெட்டாயுதமெல்லாம் மன்புடன் பெற்றோன்.

வாடையடித்து மாமழை பொழிந்து ஓடைகளெல்லாம் உடைந்திடச் சோழன் கரையது வுயரக் கட்டிய னாளில், இவன்றலை யதனை ஈடுபடக் கடகரி விட்டிடரும்போது எங்கள் குலம் சாணகுலம் ஏரிவரி சுங்கங்கொடோம். கொத்தெடுத்து மண்வெட்டோம். கொற்றவரைக் கைய்கையோம். கூடை தொடோம். வெட்டி செய்யோமென்று மிகவிருது பேசி வீரவெண்பாப் பாடிய சாணகுல தீரன். மணி கைதரித்து மகாதேவர் பூசை செய்தவரான நாங்களனைவரும் வருஷகுலம் குடிக்கி பணம் 5 சிவபூசைக்கு படியும் கொடுத்து வருகிறோம். அப்படிக்கி நடவாமல் குரு நிந்தனை ஜாதி நிந்தனை செய்த பேர்கள் செம்பு தீவிலும் கங்கா நதியிலும் பிருமஹத்தி கோஹத்தி செய்த தோஷங்களில் போவோமென்று இந்த சத்திய வாக்கியந் தவறாதிருந்த பேர்கள் சந்திராதித்தருள்ளமட்டும் வீர மாகாளி திருக்கோபுரம் வளர்ந்தாப் போலவும் சுகமாக வாழ்வோமென்று திருவாக்குத் தந்தனர்.

யெங்கள் சாதிப்பிள்ளை கூத்தாடிகளுக்கு ஈழத்துபேரும் யிலங்கைப்பேரும் கொடுத்து விருது யெடுத்து ஆடி வருவதுக்காக குடிக்கி ஒரு பணமும் சாப்பாடும் யெங்களுக்கு அடுமைப்பட்ட பணிசவனுக்கு கட்டின வீட்டுக்குக் கால் பணமும் கலியாணத்துக்கு ஒரு பணமும் சாதி ஞாயத்தில் கட்டுக் காணிக்கை ஒரு பணமும் இப்படிக்குக் கட்டளை. இந்தபடி யெங்கள் அனவோருடய சம்மதி சாசனம்.

பத்ரகாளி அம்மன், ஏனாதி னாயனார்,

திருச்சிற்றம்பலம் உ

* * *

# 11. அகழாய்வில் கிடைத்த எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள்

சீ. வசந்தி

தமிழகத்தில் குகைத்தளங்களிலும், கோயில்களிலும் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. தமிழகத்தில் நடைபெற்ற அகழாய்வுகளில் எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் பல கண்டெடுக்கப்பட்டுள்ளன. இந்தியாவிலேயே இங்குதான் எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் பல கிடைத்துள்ளன. இதனை அடுத்து இலங்கையில்தான் எழுத்துப் பொறித்தப் பானை ஓடுகள் கிடைத்துள்ளன.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை *17* (பதினேழு இடங்களில் அகழாய்வு மேற்கொண்டுள்ளது. அவற்றில் கரூர் (தீரன் சின்னமலை மாவட்டம்), கொற்கை (சிதம்பரனார் மாவட்டம்), அழகன் குளம் (இராமநாதபுரம் மாவட்டம்) ஆகிய இடங்களில் எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன.

## கொற்கை

சிதம்பரனார் மாவட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் தாலுக்காவில் உள்ள தற்போதைய சிற்றூர்தான், பண்டைய தமிழகத்தில் ஒரு சிறந்த நகரமாகத் திகழ்ந்துள்ளது. சங்க இலக்கியங்களில் ஒன்றான அகநானூற்றில் இவ்வூர் பாண்டிய மன்னன் வழுதியின் துறைமுகப் பட்டினமாகத் திகழ்ந்துள்ளது. பாண்டிய மன்னர்கள் "கொற்கைக் கோமான்" என்றும் "கொற்கை வேந்தன்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

பண்டைய வெளிநாட்டு புவியியல் அறிஞர் ஆன தாலமி கொற்கையைக் கொல்கி எம் போரியம் எனக் குறிப்பிடுகின்றார். பெரிபுளூஸ் இவ்வூரில் முத்துக்குளிக்கும் தொழில் நடைபெற்றதாகவும், இத்தொழிலைத் தண்டனை பெற்ற கைதிகள் மேற்கொண்டனர் என்றும், இவ்வூர் பாண்டிய ஆட்சிக்கு உட்பட்டிருந்ததாகவும் குறிப்பிடுகின்றார்.

டாக்டர் கால்டுவெல் *1827*-ஆம் ஆண்டு மேற்கொண்ட ஆய்வில் மிகப்பெரிய முதுமக்கள் தாழியை வெளிப்படுத்தினார் தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை மேற்கொண்ட அகழாய்வில் *12* குழிகள் போடப் பட்டுள்ளன. இவற்றின் மூலம் கொற்கையில் கி.மு.*300* முதல் கி.பி.*14*ஆம் நூற்றாண்டு வரையில் மக்கள் பண்பாடு நிலவியிருந்தது.

கொற்கையில் கி.மு.300 முதல் கி.பி.200க்கு உட்பட்ட காலகட்டத்தைச் சேர்ந்த கருப்பு சிவப்பு பானை ஓடுகளில் எழுத்துக்கள் காணப்படுகின்றன.

| | அகழாய்வுக்குழி | ஆழம் | எழுத்து |
|---|---|---|---|
| 1. | KRK - 4 | 1.30 மீட்டர் | த ஒ |
| 2. | KRK - 4 | 1.44 மீட்டர் | சா ந த ந |
| 3. | KRK - 4 | 1.50 மீட்டர் | மா தி பல |
| 4. | KRK - 4 | 2.44 மீட்டர் | ச த |
| 5. | KRK - 5 | 1.05 மீட்டர் | கிட பா நி |
| 6. | KRK - 5 | 1.23 மீட்டர் | வா ந தி ய ந |
| 7. | KRK - 5 | 2.06 மீட்டர் | சா யி |
| 8. | KRK - 6 | 0.43 மீட்டர் | தா நி |

இவை அனைத்தும் துண்டு துண்டு எழுத்துக்களாக மட்டுமே கிடைத்துள்ளன. எனவே இவற்றைக் கொண்டு முழுவதுமாகக் கல்வெட்டைப் படிக்க இயலவில்லை.

## கரூர்

திருச்சியிலிருந்து சுமார் 70 கி.மீ. தொலைவில் உள்ளது கரூர். இது தீரன் சின்னமலை மாவட்டத்தின் தலைநகராகத் திகழ்கின்றது. இவ்வூர் சேரர்களின் தலைநகராகத் திகழ்ந்துள்ளது.

சேரர்களின் தலைநகராக வஞ்சி - கருவூர் திகழ்ந்துள்ளதற்கான பல சான்றுகள் கிடைத்துள்ளன. கரூர் அருகில் உள்ள புகளூர் என்ற இடத்தில் கிடைத்த பண்டைத் தமிழ்க் கல்வெட்டில் சேர மன்னர்களின் மூன்று தலைமுறையினரின் பெயர் காணப்படுகிறது. மேலும் கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த ரோமானியக் காசுகளும் கிடைத்துள்ளன. கரூரில், அமராவதி ஆற்றுப் படுகையில் "தாயன் ஓதலன்", என்று எழுத்துப் பொறிக்கப்பட்ட தங்க மோதிரமும் "பேரவதான்" என்று பொறிக்கப்பட்ட வெள்ளி மோதிரமும் "கொல்லிப் புரையன்", காசும் "மாக்கோனக் காசும்", ஒரு பெண், ஆண் உருவம் பொறிக்கப்பட்ட மோதிரமும் குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்புகளாகும். இவற்றின் பின்னணியில் கரூரில் மேற்கொள்ளப் பட்ட அகழாய்வில் கிடைத்த எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகளை ஆய்வு செய்ய வேண்டியுள்ளது.

இத்துறை *1973* ஆம் ஆண்டு நடத்திய அகழாய்வில் ஆறு எழுத்துப் பொறிக்கப்பட்ட முதுமக்கள் தாழிகள் கிடைத்தன. அகழாய்வுக் குழிஎண் KRK - *6* இல் ஒரு சிவப்பு நிறப்பானை ஓட்டில் சாத்தன் என்று பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இது புகளூர்க் கல்வெட்டுக்களின் எழுத்தினை ஒத்துள்ளது என டாக்டர் நாகசாமி அவர்கள் கருதுகின்றார். இப்பெயர் வணிகன் ஒருவனைக் குறிக்கக் கூடும் ஏனெனில் சாத்தன் என்ற சாத்து வணிகக் கூட்டத்தினைக் குறிக்கும் சொல் ஆகும்.

செங்கடல் அருகில் உள்ள ஓரிடத்திலும் "கணன் சாத்தன்" எனப் பொறிக்கப்பட்ட பானை ஓடு கிடைத்துள்ளது. இவற்றின் மூலம் தமிழகத்தைச் சேர்ந்த வணிகன் "கணன் சாத்தன்" என்ற பெயர் உள்ளவன். இங்கு வாணிகம் பொருட்டு வந்திருக்கக் கூடும் எனத் தெரிகின்றது.

இதே அகழாய்வுக் குழியில் மேலும் இரண்டு எழுத்துப் பொறிக்கப் பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. *1.85* மீட்டர் ஆழத்தில் கிடைத்த பானை ஓட்டில் "கடி" என்றும், *275* மீட்டர் ஆழத்தில் கிடைத்த பானை ஓட்டில் "இரு கே யு பி" என்றும் பொறிக்கப்பட்டுள்ளது. KRR - *1* ஆய்வுக் குழியில் கருப்பு - சிவப்பு பானை ஓட்டில் *3.85* மீட்டரில் "ல" என்ற எழுத்துப் பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் மூன்று எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. அவற்றில் ஒன்றில் "குறு கல்" என்று எழுதப் பட்டுள்ளது. இதனை "குறு அகல்" அதாவது சிறிய கிண்ணம் என்று பொருள் கொள்ளலாம் என திரு. நடன காசிநாதன் அவர்கள் தெரிவித்துள்ளார்.

தற்போது நடைபெற்ற அகழாய்வில் ஏழு எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. அவற்றில் இரண்டு குறிப்பிடத் தக்கவைகள் ஆகும். உடைந்த தாழியின் கழுத்துப் பகுதியில் "க தி ய த" என்ற நான்கு வரிகள் மட்டுமே தென்படுகின்றன. மற்ற வரிகள் உடைந்து விட்டதால் இதனைப் படிக்க இயலவில்லை. இரண்டாவது கருப்பு நிறப் பானை ஓட்டில் *12* எழுத்துக்கள் காணப்படுகின்றன.

(ர) ய தி ய அ ய ம ரை ய அ ய ப

முதலில் கிடைத்த பானை ஓடு *3.30* மீட்டர் ஆழத்திலும், பின்னர்க் கிடைத்தது *1.05* மீட்டர் ஆழத்திலும் கிடைத்துள்ளன. இவை அனைத்தும் கி.பி. முதல் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தைச் சேர்ந்ததாகும். ஆயினும் திரு நடன காசிநாதன் அவர்கள் இவை கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதாக இருக்க வாய்ப்பில்லை எனத் தெரிவிக்கின்றார்.

## அழகன்குளம்

அழகன்குளத்தில் நடைபெற்ற அகழாய்வில் *1986-87* முதல் *1990-91* முடிய ஆறு எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் சேகரிக்கப்பட்டன. அவற்றில் இரண்டு அகழாய்வுக் குழிகளிலும் மற்றவை மேற்பரப்பிலும் கண்டு பிடிக்கப்பட்டன. AGM *-1* ஆய்வுக் குழியில் *4.01* மீட்டர் ஆழத்தில் கிடைத்த பானை ஓடு சிவப்பு ரௌலெட்டட்டு பானை வகையைச் சேர்ந்தது. பானை ஓட்டின் கழுத்துப் பகுதியில் தலைகீழாகத் திருப்பி எழுதப்பட்டுள்ளது.

## எழுத்து

பி டி யு ற யு

AGM *-3 (*பிளாக் A*1 )* என்ற ஆய்வுக்குழியில் *0.50* மீட்டர் ஆழத்தில் சிவப்பு ரௌலெட்டட்டு பானை ஓட்டின் கழுத்துப் பகுதியில்

சி ரி த

எனப் பொறிக்கப்பட்டுள்ளது. இது பானை வனையப்படுவதற்கு முன்பு பொறிக்கப்படும் மேற்பரப்பில் கிடைத்த கருப்பு நிறத்தில் மிகவும் வழவழப்பான பானை ஓட்டில் பானை சுடப்பட்டதற்குப் பின்னர்

சா மு த ஹ

என்றும், சாம்பல் நிற, சுடப்பட்டதற்குப் பின்னர்

*(க)* த ம அ *(ல)*

என்றும், மற்றொரு மேற்பரப்பு ஆய்வில் மிகவும் வழவழப்பான சாம்பல் நிற, பானை சுடப்பட்டதற்குப் பின்னர்

ச மு

என்ற எழுத்தும் வழவழப்பான சுடப்பட்டதற்குப் பின்னரான சிவப்பு நிற ரௌலெட்டடு பானை ஓட்டில்

டி ச ம ந

என்றும் பொறிக்கப்பட்டுள்ளன. இரண்டு ஓடுகளில் சமு என்றும் சமுந்தக என்றும் காணப்படுகிறது. சமு என்பதில் ஸ என்பது இலங்கையில் காணப்படும் சிங்கள பிராமி எழுத்துக்களை ஒத்துள்ளது என்றும் இதன் மூலம் இலங்கைக்கும் அழகன்குளத்திற்கும் உள்ள தொடர்பு உறுதிப்படுவதுடன் இவை கி.மு. முதல் நூற்றாண்டைச் சேர்ந்ததாகவும் திரு மகாதேவன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

*1997* ஆம் ஆண்டு நடைபெற்ற அகழாய்வில் ஆறு எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவை AGM -*5* என்ற ஆய்வுக் குழியில் கிடைத்துள்ளன. கருப்பு சிவப்பு பானை ஓட்டில் *4.15* மீட்டர் ஆழத்தில்

ை ர ன

என்றும் அதே ஆய்வுக் குழியில் *5* மீட்டர் ஆழத்தில் கருப்பு சிவப்பு பானை ஓட்டில்

ர ன ஹ ச

என்றும், கருப்பு சிவப்பு பானை ஓட்டில் *3* மீட்டர் ஆழத்தில்

க வி ர ன்

என்றும், பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்தன.

ரௌலெட்டட்டு பானை ஓட்டில் *1.45* மீட்டர் ஆழத்தில்

ன ற ன

என்ற எழுத்தும் கிடைத்துள்ளது.

அழகன்குளத்தில் *1996* ஆம் ஆண்டு நடைபெற்ற அகழாய்வில் *10* எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. குறிப்பிடத்தக்க இரண்டு பானை ஓடுகளில் ஒன்றில் பானை சுடப்படுவதற்கு முன்பே எழுத்துப் பொறிக்கப்பட்டுள்ளது. இது சிவப்பு நிறப்பானை ஓட்டில் காணப்படுகிறது.

லதிக ——

என்ற குறியீட்டுடன் காணப்படும். பொன் என்ற பொருளில் இதற்குப் பொருள் கொள்ளப்பட்டு 'லதிக பொன்' எனப் பொருள் கொள்ளப்பட்டது. இதே போன்ற குறியீட்டுடன் கூடிய பல எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகளும் இலங்கையில் குகைத்தளத்தில் காணப்படும் பண்டைய பிராமி எழுத்துக்களுக்கிடையேயும் காணப்படுகின்றன. இதே போன்ற குறியீடுகளுடன் கூடியவை கொடுமணலிலும் கிடைத்துள்ளன.

ஆய்வுக் குழி *7* இல் *1.94* மீட்டரில் சிவப்புப்பூச்சுப் பானை ஓட்டில் "புதுமாறு கோதை" என்ற எழுத்துப் பொறிக்கப்பட்டுள்ளது. கோதை என்ற சொல் சேர அரசர்களைக் குறிப்பதாக உள்ளது. கரூரில் 'மாக்கோதை' என்ற பெயர் பொறிக்கப்பட்ட காசு ஒன்றும் தினமலர் ஆசிரியர் திரு இரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது.

ரௌலெட்டட்டு நிறப் பானை ஓடு ஆய்வுக் குழி *8* இல் *3.35* மீட்டரில் "குவிர அன அ" என்றுப் பொறிக்கப்பட்டுள்ளது. கருப்பு நிற, அலங்கரிக்கப் பட்ட தாங்கியுடன் கூடிய பானை ஒட்டின் உட்புறம் 'வாது மேத' எனப் பொறிக்கப்பட்ட பானை ஓடு *3.80* மீட்டரில் ஆய்வுக் குழி *8* இல் கண்டெடுக்கப்பட்டது. இதில் உள்ள மா என்ற எழுத்து இலங்கை பிராமி எழுத்துடன் ஒத்துள்ளது. இதில் உள்ள வாசகத்தின்படி "வாதத்தில் மேதாவியானவன்", அதாவது வாதத்தில் சிறந்தவன் என்ற பொருள் கொள்ளலாம். இதே குழியில் சிவப்புப் பூச்சுப் பானை ஒட்டில் *370* மீட்டரில் 'னத' என்ற எழுத்துடன் கூடிய பானை ஓடும், *355* மீட்டரில், சாம்பல் நிற பானை ஒட்டின் உட்புறத்தில் 'னதா' என்ற எழுத்தும் காணப்படுகின்றன. ரௌலெட்டடு பானை ஒட்டில் *370* மீட்டரில் "தூ க" என்ற எழுத்துக்களும் உள்ளன.

அழகன்குளத்தில் கார்பன் *14* காலக் கணக்கீட்டின்படி, கி.மு. மூன்றாம் நூற்றாண்டு என நிர்ணயிக்கப்பட்டுள்ளதால், கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன.

தமிழகத்தில், குகைத்தளங்களில்தான் பண்டைத்தமிழ் எழுத்துக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. ஆனால், அகழாய்வுகளில் எழுத்துப் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் அதிக அளவு கிடைப்பதால் பொதுமக்களும் தாங்கள் அன்றாடம் பயன்படுத்திய பானைகளில் தங்களுடைய பெயர்களைப் பொறித்து வைத்துள்ளனர். எனவே பண்டையத் தமிழர்களில் சாதாரண மக்கள் கூட எழுத்தறிவு பெற்றிருந்தனர் எனக் கருதலாம். தற்போது "தமிழகத்தில் பண்டையத் தமிழ் எழுத்துக்களை ஆய்வதில் தந்தை" எனப் போற்றப்படும் திரு ஐராவத மகாதேவன் ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ் அதிகாரி அவர்கள் இவை குறித்து விரிவான ஆய்வினை மேற்கொண்டுள்ளார்.

## பயன்படுத்திய நூல்கள்


1. இந்திய தொல்லியல் இதழ் - பார்வை *1968.69*. பக்.*13*.
2. தமிழிகா. இதழ் ஒ, பகுதி ஒஒ பக். *54* தொகுப்பு இரா. நாகசாமி.
3. "Roman Karur" Dr. R. Nagaswamy பக்.*64-1995*.
4. Alagankulam - A Preliminary report Natana - Kasinathan, Abdul Majeed, D. Thulasiraman S. Vasanthi. 1992. pp. 12-13.

5. "Old sinhalees inscription from Indian posts; New evidence for Ancient India Srilanka contacts" (1994) to be published in the forth coming number of epigraphia ceylonica.

6. Archaic Tamil inscriptions from excavation" - Paper presented by Thiru Natana Kasinathan, Director Department of Archaeology at the epigraphy Society conference held at Mysore 1996.

7. இந்த ஆய்வுக்கட்டுரையை வழங்க அனுமதியளித்த எம்துறை இயக்குநருக்கு மிக்க நன்றி.

* * *

# 12. அகழாய்வில் ஆவணங்கள்

கா. ராஜன்

தமிழகத்தில் சங்க காலத்தை *(கி.மு. 300-கி.பி.300)* அறிந்து கொள்ளப் பெருந்துணையாக நிற்கின்ற சங்க இலக்கியங்களைத் தவிர மற்ற ஆவணங்கள் அண்மைக் காலங்களில் வெளிவரத் தொடங்கியுள்ளன. இவைகளில் முக்கியமாக முன்னிற்பது கல்வெட்டுக்கள், காசுகள், ஆபரணங்கள், ஓடுகள் முதலியவற்றில் எழுதப்பட்ட பழந்தமிழ் எழுத்துக்களாகும். பொதுவாக சங்க இலக்கியங்கள் அதன் சமகாலத்திய சமூகத்தை வெளிக்கொணர்வதற்கு துணை நின்ற போதிலும் அவ்விலக்கியங்களில் காணப்படுகின்ற இடைச் செருகல்கள் காரணமாக காலக்கிரமமாக சமுதாய வளர்ச்சியை அறிவதில் சில இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. மேலும் இவ்விலக்கியங்கள் அனைத்தும் பாடப்பட்ட காலத்தில் அவர்களால் சமகால சமுதாயத்தில் எது முக்கியம் எனக் கருதப்பட்டதோ அதனையே பெரிதும் பாடல்களாக வெளிப்படுத்தியுள்ளனர். இது சங்ககால சமுதாயத்தை முழுமையாக அறியப்பெரும் தடையாக இருந்து வருகிறது. எடுத்துக்காட்டாக, சங்ககால மன்னர்களால் வெளியிடப்பட்ட காசுகள் பற்றிய குறிப்புக்கள் நிரல்பட எடுத்துரைக்கப்படவில்லை. அண்மைக் காலங்களில் குறிப்பாக மலையமான் திருமுடிக்காரியின் கோவிலூர், வெளியன் வேண்மானின் வீரைமுன்துறை, பாண்டியனின் மருங்கூர் பட்டினம், சேரரின் வஞ்சி போன்ற இடங்களில் கிடைத்த காசுகள் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படாத மன்னர்களின் காசுகளும் வெளிப்பட்டுள்ளன.

இதுபோன்றே சங்க காலத்தில் சங்க இலக்கியம் எத்தகைய வரிவடிவத்தில் எழுதப்பட்டது என்பதை அவ்விலக்கியம் குறிப்பிடவில்லை. ஆனால் சங்க காலத்தில் கிட்டிய பழந்தமிழ் எழுத்து வரிவடிவமான தமிழ்-பிராமியைக் கொண்டு அதை உய்த்து உணரமுடிகிறது. அதேபோன்ற சமண சமயக்குரவர்களுக்கு அளித்த பாறைப் படுக்கைகளில் எழுதப்பட்ட கல்வெட்டுக்களைப் பற்றிய குறிப்பு இலக்கியத்தில் இல்லை. ஆனால் சங்க இலக்கியத்தில் பெரிதும் போற்றப்படுகின்ற பாண்டியன் நெடுஞ்செழியன், அதியமான், கடுங்கோன் பற்றிய குறிப்புக்கள் இவ்வகைக் கல்வெட்டுக்களில் கிடைக்கின்றன.

சங்ககாலச் சமுதாயம் சமகாலத்திய பிற சமுதாயத்தைவிட மேம்பட்டு விளங்கியமைக்குக் காரணம் சங்ககால மக்களின் தொழில் நுட்பத் திறன்.

இது மணிகள் செய்தல், இரும்பு, எஃகு உருக்குதல், முத்துக் குளித்தல், ஆடை நெய்தல் போன்ற வணிகத்தோடு தொடர்பு கொண்டவைகளாகும். இவை பற்றிய குறிப்புகளைக் காட்டிலும் சங்க இலக்கியம் அரசரின் மேன்மை தொடர்பான குறிப்புகளையே பெரிதும் எடுத்துக் காட்டியுள்ளது. இது தற்காலத்தில் நாளிதழ்களும், வார இதழ்களும், சிற்றிலக்கியங்களும் ஆட்சியில், சினிமாத்துறையில் இருப்பவர்களுக்கு அளிக்கின்ற முக்கியத்துவத்திற்கு ஒப்பானதாகும். ஆட்சி மலரவும், சினிமாத்துறை வளரவும் பின்புலமாக உள்ள தொழில்நுட்ப வளர்ச்சி தற்கால இலக்கியங்களில் பெரும்பாலும் பேசப்படுவதில்லை.

இந்நிலையில் சங்ககால ஊர்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிட்டிய ஆவணங்கள் சங்க இலக்கியங்களில் கூறப்படும் செய்திகளை மேலும் வலுப்படுத்தவும், அதில் கூறப்படாத பிற செய்திகளை வெளிக்கொணரவும் உறுதுணையாக அமைகின்றன.

## கொடுமணல் அகழாய்வு

தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறை கொடுமணலில் நான்கு கோடைப் பருவகாலங்களில் தனது அகழாய்வை மேற்கொண்டு கி.மு.*300*க்கும் கி.பி.*300*க்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த சங்ககால பண்பாட்டை வெளிக்கொணர்ந்துள்ளது.

சங்க இலக்கியமான பதிற்றுப்பத்தில் "கொடுமணம்பட்....... நன்கலம்" *(பதிற்று.67)* எனக் கபிலரும், "கொடுமணம் பட்ட வினைமான் அருங்கலம்" *(பதிற்று. 74)* என்று அரிசில்கிழாரும் குறிப்பிடும் "கொடுமணம்" என்னும் இம்மூதூர் தற்போது கொடுமணல் என்ற பெயரில் பெரியார் மாவட்டம் பெருந்துறை வட்டத்தில் சென்னிமலைக்குத் தென்மேற்கே சுமார் *20* கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. காவிரி ஆற்றின் துணை ஆறான நொய்யல் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள இச்சிற்றூர் சங்க காலத்தில் பெரும் வணிகப் பேரூராக இருந்ததை இங்குக் கிடைத்த தொல்பொருள்கள் பறைசாற்றுகின்றன. இந்நொய்யலாறு பதிற்றுப்பத்தில் 'காஞ்சி' என்ற சொல்லால் சிறப்பிக்கப் பெறுகிறது. மக்கள் தம் சுற்றத்தாரோடு உண்டு மகிழ்ந்து காஞ்சியம் பெருந்துறையில் நீராடும் காட்சியைப் பரணர் புனைகின்றார் *(பதிற்று.48)*.

## குறியீடும், பிராமி எழுத்தும்

இந்தியாவில் பானையில் உள்ள குறியீடுகளின் ஆய்வினை *1881*-ல் ப்ரான்பில் (Branfil) தொடங்கி வைத்தார். அன்று முதல் இ.எச்.ஹண்டே, ஜி. யஜ்தானி, பி.கே. தாபர், பி.பி. லால் போன்ற மானிடவியல் வல்லுநர்கள்,

தொல்லியல் மற்றும் கல்வெட்டியல் ஆய்வாளர்கள் சிந்து சமவெளி நாகரிகம் தொட்டு பெருங்கற்படைப் பண்பாடு வரை சமச் சின்னங்களிலும், வாழ்விடங்களிலும் கிட்டிய குறியீடுகளைப் பகுத்தும் பிரித்தும் சான்றுகளை ஒப்பு நோக்கியும் ஆய்வினை மேற்கொண்டனர்.

தற்போதைய சான்றுகளைக் கொண்டு இக்குறியீடுகள் பிராமி வரிவடிவம் தோன்றுவதற்கு முன்பிருந்தே மக்களின் எண்ணங்களை ஒளிவடிவமாகவோ கருத்து வடிவமாகவோ வெளிப்படுத்தக்கூடிய கருவியாக பயன்பட்டிருக்க வேண்டும். இவை ஓடுகளில் பயன்படுத்தப்பட்ட இடமும், நிலையும் பிராமி எழுத்துக்குரிய முக்கியத்துவத்தை இக் குறியீடுகளும் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றன எனலாம்.

இது வரை மேற்கொண்ட ஆய்வுகள் அனைத்தும் ஒரு முடிவுக்கு வராமைக்குக் காரணம் பண்பாடுகளிடையே காணப்படும் தொடர்பற்றநிலை, குறியீடுகளின் எண்ணிக்கை, அவைகள் கிடைத்த பண்பாட்டுச் சூழ்நிலை உணராமை ஆகும். மேலும் புள்ளியியல் அளவிலான ஆய்வு செய்தற்குரிய போதிய சான்றுகள் இல்லாமை இவ்வாய்வினை மேன்மேலும் தொடர முடியாமல் போயிற்று. அண்மைக் காலத்தில் கிடைத்துள்ள சில புதிய தடயங்கள் இவ்வாய்வை ஊக்குவிக்கும் வகையில் உள்ளன.

வல்லம் அகழ்வாய்வில் பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கிடைக்கத் தொடங்கியவுடன் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகள் எண்ணிக்கை அளவில் குறைந்துள்ளது என்பது ஒரு சிறப்பம்சமாகும்.

கொடுமணல் அகழ்வாய்வில் பெருங்கற்படைச் சின்னங்களி லிருந்தும், ஊரிருக்கைப் பகுதியிலிருந்தும் கிடைத்த குறியீடுகள் சில ஐயப்பாடுகளைக் களைவதற்கு உதவிபுரிகின்றன. கொடுமணலில் அனைத்துக் குறியீடுகளும், பிராமி எழுத்தும் பானைகள் சுட்டபின்பே எழுதப்பட்டவை. பெரும்பாலும் வெளிப்புறத்தில் தோள் பகுதியில் அல்லது விளிம்பிற்குக் கீழ் அல்லது கழுத்துப் பகுதிக்குக் கீழ் இவை எழுதப்பட்டன. அரிதாகப் பானையின் உள்புறத்தின் அடியிலோ அல்லது வெளிப்புறத்தின் அடியிலோ எழுதப்பட்டன. இங்ஙனம் எழுதப்பட்டவை பெரும்பாலும் தட்டுகள் ஆகும். கிடைத்த குறியீடுகள் மற்றும் பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடுகளில் *90* சதவிகிதம் கறுப்பு சிவப்புப் பானை ஓடுகள். இவை பெரும்பாலும் குவளைகள் ஆகும்.

அண்மைக்கால ஆய்வுகள் கீழ்க்கண்ட நான்கு கருதுகோள்களை வைத்துள்ளன.

1. பானை செய்வோரின் குறியீடு (Potter's Mark)
2. பானை உரிமையாளரின் குறியீடு (Owner's Mark)
3. குலக் குறியீடு (Clan's Mark)
4. மலைவாழ் மக்களின் குறியீடு (Tribal Mark)

### பானை செய்வோரின் குறியீடு

சில அகழாய்வுகளில் ஒரே ஊரில் நூற்றுக்கும மேற்பட்ட குறியீடுகள் கிட்டியுள்ளன. இவை பானை செய்வோரின் குறியீடாக இருந்தால் ஒரு குறிப்பிட்ட ஊர் இருக்கைப் பகுதியில் ஒரே காலகட்டத்தில் அத்துணைப் பானை செய்வோர் இருப்பதற்கு வாய்ப்பில்லை. மேலும் இவை அனைத்தும் பானை சுட்டபின் கீறப்பட்டவையாகும். பானை செய்வோராக இருப்பின் சுடுவதற்கு முன்பே எளிதாகக் கீறியிருக்கலாம். மேலும் இவையும் பிராமி எழுத்துப் பொறித்த ஓடுகளுடன் ஒத்த நிலையில் உள்ளன. ஆதலால் இவை பானை செய்வோரின் குறியீடுகளாக இருக்க வாய்ப்பில்லை.

### பானை உரிமையாளரின் குறியீடு

பானை உரிமையாளரின் குறியீடாக இருப்பின் ஒரு உரிமையாளருக்கு ஒரு குறியீட்டுத் தொடர்தான் இருக்கமுடியும். மேலும் ஒரே குறியீடு பல்வேறிடங்களில் சமகாலத்தில் கிட்டுகின்றன. இவை தவிர ஒரு குறியீட்டுத் தொடரில் உள்ள குறியீடுகள் வெவ்வேறு நிலைபெற்று விளங்குவதைக் காணும்போது இவ்விளக்கம் ஏற்புடையதாகத் தோன்ற வில்லை. உதாரணமாகச் சாணூரில் கிடைத்த குறியீட்டைக் காணலாம் *(படம்.அ)*.

பொதுவாகப் பெருங்கற்படைச் சின்னங்களில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களின் எலும்புக்கூடுகள் அல்லது அதன் எஞ்சிய பகுதிகள் காணப்படுகின்றன. ஆனால் குறிப்பிட்ட கற்படைச் சின்னத்தில் ஒரு குறிப்பிட்ட குறியீடு கிட்டியுள்ளதை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளுதல் ஏற்புடையதாக இருக்கும். இவை பானை உரிமையாளரின் குறியீடு என எடுத்துக்கொண்டால் ஒன்றுக்கு மேற்பட்ட மனித எலும்புக் கூடுகளைக் கொண்ட ஓர் ஈமச்சின்னத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட குறியீடு கிட்ட வேண்டும். ஆனால் ஒரு குறியீடு மட்டுமே கிடைக்கின்றது. உதாரணமாக, கொடுமணலில் கிடைத்துள்ள குறியீடுகளைக் குறிப்பிடலாம் *(படம்.ஆ)*.

இக்குறியீடுகள் படையல் பொருள்களாக வைக்கப்பட்ட நூற்றுக்கும் மேற்பட்ட பானைகளில் உள்ளன. ஊரிருக்கைப் பகுதிகளினின்று கொணர்ந்து இட்ட ஓடுகளில் இக்குறியீடுகள் காணப்படவில்லை. எனவே ஒருவர் அல்லது

அதற்கு மேற்பட்டோர் மறைவிற்குப் பின் நினைவுச் சின்னங்களாக உருவாக்கப்பட்ட ஈமச் சின்னங்களில் படையல் பொருள்களாக வைத்தற்குத் தருவிக்கப்பட்ட அல்லது செய்யப்பட்ட இப்பானைகளின் மீது ஒரே சமயத்தில் இக்குறியீடுகள் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும்.

## குலக்குறியீடு

மேற்கூறியவற்றை நோக்கும்பொழுது இவை குடும்பங்களின் குறியீடுகளாக வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். ஆயினும் ஒரு குடும்பம் என்பதைவிட ஒரு கூட்டத்தின் குறியீடாக எடுத்துக்கொண்டால் ஏற்புடையதாக இருக்கும். ஏனெனில் ஒரேவகையான குறியீடு வெவ்வேறு சின்னங்களில் கிடைக்கின்றது. ஒரு குறுகிய காலகட்டத்தில் ஒரு குடும்பம் அத்துணை ஈமச் சின்னங்களை எழுப்புவதற்கு வாய்ப்பு மிகக் குறைவு எனலாம். உதாரணமாகக் கொடுமணல் அகழாய்வில் குறியீடுகள் வெவ்வேறு ஈமச் சின்னங்களில் கிடைப்பதைக் காணலாம்.

இவற்றைக் காணும்பொழுது சின்னங்கள் *3,7,8,10* ஒரே குலம் அல்லது கூட்டத்தைச் சார்ந்தவையாக இருக்கும். அதே போன்று சின்னங்கள் *5,9*உம் உள்ளன. சின்னம் எண்*9* இல் இரண்டு வகைக் குறியீடுகள் கிட்டியுள்ளன. இக்கற்பதுக்கையின் அடியில் இரண்டு எலும்புக்கூடுகளும் கிட்டின. ஒருகால் இவர்கள் இருவேறு கூட்டத்தைச் சார்ந்தவராக இருக்கலாம். ரெய்கீர் (Reigir) என்ற இடத்திலும் ஒரே வகையான குறியீடு ஈமச் சின்னத்தில் *25*க்கும் மேற்பட்ட படையல் பொருள்களில் கிட்டியுள்ளது. எனவே ஒரு கூட்டத்தைச் சார்ந்தோர் ஒரே வகைக் குறியீடு கொண்டிருந்தனர் எனலாம். இன்னும் பல்வேறு இடங்களில் ஈமச் சின்னங்களை அகழ்ந்தால் இந்நிலை மேலும் தெளிவுபெறும்.

மேற்கூறிய குறியீடுகள் ஈமச் சின்னங்களில் காணப்படுவது தனித் தன்மையாகும். இவையன்றி ஊரிருக்கைப் பகுதிகளில் கிட்டிய குறியீடுகளும் பல வகைகளைக் கொண்டு ஆய்வுக்குரியனவாக உள்ளன.

கொடுமணல் அகழாய்வில் ஊரிருக்கைப் பகுதிகளில் கிடைத்த குறியீடுகள் அவைகளின் தன்மை கொண்டு முறைப்படுத்தப்பட்டுள்ளன (படம். ஈ).

இக்குறியீடுகள் ஓர் அடிப்படைக் குறியீட்டினைக் கொண்டு வளர்ச்சியுறுவதைக் காணலாம். அவற்றில் கடைசி இரண்டு குறியீடுகள் ஈமச் சின்னத்தைச் சார்ந்தவை.

நட்சத்திரம் போன்ற குறியீடு மற்றக் குறியீடுகளுடன் சேர்ந்து வருவதைக் காணலாம். குறிப்பாக இக்குறியீடு மற்றக் குறியீட்டுடன் சேரும்போது அவற்றில் இறுதியில் மட்டுமே வருவதைக் காணலாம் *(படம்.உ)*.

அடுத்து 'டி' போன்ற அமைப்புடைய குறியீடு சிறு மாற்றம் அல்லது வளர்ச்சி பெற்று வருவதைக் காணலாம். *(படம்.ஊ)*.

மற்றுமொரு இடத்தில் *(படம்.எ)* முதல் குறியீடு 'கோவே' என்ற பிராமி எழுத்துப் பொறிப்புடன் சேர்ந்து இறுதியில் வருவதைக் காணலாம். இக் 'கோவே' என்ற சொல் ஒரு தலைவனை அல்லது அரசனைக் குறிப்பதாக எடுத்துக்கொண்டால் இக்குறியீடு இங்கு முக்கியத்துவம் பெறுகிறது.

ஏனெனில் மேலே கூறியது போல் இக்குறியீடு பெருங்கற்படைச் சின்னங்கள் *3,7,8* மற்றும் *10*இல் வழங்கி வந்துள்ளன. இச்சின்னங்களில் மிகவும் இன்றியமையாத தொல் பொருள்கள் கிட்டின. சின்னம் *7*இல் அரிய கல்மணிகள் பதித்த புல பொம்மையும் விஸாகி என்ற பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடும் மற்றும் தங்கம், செம்பு அணிகளும் கிட்டின. இவையிரண்டும் நடுகல்லுடன் கூடிய பதுக்கை வகையைச் சார்ந்தவை. சின்னம் *8* இதுவரை தென்னிந்தியாவில் கிடைத்த சின்னங்களில் மிகப் பெரிதும், நேர்த்தியானதும் ஆகும். சின்னம் *10*இல் தங்கமணிகளும் ஆயிரத்துக்கும் அதிகமான சூதுபவளப் பாசிகளும் கிட்டின.

மேலே குறிப்பிட்ட பல தொல்பொருள்களின் சிறப்பை வைத்தும் சின்னங்களின் கட்டிக் கலையின் அமைப்பை வைத்தும் இந்த ஈமச்சின்னங்கள் பெருமகனுக்கு அல்லது தலைவனுக்கு எழுப்பப்பட்டிருக்க வேண்டும் என்று அறியமுடிகிறது. எனவே இக்குறியீடு மிகச் சிறப்புப் பெறுகின்றது. இதைப்போன்று வேறொரு குறியீடு 'கோன்' என்ற பிராமி எழுத்துப் பொறிப்புடன் கிட்டியுள்ளது. ஆயினும் இக்குறியீடு இதுவரை அகழ்ந்த ஈமச் சின்னங்களில் கிட்டவில்லை.

சில இடங்களில் குறியீடுகள் பிராமி எழுத்துடன் தொடர்பு கொண்டவையாக விளங்குகின்றன. குறிப்பாக இவை சொல்லின் இறுதியில் வருவதைக் காணும்போது இக்குறியீட்டிற்கெனச் சிறப்பானதொரு இடத்தை இவர்கள் அளித்திருப்பது புலப்படும் *(படம்.ஏ)*

கொடுமணலில் கிடைத்த குறியீட்டுத் தொடரில் இரண்டாவது குறியீடு நீங்கலாகக் கொங்கர் புளியங்குளம் பிராமிக் கல்வெட்டில் வாக்கியத்தின் இறுதியில் வருகின்றது. இது பொன்னின் அளவைக் குறிப்பதாக க. இராஜகோபால் மற்றும் மயிலை சீனிவேங்கடசாமி ஆகியோர் கருதுகின்றனர்.

முதல் குறியீடு அழகர்மலை பிராமிக் கல்வெட்டுக்களிலும் சிறிது மாற்றம் அல்லது வளர்ச்சி பெற்று விளங்குவதைக் காணலாம் (படம்.ஐ).

நந்திபாதம் எனப்படும் குறியீட்டுத் தொடர் கொடுமணலில் கிடைத்த வெள்ளி முத்திரை நாணயம் ஒன்றில் காணப்படுவது இங்குக் குறிப்பிடத் தக்கது.

இதைத்தவிர கொடுமணலில் பல்வேறு வகைக் குறியீடுகள் கிடைப்பதைக் குறிப்பிடவேண்டும் (படம்.ஓ). எனவே கல்வெட்டுக்களிலும் அகழ்வுகளில் கிடைக்கும் பானை ஓடுகளிலும் காணப்படும் குறியீடுகள் போதுமானதாக இல்லாத போதிலும் இனிமேல் மேற்கொள்ளப்படும் அகழ்வுகளில் இதற்கு முக்கியத்துவம் அளித்து அதில் கிட்டும் தனிக்குறியீடு, குறியீட்டுத் தொடர், அதன் அமைப்பு, வளர்ச்சி ஆகியவற்றைப் பகுத்தும், பிரித்தும், நிலைகளைத் துல்லியமாக எழுதிடும் ஆய்வினை மேற்கொள்வது இன்றியமையாதது எனலாம்.

## தமிழ் - பிராமி

ஊரிருக்கைப் பகுதியில் தோண்டப்பட்ட ஆய்வுக் குழிகளில் முதல் பண்பாட்டுக் கட்டத்தின் ஆரம்ப காலத்திலிருந்தே தமிழ்-பிராமி எழுத்துப் பொறிப்புக் கொண்ட பானை ஓடுகள் கிடைத்தன. இந்த எழுத்துப் பொறிப்புகள் பானையின் கழுத்துப் பகுதியின் வெளிப்புறத்தில் பெரும்பாலும் எழுதப்பட்டன. ஓரிரு சான்றுகள் உட்புறம் எழுதப்பட்டனவாய் உள்ளன. இவை பெரும்பாலும் தட்டுக்கள் ஆகும். மூடிகளைப் (lid) பொறுத்தவரை அவற்றின் மேற்புறத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வெழுத்துக்கள் கருப்பு - சிவப்பு மட்கலங்களின் மேல் பெரும்பாலும் கீறப்பட்டன. இவை அன்றாடத் தட்டுக்கள் (Plates) சிறு குவளைகள் (Bowls) ஆகும். அடுப்பில் வைத்துச் சமைக்கப் பயன்படுத்தப்படும் பானைகளில் இவை பெரும்பாலும் எழுதப்படாமை இவர்கள் அப்பொறிப்பிற்குக் கொடுத்த முக்கியத்துவத்தைக் குறிக்கிறது. பெருங்கற்படைச் சின்னங்களில் படையல் பொருள்களாக வைக்கப்பட்ட நூற்றுக்கணக்கான மட்கலங்களில் குறியீடுகள் (ஒரு சின்னத்திற்கு ஒரு சிறப்புக் குறியீடு என்ற வகையில்) பொறிக்கப்பட்டிருந்த போதிலும் தமிழ்-பிராமி எழுத்துக்கள் இதில் பொறிக்கப்படவில்லை. இதுவரை தோண்டப்பட்ட *13* சின்னங்களில் சின்னம் மூன்றின் கல்லறையில் மட்டுமே ஊரிருக்கைப் பகுதியிலிருந்து கொண்டுவந்து இடப்பட்ட, வெள்ளை வண்ணம் தீட்டப்பட்ட செம்பழுப்புப் பூச்சுப்பெற்ற கறுப்பு சிவப்பு பானை ஓட்டின் (Russat coatedpainted ware) வெளிப்புறத்தில் 'விஸாகி' என்ற பெயர் எழுதப்பட்டிருந்தது. இது ஈமக்காட்டிற்கும் ஊரிருக்கைப் பகுதிக்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்துகிறது.

நூற்றிற்கும் மேற்பட்ட பானை ஓடுகளில் பழந்தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பொதுவாக எழுத்துக்கள் நன்கு ஆழமாகக் கீறப்பட்டுள்ளன. சில இடங்களில் தவறாக எழுதப்பட்ட எழுத்துக்கள் திருத்தப் பட்டுள்ளன. ஓரிரு பானை ஓடுகளில் மட்டுமே எழுத்துக்கள் அளவில் பெரியனவாய் உள்ளன. மற்ற இடங்களில் அவை *5*மி.மீ. அகலத்தையும் *15* முதல் *20* மி.மீ. உயரத்தையும் கொண்ட எழுத்துக்களாகக் காணப்படுகின்றன. இவற்றில் பெரும்பாலும் ஆட்பெயர்களே குறிக்கப்படுகின்றன. கண்ணன் ஆதன், கவிரன் ஆதன், பண்ணன், அந்தவன் ஆதன், வருணிப் அகல், ஈய்தன் வேண் நீர் அழிஈய்தடா போன்ற தொடர்களும் உள்ளன. ஆதன் என்ற பெயர் அதிகமாக வருகிறது. இது சேர மரபினரோடு தொடர்புடையது என்பது கவனிக்கத்தக்கது. பல பெயர்கள் சங்க இலக்கியங்களில் காணப்படும் பெயர்களோடு ஒப்புமை உடையனவாகத் தென்படுகின்றன. வணிகக் குழுவைக் குறிக்கும் 'நிகம' என்ற வடமொழிச் சொல்லும், விஸாகி, குவிரியன், வருணிப் போன்ற பெயர்களும் வடநாட்டுடன் கொடுமணல் கொண்டிருந்த வாணிக பண்பாட்டுத் தொடர்பினை வெளிப்படுத்துகின்றன.

இப்பழந்தமிழ் எழுத்துக்கள் சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து பயன்படுத்தப்பட்ட போதிலும் அதன் வரிவடிவமைப்பில் பெரிய மாற்றம் ஏதும் காணப்படவில்லை. இதற்கு எடுத்துக்காட்டாக + *(க)* *(ம)* *(ந)* *(ச)* வரிவடிவங்களைக் குறிப்பிடலாம். இவை தமிழ்நாட்டுக் குகைகளில் பாறைகளில் கீறப்பட்ட எழுத்துக்களுடன் வரிவடித்தில் ஒத்துள்ளன. எழுதுவதற்குப் பாறை மற்றும் பானை ஓடுகளைப் பயன்படுத்தியதால் எழுத்துக்களின் வரிவடிவங்கள் நேர் கோட்டுத்தன்மையைப் பெற்றன. உயிர் எழுத்துக்களில் அ, ஆ, இ வரிவடிவங்கள் மட்டுமே கிடைத்துள்ளன. மெய்யெழுத்திற்கும் உயிர் எழுத்திற்கும் வரிவடித்தில் எவ்வித மாறுபாடும் இல்லை. ஒரே ஒரு இடத்தில் மட்டும் 'ன்' என்ற மெய்யெழுத்தில் புள்ளி இடப்பட்டுள்ளது. உயிர் மெய்யெழுத்துக்களில் வரும் உயிர்க்குறில் மற்றும் நெடில்களைக் குறிக்க அடிப்படை எழுத்துக்களின் கீழ் அல்லது மேல் படுக்கைக் கோடு அல்லது படுக்கைக் கோட்டுடன் கூடிய குத்துக்கோடு வலப்புறமோ இடபுறமோ இடப்பட்டது. இடத்தின் தன்மை கொண்டு இதனை அறியலாம். உயிர் மெய்யெழுத்துக்களில் வரும் உயிர்க்குறிகளாக இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ ஆகிய எழுத்து வரிவடிவங்கள் தென்படுகின்றன. தமிழ்மொழிக்கே உரித்தான ழ, ள, ற, ன எழுத்துக்களின் வரிவடிவங்களும் கிடைத்துள்ளன. குறிப்பாக 'ன' எழுத்து சொல்லின் இறுதியில் அதிகமாக வந்துள்ளது. ஸ், எழுத்துக்களின் வரிவடிவங்கள் கிடைத்த போதிலும் 'ஸ' எழுத்தே அதிகமாக கிடைத்துள்ளது. வர்க்க எழுத்துக்கள் கிடைக்கவில்லை.

கொடுமணலில் கிடைத்த தமிழ்-பிராமி எழுத்துப் பொறிப்புக் கொண்ட பானை ஓடுகளைப் பார்க்கும் பொழுது கொடுமணல் மக்கள் பரவலாக எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருந்தார்கள் என்றால் தவறாகாது. இது சம காலத்தில் இந்தியாவில் காணப்பட்ட தன்மைக்கு மாறானதாகும். இந்தியாவில் சிந்துசமவெளி எழுத்துக்களைத் தவிர்த்து கிடைத்துள்ள அசோகன் பிராமி எழுத்து வரிவடிவங்கள் அனைத்தும் அம்மன்னனால் நியமிக்கப்பட்ட அலுவலர்கள் மூலமாக எழுதப்பட்டவை. அவற்றைப் படித்து புத்தமத தர்மங்களை மக்களுக்குத் தெரிவிப்பதற்கென அலுவலர்கள் நியமிக்கப்பட்டனர். இந்நிகழ்ச்சி அப்பகுதியில் வாழ்ந்த மக்களுக்கு அசோக மன்னனின் சாசனத்தைப் படிக்கமுடியவில்லை எனத் தெரிகிறது. அசோக மன்னனின் சாசனத்தை ஒதுக்கிவிட்டு, சாதாரண மக்களால் எழுதப்பட்ட வரிவடிவங்களைக் கணக்கில் எடுத்தால் கிடைத்துள்ளவை மிக மிகச் சொற்பம் எனலாம். ஆனால் அதற்கு மாறாக, தமிழகத்தில் மேற்கொண்ட அகழாய்வுகளில் கிடைத்த பானை ஓடுகளிலும், காசுகளிலும், ஆபரணங்களிலும் பரவலாகக் கிடைப்பதாலும் அவை சாதாரண மனிதர்களின் பெயர்களைக் கொண்டு விளங்குவதாலும் சங்க காலத்தில் எழுத்தறிவு மேம்பட்டு விளங்கியுள்ளது என்பது வெள்ளிடைமலை.

* * *

# 13. சேலம் தருமபுரி நாணயங்கள்

புது. போ. வேங்கடராமன்

மாந்தர் சேர்ந்து வாழத் துவங்கிய போதே ஒருவருக்கு ஒருவர் கொள்வனவும், கொடுப்பனவும் துவங்கி விட்டது. ஆதிமனிதன் இயற்கையாகக் கிடைத்த காய், கனிகளையும், தாவரங்களின் விதைகளையும், பறவைகளின் முட்டைகளையும், மிருகங்களின் இறைச்சியையும், கொடுத்தும், கொண்டும் வாழ்ந்ததுடன் தன்னிடம் உள்ள உண் பொருள்களையும், உடுப்பனவைகளையும், தனக்கு வேண்டியதற்கான கற் கருவிகளையும் பண்டமாற்று முறையில் பெற்றுப் பயன்படுத்தினான்.

இம்முறை தமிழகத்தில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலத்திலும் நடைபெற்றது. அலைந்து திரிவது நின்று ஓரிடத்தில் நிலையாக வாழ ஆரம்பித்தபோதும் இவ்வழக்கம் தொடர்ந்து வந்தது. நெய்தல் நில உமணர் உப்பினை வண்டியில் ஏற்றி நெடுந்தொலை வரை சென்று உப்பிற்கு நெல் பெற்று மீண்டதையும், முல்லை நில ஆய்ச்சியர் பால்படு பொருட்களைக் கொடுத்துப் 'பொன்' பெற்றதையும், இவ்வாறு 'ஆந் நிலமக்கள்' தங்களிடம் உள்ள பொருளைக் கொடுத்து, தமக்கு வேண்டிய வேறு பொருளைப் பெற்றதைச் சங்க நூல்களில் காண்கிறோம்.

சேலம் மாவட்டத்திலுள்ள கொல்லிமலையில் இருந்த குறிஞ்சி நில மக்கள் யானைத் தந்தங்களைக் கொடுத்து மாற்றாக உணவுப் பொருள்களைப் பெற்றறனர் என்பதைக் "காந்தளஞ்சிறுகுடி பசித்தெனக், கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்துண்ணும் வல்வில் ஓரிக் கொல்லிக் குடவரை' என்று (குறுந்தொகை *100-3-5*) அடிகள் குறிக்கின்றன. இதற்கு மாறு கொள்ளுதல்" என்று பெயர் ஏற்பட்டது. ஒரு பொருள் கொடுத்து மறு பொருள் பெரும் வழக்கிற்குப் "பண்டமாற்று" என்று பெயர் வழங்கிற்று. பண்ட மாற்று செய்யும் பொருளை நெடுந்தொலைவு கொண்டு சென்று, மறு பொருளை மாற்றிக் கொண்டு வருவது எளிய செயல் அல்ல. பொருட்களின் அளவும், எண்ணிக்கையும், அதிகப்படும்பொழுது அதனைக் கையாளுவதற்கு வேண்டிய முயற்சியும் அதிகரிக்கிறது. ஆகையால் ஒருபகுதி வாழ் மாந்தர் ஓர் இடத்தைக்குறித்து அவ்விடத்துத் தத் தம் பொருளைக் கொண்டுவந்து கிடத்தி வைத்து, மற்றவர் கொண்டு வந்து கிடத்தியதுடன் மாறுகொண்டனர்.

**சந்தையும், கடையும்**

பண்டம் மாறும் இடமாகவும், சந்திக்கும் இடமாகவும், பொருள்களைக் கிடத்தும் இடமாகவும் இருந்த சந்திக்கும் இடம் 'சந்தை கிடை' (கிடத்துமிடம்) என்று பெயர் பெற்றது. இவை பெரும்பாலும் அழகிய நிழல்தரும் மரங்களின் கீழ் இருந்தன. நிழல்தரும் மரங்களின் தொகுப்பும் (தோப்பும் நீர் வசதியும் உள்ள இடங்கள் சிறந்த சந்தைகளாக மாறின. இடை+கடை, அம்+கிடை, அங்கிடை, அங்கடி, அங்காடி.

பொருள்களைக் கிடத்தி மாறு கொண்டு, விற்ற இடம் "அங்காடி" என்று பெயர் பெற்றது. நாளடைவில் பகலிலும், இரவிலும், கடைகளை (கிடைகள்) வைத்துப் பண்ட மாற்று செய்தனர். பகற்கடை "நாளங்காடி" எனவும், இரவில் வைத்தகடை "அல்லங்காடி" என்றும் பெயர் பெற்றன. தமிழ்நாட்டில் இச்சொற்கள் இதுபோழ்து அருகி வழங்கப்படுகின்றன. ஆயினும் தமிழினின்று தோன்றிய தெலுங்கு, கன்னட மொழிகளில் பெரிதும் வழக்காற்றில் உள்ளன. பெண்கள் பலவிதப் பொருள்களை வீடு வீடாகக் கூடைகளில் எடுத்துச் சென்று விற்பனை செய்தனர். அவ்வாறு பொருட்களைக் கொண்டு விற்ற கூடைகளுக்கு "அங்காடிக் கூடை" என்பது பெயர். சேலம், தருமபுரி மாவட்டங்களில் "அங்காடிக் கூடையில் அதிர பிதிர எடுக்காதே" என்ற பழமொழி வழங்குகிறது. அங்காடிக் கூடைக்காரி தெருவில் வந்தால், அவளை அழைத்துப் பல பெண்கள் சூழ்ந்து கொண்டு தங்களுக்கு வேண்டியவற்றை ஒரே சமயத்தில் எடுப்பார்கள். அப்பொழுது யார்? எப்பொழுது? எவ்வளவு? பொருளை எடுத்தார்கள் என்பதைக் கூடைக்காரி கணக்கிடுதல் எளிதான செயலன்று. அதனால்தான் இம் முதுமொழி ஏற்பட்டுள்ளது. பண்டமாற்றில் அவ்வக்கால மக்கள் புழங்கிய பொருள்களும், அவர்கள் வளர்த்த கால் நடைகளும் அடங்கும். மாடுகளை - ஆயரும் மற்றையோரும் பயன்படுத்தியதுடன், பண்ட மாற்றுப் பொருளாகவும் பயன்படுத்தியதை நாம் திருக்குறளால் அறியலாம். 'மாடு' மக்கட் செல்வங்களில் ஒன்றாகச் சங்க காலத்திற்கு முன்னும், அக்காலத்திலும் வழங்கியது என்பதை இக்குறள் வழங்குகிறது. "கேடில் விழுச் செல்வம் கல்வி யொருவற்கு மாடல்ல மற்ற யவை."

மாட்டின் உருவம் பொறித்த நாணயங்கள் பழங்கால கீரிட், உரோம கிரேக்க நாடுகளில் வழங்கின. 'ஓமர்' என்கிற பெரும் புலவர் "டிராஜன்" போரின் போது ஒரு போர் வீரனின் பொற்கவசம் நூறு எருதுகளுக்குச் சமமாக இருந்தது என்று கூறுகிறார்.

பொருள்களை ஓரிடத்திலிருந்து மறு இடத்திற்குக் கொண்டு சென்று விற்பதினால் ஏற்படும் இடர்ப்பாடுகளைக் களையவும் பொருள்களின் மதிப்பீட்டிற்குத்தக்க, எளிதில் எடுத்துச் செல்லக்கூடிய பொருளை ஒரு பகுதி

வாழ்ந்த குழுவினர் பயன் படுத்தத் துவங்கினர். அது அப்பகுதியில் அரும் பொருளாகக் கருதப்பட்ட பொருளாக இருந்தது. அழகும், பயனும் மிக்க, எளிதில் எடுத்துச் செல்லும் பொருள்களாக அவை விளங்கின. ஓரிடத்திலிருந்து மற்ற இடத்திற்கு ஓட்டிச் செல்லக் கூடிய ஆடுகள், மாடுகள், எடுத்துச் செல்லக் கூடிய கோழிகள் இவ்வகையில் பயன்பட்டன. சீனத்தில் தேயிலைக் கட்டிகளும் எகிப்து, கிரீட், உரோம நாடுகளில் ஆடுகளும், மத்திய இந்தியாவிலும், ஆப்ரிக்கப் பெரு நிலத்திலும் உப்புக் கட்டிகளும், அமெரிக்கப் பெருநிலத்தில் புகையிலையும், கோகோ விதைகளும் நாணயமாகப் பயன்பட்டன. கடற் "சோழிகள்" இந்தியா, சீனா, பசிபிக் கடற் தீவுகள் ஆப்ரிக்கா, அமெரிக்கா முதலிய இடங்களில் நாணயமாக வழங்கின. நாளடைவில் எளிதில் எடுத்துச் செல்லக் கூடியதும், கண்ணைக் கவரும் நிறமும், ஒளியும் உடையதும், எளிதில் தேயாததுமான உலோகக் கட்டிகளையும், துண்டுகளையும், பொடிகளையும் நாணயமாகப் பயன்படுத்தலாயினர். வங்கத்தில் வழங்கிய சோழி நாணயங்கள் "கௌரி" என்று அழைக்கப்பட்டன.

சங்க காலத்திலேயே தமிழகத்திலும், அதன் வடக்கில் நூற்றுவர் கள்ளர் *(சாதவாகனர்)* நாட்டிலும் உலோகத்தால் ஆன நாணயங்கள் புழக்கத்திற்கு வந்து விட்டன. அக்காலத்தில் பண்டமாற்றும் வழக்கிலிருந்தது. அயல்நாட்டு வாணிகத்திற்கும், உள் நாட்டில் மதிப்பு மிக்க பொருட்களை வாங்குவதற்கும் அவை பயன்பட்டன. அவை "காசு", "காணம்" என்று வழங்கின. மதுரைக் கொல்லன் வெண்ணாகனால், பாலை நிலத்து நெல்லி மரங்களினின்று உதிர்ந்த நெல்லிக்காய்கள், பொற்காசுகள் போன்று விளங்கின எனக் கூறுகிறார்.

"புல்லிலை நெல்லிப் பசுங்காய்
கல்லதர் மருங்கில்கடுவளி உதிர்ப்பப்
பொலஞ் செய்காசிற் பொறப்பத்தா அம் அத்தம்" *(அகம்:363-6-8)*

காவன் முல்லைப் பூதனார்

"குயில்கண் அன்ன குருஉக்காய் முற்றி
மணிக்கா சன்னமானிற இருங்கனி
உகாஅ மென்சினை உதிர்வன கழியும்
வேனில் வெஞ்சரம்" *(அகம் : 293: 6-9)*

பொற்காசு 'உகா' மரத்தின் மஞ்சள் நிறப்பழம் போல விளங்கியது என்று கூறுகிறார்.

தமிழகத்தில் "காசு" அச்சடித்த இடம் 'கம்பட்டம்', அஃகசாலை', 'நாணயசாலை' என்று வழங்கியது. பேரூர்களிலும், வேறு சில முக்கிய

நகரங்களிலும் இவை இருந்தன. அங்குப் பொற்கொல்லர், காவல் காப்போர். அக்கசாலை அதிகாரி முதலியவர்கள் தான் செல்ல இயலும். மற்றும் அங்கு "வண்ணக்கர்" என்ற பெயருடைய பொன், வெள்ளி, நாணயங்களில் பரிசோதகரும் இருப்பர். இவர்கள் அக்கசாலையில் தயாரித்த பொன், வெள்ளி நாணயங்கள் நிறையும், மாற்றும் குறையாதுள்ளனவா என்று ஆய்ந்து, அவற்றை மக்கட் புழக்கத்திற்கு விடுவார்கள். கொங்கு நாட்டில், ஈரோடு வட்டம் அரசலூரில் உள்ள நாக மலையில், மணிக்கல் என்ற ஊரினான "வண்ணக்கதேவன் சாத்தான்" சமணமுனிவர் ஒருவர்க்கு, அங்குள்ள மலைக் குகையில் கற்படுக்கை அமைத்த செய்தியைப் பற்றிய 'பிராமி' மொழிக் கல்வெட்டுள்ளது.

காப்பியாற்றுக் காப்பியனார்க்கு, களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் தன்னைப் பதிற்றுப்பத்தில் நான்காம் பத்தில் பாடியதற்காக, நாற்பது நூறாயிரம் பொன்னைப் பரிசாகக் கொடுத்தான். ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் தன்மீது 6ஆம்பத்தைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடியதற்கு, அவர் நகைகள் செய்து கொள்வதற்கு ஒன்பது "கா"ப் பொன்னும் நூறாயிரம் 'காணமும்' கொடுத்தான். செல்வக் கடுங்கோவாழியா தான் தன்மீது கபிலர் ஏழாம்பத்தினைப் பாடியதற்குப் பரிசாக நூறாயிரம் காணம் வழங்கினான். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, அரிசில் கிழாருக்கு, எட்டாம் பத்தினைப் பாடியதற்கு ஒன்பது நூறாயிரம் காணம் அளித்தான். இளஞ்சேரல் இரும்பொறை தன்னைப் பாடிய் பெருங்குன்னூர் கிழார்க்கு முப்பதீராயிரம் 'காணம்' பரிசு கொடுத்தான். இது அவர் அவனை ஒன்பதாம் பத்துப்பாடியதற்கான பரிசு. பட்டினப்பாலை பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனார்க்குச் சோழன் கரிகாலன் அளித்த பரிசு நூறாயிரம் காணம்.

புறநானூற்று ஒன்பதாம் பாடலில் பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்திய நெட்டிமையார்.

"எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் **பசும்பொன்** வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர் பஃறுளிமணலினும் பலவே;" (புறம்-9)

என்று பாடுகிறார்.

மணிமேகலையில் காவிரிப்பூம்பட்டினத்து வணிகன் சாதுவன் விலை மகள் ஒருத்தி வீட்டில் தங்கித் தன் செல்வம் அனைத்தையும் இழந்தஞான்று; அவள் "காணம்பிலி எனக் கைவிதாக் கோடலும், வங்கம் செல்லும் வணிகர் தம்முடன் தங்கா வேட்கையின் தானும் செல்வுழி" என்று காணத்தைப் பற்றிக்கூறப்படுகிறது. செப்புநாணயங்கள் புழக்கத்திற்கு மோரியர்

காலத்திலிருந்து வந்தது. பொன் வெள்ளி நாணயங்களும், ஈய நாணயங்களும் அதற்குமுன் வழக்கிலிருந்தன.

சங்க காலத்தில் பொன், வெள்ளி, செப்பு, ஈய நாணயங்கள் வழங்கின. பொற்காசுகளுக்கு வழங்கிய "காசு" என்ற பெயர்நாளடைவில் வெள்ளி, செம்பு, ஈய நாணயங்களுக்கும் வெண்கல, பித்தளை நாணயங்களுக்கும் வழங்கின. "காசு" என்ற சொல் ஈராயிரம் ஆண்டுகளாக வழங்குகிறது. "கழஞ்சு" என்ற நாணயம் பிற்காலத்தில் வழக்கிற்கு வந்தது. சங்ககாலத்திலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டு வரை "காணம்" என்ற சொல் வழக்கிலிருந்தது. பிறகு கொஞ்சம், கொஞ்சமாக இது வழக்கொழிந்தது. பல்லவர்கள் காலத்தில் கழஞ்சு, மஞ்சாடி என்னும் பெயரில் வழக்கிலிருந்தன. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பன்னிரெண்டாம் நூற்றாண்டு வரை கழஞ்சு, மாடை, காசு என்ற சொற்கள், பெருவழக்காய் வழங்கின. *1.*'கழஞ்சு' என்னும் சொல் ஒருவகை நாணயத்திற்கோ, ஒருகுறிப்பிட்ட அளவு எடை உடைய பொன்னிற்கோ வழங்கியது. பதினோராம் நூற்றாண்டு முதல் கங்கநாட்டிலும் கொங்கு நாட்டிலும், சேர நாட்டிலும் "அச்சு" என்ற சொல், நாணயங்களைக் குறிக்கப் பயன்படத் தொடங்கியது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் "காசு" என்ற சொல் செப்பு நாணயங்களைக் குறிப்பதாக விளங்கியது. இந்நூற்றாண்டில் "கழஞ்சு", "மாடை" என்னும் நாணயங்கள் மக்கள் புழக்கத்தினின்று மறையலாயிற்று. "அச்சு" அழிவு நிலையை அடைந்தது. "பணம்" என்னும் சொல் அவற்றிற்குப் பதிலாக வழங்கலாயிற்று. இப்பணம் என்னும் சொல் இதற்கு முன் வழங்கிய நாணயங்களைக் குறித்த சொற்களுக்குப் பதிலியாக வழங்கியது. "ரூபாய்" என்னும் சொல் பதினேழாம் நூற்றாண்டிலிருந்து வழக்கில் இருக்கிறது. பளிங்குக் கல்லால் செய்த காசுகள் சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்ட செய்தி,

"புறாவுக்குயின்றுண்ட புன்காய்
நெல்லிக்கோடையுதிர்ந்த குளிகட் பசுங்காய்
அறநூற் பள்ளிங் கின்துளைக்காக கடுப்ப
வறுநிலத்துகிரும் அத்தம் கழமென." *(அகம்.315)*

சங்ககாலத்தில் உரோம நாட்டுடனும், கிரேக்க நாட்டுடனும் தமிழகம் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தது. 'யவனர்' என்ற பெயர் அந்நாட்டினர்க்குத் தமிழில் வழங்கியது. யவன வணிகர் கடல் வழியாக மரக்கலங்களில் வந்து, தமிழகக் கடற்கரைகளில் பண்டகசாலை வைத்து, அந்நாட்டினின்று கொண்டு வந்த, "மது" (யவனத்தேறல் -- இது திராட்சைப் பழங்களைக்கொண்டு தயாரிக்கப்பட்டது), பாவை விளக்கு, பெரும் பாண் ஆற்றுப்படை *: 316, 317*

"யவனர் இயற்றிய வினை மாண்பாவை
கைஏந்து அகல்" *(நெடுநல் வாடை 101-102)*

யவனர் **ஓதிம விளக்கின் ஓதிம விளக்கு,** "கன்னல்" என்னும் காலம் அறியும் கருவி, 'பொழுதுளந்து அறியும் பொய்யா மாக்கள் குறுநீர்க் கன்னல் இனைந்தென் றிசைப்ப' *(முல்லைப்பாட்டு 55-58)* பவழம் *(துகில்),* கண்ணாடி, செம்பு, தகரம், ஈயம், பித்தளை, மதுச்செடிகள் *('அம்பொரே, யவனர்தந்த நன்கலம்),* கண்ணாடிக் கோப்பைகள் *(அரிக்கமேட்டு அகழ் ஆய்வில் கிடைத்தவை),* கோதுமை, நீலாஞ் சனக்கல் முதலியனவற்றை விற்றனர். "மெய்ப்பை புக்க வேருவரும் தோற்றத்து, வலிபுணர்யாக்கை யவனர்' *(முல்லைப்பாட்டு 60-61)* தமிழக மன்னர்களிடம் மெய்க்காப்பாளராகப் பணியாற்றி வந்தனர். தமிழகத்திலிருந்து மிளகு *(மிரியல், கறி)* மெல்லிய ஆடைகள் *(ஆவியன்ன அவின் நூற்கலிங்கம்,* தந்தம் *(யானைக்கோடு)* பட்டுத்துணி, சடா மாஞ்சில் *(மருந்துக்கு உதவும் பொருள்)* இலவங்கப்பத்திரி, நீலக்கல் *(ஆக்குவாமரினா)* படிகக்கற்கள் *(கொங்கு நாட்டில் வெட்டி எடுத்தவை).* வைரக்கல், ஆலைஓடு முதலியன தமிழகத்திலிருந்து யவன வணிகர் கொண்டுசென்றனர். மயில் *(துக்கிம்)* கிளிகள், குரங்குகள் *(கோபிம்)* சேலத்து இரும்பு மாணிக்கம் *(மணி)* இம்மாணிக்கமணிகள் பிட்டன் நாட்டிலும், வல்வில் ஓரியின் கொல்லிக் குடவரையிலும் கிடைத்தவை. பிட்டன் நாடு தருமபுரி மாவட்ட, குதிரை மலைப்பகுதி,

"ஐவனங் காவலர் பெய்தீ நந்தின்
ஒளிதிகழ்திருந்துமணி நளியிருளகற்றும்
வன்புல நாடன் வயமான் பிட்டன்" *(புறம்-172)*

"பல்கதிர் வாங்கிய படுசுடரமையத்துப்
பெருமரங் கொன்ற கால்புகு வியன் புனத்
தெரிமருள் கதிரதிருமணி இமைக்கும் வெவ்போர்வானவன்
கொல்லிக்குடவரை" *(அகம்-23)*

'சேனகர்' என்று தமிழரால் யவனர் நாட்டிற்கும், இந்திய நாட்டிற்கும் இடையில் இருந்த நாடுகளில் வாழ்ந்த மக்கள் அழைக்கப்பட்டனர். அவர்களும் தமிழகத்திற்குக் கலங்களில் குதிரைகள், கோவேறு கழுதைகள் கொண்டு வந்து வாணிபம் செய்தனர்.

சீனநாட்டினரும் தமிழகத்துடன் பண்டைய நாளிலிருந்து வாணிபம் நடத்தினர். சீனத்துப்பட்டு தமிழகத்தில் அனைவராலும் விரும்பப்பட்டது. சீன நாட்டினர் வெளியிட்ட நாணயங்கள், தருமபுரி மாவட்டத்தில் குதிரைமலை அடிவாரத்தில் கிடைத்துள்ளன. அவை செம்பினால் ஆனவை, வட்டவடிமும், மத்தியில் சதுரத்துளையும் கொண்டவை. துளையின் மேல், கீழ், வலது, இடது புறங்களில் சீன மொழிச் சொற்களில், வெளியிட்டோர் பெயர் உள்ளது.

"வடவேங்கடம் தென் குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்", எனத் தொல்காப்பியம் தமிழகத்தின் வட எல்லையையும், தென் எல்லையையும் கூறுகிறது. தொல்காப்பியர் குணகடலையும் குடகடலையும், கிழக்கு மேற்கு எல்லைகளைக் கூறாதது; அவை பேரூழி வந்தால் அல்லது மாறாததாகலின்,

"வேங்கடம் குமரிதீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே".

என்று "இசை நுணுக்கத்தின்" ஆசிரியர் தமிழ் வழங்குநிலத்தில் நாற்பால் எல்லைகளையும் கூறுகிறார். இந்நான்கெல்லைகளையே சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள், தாமியற்றிய சிலப்பதிகாரத்தில்,

"குமரிவேங்கடம் குணகுடகடலா
மண்டினி மருங் கிற்றண்டமிழ் வரைப்பில்"

எனச் சிலப்பதிகார நூற் கட்டுரையிலும்;

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நாடு"

என வேனிற் காதையிலும் கூறுகிறார்.

பிற்காலத்து வந்த உரையாசிரியர்களும் இதையே கூறியுள்ளனர். சிறுகாக்கைப் பாடினியார், மக்கட் பேசும் மொழி வழி:

"வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்திசை உள்ளிட்டெஞ்சி மூன்றும்
வரைமருள் புணரி"

என்று, தமிழகத்தில் வடக்கில் அவர் காலத்து 'வடுகு' மொழி வழங்கியதைக் குறிக்கிறார். 'வடுகு' என்பது தெலுங்கு மொழியைக் குறிக்கும். இன்று தெலுங்கரைத் தமிழர், 'வடுகர்' (வடுகன் என்று அழைப்பதைக் காணலாம். பன்னிரண்டாம் நூற்றாண்டின்போது இவ்வெல்லைகள் மாறி விட்டதை நன்னூல் சிறப்புப்பாயிரம்

"குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையினிருந் தமிழ்க்கடல்"

என்று கூறுகிறது. இதனால் குடமலை (மேற்குத் தொடர்மலைக்கு மேற்கில் "மலையாள மொழி", தமிழினின்று பிரிந்து தனித்து இயங்கியதை அறியலாம் இக்காலத்திற்கு முன்பே "வடுகினின்று" கன்னடமொழி" தனிமொழியாக இயங்கலாயிற்று. சங்ககாலத்திலிருந்தே "கொங்கு" நாடு தனிநாடாக

இயங்கியது என்பர். தொல்காப்பியர் "நாற்பெயரெல்லையகம்" (தொல்-பொருள்-செய் 79) என்று குறிக்கிறார். "இவை மலை மண்டலம்" (சேரநாடு), சோழ மண்டலம், பாண்டிய மண்டலம், தொண்டைமண்டலம் என்பனவாம் என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றனர். பின்வந்த திருமூலர் தமிழ் மண்டலம் ஐந்து எனக் கூறுகிறார். மலை மண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம், தொண்டை மண்டலம், கொங்கு மண்டலம் என்பன அவை.

'கொங்குநாடு" என்றும், "மலை நாடு" என்றும் ஒரே நாடு அழைக்கப்பட்டது. இது பண்டைய சேர நாட்டின் கிழக்குப் பகுதி. சேரநாட்டின் மேற்குப்பகுதி (மேற்கு தொடர் மலை (அ) வான மாலைக்கு மேற்கும், மேல் கடலுக்கு கிழக்கும் உள்ள பகுதி "சேர நாடு" இன்றைய "கேரளம்" கொங்கு நாட்டினைக் காவிரியாறு இரண்டாகப் பிரிக்கிறது. இதன் கீழ்ப்பகுதிதான் "சேலம் மாவட்டம்" தற்போது இது 'சேலம் மாவட்டம்', 'ராஜாஜி மாவட்டம்' என இரண்டாகப் பிரிந்துள்ளது. முன்பு இதன் ஒரு பகுதியாக விளங்கியது, 'தருமபுரி மாவட்டம்' ஆகும். சங்ககாலத்திலேயே இம் மாவட்டங்கள் புகழ் பெற்று விளங்கின. சங்க காலத்திற்கு முன் "கல்தோன்றி மண்தோன்றாக்" காலத்தில், பழங்கற்கால மனிதர்களும், புதுக்கற்கால மக்களும், பின்னர் பெருங்கற்கால மக்களும், தொடர்ந்து உலோகக்கால மக்களும் வாழ்ந்ததற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. பெருங்கற்கால புதைகுழிகளில் உரோம நாணயங்கள் கிடைக்கின்றன. அக்கால மக்கள் இறந்தவர்களைப் புதைத்தபோது, நெற்றியில் காசு வைத்துப் புதைத்தனர், அவ்வழக்கம் இப்போதும் இம்மாவட்ட மக்கள் சிலரிடம் உள்ளது. இக்காலத்தில் மார்கழி மாதம் விடியற்காலையில் தாசர் (அ) தாதர் என்னும் திருமாலடியார் சங்கு ஊதிக் கொண்டு இறைவன் திருப்பெயர்களைப் பாடிக்கொண்டு செல்லும்போது இறந்தவர் பற்றியும், பாடுவர் இறந்தவர்களை அடக்கம் செய்யும்போது "மூன்று மூலைக்காசு" என்று புதைகுழியின் மூன்று மூலைகளில் காசு வைப்பதையும் அது அவர்கள் மேலுலகு போகும் வழியில் உள்ள ஆற்றைக் கடப்பதற்கான "படகுக்கூலி" என்றும் பாடுவர். இது பண்டைய எகிப்துடன் தமிழக மக்களுக்கு இருந்த தொடர்பை உணர்த்துகிறது.

சேலம் பகுதியைச் சங்ககாலத்தில் மழவர் பெருமக்கள் வல்வில்லோரியும், விச்சிமலைத்தலைவன் விச்சிக்கோவும், சேரர்களும் ஆண்டனர். 'கட்டியர்' ஒமலூர்ப் பகுதியை ஆண்டனர். சேரர்களுக்குப் பின், சோழர்களும், பாண்டியர்களும், கங்கர்களும், ஒய்சாளர்களும், விசயநகரப் பேரரசினரும், மதுரை நாயக்கர்களும், மைசூர் உடையார்களும், ஹைதர், திப்புவும், பின் ஆங்கிலேயரும் ஆண்டனர்.

தருமபுரி பகுதியை அதியமான்கள், மலையமான்கள், களப்பிரர், பாணர், கங்கர், பல்லவர், இராட்டிரகூடர், சாளுக்கியர், ஒய்சாளர், விஜயநகரப்

பேரரசர், மைசூர் உடையார்கள், ஹைதர், திப்புவும் ஹைதருக்கு முன் கப்பை நவாபுகளும் வடபகுதியை மட்டும் சிறிது காலம் ஆண்டனர். திப்புவுக்குப்பின் ஆங்கிலேயர் வசம் வந்தது.

மழவர் பெருமகன் ஓரிக்குதிரை ஓரியின், நாணயமாக இதுவரை ஒன்றுகூட கிடைக்கவில்லை. சேரப் பேரரசர் நாணயங்களாக எழுத்துக்கள் உள்ள சில சதுர, நீள் வட்ட நாணயங்கள் அகப்படுகின்றன. அவை செம்பினால் ஆனவை. சேரப் பேரரசர்கள் காணம், பொன் என்ற நாணயங்களை வாரி வழங்கியதாகப் பதிற்றுப்பத்து, புறநானூறு முதலிய சங்க நூல்கள் கூறினாலும் அவர்களுடைய பொன் நாணயங்களாக நமக்கு ஒன்றுகூடக் கிடைக்கவில்லை. சில செப்பு, வெள்ளி நாணயங்களில் யானை, வில், அம்பு, பனைமரம் முதலிய உருவங்கள் இருப்பதைக் கொண்டு அவை சேரர் நாணயங்கள் என்று கூறவேண்டியுள்ளது. சேரர் வாரி வாரி வழங்கிய காணம், பொன் முதலியவை கிடைக்கவில்லை. கதகளி நாடகங்களில் வரும் பாத்திரங்களைப் போன்ற உருவம் முன் பக்கமும், யானை உருவம் பின்புறம் உள்ள செப்பு நாணயங்களும், பிற்காலச் சேரர் நாணயங்கள் சில எழுத்துடன் கூடியதாகக் கிடைக்கின்றன. முற்காலச் சோழர் நாணயங்களும் கிடைத்தில. பிற்காலச் சோழர் நாணயங்களில் இராசராசன், இராசேந்திரன் நாணயங்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இதற்கு அடுத்தபடியாக முதற்குலோத்துங்கன் நாணயங்களும் மற்ற சோழ அரசர் நாணயங்களும் அங்கொன்றும், இங்கொன்றுமாகக் கிடைக்கின்றன. பாண்டியர் நாணயங்களில் அதிகமாகக் கிடைப்பவை சுந்தரபாண்டியன் நாணயங்களாகும்.

கங்கர் நாணயங்கள் இம் மாவட்டத்தில் கிடைக்கின்றன. பொன் நாணயங்கள் கிடைக்கவில்லை. செப்பு நாணயங்கள் கிடைக்கின்றன. அவற்றில் நின்ற நிலையில் எருதுச் சின்னமும், பின்புறம் மத்தியில் குத்து வாளும், சுற்றிலும் கன்னடமொழியில் மன்னன் பெயரும் உள்ளன. ஒய்சாளர் நாணயங்கள் : "சுவர்ணம்" நிசகம், கட்டியாண என்ற மூன்றும் பொற்காசுகள். அரைசுவர்ணம் ஒரு பணத்திற்குச் சமம். விட்டுணவர்த்தன ஒய்சாளனின் காசுகளில் முன்புறம் வலது புறம் நோக்கிய நின்ற நிலை எருதும், பின்புறம் தலைக்காடு கொண்ட என்ற சொல் கன்னடமொழியிலும் உள்ளது. சோமேசுவரன், இராமநாதன், வீரவல்லாளன் நாணயங்களில் நாகரி எழுத்தில் பெயர்கள் உள்ளன. பின்புறம் பல்வித உருவங்கள் உள்ளன.

### விசய நகரப் பேரரசர் காசுகள்

பொன், வெள்ளி, செம்பு, உலோகங்களால் ஆகிய விசயநகரப் பேரரசர் காசுகளும் கிடைக்கின்றன. பொற்காசுகளில் "இராமடங்காக்கள்" என்னும்

சிறப்பு வெளியீடுகள் உள்ளன. இவை வெள்ளியிலும் உள்ளன. இவைகளில் முன்புறம் இராமர், சீதை, இலக்குவன், அனுமன் உருவங்களும், பின்புறம் வேடர் உருவத்தில் சிவன், உமை உருவங்களும் உள்ளன. நாணயத்தை வெளியிட்ட அரசன் பெயர் நகாரி எழுத்தில் உள்ளது.

மதுரை நாயகர் காசுகளில் மீன் உருவமும், பின்புறம் வெளியிட்ட மன்னன் பெயர் தமிழ் எழுத்துக்களிலும் உள்ளன. இவற்றில் முன்புறத்தில் காட்டுப்பன்றி, கட்டாரி, சூரியன், சந்திரன், உருவங்களும், பின்புறம் மன்னன் பெயர் தமிழிலும் உள்ளது. இன்னும் சிலவற்றில் நின்ற நிலை எருது உள்ளது. சிலவற்றில் இலிங்கம், மீனாட்சி உருவங்கள் முன்புறத்தில் உள்ளன. சில நாணயங்களில் படுத்த நிலையில் உள்ள எருதும், அதன்மேல் சூரியன், சந்திரன் உருவங்களும், பின்புறம் மேல் நோக்கியபடி இரட்டை மீன்களும், அவைகளுக்கு இடையில் அம்பும், பின்புறம் அரசன் பெயரும் உள்ளன. அதிகமான நாணயங்களில் தமிழும், சிலவற்றில் தெலுங்கும் பயன்படுத்தப் பட்டுள்ளன. மைசூர் உடையார்களின் நாணயங்களும், ஐதர், திப்புசுல்தான்களின் நாணயங்களும் கிடைக்கின்றன. "ஹன்ன", வராகு, மோகன், நாணயங்கள் பொன் நாணயங்கள் ஐதரி, இமாமி, அபிடி, சாப்ரி, கைமி, ரூபாய், பணம் வெள்ளி நாணயங்கள் யானைக்காசு, சிங்கக் காசு, சாமுண்டிகாசு, துட்டு, மைலிகாசு இவை செம்பினால் ஆனவை.

தாரமங்கலக் கட்டி அரசர்கள் வெளியிட்ட இராமர், அனுமன், சிங்கம், திருமால் உருவங்களில் ஏதாவது ஒன்று முன்புறத்திலும், ஸ்ரீ, வணங்கும் நிலையில் கூப்பிய கைகளுடன் உள்ள மனிதன், 'கெட்டி' என்னும் தமிழ் எழுத்துக்கள் பின்புறத்திலும் உள்ள செப்பு நாணயங்கள் கிடைக்கின்றன.

## காரியமங்கலம் அருகில் கிடைத்த சிறிய பொற்காசுகளில்

*1.* ஒரு பக்கம்மேலே நாமமும், அதன்கீழ் இரண்டு புள்ளிகளும் உள்ளன. வலப்பக்கப் புள்ளியின் வலது பக்கத்திலும், இடப்பக்கப் புள்ளியின் இடது பக்கமும் புள்ளிகளைத் தொட்டபடி இரண்டு படுக்கைக் கோடுகள் உள்ளன. அவைகளுக்குக் கீழே வரிசைக்கு நான்கு புள்ளிகள் வீதம் ஒன்றின் கீழ் ஒன்றாக இரண்டு வரிசைப் புள்ளிகள் உள்ளன.

*2.* மற்றொரு காசில் பாதிக்குமேல் நாமத்திற்குப் பதில் செங்குத்தாக ஒற்றைக்கோடும், அதன்கீழ் மத்தியில் இரண்டு புள்ளிகளும், அந்தப் புள்ளிகளைத் தொட்டபடி வலப்பக்கமும், இடப்பக்கமும் கீழ் நோக்கி இரண்டு வளைகோடுகள் வலத்திலும், இடத்திலும் உள்ளன. மற்றொரு நாணயத்தில் மத்தியில் சிறிது இடைவெளிக்குப் பின் வலதும், இடதுமாக இரண்டு வளைகோடுகள் உள்ளன. இவைகளுக்கு மேல் 'ப' வடிவத்தில் ஒரு

கோடுள்ளது. மற்றொன்றில் 'ஹாக்கி மட்டை' போன்ற படுக்கையாக ஒரு கோடும், அதன்கீழ் பந்து போன்ற ஒரு புள்ளியும் உள்ளன. பின்புறம் காலியாக உள்ளது.

சேலம் மாவட்டம், திருச்செங்கோட்டைப் பற்றி, ஒரு பள்ளுப் பிரபந்தம் உள்ளது. அதில் "சாணார் சாசு" என்று ஒரு பொற்காசு கூறப்பட்டுள்ளது. மற்றும் 'மதுரைப் பொன்', உளுந்தூர்ப் பணம் என்ற வேறு இருவகை நாணயங்களைப் பற்றியும் கூறப்படுகிறது.

"பொன்" என்ற நாணயம் கன்னட மொழியில் "ஹன்" என்றும் முகமதியரால் "ஷூன்" என்றும் வழங்கப்பட்டது. "டவர்னியருடைய ஆறு பிரயாணங்கள்" என்ற நூலில் வங்கக்கடல் ஓரம் உள்ளநாடுகளில் "பைசா" என்ற செப்புநாணயம் வழங்கப்படுகிறது என்று அவர் கூறுகிறார். "பிரதாபமடை" என்ற பொன் நாணயம் இருந்தது. முத்திரை குத்தப்பட்ட நாணயங்களை "சலாகை"கள் என்று கொங்குநாட்டில் அழைத்தனர். அவைகளில் ஐந்து உருவங்கள் குத்தப்பட்டதால், அவைகளைப் "பஞ்சலாகைகள்" என்று அழைத்தனர். அவை வெள்ளி நாணயங்கள். அவை வட நாட்டில் இருந்து வந்தவை. இவை சேலம், தருமபுரி மாவட்டங்களில் கிடைக்கின்றன.

* * *

# 14. பல்லவர் காசுகள்

க.ஆ. திருஞான சம்பந்தம்

## பல்லவர் வரலாறு

முற்காலப் பல்லவர்கள் ஆந்திர தேசத்துக்குக் குண்டூர் வட்டத்தில் அமைந்திருந்த பளித்திரி பட்டினத்தைத் தலைநகராக ஆண்டவர்கள். சங்க காலத்தில் பல்லவரில் ஒரு பிரிவினரான திரையர்தம் கடற்கரைப் பட்டினம் பவித்திரி. அப்பட்டினத்தைப் "பொலம் பூட்டிரையல் பல்பூங்கானற் பவித்திரி" என நக்கீரர், அகநானூறு *340* ஆம் பாடலில் குறிப்பிடுவர். அப் பவித்திரியைக் கடல் கொண்ட செய்தியை, நக்கீரர் அகநானூற்றுப் பாடல் *34*க்கும், பாண்டரங்கமுடைய மாகதேவர் கோயில் குலோத்துங்கனது கல்வெட்டு கடல் கொண்ட பவித்திரிக் கோட்டம் எனவும் குறிப்பிடும்.

## சங்க இலக்கிய மேற்கோள்

தொண்டை மலர் மாலையினைத் தம் குலமாலையாகப் பல்லவர்கள் கொண்டவர்கள் என்பதை,

"பாசிலைத் தொண்டைப் பல்லவனாணையின்
வெட்சித் தாயத்துவில் லேருழவர்
பொருந்தா வடுகர் முனைச் சுரங்
கடந்து கொண்டார் பல்லாநிரையே"

எனத் தொல்காப்பியம் அகத்திணையியல் பொருள். சூத்திரம் *54*க்கு நச்சினார்க்கினியர் காட்டிய மேற்கோளால் அறியலாம்.

மேலும் முல்லைக் கலித்தொகை *104* ஆம் பாடலில் பல்லவர்கள் ஏறு தழுவிய செய்தியைக் கூறும்.

சங்க காலத்தில் காஞ்சிமாநகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர்கள் காஞ்சி இளந்திரையர். சங்க இலக்கியத்தின்படி பல்லவர்களில் ஒரு பிரிவினர் திரையர் பவித்திரியைத் தலைநகராக ஆண்டவர்கள். நந்திக்கலம்பகம், பல்லவ நந்திவர்மன் தொண்டைமாலை அணிந்திருந்தவன் என்பதை

"பொற்கழல் நந்திநின் - பாசிலையந்தொண்டை
யல்லது பாடாளே" எனச் சுட்டும்

முற்காலப் பல்லவரின் பவித்திரி, கடல்துறைப் பட்டினம். கடல் கோளால் அழிந்தமையின் காஞ்சிமாநகருக்குக் குடிபெயர்ந்து ஆளத் தலைப்பட்டனர். பல்லவர்கள், மயிதவோலு செப்புப்பட்டயமும், கிபி.3ஆம் நூற்றாண்டு முதல் பல்லவர்கள் 'கல்விக் கரையிலாக் காஞ்சிமாநகரை ஆண்ட செய்தியைக் குறிக்கும். பல்லவர் நாட்டை 'பல்லவதேயம்' எனச் சீவக சிந்தாமணி (பாடல் *1185)* கூறும் துவக்க காலத்தில் பல்லவர்கள் வெளியிட்ட செப்புப் பட்டயங்கள் பலவும் ஆந்திரப் பகுதியில் இருந்து வெளியானவையே. அப்பட்டயங்கள் பலவற்றின் முகப்பில் "சிங்க முத்திரை" சின்னம் பொறிக்கப்பட்டிருந்தது. காஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு கிபி.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9ஆம் நூற்றாண்டு வரை மாட்சிமையுடன் ஆண்டவர்கள் பல்லவர்கள்.

## குலமரபுச் சின்னங்கள்

சென்னைப் பல்கலைக் கழகம் காஞ்சியில் மேற்கொண்ட அகழ்வாராய்ச்சியில் சாதவாகனர் காசுகளை அடுத்துப் பல்லவர்கள் வெளியிட்ட காளைச் சின்னம் பொறித்த ஈயக் காசுகள் எட்டு கிடைத்தன என்பார் டாக்டர் கே.வி. இராமன் "(முனைவர் கே.வி. இராமன் காஞ்சியில் பல்லவர் காசுகள்) 'நந்திக் கலம்பகமும், பல்லவர் செப்பேடுகள் முப்பதும்", காஞ்சிபுரம் பல்லவர்களின் குலமரபுச் சின்னங்களாக ரிஷபம் எனும் காளையையும், சிங்கச் சின்னத்தையும் கொண்டவர்கள் என்பதைக் குறிப்பிடுகின்றன.

சங்க காலப் பாண்டியருக்கு மீனும், சோழருக்குப் புலியும், சேரருக்கு வில் அம்பும் குலமரபுச் சின்னங்களாக அமைந்ததைப் போல், ஆதிப் பல்லவர்க்கு சிங்கச் சின்னமும், காஞ்சிப் பல்லவருக்குக் காளைச் சின்னமும், குலமரபுச் சின்னங்களாயின. எனவேதான் தமிழகத்தை ஆண்ட வேந்தர்கள் தத்தம் குலமரபுச் சின்னங்களை அடையாளச் சின்னங்களாகத் தத்தம் காசுகளில் பொறித்து வெளியிட்டுள்ளனர்.

பல்லவர்கள் ஆநிரையையே செல்வமாக எண்ணியமையின் தம் காசுகளில் காளைச் சின்னத்தை முகப்பிலும், வெற்றியின் நினைவுச் சிங்கத்தை முகப்பிலும் பொறித்து வைத்தனர் போலும்!

மேலும் சாதவாகனர் பேரரசு வீழ்ச்சிக்குப் பின்னர், அவரிடம் பணியாற்றிய பல்லவர்கள் காஞ்சிமாநகரில் ஆட்சி நிறுவியபோது தம் நன்றிக் கடனாக சாதவாகனர் காசுகளை மரபாகக் கொண்டு, அவர் தம் காசுகளின் சின்னத்தையும், காசுகளின் நிறையையும் தழுவி, ஈயம், வெள்ளி, செப்புக் காசுகளை மாநர அஂகக சாலையில் இருந்து காஞ்சிப் பல்லவர் பேரரசர்கள் வெளியிட்டுள்ளனர்.

## பல்லவர் காசுகளின் மரபுப் பெயர்கள்

பொன், காணம், பணம், மஞ்ஞாடி, கழஞ்சு, துளைப்பொன், துளை நிறைப்பொன், தீப்போக்கு செம்பொன் முதலியன காசைக் குறிக்கும் சொற்கள். இப்பெயர்கள் பல்வேறு நிறைகளால் வந்த பெயராக அமையலாம்! பொன்னும், காணமும் எவ்வுலோகத்தால் அமைந்தவை என்பதைச் சுட்டும்.

## பல்லவர் நாணயங்கள் பற்றி நூல் எழுதியவர்கள்

| | |
|---|---|
| 1. திரு. எலியட் | (1886) |
| 2. திரு. டி. தேசிகாச்சாரி | (1993) |
| 3. திரு. சி. மீனாட்சி | (1993) |
| 4. திரு. வித்யா பிரகாசு | (1968) |
| 5. திரு. பி. சட்டோபாத்யாய | (1977) |
| 6. திரு. ஆர். நாகசாமி | (1981) |
| 7. திரு. க.ஆ. திருஞானசம்பந்தம் | (1989) |
| 8. திரு. நடன காசிநாதன் | (1995) |

## பல்லவர்கள் காசு பற்றிய கட்டுரையாளர்கள்

| | |
|---|---|
| 1. திரு. கே.வி. இராமன் | (1967) |
| 2. திரு. எஸ். இராமையா | (ஜே.என்.எஸ்.ஐ. தொகுதி-29) |
| 3. திரு.ஆர். கிருஷ்ணமூர்த்தி | (ஜே.என்.எஸ்.ஐ. தொகுதி-50) |
| 4. திரு. அளக்குடி சீதாராமன் | (தினமணி (12.12.89) காயினெக்ஸ் 95 சென்னை) |
| 5. திரு. பி. சண்முகம் | (எஸ்.எஸ்.ஐ.சி. தொகுதி-3) |
| 6. திரு. சங்கரன் ராமன் | (பல்லவர் காசுகள் (புதிய கண்டுபிடிப்பு) |
| 7. திரு.ஜே.ஆர். ஹெண்டர்சன் | ("பல்லவர் காசுகளின் பட்டியல்" அரசுமைய அருங்காட்சியகம் சென்னை) |

### வருவாயும் வரிகளும்

பல்லவ தேயத்தில் அரசனது கருவூலம் "ஸ்ரீபண்டாரம்" என வழங்கும். அலுவலர் "கோஸ - அத்தியக்க்ஷி" என அழைத்தனர். அரசு அலுவலருக்கு நெல்லாயமும், நிலமானியமும் வருவாய்.

### அரசனது செல்வம்

சேக்கிழாரின் பெரிய புராணத்தில் "பொன்னும் மணியும் மாடும், குதிரையும், போரில் கைப்பற்றப்பட்ட பகைவரின் குதிரைகளும் செல்வங்களும் அரசரது கருவூலத்தில் சேர்த்து வைக்கப்படும்" எனச் சிறுத் தொண்டர் புராணத்தில் பாடல் எண் *6*-ல் குறிப்பிடும் கருத்து பல்லவ வேந்தனது செல்வத்திற்குச் சான்றாகின்றது.

வணிகரிடமிருந்து சுங்கம் பணமாகவோ அல்லது பொருளாகவோ வசூலிக்கப் பெற்றது. வேளாண் பெருமக்கள் தங்கள் நிலத்தீர்வையை நெல்லாயமாகவோ அல்லது காணமாகவோ செலுத்துதற்கு இசைவு நல்கப் பெற்றது. பல்லவரின் தண்டன் தோட்டம் செப்புப்பட்டயமும் காசக்குடிப் பட்டயமும் பல்லவ நாட்டில் *55* வகையான வரிகள் மக்கள்மீது விதிக்கப் பட்டன என்றும், அவை முறையாக வசூலிக்கப்பெற்றன என்றும் கூறும். "அரசின் அன்றாடச் செலவினங்களுக்குக் கருவூலத்தின் வருவாய் போதுமானதாக இருந்தது" என டாக்டர் சி. மீனாட்சி அவர்கள் "பல்லவர்கள் ஆட்சியின் நிர்வாகமும், சமூக வாழ்க்கையும்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

சிற்றூர் கருவூலத்தில் மக்கள் நெல்லாயமாகவோ அல்லது காணமாகவோ வரியைச் செலுத்தினர் என 'ஹிரகத ஹள்ளி' செப்பேடு கூறும்.

### நிறைகள்

கழஞ்சும், மஞ்ஞாடியும், காசின் நிறை அளவுப் பெயர்களாக உள்ளன. கழஞ்சில் *1/20* பாகம் மஞ்ஞாடியாகும். ஒரு கழஞ்சு பொன்னுக்கு ஒரு மஞ்ஞாடி பொன் வட்டமாக *(வட்டியாக)* பல்லவராட்சியில் வழங்கியது!

### பல்லவரின் ராஜமுத்திரை (Seal)

பல்வேறு பல்லவர் செப்பேடுகளின் முகப்புகளின் வாயிலாக, சிங்கமும், காளையும் அவர்தம் அரசு முத்திரைகள் என்னும் முடிவுக்கு வரலாம்!

### கல்வெட்டுக்களில் காசுகள்

கி.பி. *7,8,9* ஆம் நூற்றாண்டு பல்லவர் கல்வெட்டுக்கள் மூலம், பொன், காணம், பழங்காசு, துளைநிறை செம்பொன், விடேல்விடுகு பொன்

முதலியன பணத்தைச் சுட்டும் சொற்கள் மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ளன என்பதை அறிகிறோம்.

## காசின் மதிப்பு

*1.* ஒரு நந்தா விளக்கு எரிக்க *30* கழஞ்சு பொன் வைப்பு நிதியாக வைத்தமை.

*2.* ஒரு பசுவின் விலை ஒரு கழஞ்சு பொன்

*3.* ஒரு கழஞ்சு பொன்னுக்கு மூன்று ஆடுகள் வாங்கலாம்.

## அஃகசாலை

காசுகள் அச்சடிக்கும் இடத்திற்கு அஃகசாலை என்பது பெயர். சிலப்பதிகார அரும்பதவுரைகாரர் *16*வது காதைக்கு உரை எழுதும்போது கோவலன் மதுரை மாநகரில் அஃக சாலை அருகே நின்று கொண்டிருந்த செய்தியைச் சுட்டுகிறார்.

காசுகளை அச்சடிக்கும் மேலாண்மை அரசருக்குரியது. சிலபோது அரசன் காசடிக்கும் உரிமையை வணிகக் குழுக்களுக்கும் கொடுத்தான் என்னும் செய்தி கிபி.*6*ஆம் நூற்றாண்டு "சிங்கள வாஹாலக் காடு" கல்வெட்டு குறிக்கும். *(5*-வது இண்டர்நேஷனல் செமினார் - தமிழ் மலர் - மதுரை *1981)*

பல்லவர்காலக் காசுகளை ஆய்வியல் முறையில் ஆய்ந்தபோது மூன்று வகை முறையில் வட்டவடிவக் காசுகளை அச்சடித்துள்ளமை தெரிய வருகிறது. அவையாவன

*1.* முத்திரை அழுத்திய காசுகள்

*2.* வார்ப்படக் காசுகள்

*3.* அச்சடிக்கப்பெற்ற காசுகள்

## இலக்கியச் சான்றுகள்

நந்திக் கலம்பகம், தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் மீது பாடப் பெற்ற சிற்றிலக்கியமாகும். அக்கலம்பகத்தில், பல்லவ வேந்தனின் இலச்சனை, விடையும் *(காளை)* கோளரியும் *(சிங்கமும்)* என இருபாடல்களின் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

*1.* "விடை மள்பொறியோலை விடேல் விடுக" *(பா13)*

*2.* "மல்குவெண்குடைப் பல்லவர் கோளரி" *(பா59)*

## பல்லவரின் பலதரக் காசுகள்

கிடைத்திருக்கும் *300*க்கும் மேற்பட்ட காசுகளைத் தரம் பிரிக்கும் போது, வேந்தர்கள் *(1)* மாற்றுக் குறைந்த பொற்காசுகள், *(2)* வெள்ளிக் காசுகள் *(3)* தரம் குறைந்த வெள்ளிக் காசுகள் *(4)* செம்புக் காசுகள் *(5)* ஈயக்காசுகள் ஆகியனவற்றை மக்கள் மத்தியில் வழங்கினர் என ஊகிக்கலாம். பொன், வெள்ளி, செம்பு, ஈயக்காசுகள் கலைப்பொலிவுடன் வட்டவடிவத்தில் அச்சடித்து செலாவணியாக்கியவர்கள் பல்லவ அரசர்கள். பொருளாதார நிபுணர் "கிரீஷம் விதிப்படி "கெட்ட பணம் நல்ல பணத்தை மக்கள் மத்தியில் செலாவணியிலிருந்து விரட்டும்" என்னும் கருத்துக்கு இணங்க, வெள்ளி, பொன் காசுகள் உருக்கப்பட்டன. ஆபரணமாகப் புதையலாக மறைக்கப்பட்டன. பதுக்கப்பட்டன. எனவேதான் நமக்குப் பல்லவரின் மாற்றுக் குறையாத பொன், வெள்ளிக் காசுகள் கிடைக்க வில்லை.

சேக்கிழாரின் பெரியபுராணப் பாடல்கள் *(எண்:568, 570)* நமக்கு மேற்கண்ட கருத்துக்குத் துணையாகும். மக்கள் மத்தியிலும், ஆவண வீதியிலும், *(அப்பர், சம்பந்தர் காலத்தில்)* மாற்றுக் குறைந்த காசு உலா வந்த காட்சியைப் பொருளியல் நோக்கோடும், வரலாற்று உணர்வோடும் வருணிப்பர்.

"கருதிய எல்லாம் கொள்ள வேண்டிச் சென்றால்
காசுகளை வாசிபட வேண்டும் என்பார்" *(பா.எ.568)*

"நற்காசுகொண்டு மாந்தர் பெயர்ந்து போய்
ஆவண வீதியிற் காட்ட, அருவிலையிற் பெருங்காசு
நற்றவத்தீர் இக்காசு சாலநன்று வேண்டுவன
நாந்தருவோம்" *(பா.எண்.570)*

மேலும் பெரியபுராணம் - நரசிங்க முனைய
நாயனார்புராணத்தில்,

"நீறணியும் தொண்டர் அணைந்தார்க்கெல்லாம் நிகழ்பசும்பொன்
நூறுகுறையாமல் அளித்தின்னமுது நுகர்வார்"

என்னும் கூற்று, மாற்றுக்குறையாத பசும்பொன்னையும்
வேந்தர்க்ள வழங்கினார்கள் என்பதைக் காட்டுகின்றது.

பல்லவர்கள் காசுகள் பற்றி நாணயவியலார் கூறுவன

1. பல்லவர்களின் கல்வெட்டுக்களும், செப்புப் பட்டயங்களும், கலம் பகமும், சிம்மமும், ரிஷபமும் குலமரபுச் சின்னங்கள்.

2. வேலூர்ப் பாளைய செப்பேடும், உதயேந்திரம் செப்பேடும், சிங்க இலச்சனையோடு முகப்பில் பொருத்தப்பட்டிருக்கும்.

3. வெள்ளி, செம்பு, ஈயக்காசுகளைப் பல்லவர்கள் வெளியிட்டுள்ளமை

4. பொற்காசுகளை வெளியிட்டமையை டாக்டர் சி. மீனாட்சியும், திரு. எலியட்டும் தமிழ் நூலில் எடுத்துக் காட்டியுள்ளமை.

5. காசுகள் அனைத்தும் வட்டவடிவம்; அச்சடிக்கப்பட்டவை பல என்பர்.

6. காசுகளின் முகப்பில் காளைச் சின்னம் பெரும்பாலும் வலப்புறமாகப் பொறிக்கப்பட்டிருக்கும்;

7. காசின் மறுபக்கத்தில், ஸ்வத்திகா, வில், மீன், இரட்டை-மீன், குடை, முக்குடை, சங்கு, நண்டு, ஆமை, விளக்கு, விளக்குகளின் மத்தியில் கலசம் அல்லது இருவெண்சாமரம், போதிமரம், பட்டயத்தில் மரம், இருபாய்மரக்கப்பல், தோணி, லிங்கம், தாமரை மலர், பிறைச் சந்திரன், கதிரவன், தூமகேது, ஸ்ரீவத்சம், சைத்யம், குதிரை, யானை, வராகம் போன்ற 30க்கும் மேற்பட்ட ஏதாவது ஒன்றின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கும் என்று நாணயவியலார் குறிப்பிடுவர்.

## காசுகளில் காணப்பெறும் பெயர்கள்

ஸ்ரீபர, ஸ்ரீநிதி, மானாபரா, ஸ்ரீஸ்ரீ, வபு, லக்ஷித, லக்ஷிதன், சித்ரா போன்ற பெயர்கள் கி.பி. 7,8 ஆம் நூற்றாண்டின் பல்லவ கிரந்த எழுத்துப் பொறிப்புகள், காசுகளில் நிற்கும் காளைச் சின்னத்தின்மேல் இடமிருந்து வலமாக அமைக்கப் பெற்றிருக்கும். சில காசுகளில் (வெள்ளி மற்றும், செம்பு) கி.பி. 7ஆம் நூற்றாண்டு எழுத்து அமைதியுடைய தமிழ் வரிவடிவத்தில் “காடவ”, “காடுபெடுகு” என்னும் பெயர்கள் உள்ளதாகவும், அக்காசுகள் பெண்ணை ஆற்றிலிருந்து எடுக்கப்பட்டதாகவும், திரு. சங்கர ராமன் குறிப்பிடுவார். ‘பகா’ ‘தீவி’ தமிழ்ப் பொறிப்புக் காசுகளும், ‘தபவீர’, ‘ஸ்ரீபிவ’ பல்லவ கிரந்தப் பொறிப்புடைய காசுகளும், கும்பகோணம், திருக்கோயிலூர், கரூர் பகுதியில் கிடைத்த பல்லவர் காசுகளில் இருப்பதாக அளக்குடி ஆறுமுக சீதாராமன் கூறுவர்.

இக்காசுகள் அனைத்தும் எந்த மன்னர்களால் வெளியிடப்பட்டன என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

## பல்லவர் காசுகள்

திருக்கோவிலூர் பெண்ணையாற்றுப்படுகை, கரூர் அமராவதி ஆற்றுப் படுகை, மதுரை வைகையாற்றுப்படுகை, நெல்லை தாமிர பரணியாற்றுப்படுகை, காவேரிப்பட்டணம், தென்பெண்ணையாறு போன்ற பகுதிகளில் 'மண்காசு எடுப்போர்தம் அரிய முயற்சியால் வெளிப்போந்த காசுகள் பல ஆயிரமாகும்! இக்காசுகள் பல அரிப்புக்காரர்' தம்மிடமிருந்து பெற்ற காசுகள், மதுரை திருக்கோவிலூர் காசு சேகரிப்பாளர் தம்மிடமிருந்து திரட்டிய காசுகளின் தொகுப்பை ஆராய்ந்து பெற்ற தகவல் கொண்டு எழுதப் பட்ட புத்தகம் "காஞ்சி பல்லவர் காசுகள்" இத்தலைப்புடைய ஆங்கிலப் புத்தகம் கட்டுரையாளரால் *27.1.1989* அன்று ஈரோடு அரசு அருங்காட்சியகத்தில் வெளியிடப்பெற்றது. பல்லவரின் பொற்காசும்[1] முதலாம் மகேந்திரவர்மன் பொற்காசுகள் ஆறு சென்னை அருங்காட்சியகத்தில் இருந்ததாக டாக்டர் சி. மீனாட்சி பல்லவர் சமூக வாழ்க்கை பற்றி எழுதிய புத்தகத்தில் குறிப்பிடுவார். *2*. திரு. எலியட் அவர்கள் தென்னிந்தியாவில் காசுகள் பற்றிய எழுதிய புத்தகத்தில் காட்டப்பட்டுள்ள தகடு எண் இரண்டில் காசு எண்கள் *55, 56*ல் பல்லவர், குறும்பர் வெளியிட்ட காசுகள் என்பார். *3*. மாற்றுக்குறைந்த ஸ்ரீபரமேஸ்வர பல்லவகிரந்த காசும், காளை உருவம் பொறிக்கப்பெற்ற காசும் கட்டுரையாளரிடம் உள்ளன.

## காசுகளின் முகப்புப் பக்கம்

கிடைத்த பெரும்பாலான காசுகளின் முகப்பில் காளையின் உருவம் நின்ற கோலத்தில் வலமாகப் பொறிக்கப்பட்டிருக்கும். 'சித்ர' என்னும் பெயர்ப் பொறிப்புடைய காசிலும் காளையின்மேல் சூரியன் சந்திரன் குறியீடு உள்ள காசிலும் காளை இடப்புறமாக உள்ளது.

காசுகளில் காணும் காளையின் தோற்றம் ஐந்து வகையாக அமைந்துள்ளது

*1.* காளை உருவம் லேசாகப் பதிந்த நிலை

*2.* வரைகோடுகளால் தீட்டப்பெற்ற காளை உருவம்

*3.* திமிலோடு கூடிய காளையின் தோற்றம்

*4.* புடைப்புத் தோற்றத்துடன் பொறிக்கப் பெற்ற காளை.

காணப் பெறும் காளையின் மேல் சிற்சில காசுகளில் தமிழ் வரிவடிவம், சிலவற்றில் பல்லவகிரந்த வரிவடிவப் பெயர்ப்பொறிப்பும், சிலவற்றில் விளக்கு, ஸ்ரீவத்சம், சந்திரன் போன்ற மங்கலக் குறியீடுகள் பொறிக்கப்பெற்ற காசுகளாகும்.

5. கிடைத்த ஒரே ஒரு காசில் மட்டும், பல்லவர் காளை செப்புப் பட்டயத்தில் பொறித்துள்ளதைப் போல, அமர்ந்த தோற்றத்தில் உள்ளது.

மாடு செல்வமாகக் கருதப்பட்டதாலும், பல்லவர்கள் சாதவாகனரிடம் பணிபுரிந்தமையாலும், அவர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு, காஞ்சியில் மாமன்னராக ஆளத் தலைப் பட்டபோது, நன்றிக்கறிகுறியாக, அவர்களைப் பின் பற்றித் தம் காசுகளில் காளை மாட்டுச் சின்னத்தையும், சிங்கச் சின்னத்தையும் பொறித்தனர் போலும்.

## காசுகளின் மறுபக்கம்

*30*க்கும் மேற்பட்ட குறியீடுகள்காசுகளின் மறுபக்கத்தில்பதிக்கப் பெற்றுள்ளதாக நாணயவியலார் கூற்றை முன்பே கண்டோம். கட்டுரையாளருக்குக் கிடைத்த காசுகளின் குறியீடுகளைக் கொண்டு *(1)* சுவஸ்திகர், *(2)* பாய்மரக் கப்பல் *(3)* தோணி *(4)* இரட்டை மீன் *(5)* போதிமரம் *(6)* முக்குடை *(7)* கும்பம் *(8)* தாமரை *(9)* ஸ்ரீவத்சம் *(10)* சித்திர எழுத்து *(11)* ஒற்றைக்குடை *(12)* சங்கு *(13)* சூரியன் *(14)* சக்கரம் போன்ற *14* வகைக் காசுகளைப் பல்லவர் வெளியிட்டுள்ளனர் எனக் கூறலாம்.

## காசுகளின் அளவு

பொன், வெள்ளி, செம்பு, ஈயக்காசு கட்டுரையாளருக்குக் கிடைத்த காசுகளின் அனைத்தும் வட்ட வடிவம் கொண்டவை. கட்டுரையாளருக்குக் கிடைத்த காசுகளின் நிறையை ஒட்டியும், குறுக்களவைப் பொறுத்தும், எண் வகையாகக் காசுகளைத் தரம் பிரிக்கலாம்.

காசுகளின் குறுக்களவு சிற்றெல்லை *7*செ.மீ பேரெல்லை *2.2*செ.மீ

## காசுகளின் நிறை

காசுகளின் நிறையில் பேரெல்லை *8* கிராம்; சிற்றெல்லை *400* மி. கிராம். கிடைத்த காசுகளின் நிறைகொண்டு எண்வகை நிறையுள்ள காசுகளைப் பல்லவர் வெளியிட்டுள்ளனர் எனக் கருதலாம்.

சாதவாகன மன்னர்களில் ஸ்ரீபுலுமாயி வெளியிட்ட காசுகளைப் போல் எண்வகை நிறைமதிப்புள்ள காசுகளைப் பல்லவ மன்னர்களும், வெளியிட்டிருக்கலாம். தற்போது பல்லவ மன்னர்களின், பொற்காசும், ஈயக்காசும் கிடைப்பது அரிதினும் அரிதாகிறது. ஒருவேளை அதற்குத் தக்க அகழாய்வைக் காஞ்சீபுரத்திலும், கடல்மல்லையிலும், மேற்கொண்டால் காசுகள் கிட்டக் கூடும்.

## காசுகளின் சமயப் பொறை

சமண, பௌத்த, வைணவ, சைவ சமயச் சின்னங்களைத் தம் காசுகளில் பொறித்துள்ளமை (ஸ்வத்திகா, சங்கு, போதி, முக்குடை, சைத்தியம், லிங்கம்) பல்லவர்களின் சமயப் பொறைக்கு ஓர் எடுத்துக் காட்டாக அமையும். பல்லவர்களின் கப்பல் படையையும், வணிக வளத்தையும் காட்டுவதற்கு அமைந்த காசுகள் போல், பாய்மரச் சின்னம், தோணி குறியீடுகள் கொண்ட காசுகள் சாட்சியாக அமைகின்றன. இக்கூற்றினை அரண் செய்வதுபோல் டாக்டர் பி. சண்முகம் வெளியிட்ட தாய்லாந்து நாட்டில் கிடைத்த சோழ, பல்லவர் காசு பற்றிய கட்டுரை அமைந்துள்ளது (எஸ்.எஸ்.ஐ.சி. தொகுதி-*4*, ப*95-96)*

பல்லவ மன்னனின் கவின்மிகு காசு (அளக்குடி ஆ. சீதாராமன் தினமணி *26.12.89)* பல்லவவேந்தன் நந்திவர்மன் 'முவ்வேந்தரையும்' வெற்றி பெற்றதற்கு அறிகுறியாக பல்லவர்காசில் 'மூவேந்தர்' சின்னங்களையும் பொறித்து, நினைவுக் காசாக வெற்றி நாணயத்தை வெளியிட்டுள்ளான் என்பர்.

## கட்டுரை எழுத உதவிய நூல்கள்

1. Kanchi Palla Coins
2. South Indian Coinage
3. Coinage of South India
4. South Indian Coins
5. Tamil Coins - A Study
6. Coins of Southern India
7. Coinage 95 Madras
8. Studies in South Indian Coins -vol.Three
9. தமிழர் காசு இயல்

* * *

# 15. வலங்கை நூல்களில் மாடைக்காசு

முனைவர் ஆ. தசரதன்

## முன்னுரை

பிற்காலச் சோழர்களில் சில அரசர்களின் ஆட்சி தமிழகத்தில் பொற்காலமாகத் திகழ்ந்தது. தமிழகம், போர், வாணிகம், இலக்கியம், நாடகம், இசை, நாட்டியம், கட்டடக்கலை போன்றவற்றிலும் தலைசிறந்து நின்றது. வணிகத்திற்கு அடிப்படையான காசு அல்லது நாணயம் சோழர் ஆட்சியில் புழக்கத்திலிருந்தது. அவ்வாறிருந்த நாணயங்களுள் **மாடை** என்பதும் ஒன்று. சோழ அரசன் பெயரால் அது வழங்கப்பட்டது. 'இராசராசன் மாடை', 'மதுராந்தகன் மாடை' எனப் பெயர்கொண்ட மாடைக் காசுகள் வழக்கத்திலிருந்தன. அரசன் பெயரிலிருந்த அம்மாடைக் காசு 'நாட்டார் மாடை' எனவும் பிற்காலத்தில் வழங்கப்பெற்றது. "நாட்டார் மாடை" என்பது அரசமரபினர் பெயரால் அமைந்து இருத்தல் கூடும் என நெல்லை நெடுமாறன்[1] கருதுகின்றார். ஆயினும் வலங்கை நூல்களில் இன்றும் 'மாடை' என்றே இக்காசு பெயர்பெறுகின்றது.[2] மாடை என்பது பொற்காசு என்றும், அது இரசவாதம் எனும் மூலிகை இராசாயன முறையில் தயாரித்த பொன்னில் செய்யப்பட்டது என்றும் சான்றோர் சமூகமே இரசவாதம் மூலம் பொன் செய்யும் தொழில் நுட்பத்தை அறிந்திருந்தனர் என்றும் சில வலங்கை நூல்களிலிருந்து தெரிகின்றது.

## வலங்கை நூல்கள்

பிற்காலச் சோழர்கள் ஆட்சியில் பல்வேறுசாதியினரிலிருந்து போர் வீரர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். வலங்கைச் சாதியினர் *98* வகையினர் என்றும், இடங்கைச் சாதியினர் *98* வகையினர் என்றும் மக்களைப் பகுத்தனர் எனக் கல்வெட்டுகளாலும் நூல்களாலும் அறிகின்றோம்.

---

*1.* நெல்லை நெடுமாறன், "சான்றோர் காசு" T.D.M.N.S கல்லூரி, கள்ளிகுளம், நெல்லை மாவட்டம்: பக்.*2, 1992-93.*

*2.* நெல்லை நெடுமாறன், "நாட்டார் மாடை" T.D.M.N.S கல்லூரி, கள்ளிகுளம், நெல்லை மாவட்டம்: பக்.*2, 1992-93.*

வலங்கை வீரர் இடங்கை வீரரைவிட அதிகமாக இருந்தனர். சோழனுக்காக வலங்கைவீரர் பல ஊர்களில் போர் செய்தனர். இவ்வலங்கை வீரர் இடம்பெற்ற படையை 'வலங்கை மகாசேனை' என்றனர். வலங்கைப்பிரிவில் பல திடமுள்ள வீரர்கள் இருந்தனர். 'வலங்கை உய்யக் கொண்ட வாள் வீரர்' என்றும், 'வலங்கைப் பிரதானி', என்றும் சில அதிகாரிகள் அழைக்கப் பெற்றனர். வலங்கைப் பிரதானி அல்லது வலங்கை உய்யக் கொண்ட வீரர்களின் சந்ததியார் பிற்காலத்தில் வலங்கைச் சான்றோர் எனப்பட்டனர். வலங்கைச் சான்றோருள் சில கலைஞர்கள் தத்தம் மூதாதையர் செய்த வீரதீரச் செய்திகளைப் பாடி வைத்தனர். அவ்வாறு பாடிய பாட்டுகள் ஏட்டிலும், பின்பு நோட்டிலும் எழுதிவைக்கப்பெற்றன. அவ்வாறு எழுதிவைக்கப் பெற்ற ஏடுகளும் தாள்களும் படியெடுக்கப்பட்டுப் பல்வேறிடங்களுக்குப் பரவின. இவ்வாறான பல படிகள் தற்காலத்தில் கிடைத்து வருவதால் அவை வலங்கை நூல்கள் எனப்பெயர் பெறுகின்றன. தமிழில் வலங்கைச் சான்றோரைத் தவிர வேறு எவரும் இத்தகைய நூல்களைப் பாடிவைக்க வில்லையாதலால் வலங்கை நூல்கள் எனப் பொதுவாகக் கூறுவன எல்லாம் சான்றோர் கவிஞர்கள் பாடியும் எழுதியும் வைத்த நூல்களேயாம்.

### வலங்கை நூல்களின் வகை

வலங்கை நூல்களில் நமக்கு இப்போது கிடைப்பது கி.பி. *1600*-இல் பாடப்பெற்ற **வலங்கை மாலை** என்ற நூலாகும். இது ஒரு வரலாற்றுக் கதைப்பாடல். இந்நூல் *3500*-க்கு மேற்பட்ட வரிகளில் *700* பேர் கொண்ட படைப்பிரிவு பல்வேறிடங்களில் போரிட்ட வரலாற்றை எடுத்துக் கூறுகின்றது. கி.பி*1606*-இல் பாடப்பெற்ற **வலங்கை நூல் எனும் வெங்கலராஜன் கதை** என்பது வலங்கைச் சான்றோர் படைப்பிரிவின் போரைக் குறிப்பிட்ட பின்பு அவர்கள் மரபில் வந்த வெங்கலராஜன் என்பவனின் வாழ்க்கை பற்றிக் கூறுவதாகும். வலங்கை நூல்கள் வரிசையில் வலங்கை வாழ்த்து, வலங்கை எனும் ஆதிபூர்வ மண்டங்குடி மன்னன் வரலாறு என்பன போன்ற நூல்கள் இடம் பெறுகின்றன. மாடை என்பது இந்நூல்களிலேயே இடம் பெற்றுள்ளது.

### மாடைக் காசு

மாடை, மாடக்காசு மாடைக் காசு என்று பெயர்பெறும் இக்காசு "சாணார் காசு" என்றும் அழைக்கப் பெறும் என நெல்லை நெடுமாறன் காட்டுகின்றார்.[3] விளக்கு மாடத்தில் இட்டு வைத்திருப்பதால் மாடக்காசு எனப் பெயர் பெற்றது என்றும் அவர் கூறுவர்.[4] மாடைக்காசு பற்றி பல விவாதங்களிலிருந்து

3. மேற்படி
4. மேற்படி

வருகின்றன. சென்னை அருங்காட்சியத்திலிருந்து வெளிவந்த பிரசுரம் *(தொகுதி. 3 இ, 1901)* ஒன்றில் ரெவ. பாசெட் பாதிரியார் மாடைக்காசு பற்றிக் கூறுவதாவது:

The Coin is known as an "Amada" as one day according to legend, Amada, consort of Bhagavati, appeared before a shanror and demanded food. The Shanror said he was poor and had nothing to offer but toddy. Amada drank the toddy from a cup fashined from a palmyra baf and performing a **mantram** (Sacred formula) over the leaf, turned it into gold coins, which on one side bore the pectures of Amada, the shanror, and the palmyra tree between them.[5]

மாடைக்காசு பற்றி *1865*-இல் கல்கத்தா பிசப் கூறுவதாவது.

**"These coins, like others of the Republic of Venice, bore the name of the Doge and were stamped with a Bishop's mike and pastral staff"..........[6]**

நாகமையா போன்ற அறிஞர்கள் மாடைக்காசு இருந்ததாகக் குறிப்பிடுகின்றனர்.[7] மாடைக் காசு பற்றிய ரெவ. பாசெட் பாதிரியார் குறிப்பு வலங்கை நூல்களில் கூறப்பட்டிருப்பதை ஒத்து அமைகின்றது.

**வலங்க மாலையில் மாடைக்காசு**

*கி.பி.1600*ல் பாடப்பெற்ற வலங்கை மாலை எனும் வரலாற்று அம்மானை நூலில் மாடைக்காசு பற்றிய பகுதிகள் வருமாறு: கோரக்க நாதர் எனும் சித்தர் காளி மைந்தர்களாகிய வலங்கைச் சான்றோரிடம் தோன்றி அவர்கள் உண்டாக்கிய மதுபானத்தைக் கேட்டு வாங்கிப் பருகிய பின் அவர்களுக்கு இரசவாத வித்தையைக் கற்பித்ததாகக் கூறுகிறது.

கோரக்க நாதர் குருமூர்த்தியாக வந்து
காரொத்த கைத்தலரே கங்காளி புத்திரரே
சீரொத்த மந்திரத்தைத் திறமாகத் தான் படைக்கில்
பாரத் தனமும் வெகு பாக்கிஷமுந் தான் தருவோம்
என்றமொழி கேட்டு எழுநூாத்தவர் வணங்கி

---

5. See ஆ. தசரதன், *1995, 1996*, வலங்கைச் சான்றோரும் சோழரும், சென்னை-*4*, பக்.*105*.

6. மேற்படி நூல், பக்.*107*.

7. "Shanar Kasu: The Venetion Sequins are popularly known in Travancore by this name" - Travancore State Manual, Vol. III.

சென்று மதுதன்னைத் திறமாகவே படைக்க
கோலா கலமுனிவன் கோரக்க னாதர் மகிழ்ந்து
மேலான மந்திரத்தை வெகுவாகக் கண்டதினால்

(வலங்கைமாலை *2878-2885)*

வலங்கை எழுநூற்றுவர்க்கு அவ்வித்தையைக் கற்றுக் கொடுத்தார். இரசவாத வித்தைமூலமாகக் கோடானுகோடி பொன்னைச் சேர்த்த வலங்கையரிடம் வல்லாளன் என்னும் மன்னன் அவ்வளவு செல்வம் சேர்த்த வழியை வினவினான்.

வல்லாள னென்னு மனுநீதி காவலவன்
மல்லாருந் திண்புயத்தான் வலங்கையுய்யக் கொண்டவனை
வாருமெனவே வரவழைத்து மன்னவனும்
வீரருக்கு வீரா வித்தியாதரன் புதல்வர்
ஆரமுடனே போத்து மாசுரியமு முனக்கு
தீரனே வந்தபடி செப்புமென உரைத்தான்

(மேற்படி:வரி:*2905-2911)*

அரசனிடம் தம் குருநாதர் கற்றுத் தந்தார் என உரைத்த வலங்கைத் தலைவன், மேலும்

தென்னவா சோழர்குல தேர்வேந்தே கேட்டருள்வாய்
மன்னவா பொன்னாலே மாடக்காசு உண்டாக்கி
பத்தியுடன் சித்திரமும் பனையும் ஓர் புறத்தில்
எழுத்திலே மாளாத விலக்கணமாக வடித்து
பழுது வாராது வெகு பாக்கிஷங்க ளுண்டாகும்
தென்புவியை யாளுகின்ற சேரகுல மன்னாகேள்
அம்புவியில் **சான்றோர்கள் ஆனமாடை** யென்றே வழங்க

(மேற்படி:வரி:*2916-2923)*

கேட்டுக் கொண்டான். வல்லாளனும் அதற்கிசைந்து, தங்கத்தை உற்பத்தி செய்து பார்த்த பின்பு

செப்பந்தனைக் கண்டு செம்பியனுந்தான் மகிழ்ந்து
மாதுரைக்கக் கேட்டு மாடைதனை யடித்து
சேத்துப் பனையு நல்ல சித்தாரமுந் தானெழுதி
———
வலங்கை யுய்யக் கொண்டவர்கள் மாடையிது வெனவே
தலங்க ளேழும் புகழத் தானெழுதி மாடைதன்னில்

(மேற்படி வரிகள் *2933-2939)*

சான்றார் மாடை அல்லது வலங்கை உய்யக் கொண்டார் மாடை எனப் பெயர் பெறும் மாடைக்காசு வல்லாளன் அச்சிட்டு வழங்கியது என்றும், அதன் ஒரு புறத்தில் பனையும் மறுபுறத்தில் இரசவாதத்தைத் தெரிவித்த சான்றோன் உருவமும் அவன் மகள் உருவமும் பொறித்திருந்ததாக அறியமுடிகிறது.

## வெங்கலராசன் கதையில் மாடைக்காசு

பொன் உற்பத்தி செய்யும் முறையும் மாடைக்காசு உண்டாக்கும் முறையும் வலங்கை மாலையிலிருந்து சற்று மாறுபட்டு வெங்கலராசன் கதையில் கூறப்படுகின்றன. கோரக்க நாதருக்குப் பதில் வித்தியாதர முனிவர் வருவதாகக் கூறுப்படுகிறது. வித்தியாதரர் தம் சந்ததியரைத் தேடி இலங்கை சென்ற போது, அங்கு இருந்த சிறுமியரிடம் பசிக்கு உணவு கேட்டபோது அவர்கள் தங்களிடமிருந்த பதனீரைக் கொடுத்தனர். அவர்களது வறுமையைப் பார்த்த வித்தியாதர முனிவர் அருகிலிருந்த மூலிகைகளைப் பறித்து இரும்பு அருவாவில் தடவி அதைத் தீயில் முக்குமாறு கூறி மறைந்து விடுகிறார்.அவ்வாறே அச்சிறுமியாரும் செய்ய இரும்பு அருவா தங்கமாகியது. இதை அறிந்த அச்சிறுமியாரின் தந்தை மூலிகைமூலம் தங்கம் செய்யும் கலையை அறிந்து அங்குக் கிடைத்த இரும்பையெல்லாம் தங்கமாக்கிச் செல்வம் சேர்த்தான். அவனிடம் அவ்வளவு செல்வமிருந்ததை அறிந்த அந்நியர் அதற்கான கரணத்தைக் கூறுமாறு பணித்தனர். வலங்கைக் குலத்தில் வந்தவனும் தங்கக்காசு அடித்துப் புழக்கத்தில் விட்டால் தங்கம் செய்யும் விதத்தை அறிவிப்பதாகக் கூறினான்.

தங்கப் பொன்னானதிலே தங்கக்காசி தானடித்து
ஒரு புறத்தி லுனது அச்சும் ஒருபுறத்தில் வெனது அச்சம்
திருக்காளி தந்தவகை சிறந்த அரிவாள் மிதிப்புத்தடி
அருவாப் பெட்டிமுதலாக அக்கரையிலச் சுவைத்து
தருவாயே உலகமெல்லாம் சாணான் காசு எனவே

*(வெங்கலராசன் கதை, பக்.32)*

சாணான் காசு அல்லது மாடைக்காசு வெள்ளைக்காரன் புழக்கத்தில் விட்டதாக வெங்கலராசன் கதையிலிருந்து தெரிகிறது.

"என்றவனு மிருக்கையிலே அங்கு வெள்ளைக்காரன் வந்தான்
வந்துமன்னன் தனை யழைத்து வாய்த்த தங்கக் காசிதன்னை
சந்தோசமுடன் கொடுத்தான் தரணியெல்லாம் வழங்கும்படி
சட்டங்கட்டிக் காசியிலே சான்றோனே உனது அச்சும்
திட்டமுடன் சொன்னபடி திருக்காசி தனிற்பரப்பி
சொன்னபடி சாசியிட்டேன் தொல்புவி யெல்லாம் விளங்க"

*(மேற்படி:பக்.33)*

இவ்வாறு சாணான்காசு எனும் மாடைக்காசு புழக்கத்தில் வந்தவரலாற்றை அறிந்து கொள்ள முடிகிறது. வெங்கலராசனை 'சாண்காசடித்த யோகன்' என இந்நூல் பாராட்டுகிறது.

வலங்கை மாலையில் வல்லாளன் எனும் மன்னன் மாடைக் காசு வெளியிட்டதாகவும் வெங்கலராசன் கதையில் வெள்ளைக்காரன் சாணான்காசு வெளியிட்டதாகவும் கூறப்படுவதிலிருந்து வலங்கை நூலாசிரியர்களிடம் இருவேறு கருத்துகள் நிலவியதாகத் தெரிகிறது.

## வலங்கை ஆவணங்களில் மாடைக்காசு

வலங்கைச் சான்றோர் கல்வெட்டுகளிலும் மாடைக்காசு பற்றிய செய்திகள் வந்துள்ளன. சித்தூர் மாவட்டம் திருமலைக் கோயில் கல்வெட்டில் 'நாட்டார் மாடை' குறிப்பிடப்படுகிறது.

"நாட்டார் மாடையில் வகுத்த காணிக்கை"

எனக் குறிப்பிடுகின்றது. இவற்றிலிருந்து செப்புப் பட்டயங்களிலும், கல்வெட்டுகளிலும் கூட மாடைக் காசு வழங்கியதாகக் குறிப்புள்ளது.

கொங்கு நாட்டுச் சான்றோர் செப்புப் பட்டங்களில் "மாடைக்காசு வழக்கஞ் செய்தோராகச்" சான்றோர் கூறப்படுகின்றனர்.[10]

கருமாபுரம் செப்பேடு கோரக்கநாதரே இரசவாதத்தை உருவாக்கினார் எனக் கூறுகிறது.

"______ கோரக்கரருளால் ரச வாதமுங்
கற்றுப் பிசகாதனாட்டுக்கள் மாடக்காசு
வழக்கஞ்செய்த பெரியோரான______"

எனச் சான்றோர் சமூகத்தினர் செப்பேட்டில் புகழப்படுகின்றனர்.

## சாணார்காசு

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அண்மையில் வெளியிட்டுள்ள **'தமிழர் காசுகள்'** என்ற நூலில் அதன் ஆசிரியர் நடன காசிநாதன், "நெல்லை நெடுமாறன்: சாணார்காசு" என ஆங்கிலத்தில் எழுதிய கட்டுரையைப் பிரசுரித்துள்ளார்.[11]

---

10. நெல்லை நெடுமாறன், சான்றோர் சமுதாய ஆவணங்கள்.

11. தமிழர் காசுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1996.

## காவடிக் காசு

இருபுறமும் தொங்கும் படியான காவடியின் படம் அமையும் காசு காவடிக் காசு ஆகும் என நெல்லை நெடுமாறன் குறிப்பிடுகிறார். இதற்கும் மாடைக் காசுக்கும் தொடர்புண்டு என்கிறார்.[12]

## சாணார்வாதம் அல்லது இரசவாதம்

வித்தியாதர முனிவர் அல்லது கோரக்கநாதர் போன்ற சித்தர்கள் மூலிகையால் செய்த இரசவாதம் 'சாணார் வாதம்' எனப்பட்டது. பாலையானந்தசித்தர் தமது **ஞானக்கும்மி**யில்[13] இரசவாதத்தைச் சாணார்வாதம் எனக் கூறுவதிலிருந்து மூலிகைகளிலிருந்து பத்தரை மாற்றுத் தங்கத்தை உருவாக்கும் தொழில்நுட்பத்தைச் சான்றோரே மேற் கொண்டனர் எனத் தெரிகிறது. இதைப் போன்றே அகத்தியர் அகடிய காவியம்[14] என்ற நூலில் இரசவாதத்தைச் சாணார் வாதம் என்று கூறப்படுகிறது. இவற்றிலிருந்து மூலிகைகள் மூலம் தங்கத்தை உற்பத்தி செய்து அத்தங்கத்திலிருந்து மாடைக் காசுகளைச் சான்றோர் சமூகத்தினர் வணிகத்தின் பொருட்டுப் புழக்கத்தில் விட்டிருப்பர் என அறிந்து கொள்ளலாம்.

## முடிவுரை

இதுவரை வலங்கை நூல்கள், வலங்கை ஆவணங்களில் இரசவதமும் மாடைக்காசும் இணைத்துக் கூறப்பட்டிருத்தலைச் சான்றுகள் மூலம் கண்டறிந்தோம். இதன் மூலம் சித்தர்களிடமிருந்து அறிந்த மூலிகை முறையினால் தங்கத்தை உருவாக்கி அதிலிருந்து மாடைக் காசுகளைச் சான்றோர் சமுதாயத்தினர் புழக்கத்தில் விட்டிருக்கலா மென்று தெரிகிறது.

---

12. நெல்லை நெடுமாறன், காவடிக்காசு.

13. பாலையானந்த சித்தர், ஞானக்கும்மி

14. அகத்தியர் அகடிய காவியம்

* * *

# 16. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் தாள் சுவடி ஆவணங்கள்

முனைவர் ம.சா. அறிவுடைநம்பி

தமிழ் மொழிக்காகவும் வளர்ச்சிக்காவும் *15-09-1981*இல் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தாள் சுவடிகளுக்கென்று *24-01-1982* இல் தனியொரு துறை தொடங்கப்பெற்றது. இந்தியாவிலுள்ள பல்கலைக் கழகங்களிலேயே தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் மட்டுமே அரிய கையெழுத்துச் சுடிவத்துறை தனித்துறையாக இயங்கி வருவது குறிப்பிடத்தக்கது.

தமிழில் எழுதப்பெற்ற அரிய தாள் சுவடிகள், ஆவணங்கள், கடிதங்கள், அச்சு நூல்கள் முதலானவற்றைச் சேகரித்துப் பாதுகாத்து வருதலோடு அவற்றின் அடிப்படையில் வரலாறு, சமுதாயம், அரசியல், பொருளாதாரம், கலைகள், இலக்கியம், மருத்துவம் போன்ற பல்துறைகளில் ஆய்வுகளை மேற்கொள்வதுடன் சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடும் பணிகளையும் இத்துறை செய்து வருகிறது. இத்துறையில் இதுவரை சேகரிக்கப் பெற்றுள்ள தாள் சுவடி ஆவணங்களை இக்கட்டுரை ஆராய்கிறது.

## தற்போது சேகரிக்கப்பெற்றுள்ள சுவடிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | தாள் சுவடிகள் | - | 300 |
| 2. | அரிய அச்சு நூல்கள் | - | 585 |
| 3. | கடிதங்கள் | - | 275 |
| 4. | ஆவணங்கள் | - | 250 |
| 5. | வரைபடங்கள், பிற | - | 25 |
| 6. | மோடி ஆவணங்கள் | - | 2000 கட்டுகள் |

இவற்றுள் தாள் சுவடி ஆவணங்களை,

1. இலக்கியம்
2. இலக்கணம்
3. வரலாறு

4. மருத்துவம்
5. நாடகம்

என்ற பிரிவுகளாகப் பிரித்து ஆய்வு செய்வது பொருத்தமுடையதாகும்.

## இலக்கியம்

சங்க இலக்கியம், சமய இலக்கியம், காப்பிய இலக்கியம், சிற்றிலக்கியம், நாட்டுப்புற இலக்கியம் ஆகிய தலைப்புகளில் இச்சுவடிகள் அமைகின்றன.

## சங்க இலக்கியம்

ஓலைச்சுவடியிலிருந்து படியெடுக்கப்பட்ட பத்துப்பாட்டு நூல்கள் சுவடிகளாக உள்ளன. குறுந்தொகை மூலபாடம் சிதைந்த நிலையில் உள்ளது. குறுந்தொகைக்கு மு. சண்முகம்பிள்ளை எழுதிய மூலமும் உரையும் சுவடியாக உள்ளது.[1]

## சமய இலக்கியம்

சேரமான் பெருமாள் நாயனார் அருளிய திருக்கயிலாய ஞான உலா, திருவாரூர் மும்மணிக்கோவை ஆகிய இருநூல்களின் படியெடுக்கப் பெற்ற சுவடிகள் உள்ளன. தாளின் இருபக்கங்களிலும் எழுதப்பெற்ற இச்சுவடிகளின் காலம் தெரியவில்லை.

நக்கீரதேவநாயனார் அருளிய கோபப்பிரசாதம், திரு ஈங்கோய்மலையெழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை ஆகிய நூல்களில் படியெடுக்கப்பெற்ற சுவடிகள் உள்ளன. இவற்றுள் திருஈங்கோய் மலையெழுபது நூலில் *1* முதல் *47* பாடல்கள் இருக்கின்றன. *48* முதல் *62* வரையுள்ள பாடல்கள் வெற்றிடங்களாக எதுவும் எழுதப்படாமல் உள்ளன. *63* முதல் *70* பாடல்கள் இருக்கின்றன. இதை வைத்துப் பார்க்கும் பொழுது இச்சுவடி மிகப் பழைமை வாய்ந்த சுவடியாகும் என்று துணிந்து கூறலாம். ஏனெனில் பழம்பதிப்புகளில் *48* முதல் *62* வரையுள்ள பாடல்கள் இறந்தன எனக் காட்டப்பட்டுள்ளது. ஆயின் திருப்பனந்தாள் காசிமடத்துப் பதிப்பில் *(17-10-1972)* மு. அருணாசலம் செப்பறை மடத்து ஏடொன்றைப் பரிசோதித்துக் கண்ட பாடல்களைச் சேர்த்துள்ளார். எனவே இச்சுவடி மிகப்பழமை வாய்ந்த ஓலைச்சுவடியிலிருந்து படியெடுக்கப் பட்டதாகக் கருதமுடிகிறது.

பரணதேவநாயனார் அருளிய 'சிவபெருமான் திருவந்தாதி' எனும் நூலில் கையெழுத்துப்பிரதி 'திருவந்தாதி' என்ற பெயரிலும், பட்டினத்துப்

---

1. இந்நூல் *1985*இல் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வெளி வந்துள்ளது.

பிள்ளையார் அருளிய 'கோயில் நான்மணிமாலை'யும், காள மேகப்புலவர் பாடிய 'திருவானைக்காவுலா மூல'மும், குமரகுருபரர் அருளிய சிதம்பர மும்மணிக் கோவை, திருவாரூர் நான்மணிமாலை ஆகிய நூல்களும் தாள் சுவடிகளாக உள்ளன. அனைத்தும் படியெடுக்கப்பெற்றவையாகும். இவற்றின் காலம் தெரியவில்லை.

அருணகிரிநாதர் அருளிய கந்தரந்தாதி உரையுடன் உள்ளது. முழுமை பெற்ற சுவடியாக இல்லை.

கச்சியப்பமுனிவர் இயற்றிய திருத்தணிகைப் புராணம், காஞ்சிப் புராணம் ஆகிய நூல்களின் முழுமை பெற்ற சுவடிகள் சிறிது பழுதடைந்த நிலையில் உள்ளன. திருத்தணிகைப் புராணம் *26-04-1867* இலும் காஞ்சிப் புராணம் *1866*இல் படியெடுக்கப்பட்டுள்ளன. நூலின் இறுதியில் இக்காலம் குறிக்கப்பட்டிருப்பதைக் கொண்டு இவற்றின் காலத்தை அறியமுடிகின்றது. மீனாட்சிசுந்தரம்பிள்ளை இயற்றிய கோயிலூரர்ப் புராணம், திருவாளொளிப் புற்றூர்ப் புராணம் ஆகிய இருநூல்களின் சுவடிகள் உள்ளன. இவையும் *1866*இல் எழுதப்பட்டுள்ளன. *1866*இல் எழுதப்பட்ட சி. தியாகராசச் செட்டியாரின் அளகாபுரி உமையம்பிகை பிள்ளைத்தமிழ் நூலின் சுவடியும் உள்ளது. இச்சுவடிகள் எவற்றிலும் ஆசிரியர் பெயர் குறிக்கப்படவில்லை.

சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் தம் கைப்பட எழுதிய திருநாவுக்கரசர் அல்லது மெய்யுணர்தல், சேக்கிழார் செம்மணித்திரன், சேக்கிழாரும் சேயிழையார்களும் ஆகிய மூன்று நூல்களின் சுவடிகள் உள்ளன.

கி.பி.*1854* முதல் *1944* வரை வாழ்ந்த காங்கயம் தெய்வசிகாமணி முதலியார் என்பவர் தம் கைப்பட எழுதிய நூதனத் திருப்புகழ்ச் சந்தக்கவி, சிவபிரான் மீது பாடிய பல பாடல்கள், கீர்த்தனைகள், காவடிச்சிந்து ஆகிய தலைப்புகளில் சுவடிகள் உள்ளன. இச்சுவடிகளில் எதுவும் இதுவரை அச்சாகவில்லை என்பது இவண் குறிக்கத்தகும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சைவ சமய குரவர்கள் தொடர்பான வரலாற்றுக் குறிப்புகளைச் சுருங்கிய அளவில் தேவாரப் பாக்கள் சிலவற்றையும் உரைநடையில் சில விளக்கங்களையும் சேர்த்து த. கனகசுந்தரம் பிள்ளை என்பவரால் எழுதப்பெற்ற இவற்றின் பலவிடங்களில் கூட்டெழுத்துக்கள் காணப்படுகின்றன.

சிவபிரானை மணக்க விரும்பிய பார்வதி அம்மையார் வழிபட்ட 'திருச்சுழியல்' எனும் ஊருக்குச் சுந்தரர் பாடியருளிய தேவாரப் பாக்களுக்கு *23-09-1949*இல் தணிகைமணி வ.சு. செங்கல்வராயபிள்ளை எழுதிய உரையுடன் கூடிய சுவடி ஒன்றும் உள்ளது.

### காப்பிய இலக்கியம்

திருத்தக்க தேவர் இயற்றிய சீவக சிந்தாமணிக் காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார். *1866*இல் படியெடுக்கப்பட்ட இந்நூற்சுவடி குறையுடையதாக உள்ளது.

### சிற்றிலக்கியம்

வேம்பத்தூர் பிச்சுவையர் *10-09-1931*இல் நிரோட்டக யமக வந்தாதிக்கு உரையுடன் எழுதிய நூல் முழுமை பெற்ற சுவடியாக உள்ளது.[2]

### நாட்டுப்புற இலக்கியம்

முத்தல யாத்திரையின் இலாவணிகள் எனும் நூல் *31-01-1984*இல் தட்டச்சு செய்யப்பட்ட சுவடி உள்ளது. இதன் மூலச்சுவடி தஞ்சைச் சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளது. இதே போன்று வல்லாளராசன் யட்சகானம் எனம் நூல் *10-01-1963*இல் படியெடுக்கப்பட்ட சுவடி ஒன்றும் உள்ளது. இதன்மூலச்சுவடி சென்னையிலுள்ள அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத்தில் உள்ளது.

### இலக்கணம்

தொல்காப்பியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம், மாறனலங்காரம், மாறன் அகப்பொருள் ஆகிய இலக்கண நூல்களின் படியெடுக்கப்பெற்ற முழுமை பெற்ற சுவடிகள் உள்ளன. இவை இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்டனவாகத் தெரிய வருகின்றன. ச. பாலசுந்தரம் எழுதிய தொல்காப்பியம் காண்டிகையுரையின் கையெழுத்துப் பிரதிகளும், திருஅடிகளாசிரியர் பயன்படுத்திய தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரைப் பிரதியும், தண்டபாணி சுவாமிகள் எழுதிய அறுவகை இலக்கணத்திற்குப் ப.வெ. நாகராசன் எழுதிய குறிப்புரையுடன் கூடிய பிரதியும்[3] சுவடிகளாக உள்ளன.

### வரலாறு

தஞ்சாவூர் மகாராட்டிர வம்சாவளி, இராச சரித்திர வம்சாவளி, போன்ஸ்லே வம்ச சரித்திரம், மராட்டியர் வரலாறு, மாணிக்கவாசகர் சரித்திரம் ஆகிய நூல்கள் படி எடுப்பானில் (Xerox) எடுக்கப்பெற்ற சுவடிகள் உள்ளன.

---

2. சமய இலக்கியத்தில் பிற சிற்றிலக்கியங்கள் இடம்பெற்றுள்ளன.

3. இந்நூல் *1991*இல் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வெளிவந்துள்ளது.

இவற்றின் மூலச்சுவடிகள் சென்னையிலுள்ள தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூல்நிலையத்தில் உள்ளன. தஞ்சை மராத்தியர் வரலாற்றிற்குப் பெரிதும் உறுதுணை புரியும் இச்சுவடிகளைக் கொண்டு தஞ்சை மராத்தியர் வரலாறு, நுண்கலைகள், தமிழ் இலக்கியம் போன்ற பொருள்களில் ஆய்வு நூல்கள் எழுதப்பட்டுள்ளன.

தமிழக வரலாறு பற்றிய கடிதம், சரித்திர நூல்களைக் கற்பதனால் வரும் பயன், சர்க்கரைப் புலவர் வரலாறு, சீனிப்புலவர் வரலாறு, சேதுபதிகள் வரலாறு ஆகிய சுவடிகளும் உள்ளன.

தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு கி.பி.*1676* முதல் *1855* முடிய ஆட்சி செய்த மராத்திய மன்னர்களின் காலத்தில் மராத்தி மொழியின் சுருக்கெழுத்தாகிய 'மோடி' எழுத்துப் பயன்பாட்டில் இருந்தது. இவை தஞ்சை அரசு ஆவணங்கள் (Tanjor Raj records) எனப்பெறும். இம்மோடி ஆவணங்கள் தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையம், சென்னை, கடலூர், திருச்சி, கோயம்புத்தூர், இராமநாதபுரம், மதுரை போன்ற ஊர்களிலுள்ள அரசு ஆவணக்காப்பகங்களில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவற்றுள் மதுரை தவிர்த்த ஏனைய ஊர்களிலுள்ள அர்சு ஆவணக்காப்பகங்களில் பாதுகாக்கப் பெற்ற மோடி ஆவணங்கள் தற்பொழுது தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளன.[4] இம் மோடி ஆவணங்கள் துணியினால் சுற்றப்பெற்ற கட்டுக்களாகவும் (Bundles), தொகுதிகளாகவும் (Volumes) ஏறத்தாழ *2000* கட்டுக்கள் உள்ளன. இவற்றுள் தஞ்சை அரண்மனை, கோயில்கள் தஞ்சை அரசரின் சொத்து, கடன் தொடர்பான விவரங்கள், தஞ்சையில் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் நடந்த நிருவாகம் தொடர்பான கடிதப் போக்குவரத்துகள், அக்கால மக்களின் வாழ்க்கைநிலை, சமுதாயநிலை, கல்விநிலை, பண்பாடு, பழக்க வழக்கங்கள், வரி விதிப்பு முறைகள், தண்டனைகள், சத்திரங்கள், நீதி மன்றம், கலைகள் தொடர்பான செய்திகள், இலக்கியக் குறிப்புகள் முதலான பல்வேறு செய்திகளைக் காணமுடிகின்றன. தென்னிந்திய வரலாற்றாய்வில் பல புதிய செய்திகளை வெளிக்கொணர்வதற்கு இம் மோடி ஆவணங்கள் பெரிதும் துணைநிற்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**மருத்துவம்**

சித்த மருத்துவம், யுனானி மருத்துவம் தொடர்பான சுவடிகள் சேகரிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் எழுதிய 'ஆகார நியமம்' என்ற சுவடி கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் எழுதப்பட்ட தாகும். உணவு உண்ணும் முறை, எவற்றை உண்ணவேண்டும், எவற்றை உண்ணக்கூடாது, உண்ணுவதற்குத் தகுதியானவை எவை போன்றவற்றைப்

பாடல் வடிவில் (எண்சீர் விருத்தம்) ஆசிரியர் கூறியுள்ளார். அக்கால உணவுப் பழக்கங்களை இச்சுவடியில் காணமுடிகின்றது.

செய்யது முகமது அண்ணாவியார் எழுதிய 'பிஸ்மில்லாஹி மானிற்றஹிம்' என்ற யுனானி மருத்துவச் சுவடியில் இந்துக் கடவுளர்கள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளனர். பலவகை நோய்கள் உண்டாகும் விதம், அவற்றைத் தீர்க்கும் முறை ஆகியனவற்றை இந்நூல் கூறுகிறது.

பல்வகை மூலிகைகள், அவற்றின் மருத்துவத் தன்மை, அவற்றின் பயன்பாடு போன்றவற்றை 'மூலிகை மர்மம்' என்ற சுவடி கூறுகிறது. அர்ஜா நிஸா ஹேல் எழுதிய 'அக்ராபா திந் தஃபிதர்' எனும் சுவடியில் முதல் ஒன்பது அத்தியாயங்கள் கிடைக்கவில்லை. *10* முதல் *13* முடிய உள்ள அத்தியாயங்களில் நுரையீரல், அதன் தன்மை, நுரையீரலில் ஏற்படும் நோய்கள், மருந்துகள்; இதய நோய், அதை நீக்கும் மருந்துகள், தீனிப்பை நோய்கள், போக்கும் வகைகள்; கல்லீரல், பித்தப்பை, மண்ணீரல் போன்ற உறுப்புகள், அவற்றில் உண்டாகும் நோய்கள், அவற்றைப் போக்கும் மருந்துகள்; மஞ்சள் காமாலை நோய், அதன் தன்மை, போக்கும் மருந்து; கர்ப்பப்பை, குதம், முழங்கால், முழங்கை, கீல்கள் போன்றவற்றில் உண்டாகும் நோய்கள் போன்றவற்றை விரிவாக விளக்கிச் செல்வதைக் காணமுடிகின்றது.

'திஸ்ஸே அக்ஸர் என்னும் ராஜ வைத்திய நூல்' என்ற மருத்துவச்சுவடியின் ஆசிரியர் பெயர், எழுதப்பட்ட காலம் தெரியவில்லை. ஆனால் இச்சுவடி *08-10-1910*இல் கட்டமைப்புச் செய்யப்பட்டுள்ள குறிப்பு மட்டும் கிடைக்கிறது. பன்னிரண்டு பாகங்களைக்கொண்ட இந்நூலில் தலை, மூளையொடு உள்ளடக்கிய நரம்பு மண்டலம், தலையில் ஏற்படும் நோய்கள், மூளையில் உண்டாகும் நோய்கள்; தொண்டை, நாக்கு, நாசி, காது போன்ற உறுப்புக்களில் உண்டாகும் நோய்கள்; மார்பு நுரையீரல்களில் ஏற்படும் நோய்கள் பற்றியும் இந்நோய்களுக்கு அளிக்கப்படும் மருந்துகள், மருத்துவ சிகிச்சை முறைகள் பற்றியும் விரிவாகக் காணமுடிகின்றது.

மேலும் இரண்டு பகுதிகளில் சித்த மருத்துவக் குறிப்பேடு எனும் சுவடியும், தெலுங்கு மற்றும் தமிழ் மருத்துவக் குறிப்புச் சுவடி ஒன்றும் *(400* பக்கம்*)* உள்ளன.

**நாடகம்**

நாடகம் தொடர்பான பல சுவடிகள் சேகரிக்கப்பட்டுள்ளன. கடலூர் வில்வநகரில் பிறந்து வளர்ந்த வி.வை.துரைசாமி பத்தர், துரை. பாவாடைசாமி பத்தர் ஆகியோர் எழுதிய நாடகங்கள் அச்சில் வராமல் சுவடிகளாக உள்ளன. *1882*இல் பிறந்த வி.வை. துரைசாமி பத்தர் சிறுவயது முதல் நாடகம்,

இராமாயணம், மகாபாரதம் போன்ற காப்பியங்கள் அடங்கிய தெருக்கூத்து மற்றும் மேடை நாடகங்களில் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தார். பனைஓலைச் சுவடிகளிலிருந்து பல கருத்துக்களைத் திரட்டி நாடக வடிவில் தம் கைப்பட நோட்டுகளில் எழுதியுள்ளார். நாடக ஆசிரியராக இருந்ததோடு பல நாடகங்களை அரங்கேற்றம் செய்தும் பல நடிகர்களை உருவாக்கியும் உள்ளார். *1896* முதல் *1926* வரை நாடகங்கள் எழுதப்பட்டதற்கான குறிப்புகள் இச் சுவடிகளில் காணப்படுகின்றன. சத்தியபாமா கெர்வபங்க நாடகம் என்ற சுவடி *1896*இல் எழுதப்பட்டுள்ளது. இச்சுவடிகள் சிலவற்றின் காலம் தெரியவில்லை. பெரும்பாலான சுவடிகள் முழுமை பெற்றனவாக உள்ளன. அரக்கு மாளிகை, இரேணுகை சரிதை, பாஞ்சாலிக் குறவஞ்சி, சுந்தர மூர்த்தி கல்யாண நாடகம், அர்ச்சுனன் தபசு நாடகம், பட்டினத்தார் சரிதை நாடகம், இயற்பகை நாயனார் சரித்திர நாடகம், அல்லி அர்ச்சுனன் நாடகம் போன்ற நாடகங்கள் அவற்றுள் சிலவாகும்.

இவருடைய ஒரே மகனான துரை. பாவாடைசாமி பத்தரையும் இத்துறையிலேயே பயிற்சி பெறச்செய்துள்ளார். *30.-6-1914*இல் பிறந்த துரை. பாவாடைசாமி பத்தர் தம் *12*ஆம் வயது முதல் தம் வாழ்நாள் இறுதிவரை இத்துறையிலேயே சிறந்து விளங்கியுள்ளார். புராணம் மற்றும் காப்பிய நாடகங்களில் பெண் வேடமிட்டு நடிப்பதில் ஆற்றல் மிக்கவர். கண்ணனின் மோகினி, சுபத்திரை, நளாயினி, திரௌபதி, குந்தி, நாககன்னி, பானுமதி, அம்பிகை, யசோதை, சீதை, தாரகை, ஆரியமாலா, ஈசுவரி, காந்தாரி, பத்மாவதித் தாயார் போன்ற பெண் வேடங்களில் அவர் நடித்துள்ளார். தான் ஏற்ற வேடங்களில் பேசவேண்டிய உரைநடை, பாடல்கள் போன்ற பகுதிகளை மட்டும் கையடக்க அளவிலான தாள்களில் எழுதி வைத்துள்ள சுவடிகள் பல உள்ளன. சிலவற்றில் மட்டும் காலம் குறிக்கப்பட்டுள்ளன. ஈசுவரன் படினம் (வெற்றி), இலட்சுமி படினம், நளாயினி படினம், சுந்தரி கல்யாணம், சுந்தரமூர்த்தி கல்யாணம் பரவைநாச்சி படினம், பதினெட்டாம் போர் போன்ற சுவடிகள் அவற்றுள் சிலவாகும்.

மகாபாரதம், இராமாயணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம் ஆகியவற்றுள் இடம்பெற்றுள்ள நிகழ்ச்சிகளே மேடை நாடகமாகத் தெருக்கூத்து வடிவில் எழுதி நடிக்கப்பட்டுள்ளன.

தா.ஏ. ஞானமூர்த்தி பல நாடகங்களை எழுதி மாணவர்களைக் கொண்டு மேடையில் அவற்றை அரங்கேற்றியுள்ளார். நாடகக்குழு ஒன்றை உருவாக்கிக் கோவையில் பல ஆண்டுகள் சிறப்புற்றுத் திறம்பட இயக்கியுள்ளார். இவரெழுதி இயக்கிய பல நாடகங்களுள் வைரமாலை *(1953)*, கனவுக்கோபுரம் *(1955)*, அமராபரணம் *(1964)*, சுடரும் பொன் *(1974)*,

செல்வமகள் *(1966)* ஆகிய ஐந்து நாடகங்களில் கையெழுத்துப் பிரதிகள் நல்ல நிலைமையில் உள்ளன.

## நூல் பெயர்

சுவடிகளில் காணப்பெறும் நூல் பெயர்கள் பின்வரும் முறையில் அமைந்துள்ளன.

1. நூல் தொடங்கப்பெறுவதற்கு முன்னர் நூல் பெயர் எழுதப்பட்டிருக்கிறது. *(சான்று : காஞ்சிப்புராணம்)*
2. சிலவற்றில் இன்னார் எழுதிய இன்ன நூல் என்ற குறிப்புக் காணப்படுகிறது. *(சான்று : சேரமான் பெருமாள் நாயனாரருளிய திருவாரூர் மும்மணிக்கோவை)*
3. சிலவற்றில் நூல் முடிந்தவுடன் இன்ன நூல் முற்றுப் பெற்றது என்ற குறிப்புக் காணப்படுகிறது. *(சான்று : கோயிலூரர்ப் புராண முற்றுப்பெற்றது)*
4. சிலவற்றில் இன்னார் எழுதிய இன்ன நூல் முற்றுப்பெற்றது என்ற குறிப்புக் காணப்படுகிறது. *(சான்று : பரணதேவர் அந்தாதி முற்றும்)*

## ஆசிரியர் பெயர்

சில சுவடிகளில் மட்டுமே ஆசிரியர் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. பெரும்பாலானவற்றில் ஆசிரியர் பெயர் காணப்படவில்லை. ஆசிரியர் பெயர் உள்ள சுவடிகளில் மட்டுமே இன்னார் எழுதிய இன்ன நூல் என்ற குறிப்பு இருக்கிறது. இதை வைத்து ஆசிரியர் பெயரை அறியமுடிகிறது. ஆசிரியர் பெயர் இல்லாத சுவடிகளில் நூல்பெயர் மட்டுமே காணப்படுகிறது. இத்தகைய சுவடிகளுக்கு அச்சான சுவடியாக இருந்தால் அச்சிடப்பட்ட நூலையும் சுவடியையும் ஒப்புநோக்கி ஆசிரியர் பெயரை ஒருவாறு அறிந்து கொள்ளலாம்.

## சுவடிகளின் காலம்

இங்குள்ள சுவடிகளின் காலம் கண்டுபிடிப்பதில் சில சிக்கல்கள் உள்ளன. ஒருசில சுவடிகளில் மட்டுமே அச்சுவடி / நூல் எழுதப்பட்ட காலம் காணப்படுகிறது. பெரும்பாலான சுவடிகளில் எழுதப்பட்ட காலம், குறிக்கப் பெறவில்லை. சிலவற்றில் தமிழ் ஆண்டு, மாதம், நாள், எழுதி முடித்த நேரம் போன்றவை காணப்படுகின்றன. சிலவற்றில் ஆங்கில ஆண்டு, மாதம், நாள் *(தமிழ் எண்களில்)* கொடுக்கப்பட்டு அதன் பின்னர் அதற்கு நேரான தமிழ் ஆண்டு, மாதம், நாள், நட்சத்திரம், நாழிகை முதலானவையும் எழுதப்பட்டுள்ளன. கிடைத்த சுவடிகளுள் மூலச்சுவடிகள், படியெடுக்கப் பெற்ற

சுவடிகள் போன்றவை அடங்கும். இச்சுவடிகள் *19, 20* ஆம் நூற்றாண்டுகளில் எழுதப்பெற்றனவாகத் தெரியவருகின்றன.

## சுவடிகளின் தன்மை

பதினெட்டாம் நூற்றாண்டு வரை கிடைத்த சுவடிகள் மிகப் பழைமை வாய்ந்தனவாக உள்ளன. தாள்களின் தன்மையைப் பொறுத்த அளவில் இச்சுவடிகள் மிகவும் பொறுப்புடனும், கவனத்துடனும் பாதுகாக்கப் படவேண்டியவையாகும். ஏனெனில் தாள்களை மடித்தால் பொடிப்பொடியாகச் சிதறிடும் நிலையில் இருப்பதே காரணமாகும். நல்ல நிலையிலுள்ள சுவடிகளில்கூட இடையில் பல்வேறிடங்களில் பூச்சிகள், புத்தகப்புழுக்கள் போன்றவற்றினால் சிதைக்கப்பட்ட தன்மையையும் காணமுடிகின்றது. பத்தொன்பது, இருபது ஆகிய நூற்றாண்டுகளில் எழுதப்பட்ட சுவடிகள் மிகவும் நல்ல முறையில் உள்ளன.

## சுவடிகளில் எழுதப்பட்டுள்ள முறை

பதினெட்டாம் நூற்றாண்டு வரை எழுதப்பெற்ற சுவடிகளில் ஓலைச்சுவடியில் எழுதப்பட்டுள்ள முறை காணப்படுகிறது. ஓலையிலிருந்து படியெடுக்கும்பொழுது அந்த ஓலையில் எப்படி எழுதப்பட்டிருந்ததோ அதே போன்று தாள்களில் எழுதப்பட்டிருப்பது ஒரு காரணமாகும். சுவடிகளில் எழுதப்பட்டுள்ள முறைகளுள் சிலவற்றை இவண் குறிப்பிடுவது சிறப்பாகும்.

சிலவற்றில் புள்ளி இல்லை. மகரம், னகரம், றகரம், டகரம், கால் *(ா)* ஆகியவற்றில் மட்டும் புள்ளிகள் இடப்பட்டுள்ள நிலையில் சில சுவடிகளும் இருக்கின்றன. பாடல் எண்களுக்குப் பெரும்பாலான சுவடிகளில் தமிழ் எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

பாடல்கள் உள்ள சுவடியில் உரைநடை போன்று தொடர்ச்சியாக எழுதும் மரபு காணப்படுகிறது. அவ்வாறு தொடர்ச்சியாக எழுதும்பொழுது சிறுகோடு *(-)* போட்டு எழுதும் வழக்கமும் உள்ளது.

கூட்டெழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஒற்றைக் கொம்பினை *(ெ)* எண்.*6* போல *(ே)* வும் ரகரம் காலாக *(ா)* வும் ஊகாரம் 'உள' போலவும் எழுதப்பட்டுள்ளது.

'திஸ்ஸே அக்ஸர் என்னும் ராஜவைத்திய' நூலில் 'அகர முதல வெழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு' என்ற திருக்குறளை முதலில் எழுதி அதன்பின்னர் நூல் தொடங்கப்பட்டுள்ளது. அதேபோன்று நூலில் தொடக்கத்தில் பின்வரும் முறைகளுள் ஒன்றைக் கையாண்டிருப்பதையும் காணமுடிகின்றது.

1. உ
கடவுள் துணை

2. உ
சிவமயம்

3. ஹரிஓம் நன்றாக குரு வாழ்க
குருவே துணை

4. சிவமயம்

5. ஓம்
கடவுள்துணை

இவ்வாறே நூலின் இறுதியில் அமையும் முறைகள் வருமாறு:

1. முற்றிற்று

2. இந்த ஆண்டு இன்ன மாதம் இன்ன நாளில் இன்ன கிழமையில் இத்தனை மணிக்கு எழுதி முடிக்கப்பெற்றது என்று கூறுதல். சான்று: *1913* வருடம் பிப்பிரவரி மாதம் *28*உ வெள்ளிக்கிழமை பகல் *3.35*க்கு முற்றுப்பெற்றது.

3. சுபமஸ்து

4. சுபம்

5. வேணும்

பாடலின் இடையில் அல்லது உரைநடையில் எழுத்துகள் அல்லது தொடர்கள் ஏதேனும் விடுபட்டிருப்பின் ^, + போன்ற குறியீடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சான்று : வணங்குதும் வாழி, மையிற்சில.

மூலச்சுவடியிலிருந்து படியெடுக்கப்பெற்ற சுவடிகளில் படி எடுத்தவர் பெயர், நாள், ஒப்பம்; ஒத்துப்பார்த்தவர் பெயர், ஒப்பம், நாள் போன்றவற்றை எழுதியிருப்பதையும் காணமுடிகின்றது. சான்று: குமரன் துணை, ஒ.ம். ச.தி. *18-01-85, 5-03-85;* எழுதி முடிந்தது. சு.கிருஷ்ணானந்தம் *4.3.85,* ஒத்துப்பார்க்கப்பட்டது; ச. திலகம் *5.3.85.*

நாடகம் தொடர்பான சுவடிகளின் பல சுவையான செய்திகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒருசில வருமாறு:

இஃது எழுதினது துன்மதி ௵ ஐப்பசி மீ 4 வில்வராய நத்தத்திலிருக்கும் சண்முகம்பிள்ளை மாணாக்கருள் ஒருவராகிய துரைசாமி

பத்தர் யெழுதி முடித்தார். இதை யெடுத்தவர்கள் வாசித்துப் பார்த்து அன்னவரிடம் கொடுத்து போக வேண்டியது. இப்படிக்கு வி.வ. துரைசாமி பத்தர் *(அல்லி அர்ச்சுனன் நாடகம்).*

ஐயா, இது ருத்ரோத்கரி வருஷம் ஆவணி மாசம் *2*ஆம் தேதி சனிக்கிழமை காலை *8* மணிக்கு எழுதி முடிந்தது. இதை எடுத்து வாசித்துப் பார்த்துவிட்டுக் கடைசியில் துரைசாமிபத்தர் கையில் கொடுத்து விடவேண்டியது. அப்படித் தவறினால் போலீஸார் வசம் ஒப்பிக்கப்படும் *(கூலிக்குத் தாலி கட்டும் சவுந்தரி கலியாணம்).*

*1955*இல் கோவைக் கல்லூரிகளுக்கிடையே நடந்த நாடகப் போட்டியிலும் *1959*இல் தமிழ்நாடு தமிழாசிரியர் மாநாட்டிலும் *1976*இல் *30* காட்சிகள் கொண்ட முழுநீள நாடகமாகவும் நடிக்கப்பெற்றது. கோவை மாவட்ட ஆட்சித்தலைவரால் அங்கீகரிக்கப்பட்டது *(கனவுக் கோபுரம்).*

**முடிவுரை**

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மூலச்சுவடிகளும், படியெடுக்கப் பெற்ற சுவடிகளும் சேகரித்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அச்சில் வெளிவராத சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடுவதனால் அக்கால மக்களின் வாழ்க்கை நிலை, பண்பாடு, வரலாறு, மருத்துவம் போன்றவற்றை அறிய இயலும். தென்னிந்திய வரலாற்றாய்விற்குப் பெரிதும் உதவும் நிலையில் பல புதிய செய்திகளை வெளிக்கொணர்வதற்கேற்ற முறையில் மோடி ஆவணச் சுவடிகள் விளங்குகின்றன. சுவடிகளில் காணப்படும் செய்திகளில் பல சுவையான தகவல்களையும் அக்கால மொழிநிலைகளையும் அறியமுடிகின்றன. பத்தி இயக்க காலத்தில் மக்களிடையே இருந்த 'பதிகப்பலன்' கூறும் மரபைத் தெருக்கூத்து நாடக மேடைகளில் கலைஞர்களாலும் நாடக ஆசிரியர்களாலும் பெரிதும் பாராட்டிப் போற்றப் பட்டிருப்பதைக் காணமுடிகிறது. மேலும் 'இதைச் செய்யாவிடின் உனக்கு இந்தத் தண்டனை கிடைக்கும்' என்று கூறும் புதிய மரபையும் காண முடிகிறது.

* * *

# 17. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஓலைச் சுவடி ஆவணங்கள்

முனைவர் தி. மகாலட்சுமி

## முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடங்கப்பெற்ற நாளிலிருந்தே ஓலைச் சுவடிகள் திரட்டப்பெற்றன. முன்னாள் இயக்குநர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் *1974*-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் சுவடியியற் பணிகளை மேற்கொள்ளச் செய்தார். அன்று முதல் சுவடி நூற் பதிப்புகள் வெளிவரத் தொடங்கின. *1979* அக்டோபர் ஆறாம் தேதி சுவடிக் கல்விக்கெனத் தனிப்பிரிவு ஒன்று ஏற்பட்டதன் விளைவாய் **முழுநேரச் சுவடியியற் பட்ட மேற்படிப்புப் பட்டய வகுப்பு** நடைபெறத் தொடங்கி இன்று வரை நடந்து வருகிறது.

இந்நிறுவனச் சுவடிக் காப்பகத்தில் *500*-க்கும் மேற்பட்ட ஓலைச் சுவடிக் கட்டுகளும், *30* தாள்சுவடி நூற்கட்டுகளும் உள்ளன. இவற்றுள் முறையே *950*-க்கும், *60*-க்கும் மேற்பட்ட நூல்கள் இடம் பெற்றுள்ளன. இலக்கணம், இலக்கியம், சமயம், மருத்துவம், சோதிடம், கணிதம், எண்ணியம், வரலாறு முதலான பொருண்மைகளில் அமைந்துள்ள தமிழ்ச் சுவடிகளில் எண்ணிக்கையில் சமய நூல்கள் முதல் நிலையிலும், மருத்துவ நூல்கள் அடுத்த நிலையிலும் காணப்படுகின்றன. இவற்றுள் ஆவணக் கணக்குத் தொடர்பாக ஒன்பது சுவடிகள் உள்ளன. அவை நிலக்கணக்கு, வீட்டுக் கணக்கு ஆகிய பொருண்மைகளில் அமைகின்றன. இவ்வொன்பது சுவடிகளில் காணப்படும் பொதுச் செய்திகளும், அவற்றுள் ஒரு சுவடியில் காணப்படும் விரிவான செய்திகளும் இவண் ஆய்வுக்குட்படுத்தப் படுகின்றன.

## ஓலைச் சுவடி ஆவணங்கள்

ஏட்டுச் சுவடிகளினின்று இலக்கியம், இலக்கணம், மருத்துவம், கதைப்பாடல், சோதிடம், கணிதம், சில வரலாற்றுச் செய்திகள் போன்றவையே பெரும்பாலும் பதிப்பிக்கப் பெற்றும், ஆய்வுக்குட்படுத்தப்பட்டும் வந்துள்ளன. இவற்றுள் ஆவணங்கள் என்ற பொருண்மையை நோக்கக் கல்வெட்டுகளில் காணப்பெறும் ஆவணங்களே பெருமளவில் பதிப்பிக்கப் பெற்றும், நுணுகிக் கற்றோரால் எடுத்துக் காட்டுக்களுக்காகக் கையாளப்பட்டும் ஆய்வுகள் நிகழ்த்தப் பட்டும் வருகின்றன. இவ்வாவணங்கள் மன்னன் ஆட்சி, அரசு,

அமைச்சு மற்றும் இவை சார்ந்த வரலாற்றுக் கருத்துக்களையே வெளிப்படுத்துகின்றன. ஆனால் கல்வெட்டு ஆவணங்களுக்கும் முன்பாக அரசன் முதல் சாதாரணக் குடிமகன் வரை ஓலைச் சுவடிகளிலேயே கணக்குகளை எழுதி வைத்திருந்த நிலையை அறிய முடிகிறது. இக்கணக்குகள் ஆட்சி பணி, கோயில், நிலம், வீடு, கடன் போன்ற அன்றாட வரவு செலவுகளைக் குறித்தனவாம்.

இவ்வகையான ஓலைச்சுவடி ஆவணங்கள் ஓலை முறி, சீட்டு முறி, சாசனம், பத்திரம், கருணை போன்ற பல பெயர்களில் கிடைத்து வருகின்றன. சான்றாக ஓலைகளை நீளமாக எடுத்து அவற்றில் கணக்குகளை எழுதி, சுருளாகச் சுருட்டி வைப்பது சுருணை எனப்படும். கோயில்களிலும், ஆட்சி அலுவலகங்களிலும் இவை இன்றும் கிடைத்து வருகின்றன. ஓலைமுறி, பத்திரம் போன்றன முழு ஓலைகளில் எழுதப் பெற்று இருக்கும். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பாதுகாக்கப் பெற்று வரும் ஓலைச் சுவடிகளில் நிலக்கணக்கு, வீட்டுக்கணக்கு, பதிவுக் கணக்குத் தொடர்பான சுவடிக் கட்டுகளே உள்ளன. ஆதலால் அவற்றைப் பற்றி மட்டுமே இக்கட்டுரை ஆராய்கிறது.

## ஆவணங்கள் - பதிவேடுகள்

நிலங்கள், வீடுகள் போன்ற சொத்துக்களின் உரிமைப் பட்டயங்கள், கிரயம், தானம், கடன் ஒத்தி போன்ற சாசனங்கள், ஒப்பந்தப் பத்திரங்கள், சான்றுகள், தேர்தல் வாக்குச் சீட்டுகள், அரசு ஆணைகள், அறிவிப்புகள் போன்றவை ஆவணங்கள் எனப்படும். பதிவேடுகள் என்பவை வரவு செலவு கணக்குகள், அன்றாட நிகழ்ச்சிக் குறிப்புகள் நிலங்களின் உரிமை, வரிநிர்ணயம், வரிவசூல், ஊழியர்கள் மற்றும் அவர்களின் ஊதியம் ஆகிய விவரங்கள், நன்கொடைகள் வழங்கும் விவரங்கள் போன்றவை (பா. கண்ணையன், ஓலைச் சுவடிகளில் ஆவணங்களும் பதிவேடுகளும், ப.5).

## நிறுவன ஓலைச்சுவடி ஆவணங்களின், பதிவேடுகளின் பொதுப் பண்புகள்

1. நிலங்களின் உரிமை, சாசனம் போன்ற ஆவணங்கள் சிலவும், அரசு முத்திரை பதித்த ஓலைச் சுவடி ஆவணங்கள் இரண்டும், கிராமக் கணக்கும், தனியார் நில அடமானக் கடன் பத்திரம் போன்ற ஆவணங்கள் சிலவும் உள்ளன.

2. வரவு செலவு கணக்குகள், அன்றாட நிகழ்ச்சிக் குறிப்புகள் முதலான சில பதிவேடுகள் உள்ளன.

3. தமிழ் ஆண்டு, மாதம், நாள் எழுதி முடித்தநேரம் போன்றவை காணப்பெறுகின்றன. சிலவற்றில் ஆங்கில ஆண்டு, மாதம், நாள் ஆயின

தமிழ் எண்களில் கொடுக்கப்பெற்று அதன் பின்னர் அதற்கு நேரான தமிழ் ஆண்டு, மாதம், நாள், நட்சத்திரம், நாழிகை, முதலானவையும் எழுதப் பெற்றுள்ளன.

4. ஒலையில் எழுதப்பெற்ற ஆவணங்களில் தொடர்புபட்டவர் அனைவரும் கையொப்பமிடுவதும், ஆவணத்தில் எழுதப்பட்டுள்ள செய்திகளை முழுவதும் நேரில் அறிந்தவர் சாட்சிக் கையொப்பமிடுவதும், படி எடுத்தவர் பெயர், நாள், ஒப்பம், ஒத்துப் பார்த்தவர் பெயர், ஒப்பம், நாள், சாட்சி ஒப்பம் முதலியனவும் குறிக்கப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாகச் **சாட்சி ஒப்பம் - யிந்தப் படி அறிவேன்** என்று எழுதி சாட்சிக் கையெழுத்து வாங்கப்பட்டுள்ளது. **யிந்தப்படி அறிவேன்** என்பது இப்படி அறிவேன், இந்தப் படிக்கு மட்டும் நான் அறிவேன் என்ற பொருளில் எழுதப்பட்டுள்ளது.

5. பணம் வாங்குவதற்கு எழுதப்பெறும் கடன்பத்திரம், உறவு முறையில் எழுதப் பெறும் விடுதலைப் பத்திரம், போக்கியக் கடன் பத்திரம் முதலானவை பற்றியும், இன்னார் கொடுத்து வந்து சேர்ந்த சொத்து, முன்னோர் வழிவந்த சொத்து, தேவை காரணமாய்ப் பிறருக்கு அடமானம், குத்தகை, போக்கியம் போன்றன போடுதற்குப் பயன்பட்ட சொத்தின் விபரம், இங்ஙனம் போடப்பட்ட பொருள்களின் விபரம், கடனாகப் பெறும் பணத்தின் அளவு, அதற்காகச் செலுத்தும் வட்டி விகிதம், மாதாமாதம் வட்டி கட்டும் முறை, வட்டியையும் அசலையும் ஒன்றாகக் கட்டும் முறை முதலானவை பற்றியும் குறிப்பிடப்படுகின்றன.

6. ஒரு கிராமம் என எடுத்துக் கொண்டால் அதிலுள்ள நிலங்கள் யார் யாருக்குரியவை, எவர்களுக்குரியவை என மெய்ப்பிக்க எழுதிக் கொடுத்தவர், அந்நிலப் பகுதிகளின் பெயர்கள், அந்நிலங்கள் எந்தெந்தத் திசைகளில், எந்தெந்த இடங்களில் இருக்கின்றன, வீடு, தோட்டம், காடு, தோப்பு என்ற வகையில் அந்நிலங்கள் என்னவாக உள்ளன, அவற்றிற்கான செலவினங்கள், நிலங்களின் உரிமையாளர் அல்லாமல் தற்போது பயன்படுத்தி வருபவர்களின் விபரம், நிலங்களை நில உரிமையாளர் போகியத்திற்கு அல்லது குத்தகைக்கு விட்ட முறை, அந்நிலங்களில் என்னென்ன வகைப் பயிர்கள் எவ்வெவ்வளவு விளைந்தன என்ற விளைச்சலின் அளவு, வேளாண்மை செய்தவனும், நில உரிமையாளனும் பிரித்துக் கொண்ட முறை, குத்தகையாக விளையும் தானியத்தில் எவ்வளவு, எப்பொழுது தரவேண்டும், எந்த அளவால் அளந்து தரவேண்டும், தந்தபின் தந்ததற்கான குத்தகைக் கணக்கை நில உரிமையாளரிடமிருந்து எப்படி எழுதிப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பன போன்ற செய்திகள் இடம் பெற்றுள்ளன. உதாரணமாகத்

தென்னங்கன்று வாங்கிய வகையில் ஆன செலவு, பயிர் நடுவதற்கு ஆன செலவு முதலான செலவினங்களும் குறிக்கப் பெற்றுள்ளன.

7. வீட்டுச் செலவுகளுக்கு என்ற முறையில் குடும்பத்தில் நிகழும் அனைத்துச் செயற்பாடுகளுக்கும் ஆகின்ற செலவினங்களின் கணக்குப் பட்டியலும், வீடு கட்ட ஆன செலவுகளின் விபரக் கணக்குகளும், தச்சரின் நாட்கூலிக் கணக்கு, ஒருநாளில் செய்து முடித்த பொருட்களின் எண்ணிக்கை முதலியனவும் குறிக்கப் பெற்றுள்ளன.

வீட்டிலுள்ள பொருட்களும், அவற்றின் பெயர்களும், எண்ணிக்கைகளும் குறிக்கப் பெற்றுள்ளன. பொருட்களை வகைப்படுத்தி அந்தந்த வகையின் ஈற்றில் 1 ஆக இத்தனை உருப்படிகள் என்பதாகத் தொகைகள் கொடுக்கப் பெற்றுள்ளன.

கோவிலில் நடைபெறும் சிறுசிறு பூசைகளுக்கும், பெரிய உற்சவங்களுக்கும் அளிக்கப்பெற்ற நன்கொடை விபரங்கள் இடம் பெற்றுள்ளன.

**காட்டு:**

கோவில் சிவராத்திரி உபயம் ரூ*500/-*

சோதனூர் மாதன் உபயம்

வைத்தீசுபரங்க கோவில் அருச்சனை உபயம்

கிருத்திகை உபயம்

தோட்டம், காடு, வயல், வீடு, வீட்டுச் செலவு, தோட்டச் செலவு முதலான பலதரப்பட்ட விபரங்கள் கூறப்பெறினும் வயல், காடு, தோட்டம் போன்றவற்றை யார் யார் எப்படிப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும் என்ற செய்திகளே மிகுதியாகக் காணப்படுகின்றன.

இவற்றிலிருந்து கீழ்க்காணும் செய்திகளை அறியமுடிகிறது.

எழுதப்படும் நிலபுலன்களின் கிரய சாசனங்கள், ஒத்தி அடமானம் போன்ற கடன் சாசனங்கள் பங்காளிகளின் பாகப் பிரிவினைப் பத்திரம், ஒப்பந்தங்கள், அதிகாரப் பத்திரம் போன்ற சாசனங்களில் கண்டுள்ள முறைகள் இன்றும் மாறுதலின்றி எழுதப்பட்டு *1/2* ரூபாய் வரை வட்டி விகிதம் வாங்கப்பட்டிருக்கிறது.

குடிமக்களின் சொத்து விவரம், கடன் தொடர்பான விவரம், அக்கால மக்களின் வாழ்க்கை நிலை, சமுதாய நிலை, பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலியன தெரிய வருகின்றன. பொருளியல் மற்றும் சமூக வாழ்க்கையைப் பற்றிய பல செய்திகளை நேரடியாகவும், சிலவற்றை யூகித்தும் பெற முடிகிறது.

குறிப்பாகச் சாதி, சாதிப்பிரிவு, உறவுமுறை, பல பெண்டிரைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம், கொத்தடிமை முறை, நில அமைப்பு, கிராம அமைப்பு, ஊர்ப் பெயர்கள், வழக்குச் சொற்கள், பொருட்களின் பெயர்கள் போன்றன பற்றி அறிய முடிகிறது.

## அடமானப் பத்திரம்

இந்த ஒன்பது சுவடிகள் தவிர, மந்திர மருத்துவச் செய்திகளடங்கிய *4* முதல் *34* வரை ஏட்டெண்கள் இடம் பெற்றுள்ள இந்நிறுவனச் சுவடி *(397:641)* ஒன்றில் இடையிடையே ஏடுகள் இன்மையால் மொத்தம் உள்ள *25* ஏடுகளில், இறுதி ஏடான *34* ஆவது ஏட்டில் நூலோடு தொடர்பில்லாத செய்தி ஒன்று இடம் பெறுகின்றது. அதில் அடமானப் பத்திரம் கிரயமாக்கப்பெற்ற செய்தி குறிப்பிடப் பெற்றுள்ளது.

______ கடைய ராவுத்தர் மகன் பீர் முகமது ராவுத்தன் அனேக வணக்கமாய் எழுதிக் கொண்ட விண்ணப்பப் பத்திரம் பிறந்த தேதி *1875* வருஷம், நவம்பர் மாதம் *5*ந் தேதி தமிழுக்கு *1511* வருஷம் அப்பசி மாதம் *22*யில் ரூபாய் *50*-க்கு அடமானம். *1877* வருஷம் ஏப்பிரல் மாதம் *7*ந் தேதி கிரயம்.

இப்படிக்குச் சூசை சவரிமுத்து பிள்ளை சூசை அந்தோணி

அரசு முத்திரையுள்ள முத்திரை ஓலையில் இச்செய்தி எழுதப்படாததால் முறையாகப் ப்திவு செய்யப் பெற்ற சுத்தக் கிரயப் பத்திரத்தின் நகலாக இது இருக்கலாம் என்பதும், தன் தேவைக்கென எழுதிய மந்திர மருத்துவக் குறிப்புகளடங்கிய ஏடுகளுடன் இதுவும் சேர்க்கப்பட்டிருக்கிறது என்பதும் தெரிகிறது.

## சுவடி விளக்கம்

ஆவணங்கள் என்று பெயர் தரப்பட்ட ஒரு சுவடிக் கட்டில் *25* ஏடுகள் உள்ளன. ஏடுகளுக்கு எண்கள் இல்லை. தனித்தனிச் செய்திகள் அடங்கிய பல செப்திகளின் திரட்டாக, தொகுப்பாக இது உள்ளது. ஆறு ஏடுகளைத் தவிர பிற அனைத்தும் நரம்பு பிரிக்கப்படாத சட்ட ஏடுகளாக உள்ளன. *23* ஆவணங்கள் இச்சுவடியில் உள்ளன. ஆவணப் பதிவகத்தில் பதியப்பட்ட இரண்டு உடன்படிக்கைகள், அரசுக் கருவூல முத்திரை கொண்ட ஓலைகள் நான்கில் எழுதப்பெற்றுள்ளன. இச்சுவடியில் உள்ள ஆவணங்கள் ஆவண மொழி நடையில் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் இலக்கணப் பிழைகள் மிகுதியாக உள்ளன. பல பேச்சு வழக்குச் சொற்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

## இச்சுவடியில் இடம் பெற்றுள்ள ஆவண வகைகள்

குதுவைக் கடன் சீட்டு, குதுவைப் பத்திரம் குதுவைக் கடன் பத்திரம், விடுதலைப் பத்திரம், உயில், இரசீது, கடன் சீட்டு, உடன்படிக்கை, தண்டல், வாயிதாப் பணம் செலுத்தல் விவரம், அடிமைச் சீட்டு, மேல் ஓலைச் சீட்டு ஆகிய வகைகளில் இந்த *23* ஆவணங்களும் அடங்குகின்றன.

## சொத்து விவரச் செய்திகள்

*23* ஆவணங்களுள் எட்டு ஆவணங்கள் ஒருவர் தம் சொத்தை வேறொருவரிடம் ஈடுவைத்து அவரிடம் கடன் வாங்கியதைப் பற்றியவை. அரசு கடனை அடைத்தல், திருமணச் செலவு உழைப்பில் ஆர்வமின்மை முதலான காரணங்களுக்காக நிலத்தை ஒருவர் ஈடுவைக்க முன் வருகிறார். ஈடுவைத்தவர் கடன் முதலையும் வட்டியையும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் திருப்பித் தர வேண்டும். அப்பொழுது ஈடுவைத்த நிலத்தின் முழு உரிமையைத் திரும்பப் பெறுவார். அதுவரை, அவர் நிலத்தை அவரே பயிரிட்டு அனுபவித்து வரலாம். குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் கடன் தொகையைச் செலுத்த வில்லையென்றால் நிலத்தை அனுபவிக்கும் உரிமையைக் கடன் கொடுத்தவர் பெறுவார். அதுமுதல் அவர் அந்நிலத்தின் மீதான வரியையும் அரசாங்கத்துக்குச் செலுத்தி வர வேண்டும்.

### காட்டு

— **நிலக்குதுவைக் கடன் பத்திரம்** என்ன வென்றால் *1269*ம் பசலியில் நான் கட்ட வேண்டிய சர்க்கார் பாக்கிக்காக என் பட்டா நிலங்களில் இரண்டே சில்லறை காணியை ரூபாய் *33-0-35* மேற்படி சர்க்காருக்கு ஜப்தி செயிது யேலத்துக்கு வாயிதா சமீபீச படியால் யென்பங்குக்கு நன்சை நிலங்களில் *991*.நெகாணி *¼3* வீசம், *996*.நெகாணி *¼493*. நெ.காணி காலே அரைக்காணி ஆக நெ.*3*-க்குக் காணி *1-1* மாகாணி முக்காலே அரைக் காணி. யிந்தக் காணி ஒண்ணே வீசம் முக்காணி அரைக்காணியும் உம்மிடத்தில் **குதுவையா** வச்சுனான் கடனாக வாங்கின ரூபாய் *33* யிந்த ரூபா முப்பத்து மூணுக்கும் யிதுமுதல் மாச வட்டி ஒண்ணு ஆக ஏறின வட்டியும் முதலும் நாளது வருஷம் பங்குனி மாதம் *3*-ந் தேதிக்குள் உமக்கு நான் செலுத்தி மேலெழுதிய நிலங்களை மீட்டுக் கொள்ளக் கடவேனாகவும். மேலெழுதிய கெடுவுப் படிக்கு மீட்டுக் கொள்ள முடியாவிட்டால் அது முதல் உமக்கு நான் வட்டியும் முதலும் கட்டுகுற வரைக்கும் மேல் கண்ட நிலங்களை **உழவடை ஒத்தியாக** அனுபவிச்சுக் கொண்டு அதற்குண்டாகிய சர்க்கார் தீர்வையைச் செலுத்தி அதிலுள்ள பலனை அனுபவிச்சுக் கொள்ளக் கடவீராகவும். யிந்தப் படிக்கு யென் மனராசியில் யெழுதிக் குடுத்த நிலக் குதுவைக் கடன் பத்திரம்.

கந்தசாமி முதலி கையெழுத்து

**சாஷிகள்**

கொ. சபாபதி முதலி அறிவேன்

கொ. சுப்பய முதலி அறிவேன்

வாங்கிய கடனைத் தரமுடியாததற்காக அடமானம் போட்ட, தனது உடைமையில் குறிப்பிட்ட அளவு பங்கைச் சுத்தக் கிரயம் செய்து கொடுத்து விட்டு மீதி உடைமையை ஈடுவைத்தவர் திரும்பப் பெற்றிருக்கின்றார்.

**காட்டு**

...... சங்கர முதலி எழுதிக் குடுத்த குதுவைக் கடன் சீட்டு யென்ன வென்றால் ...... மேற்படி யேக கிஸ்திக்குக் கட்டில் கண்டிருக்கிற படிக்கு யென் வீடும் மேற்படி **கிராமிராசும்** யிதுகளை நாளது தேதி தங்களிடத்தில் குதுவையாக வைத்துக் கடனாக வாங்கின ...... *17½* விராகன் ...... வட்டி கூட்டி, கூடிய வட்டியும் முதலும் ...... தேதிக்குள் குடுத்து விட்டு யென் யேககிஸ்திக் கட்டை மீட்டுக் கொள்ளக் கடவேனாகவும், யிந்தக் கெடுவுக்குள்ளே குடாமல் மேல் நின்றால் மேலெழுதிய வீடும், கிராமப் பங்கு முக்காலில் தங்கள் பணத்துக்கு யீடாக வுங்களுக்குக் கால் பங்கு மாத்திரம் இதுவே **சுத்த கிரை**யமாய் செய்து குடுத்து, அந்தக் காலு பங்குக் குண்டான, நஞ்சை, புஞ்சை, காணி **மனையடை, வெளியடை, செரியடை** ...... யிந்தப் பங்குக் குண்டான நான் பிறிது விட்டு நின்ற பங்கு அரையும் வீடும் அரைப்பங்குக் குண்டானது மேலெழுதிய காலுப் பங்குக்கு எழுதினப் படிக்குச் சகல சுதந்திரம் நான் அனுபவித்துக் கொள்ளக் கடவேனாகவும் பின்னும் நிலத்தைத் தங்கள் பங்கு, காலுக் குண்டானமைப் பிரித்துக் குடுத்து யென் யேககிஸ்திக் கட்டை நான் வாங்கிக் கொள்ளக் கடவேனாகவும் ......

வாங்கிய கடனுக்காகச் சொத்தில் ஒரு பங்கை எழுதிக் கொடுத்தமை இச்சுவடியில், **கிராமக் குடித்தன மிராசுக் கிரய சாதனம்** என்றும் சுட்டப் பெறுகிறது. மேலும் ஒருவரே பல பங்குகளுக்கு உரியவராக இருப்பதால் மிகுதியான சொத்துக்களை உடையவராக இருந்திருக்கின்றனர் என்பது தெரிகிறது. வாங்கிய கடனைத் தரமுடியாமல் போனால், கடன் வாங்கியவருடைய சொத்தைக் கடன் கொடுத்தவர் தமதாக்கிக் கொண்டு, மீதிப் பணத்தைத் தனக்குத் தருமாறு கடன் வாங்கியவர்கள் எழுதிக் கொடுத்திருக்கின்றனர்.

**காட்டு**

...... வைய்யாசி மாசம் *30* தேதிக்குள்ளே தங்களுக்காவது தங்கள் ஒத்திரவு பெற்றவர்களுக்காவது கொடுக்கக் கடவேன். அப்படிக்குக் கொடாவிட்டால் குடியிருக்கும் செங்கல் கட்டடம், தட்டோடு போட்டிருக்கும் வீட்டைச் **சுத்தக் கிரயம்** செய்து தங்களுக்குச் சேருகிற பாக்கியை எடுத்துக் கொண்டு அதிகமிருக்கும் பணத்தை எனக்குக் கொடுத்து விடவும்.

குறிப்பிட்ட காலத்திற்குள் கடனைத் திருப்பித் தராவிட்டால் வழக்காடு மன்றத்தில் போட்டு கடன் தொகையையும் வழக்காடு மன்றச் செலவையும் வாங்கிக் கொள்ள இசைவு தெரிவித்திருக்கின்றனர். அவ்வகையில் கடன் கொடுத்தவர் வழக்காடு மன்றத்தில் வழக்குத் தொடுத்துத் தனக்குச் சேர வேண்டிய தொகையுடன் வழக்குத் தொடுத்ததற்கான செலவினையும் பெற்றிருக்கின்றனர்.

**காட்டு** *: 1*

—— புரட்டாசி மாதம் *30* தேதிக்குள்ளே குடுக்கக் கடவோம். அப்படிக் குடாமல் போய்விட்டால் கோர்ட்டிலே போட்டு, கோர்ட்டுச் சிலவுடனே வாங்கிக் கொள்ளக் கடவீர்களாகவும்.

**காட்டு** *: 2*

—— ஜவலரி தாலுக்கா முனிஷிப்பு கோர்ட்டார் —— நெ. உன் பேரில் தாக்கல் செய்த ராசியில் ஒப்புக் கொண்ட படிக்கு நாளது தேதியில் வரவு *39-6-3*யிது ரூபா முப்பத்தொன்பதும் அணா ஆறும், பைசா மூணும் கோர்ட் செலவு வட்டியுடனே எனக்குச் சேர்ந்து போச்சுது. நான் பூவிருந்த வல்லி கோர்ட்டாருக்குப் போயிருந்த நெம்பர் —

**பிறவிவரங்கள்**

அரசு ஆவணப் பதிவகத்தில் பதியப்படாமல் தனிப்பட்டவர்களால் செய்து கொள்ளப்பட்ட நான்கு உடன்படிக்கைகள் இச்சுவடியில் உள்ளன. இவற்றில் நில உரிமையாளர் தன்னுடைய நிலத்தை வேளாண்மை செய்தவனிடம், முறையாகப் பெற வேண்டிய தொகையில் குறிப்பிட்ட தொகையைத் தர வேண்டாம் எனத் தள்ளுபடி செய்தல், கூட்டுக் குடும்பம் தனியாகப் பிரிதல், அண்ணன் வாங்கிய பணத்திற்காகத் தம்பி வேலை செய்து கழிக்காமல் வேலையை விட்டு விட்டால் வாங்கிய பணத்திற்கும் அதற்குண்டான நஷ்டத்திற்கும் தம்பி ஒத்துக் கொள்ளுதல், கிராமப் பணியை முறையாகச் செய்யாமல் தவறு செய்ததால் அபராதம் கட்டியவர்கள் இனிமேல் தவறு செய்யின் அபராதம் கட்டுவதுடன் தொழிலையும் விட்டு விடுகிறோம் என எழுதிக் கொடுத்தல் ஆகிய பொருண்மைகள் உள்ளன.

தந்தையுடன் சேர்ந்து, கூட்டாக வியாபாரம் செய்தவரிடம் தந்தை இறந்ததால் உரிய தொகையைப் பெற்றுக் கொண்டு எழுதிக் கொடுத்த **விடுதலைப் பத்திரம்** ஒன்றும், தனது சொத்தைத் தாய்மாமனுக்கு எழுதி வைத்த **உயில்** ஒன்றும் இச்சுவடியில் இடம் பெறுகின்றன.

அடமானமாகப் போட்ட மரங்களை மரத்தின் சொந்தக்காரர் வெட்டி, விற்றுக் கடனையும் வட்டியையும் கட்டுதல் அல்லது அடமானம் போட்டுக் கொண்டவர் மரங்களை விலைக்கு எடுத்துக் கொண்டு கடனும் வட்டியும் போக மீதியை மரச் சொந்தக்காரருக்குத் தருதல், கடனைப் பெற வழக்குப் போட்டு வழக்காடு மன்றச் செலவுடன் கடனையும் வட்டியையும் பெறுதல், ஆகியன ரசீது என்ற பொருண்மையிலும், கடனுக்காகச் செலுத்தும் வட்டிக்கான ரசீது, வாங்கிய வட்டியுடன் சிறிது அசலையும் செலுத்தியதற்கான ரசீது ஆகியன **திரவியஞ் செல்லு ரசீது** என்ற பொருண்மையிலும் இடம் பெறுகின்றன.

அடமானம் வைத்து வாங்கிய பணத்திற்கும் அதற்குண்டான வட்டிக்கும் இரண்டாம் முறை எழுதிக் கொடுக்கும் அடமானச் சீட்டு **மேல் ஓலைச் சீட்டு** என்ற பொருண்மையில் இடம் பெறுகிறது.

**முடிவுரை**

இந்நிறுவனத்தில் உள்ள ஆவணச் சுவடிகள் நீளமான முழு ஓலைகளாகவும், முறையாகப் பதப்படுத்தப் படாமலும் உள்ளன. இவற்றில் சுருக்கெழுத்துகளும், கூட்டெழுத்துகளும், குறியீடுகளும் மிகுதியாக இடம் பெறுகின்றன. எழுத்துகள் தெளிவற்றும் கடினமாகவும் இருக்கின்றன. எனவே இவற்றைப் படியெடுக்கும் போது ஏற்படும் இடர்ப்பாடுகளும் சிக்கல்களும், பிற சுவடிகளைப் படியெடுப்பதைக் காட்டிலும் கூடுதலாக இருக்கும். இருப்பினும் இத்துறையில் தேர்ச்சி பெற்றோர் இவற்றைப் படியெடுத்து ஆய்வுக் குட்படுத்தினால் இவற்றின் வழியே மேலும் பல அரிய புதிய உண்மைகளும், ஆர்வமிக்க சுவையான சமுதாயச் செய்திகளும், வரலாற்றுச் செய்திகளும் தெரியவரும்.

தமிழகத்தில் பல்லாயிரக்கணக்கான ஓலைச் சுவடி ஆவணங்கள் கோயில்களிலும், வட்டாட்சியர் மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும், பிற இடங்களிலும் பாதுகாக்கப் பெறாமல் புறக்கணிக்கப் பெற்றுள்ளன. நம் நாட்டில் ஆங்கில ஆட்சி ஏற்பட்டதன் காரணமாக ஓலைச் சுவடிகளில் எழுதும் பழக்கம் நின்று போனதுடன் மட்டுமன்றி, ஓலை ஆவணங்களில் வரக்கூடிய வருவாய், கணக்கு, அடமானம், வட்டி தண்டனை போன்ற பல செய்திகள் மாற்றமடைந்துள்ளன. ஆயினும் இந்த ஓலை ஆவணங்கள் முறையாக ஆராயப்படுமே எனில் பிற்காலச் சோழர்கள், பாண்டியர்கள் காலத்திலிருந்து

அமைந்து வரும் ஆட்சி முறை, வரவு செலவுக் கணக்குகள், சொத்து விவரங்கள் போன்ற பல சமுதாய வரலாற்றுச் செய்திகள் தெரியவரும்.

## துணை நின்றவை

அ. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆவணச் சுவடிகள்

| | கட்டு எண்கள் | - | நூல் எண்கள் |
|---|---|---|---|
| *1.* | *436* | : | *682* |
| *2,* | *441* | : | *687* |
| *3.* | *445* | : | *692* |
| *4.* | *469* | : | *718* |
| *5.* | *473* | : | *722* |
| *6.* | *476* | : | *725* |
| *7.* | *477* | : | *726* |
| *8.* | *583* | : | *941* |
| *9.* | *584* | : | *942* |

ஆ. மந்திர மருத்துவ சுவடி, *397 : 641*

## நூல்

திருச்சிராப்பள்ளி மாவட்ட ஓலை ஆவணங்கள், எ. சுப்பராயலு *(பதி.),* தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், *1991.*

## கட்டுரை

ஓலைச் சுவடிகளில் ஆவணங்களும் பதிவேடுகளும், பக்.*1-15,* புலவர் பா. கண்ணையன், சுவடியியற் பயிற்சிப் பட்டறை, ஆசியவியல் நிறுவனம், சென்னை *10-3-95.*

* * *

# 18. சோழங்கநல்லூர்ச் சுருணை ஆவணங்கள்

த. பூமிநாகநாதன்

மனிதன் ஒரு சமூக விலங்கு என்று சமூகவியலார் கூறுவர். கூட்டுக் குடும்பமாக ஆற்றுப் படுகைகளில் வாழத் தலைப்பட்ட மனிதன், தனது எண்ணங்களை வெளிப்படுத்த மொழியைக் கண்டுபிடித்தான். அவன் அனுபவித்த உணர்வுகளையும் உள்ளக் கிளர்ச்சிகளையும் அறிவுத் திறத்தையும் அம்மொழியின் வாயிலாக வெளிக் கொணர்ந்தான்.

மனிதனின் அறிவுத்திறத்தாலும், கற்பனை ஆற்றலாலும் படைக்கப்பட்ட இலக்கியம், இலக்கணம், சரித்திரம், மருத்துவம், கலைகள் போன்ற பொருண்மைகள் வாய்மொழியாக வழங்கி வரலாயின. இவைகள் காலங்காலத்திற்கும் நிலைபேறு பெற வேண்டும் என்ற நோக்கோடும் மறதி என்னும் இயற்கையின் பிடியில் இருந்து இதனைக் காக்கவேண்டும் என்ற கருத்தினோடும் மனிதன் முயன்றபோது பேச்சுமொழிக்கு ஏற்ற வரிவடிவம் அவனால் உருவாக்கப்பட்டது.

இவ்வாறு உருவாக்கப்பட்ட எழுத்து மொழியில் அறிவுப் பூர்வமான கருத்துக்கள், பின்வரும் சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் எழுதிவைப்பதற்கு ஏற்ற ஊடகங்களாகப் பனைஓலை, பானை ஓடு, கருங்கற் சுவர், உலோகத்தகடு (பட்டயம்) முதலியன பயன்படுத்தப்பட்டன.

சமூகம் வளர வளர மனிதனின் குணநிலைகளில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. இதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்த பொருண்மைகளில் மிகச் சிறப்பாக அமைவன மண், பெண், பொன் ஆகியவற்றின் பால் ஏற்பட்ட மோகமே ஆகும்.

தமிழக வரலாற்றின் பொற்காலமாகத் திகழும் சங்க இலக்கியத்தைப் பார்ப்போமேயானால் அன்றையச் சமூகத்தில் மனிதன் அமிழ்தமே கிடைத்தாலும் தனியே உண்ண மாட்டான். புகழ் என்றால் உயிரைத் தருவான். பழி என்றால் உலகமே கிடைத்தாலும் ஏற்க மாட்டான் எனப் புறநானூற்றுப் பாடல் அன்றைய மனிதனின் பண்பாடு பற்றிப் பகர்கின்றது. பாடல் வருமாறு:

........ இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியே உண்டலும் இலரே

புகழெனில் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் (புறம்182)

ஆனால் காப்பியக் காலத்தில் சமூகம் பல்வேறு மாற்றங்களைப் பெற்றது. இக்கால கட்டத்தில் சமூகத்தில் அறம் பிறழ்ந்த நிலைக்ளைக் கருத்திற் கொண்ட சான்றோர்கள் ஐயர் வைத்துத் திருமணம் நடத்திய ஒரு சமூகப் போக்கை ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரம் எடுத்தியம்புகிறது. இந் நிகழ்வைக் கொண்டு பார்க்கும்போது சில விதிமுறைகள் சடங்குகளில் புகுந்து விட்டதை நாம் உணரலாம்.

பொருளாதாரக் காரணமாகவும், அரசு மற்றும் அரசியல் காரணமாகவும் சமூகத்தில் பின்னாளில் பல்வேறு வகையான சிக்கல்கள் ஏற்பட்டன. இவற்றை ஆய்ந்து உண்மை எது என்று உணர்வதற்குத் தக்க சான்றுகள் தேவைப்பட்டன. இப்படித் தோன்றிய சான்றுகளே பின்னர் ஆவணங்களாக உருமாறின அல்லது ஆவணங்கள் எனப் பேசப்பட்டன.

## சங்க காலமும் ஆவணமும்

ஆவணங்கள் புழக்கத்தில் இருந்திருக்கின்றன என்பதற்கான வலுவான தரவுகள் நமக்கு, சங்க காலத்திலிருந்தே கிடைக்கின்றன. சங்க கால மன்னர்களின் பெயர்கள் சிலவற்றை நினைத்து பார்த்தோமேயானால் சில உண்மைகள் நமக்குத் தெளிவு பெறும்.

சங்க இலக்கியங்கள் ஒரு காலத்தில் எழுதாக் கிளவியாகத் திகழ்ந்தன என்பதில் இருவேறு கருத்து இருக்க முடியாது.

சங்க காலத்தில் ஒரு மன்னன் இறந்துபட்டால் அவன் இறந்த இடம், என்னகாரணத்திற்காக இறந்தான் என்பன போன்ற வரலாற்றுக் குறிப்புகளை அம்மன்னனின் பெயருடனேயே இணைத்துப் பிற்காலச் சந்ததியினருக்கும் பயன்படும்படியாக அக்காலச் சான்றோர்கள் வரையறுத்துச் சென்றுள்ளனர். சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

சேரமான் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன்
காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி
குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
சோழன் இளவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி
சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன்
சோழன்குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்
சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்
பாண்டியன் இளவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி
பாண்டியன் சித்திர மாடத்துச் துஞ்சிய நன்மாறன்

இது போன்றே தந்தையார் பெயரை முன்னே சேர்த்துக் கொள்ளும் மரபு சங்க இலக்கியத்திலேயே நம்மால் காண முடிகிறது.

அதியமான் நெடுமானஞ்சி மகன் பொருட்டெழினி அந்துவன்தீரன்
ஒல்லையூர்க் கிழான் மகன் பெருந்தேவன்
மதுரைக் கணக்காயர் மகனார் நக்கீரர்

போன்ற பெயர்களில் தந்தையின் பெயரும் இணைந்திருப்பதைக் காணலாம்.

இதேபோன்று தங்கள் செயற்கரிய செயலாலும், வெற்றியாலும் சங்ககால மன்னர்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். குறிப்பாகச் சிலவற்றைக் கூறலாம். சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, சேரமான் பாமளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ற பெயர்கள் பிற்காலத்தில் வருவோருக்கு முற்காலத்தில் நிகழ்ந்த வரலாற்றுச் செய்திகளை எடுத்துக்கூறும் வண்ணமும் இன்றைக்குத் தெளிவான வரலாற்று ஆவணங்களாகவும் நமக்கு விளங்குவதைக் காணலாம்.

ஆகவே, ஆவணப்படுத்துதல் என்ற கோட்பாடு சங்க காலத்திலேயே கால்கோள் ஆகிவிட்டது எனக் கருதலாம்.

## ஆவணங்களில் சுவடிகளின் பங்கு

அகழ்ஆய்வு எழுத்துகள், கல்வெட்டுகள், காசு போன்றே ஓலைச் சுவடியும் ஆவணத்தின் ஊடகமாக விளங்குகிறது. இலக்கியம், இலக்கணம், சரித்திரம், மருத்துவம், மாந்திரிகம், சோதிடம் போன்றவைகள் ஓலைச் சுவடிகளில் பதிவுச் செய்யப்பட்டுள்ளன என்பது யாவரும் அறிந்ததே.

ஆனால் ஆவணங்கள் என்று கருதப்படும் மூலச் சான்றுகள் அல்லது தரவுகள் பெரும்பாலும் ஓலைகளில் காணப்பட்டாலும் இலக்கியம் இலக்கணம் போன்றவைகள் பதிவு செய்யப்பட்ட ஓலைக்கும் ஆவணமாக விளங்கும் ஓலைக்கும் மிகுந்த வேற்றுமை உண்டு.

சுவடிகள் தயாரிக்க நாட்டுப்பனை மரத்தின் ஓலைகளும் தாளிப்பனை என்ற சீமைப்பனை ஓலைகளும் பயன்படுத்தப்பட்டன. தகுதியான காய்ந்த ஓலைகளை அளவாக நறுக்கிப் பதமாக நீரில் வேகவைத்துப் பின்னர் நிழலில் உலர்த்தி, வழவழப்பான கூழாங்கல் அல்லது சங்கு கொண்டு அழுத்தித் தேய்த்துப் பதப்படுத்த செம்மையான எழுதும் பரப்பைக் கொண்ட ஏடுகள் கிடைக்கும். இதற்கு ஏடு பாடம் செய்தல் என்று கூறுவர். ஆனால்

ஆவணங்கள் எழுதும் ஓலைகள் பெரும்பாலும் பதப்படுத்தாத, நறுக்கப்படாத முழு ஓலைகளே பயன்படுத்தப்படும். ஆவணங்கள் அரசு தொடர்புடையனவாக இருந்தால் அரசு முத்திரை பதிக்கப்பட்டிருக்கும்.

இலக்கிய, இலக்கண நூல்களுக்கு ஏற்ப சம அளவினதாகவும், பதப்படுத்தப்பட்டதாகவும், துளையிடப்பட்டதாகவும் உள்ள ஏடுகள் தயாரிக்கப்பட்டு நூலாக ஆக்கப்படும்.

இப்படிப் பார்க்கும்போது ஓலைச் சுவடிகளை இருநிலைகளில் வகைப்படுத்தலாம் *1.* அறிவு சார்ந்த ஏடுகள் *2.* ஆதாரம் சார்ந்த ஏடுகள். இந்த இரண்டாவது வகையைச் சார்ந்ததாகவே இச் சுருணை ஏடுகள் அமைகின்றன. இச் சுருணைகளில் பெரும்பாலும் வரவு செலவு கணக்குகள் அன்றாட நிகழ்வுக் குறிப்புகள் சொத்து விபரங்கள், வரியிடுவது பற்றிய செய்திகள், வரிவசூல், நிலத் தீர்வைகள், ஊழியர்களின் ஊதிய விவரங்கள், உண்டியல்கள், நன்கொடைகள் போன்ற செய்திகள் பற்றிய குறிப்புகளே மிகுந்து இடம் பெறுகின்றன.

தற்காலத்தில் இவ்வகைச் சுருணைகள் அரசு அலுவலகங்களில் குறிப்பாக ஆட்சியர் அலுவலகங்களிலும் ஆவணக் காப்பக அலுவலகங்களிலும், ஆதீனங்களிலும், பண்டைய ஜமீன்தார் இல்லங்களிலும் கிராமக்கணக்குப் பிள்ளைகளின் வீடுகளிலும் சிறப்புமிகு கோயில்களிலும் இன்றும் கிடைக்கப் பெறுகின்றன.

பொதுவாக, சுருணைகளில் கையாளப்படும் எழுத்துகள் படிப்பதற்கு அத்தனை எளிதாக இருக்கா. இலக்கிய இலக்கணம் போன்று அவற்றில் எழுதுபவர்கள் கையெழுத்தை நிறுத்தி எழுதுவதும் இல்லை. மேலும் அதிகமான குறியீடுகள் இவ்வகை ஏடுகளில் கையாளப்படுகின்றன எனலாம். கஸ்பா, கணக்கு, மேற்படி, ற், வரவு, இருப்புஞ், நஞ், வகையறா இனவழி கணக்கு, செட்டில் மெண்ட் போன்ற சொற்கள் பழகி வருவதைக் காண முடிகிறது.

கிழக்கிந்திய கம்பெனி ஆட்சி முத்திரை, திருவிதாங்கூர் மன்னர்கள் முத்திரை, பிரிட்டிஷ் ஆட்சியர் முத்திரை, பிரெஞ்சு ஆட்சியர் முத்திரை, நவாப் கால ஆட்சி முத்திரைகள், ஒருசில ஜமீன்களின் முத்திரைகள் போன்றவை இன்றும் அரசு அருங்காட்சியகத்திலும் இன்னும் பிற தனியார் இடங்களிலும் உள்ள ஓலைகளில் காணக் கிடக்கின்றன.

## சோழிங்க நல்லூர்ச் சுருணை ஏடுகள்

சென்னை மாமல்லபுரம் நெடுஞ்சாலையில் ஏறத்தாழ இருபது கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள அழகிய இயற்கை வளம் சூழ்ந்த

சிறிய கிராமமே சோழிங்கநல்லூர் என்பது. இன்று பேரூராட்சியாகத் திகழ்கிறது. இவ்வூரில் உள்ள பொன்னியம்மன் கோயில் தெரு பன்னிரண்டாம் எண் வீட்டில் வசிக்கும் சிதம்பரம் திரு. கனகசபையார் மகனார் திரு. பாஸ்கரன் அவர்கள் பாதுகாப்பில் இவ்வேடுகள் உள்ளன.

இவர் பண்டைய கலைப் பொருட்களைச் சேகரித்தும் விற்பனை செய்தும் வருகிறார். இவரிடம் கிழக்கிந்திய கம்பெனி நாணயம் தொடங்கி, விடுதலை பெற்ற இந்திய அரசு நாணயங்கள் வரை பலவகையான நாணயங்களும், அன்றைய அஞ்சல் தலைகளும் சிறப்பு வெளியீட்டு அஞ்சல் அட்டைகளும் ஏராளமாகப் புதைந்து கிடக்கின்றன எனலாம்.

இப்படிக் கலைப் பொருட்களைத் திரட்டும் சமயத்தில் இச்சுருணைகளும் கிடைக்கப் பெற்றதாகக் களப்பணியில் நான் ஈடுபட்டபோது தகவலாளி கூறினார். மேலும் இப்பணி அவரது தந்தையார் காலத்திலிருந்தே தொடர்ந்து வருவதாகவும் ஆகையால்தான் பல வகையான ஆவணப் பொருட்கள் சேர்க்க முடிந்ததாகவும் தகவலாளி கூறினார். சுவடி சேகரித்தல் தொடர்பாக கள ஆய்வுக்குச் சென்ற போது நண்பர் இருவர் மூலமாக திரு. பாஸ்கரன் அவர்கள் முகவரி கிடைக்கப் பெற்று நானும் எனது மாணவர் திரு. உத்திராடம் அவர்களும் சென்றிருந்தோம்.

பாதுகாப்பின்றி ஒரு பழைய சாக்கு மூட்டையில் தூசும், ஒட்டடையும், வண்டுகளும், பூச்சிகளும், தேளும், பூரானும் புடை சூழ உறங்கி கிடந்த இச்சுருணைப் பொதியை வெளிக் கொணர்ந்து அவற்றில் இருக்கும் செய்திகளை ஒருவார காலமாக அவ்வூரிலேயே இருந்து முதலில் சுருணைப் பொதியைச் சுத்தம் செய்து ஆய்வு மேற்கொண்டோம்.

இச்சுவடிகளில் காணப்படும் ஆவணங்கள் பெரும்பாலும் பதிவேடுகளாகவே அமைந்திருந்தன. ஈரோடு கோயம்புத்தூர்க்கு இடைப்பட்ட பல்வேறு ஊர்களுடன் தொடர்புடையனவாக இச்சுருணையில் காணப்படும் செய்திகள் அமைந்துள்ளன. பல்வேறு இனத்தார் தம் கணக்கு வழக்குகள் இதில் இடம் பெற்றுள்ளன.

விவசாயக் கணக்கு, நெற் கொள்முதல் கணக்கு, உண்டிக் கணக்கு, தபால் செலவுக் கணக்கு, சம்பளக் கணக்கு, வங்கிக் கணக்கு, நீதிமன்ற வழக்குக் கணக்கு, வீட்டு வாடகைக் கணக்கு, வீடு கொள்முதல் கணக்கு, சொத்துக் கணக்கு, சுவாமிக் கணக்கு, சுவாமி காணிக்கை கணக்கு, அபிடேகக் கணக்கு, சுவாமி மகமைக் கணக்கு, சர்க்கியூட் செலவுக் கணக்கு, ஊரணிக் காவற் கணக்கு போன்ற சில சிறப்பான குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றின் விரிவை ஈண்டுக் காண்போம்.

### விவசாயக் கணக்கு

நீர் இறைப்புக் கூலிச் செலவு, நாற்றுச் செலவு உள்பட அறுவடை வரை ஏற்படும் பல்வேறு வகையான செலவுக் குறிப்புகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. விதைச் செலவு நடவுச் செலவுக்கு வெளியூர் சென்று ஆட்கள் அழைத்து வரப்பட்டதாகவும் குறிப்பு உள்ளது. நெல் கொள் முதல் கணக்கு - என்ன என்ன வகையான நெல்கள் கொள்முதல் செய்யப்பட்டன என்ற விபரம் இவ்வேட்டில் கூறப்பட்டுள்ளது.

### வண்டிக் கணக்கு

பர்மா, மலேயா, சிங்கப்பூர் மற்றும் பல்வேறு கிழக்கு நாடுகளில் ஏற்படுத்திக் கொண்ட வணிகத் தொடர்பின் காரணமாக நிகழும் பணபரி மாற்றங்கள் குறித்த தகவல்கள் நிறைந்த பல்வேறு ஆவணங்கள் காணப்படுகின்றன.

### தபால் செலவுக் கணக்கு

தொழில் காரணமாக அன்றாடம் வரையப்படும் கடிதங்களுக்குகான செலவுகளும் அஞ்சல் முத்திரை வில்லைகளுக்கான செலவுகளும் இவ்வேட்டில் எழுதப்பட்டுள்ளன. இன்றைக்கும் ஒரு அலுவலகத்தில் அல்லது தனியார் தொழிற் கூடத்தில் ஏற்படும் அஞ்சல் செலவு (Postal Expenditure) என்ற வகையில் இச்செலவு வகைகள் கணக்கெழுதப் படுவதைக் காணலாம்.

### சம்பளக் கணக்கு

தொழில் தாபனத்தில் பணியாற்றும் பணியாளர்களுக்கு அவரவர் தகுதிப்படி மாதாந்தர வார ஊதியக் கணக்குகள் எழுதப்பெற்று அவர் அவர்களுக்கு நேர் செய்யப்பட்ட தகவல்கள் இவ்வேட்டில் இடம் பெற்றுள்ளன. அன்றைக்குத் தரப்பட்ட ஊதிய அளவுகள் இன்று காணும்போது நமக்கு மலைப்பையும் விந்தையையும் ஏற்படுத்தினாலும் கூட அன்றைய விலைவாசிகள் கட்டுப்பாட்டில் இருந்ததை நாம் அறிந்து கொள்ளத்தக்க சான்றாக இவ்வாவணம் திகழ்வதைக் காணலாம்.

### வங்கிக் கணக்கு

உள்நாடு மற்றும் வெளிநாடுகளில் உள்ள வங்கிகள் பற்றிய செய்திகள் இதில் காணப்படுகின்றன. இன்றைக்கு நடைமுறையில் இருப்பதுபோல அன்று வங்கிகள் அமையவில்லை. அன்றைய வங்கிகள் என்பவை ஒரு சில தனவந்தர்களின் தனி முயற்சியாலோ, கூட்டு முயற்சியினாலோ ஏற்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.

## நீதிமன்ற வழக்குக் கணக்கு

பெரும்பாலும் இவ்வகை ஏடுகள் இத்தொகுப்பில் அதிகமாக இடம்பெற்றுள்ளன. கடன் பெற்றவர் கடனை வட்டியுடன் செலுத்தாத காரணத்தாலும் கடனுக்காக உத்திரவாதம் செய்யப்பட்ட சொத்தின் அளவு கடனை விடக் குறைந்து காணப்பட்ட போதும் கடன் தந்தவர் வழக்கு மன்றம் நாடி, தான் அளித்த பணத்தை வசூல் செய்ய எடுக்கப்படும் நடவடிக்கைச் செலவுகள் இதில் குறிப்பாக வழக்கறிஞர் ஊதியம், வழக்கிற்கான முத்திரை செலவு (Stamp Expenditure) போக்குவரத்துச் செலவுகள் முதலியவைகளுக்கான கணக்குகள் சாட்சிகளுக்கான படிச் செலவுகள் முதலியனவும் இச்சுவடிகளில் காணப்படுகின்றன.

## வீட்டு வாடகை

மாதாந்திரமாக அல்லது வருடாந்திரமாக விடப்பட்ட 'குடிக் கூலி' என்று அழைக்கப்படும் வீட்டுவாடகைத் தொடர்பான கணக்கு பற்றி இவ்வேட்டில் குறிக்கப்பட்டுள்ளது. வாடகை முறையாகக் கட்டியவர், வாடகைக் கட்டத்தவறியவர்கள், நிலுவைக் கணக்குகள் முதலியன இவ்வேடுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

## வீட்டுக் கொள் முதல் கணக்கு

ஒருவர் மற்றவரிடம் இருந்து விலைக்கோ கடன் பட்ட காரணத்தாலோ பெறப்பட்ட வீட்டிற்கு எவ்வெவ் வகையில் பணம் செலுத்தினார் என்பதை மாதம் ஆண்டு வாரியாக இவ்வேட்டில் குறித்து வைக்கப்பட்டுள்ளது. கடன்பட்ட காரணத்திற்காகப் பெறப்படும் வீடு எவ்வளவு தொகையில் எத்தனை ஆண்டில் சிறுசிறு தொகை மூலம் கொள்முதல் செய்யப்பட்டது என்பதைத் தெளிவுடன் கூறுகிறது.

## சொத்துக் கணக்கு

தனிச் சொத்துக்களின் விபரமும் அவற்றின் எல்லைகளும் (நான்குமால்) எடுத்தியம்பப்பட்டுள்ளன. நஞ்செய், புஞ்செய் மற்றும் அசையாச் சொத்துக்களின் விபரங்களும் இவ்வேட்டில் இடம் பெற்றுள்ளன.

## சுவாமிக் கணக்கு

இறைவனுக்குச் செய்யப்பட்ட வழிபாட்டுச் செலவுகள், திருவிழாக் காலங்களில் நிகழ்த்தப்பட்ட திருவிழாச் செலவுகள் முதலியன இதில் கூறப்பட்டுள்ளன.

## காணிக்கைக் கணக்கு

இறைவனுக்கு விடப்பட்ட இறையிலி பற்றியும், இறைவனுக்குச் செலுத்துவதாக வேண்டிக் கொண்ட வேண்டுதலுக்கு ஏற்பட்ட செலவுகள் பற்றி மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

## அபிடேகக் கணக்கு

இறைவனுக்குச் செய்யப்பட்ட அபிடேகக் கணக்குகள் இதில் கூறப்பட்டுள்ளன. பல்வேறு வகையான அபிடேகங்கள் - குறிப்பாகப் பால் அபிடேகம், பஞ்சாமிர்த அபிடேகம், விபூதி அபிடேகம், நெய் அபிடேகம், போன்ற அபிடேகக் குறிப்புப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன.

## சுவாமி மகமைக் கணக்கு

இறைவன் திருவிழாவுக்காகவும், இறைப் பணிக்காகவும் மக்கள் இடத்தில் வசூலிக்கப்படும் வரிக்கு மகிமை என்பது பெயர். இவ்வேட்டில் பற்பல கோயில் திருப்பணிக்காக மகமையாக நபர் ஒருவர்க்கு ஒரு நாளைக்கு *1* பணம் என்ற வகையில் வரி வசூலிக்கப்பட்டதாகக் குறிப்பு ஒன்று கிடைக்கின்றது.

## சர்க்கியூட் செலவுக் கணக்கு

ஜமாபந்தி காலத்தில் மாவட்ட ஆட்சியர் தலைமைத் தாலூக்கா (கஸ்பா)வில் வீற்றிருப்பார். அப்போது கிராமக் கணக்குகள் தணிக்கை செய்யப்படும். அப்படித் தணிக்கை செய்யப்படும் போது ஏற்படும் அலுவலகம் மற்றும் தனியார் செலவுகளைச் சர்க்கியூட் செலவு என்பது மரபு. அவ்வகைக் கணக்குகள் பல ஏடுகளில் இத்தொகுப்பில் காணப்படுகின்றன.

## ஊருணி காவற் கணக்கு

கிராமத்து ஊருணி குடிநீர் மற்றும் பொதுப் பயன்பாட்டிற்குரிய ஊருணியின் பாதுகாப்புக் கருதி இரவிலும் பகலிலும் காவலரைப் பணிக்கு அமர்த்துதல் உண்டு. இவர்கள் நீரின் பாதுகாப்பு மட்டும் அல்லாது அவ்வூருணியில் உள்ள மீன்களுக்கும் இவர்களே பாதுகாவலர்கள். பொதுவாக, கோடைகாலத்தில் கிராமத்து ஊருணிகள் வறண்டு விடும் தன்மையன. அப்போது அவ்வூருணியில் உள்ள மீன்களை ஏலத்திற்கு விட்டு அப்பணத்தைக் கிராம நன்மைக்காகப் பயன்படுத்துதல் இன்றுவரை மரபாகப் பின்பற்றப் பட்டுவருகிறது. அவ்வகையில் ஊருணியைக் குத்தகை எடுத்தவர்க்கு நட்டமின்றி நல்ல இலாபம் கிடைக்கும்படியாக ஊருணியில் மீன்கள் நிறைந்த அளவில் கிடைத்தல் வேண்டும் என்பதனைக் கருத்திற் கொண்டு இக்காவலானது முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இவ்வகையில் பல ஊர்களில் ஊருணிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

இவை மட்டுமல்லாது இன்னும் பல செய்திகள் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. அவையெல்லாம் இங்கே வரிசைஎண் இடப்பட்டுப் பட்டியலாகக் கீழே தரப்பட்டுள்ளன.

**சோழிங்கநல்லூர் திரு. பாஸ்கரன் வீட்டில் கண்ட சுவடிகள் விபரம்**

1. சொந்த விற்பனை தள்ளுபடி கணக்கு - G
2. விசாலாட்சி அம்மாள் நிலபுல கணக்கு - G
3. விவசாயர் கணக்கு - D
4. வரவு செலவு கணக்கு ஏடு (அச்சய வருஷம்) - G
5. தேவக்கோட்டை சிவகாமி பிறந்த வீட்டில் கொடுத்த (வரவு செலவு) விபர ஏடு
6. விசாலாட்சி அம்மாள் கலியாணக் கணக்கு
7. செ.வீர. பேரேடு (சாமி காணிக்கை கணக்கு)
8. நகரத்தார் முறி
9. செ.வீர. வரவு-இருப்பு கணக்கு ஏடு
10. சிறுவயல் குமரப்ப செட்டியார் ஆங்கிரஸ வருஷ வரவு-சிலவு- தள்ளுபடி கணக்கு C
11. கல்லுப்பட்டி வீர.வே. சோமசுந்தரம் ஜாதகக் கட்டு
12. பிலவ அற்பசி ஊ கூடுதல் கல்லல் - மதுரை மெ.றா. வெள்ளக்கடை உள்ளூர் பேரேடு (அபிசேக சிட்டை உள்பட) CI-D
13. தேவக்கோட்டை செட்டியார் வரவு செலவு கணக்கு ஏடு C-D
14. ஷ குடும்பத்தார் வரவு செலவு கணக்கு
15. செ.வீர. செல்லப்பன் சாதகம் - C
16. செ.வீர. வகையறா சொத்து பிரிவினைப் பத்திரம்
17. சிலவகை முறிகள்
18. விசாலாட்சி மருந்து குடித்தற்கு வாங்கிய சாமான்கள் விபரம்
19. ஆங்கிரஸ வருஷ வைகாசி A செலவு கணக்குச் சிட்டை கல்லல் கரு.2. கருப்பண்ண செட்டியார் மகள் ஜாதகம்
20. வெ.அயி.அ. கண்ட கணக்கு முறி
21. பணத்திருப்பு (ரசீதுகள்)
22. வயிரவன்-ஏகாம்பாள் கலியாணக் கணக்கு (D)
23. யுவ வருஷக் கணக்கு
24. வெகுதானிய வருஷக் கணக்கு

25. பிரபவ வருஷக் கணக்கு
26. சுபானு வருஷக் கணக்கு
27. சருவஜித்து வருஷக் கணக்கு
28. பாலையப்பட்டு முருகன் கணக்கு
29. வெகுதானிய வருஷக் குறிப்பு
30. தர வருஷத்திய கணக்கு
31. மங்கள வருஷத்திய கணக்கு
32. புரட்டாசி மாத சிட்டை
33. சுவாமிகள் வரவுக் கணக்கு
34. பினாங்கு இஸ்தி வகையறா கணக்கு
35. சுபானு வருஷ வைகாசி மாத திருப்பு கணக்கு
36. பல்வகை வரவுக் கணக்குகள்
37. சீனா-கினா வரவுக் கணக்கு
38. சுபானு வருஷத்திய வரவு இருப்புக் கணக்கு
39. யுவ வருஷத்திட கணக்கு
40. கண்டனூர் நா.அ.வகையறா வரவு கணக்கு
41. பல்வகைக் கணக்குகள்
42. புரட்டாசி மாத சிட்டை
43. ——— முஞ்சறங்கடை ராமசாமி வரவு கணக்கு
44. ——— வரவு கணக்கு
45. புதுவீட்டுக் கணக்கு
46. தானிய இருப்புக் கணக்கு
47. சாதாரண வருஷக் கணக்கு
48. கோட்டையூர் அ.அரு.வரவுக் கணக்கு
49. ஏவிளம்பி வருஷத்திய குறிப்பு
50. கோளி பாவு தறி மகமுது சாயலணி (Fully Damaged) கணக்கு
51. பிலவ வருஷக் கணக்கு (Fully Damaged)
52. சில கடைக் கணக்குகள் (Fully Damaged)
53. சர்வதாரி ஆண்ட வரவுக் கணக்கு (Fully Damaged)
54. ஊருணி காவல் கணக்கு (Fully Damaged)
55. சர்வாத்தாரி வருஷத்திய கணக்கு (Fully Damaged)
56. சில்லரைக் கணக்கு (Fully Damaged)
57. வீரன் கணக்கு (Fully Damaged)
58. திருப்புகழ் (வகுப்பு) (Fully Damaged)

59. சிங்கப்பூர் பிஸ்மில்லாகான் / மகது சாகிப் கணக்கு (Fully Damaged)
60. ஆதாயக் கணக்கு (Fully Damaged)
61. சர்வசி வருஷக் குறிப்பு (Fully Damaged)
62. துன்மதி வருஷ ஊருணி ஐந்தொகை (Fully Damaged)
63. ரெங்கூன் கடை நடப்புக் கணக்கு (Fully Damaged)
64. பவ வருஷக் கணக்கு (Fully Damaged)
65. மங்கள வருஷக் குறிப்பு (Fully Damaged)
66. தாரணி வருஷக் குறிப்பு (Fully Damaged)
68. ருதரோத்காரி வருஷக் கணக்கு (Fully Damaged)
69. துந்தும வருஷக் கணக்கு (Fully Damaged)
70. ராக்காச்சி கடைக் கணக்கு (Fully Damaged)
71. கண்டர மாணிக்கம் பெரி.சுப. வள்ளியம்மை ருது சாதகம்
72. முது. கருப்பையா வரவுக் கணக்கு
73. சௌமிய வருஷ தைமாதக் கணக்கு
74. பல வருஷ ஐப்பசி மாசக் குறிப்பு
75. சாதாரண வருஷ தைமாதக் குறிப்பு
76. சுக்கில வருஷ மார்கழி மாதக் குறிப்பு
77. விபவ வருஷ கார்த்திகை மாதக் குறிப்பு
78. சாதாரண வருஷ மார்கழி மாதக் குறிப்பு
79. வைத்தியங்குடி (வேதியங்குடி) நிலங்களுக்கு நான்கு மால் கணக்கு
80. ஆங்கிரஸ வருஷ சித்திரை மாதக் குறிப்பு (தள்ளுபடி)
81. பல்வேறு வருஷத்திய குறிப்பு (வரவு-செலவு)
82. திருச்சி சங்கர நாராயணன் மரக்கடை உண்டி (விபரம்) முதலியன
83. காரடையார் பாளையம் கிராமம் புதுக்க வில்லியலிருக்கும் சபாபதி கவுண்டர் மகன் வீரபுத்திரகவுண்டர் எழுதியது பிராமசரி நோட்டு முதலியன
84. அய்யபாளையம் செட்டியார் தெருவில் இருக்கும் நல்லியக் கவுண்டர் குமாரார்கள் பழநிமலைக் கவுண்டர் பிராமிசரி நோட்டு
85. ஆதாயக் கணக்கு ஏடுகள்
86. கருவூரிலிருக்கும் வெங்க சாஸ்திரியார் குமாரர் சிதம்பரய்யர் பிராமிசரி நோட்டு
87. வட்டி செலவுக் கணக்கு வகையறா
88. மணவப்பட்ட கிராமம் காத்தவராயன் பட்டியிலிருக்கும் முத்து மருதப்பிள்ளை மகன் குப்பையா பிள்ளை கணக்கு

89. உப்பிடமங்கலம் கிராமம் லெட்சுமிமம் பட்டியிலிருக்கும் முனுசாமி ரெட்டியார் குமாரர் ராமானுஜ ரெட்டியார் கணக்கு
90. வெ.ஆ.அ.கடை கணக்கு
91. ஆதாய வரவு கணக்கு வகையறா
92. சின்னதாராபுரம் வகையறா கிராமம் நிலம் கொள்முதல் கணக்கு
93. ஊரகடை மேனப்பன் கணக்கு
94. ஈகாகம் கிராமம் எல்லப் பாளையத்திலிருக்கும் செங்கோடக் கவுண்டர் மகன் கரப்பணக் கவுண்டர் கணக்கு
95. மதுராஸ் அள. சுப்பன் கணக்கு
96. ருத்ரோத்காரி வருஷ புரட்டாசி மாச செலவு கருப்பண கவுண்டர் குமாரர் வேலாயுதக் கவுண்டர் கணக்கு
97. சில்லறையினங்கள் கணக்கு
98. குப்பச்சி பாளையம் பசுபதி பாளையத்திலிருக்கும் கருப்பண கவுண்டர் குமாரர் வேலாயுதக் கவுண்டர் கணக்கு
99. கோபி செட்டிபாளையம் தாலுக்கா கொண்டயம் பாளையம் கிராமம் கன்னியப்பட்டியிலிருக்கும் ராமசாமி கவுண்டர் குமாரர் கே.அர். விஸ்வநாத கவுண்டர் பிராமசரி நோட்டு
100. வராப்பாளையம் கொத்துக்கார பழனியப்ப கவுண்டன் கணக்கு
101. தனவாய்பாளையம் பூமி நடப்புக் கணக்கு
102. ஸ்ரீனிவாச நாயுடு வகையறா கணக்கு
103. சர்க்கியூட் செலவு
104. கந்தரேஸ்வர தீஷிதர் கணக்கு
105. கரூர் கஸ்பாவிலிருக்கும் நம்பி வேளாளன் மகன் பூசாரி வேளாளன் கணக்கு
106. நல்லியக் கவுண்டன் கணக்கு
107. சு.ப.ள. கணக்கு
108. கருப்பளையம் சுகாளி யூரிலிருக்கும் சடையக் கவுண்டன் மகன் பெரிய கவுண்டன் கணக்கு
109. ஆண்டாங்கோவில் புத்தூரிலிருக்கும் கவுண்டையா கவுண்டன் நல்லியக் கவுண்டன் கணக்கு
110. கஸ்பா கரூரில் இருக்கும் தூரம்பாடி மாதவய்யர்குமரர் சுப்பயர் கணக்கு
111. செலவுக் கணக்கு
112. மதராஸ் அரு

## முடிவுரை

ஆவணங்களுக்கு முன்னோடியாகச் சங்ககாலத்திலேயே குறிப்புகள் இருந்தன என்பதற்கான பல தரவுகளைக் கண்டோம்.

களப்பிரர் காலத்தில் ஆவணங்களின் சிறப்புறு தன்மையையும் அவை பண்பாட்டில் எப்படிச் சடங்கு வழிமுறையில் இடம் பிடித்துள்ளன என்ற பாங்கையும் கண்டோம். இன்றைக்கு ஆவணங்கள் எந்த அளவிற்கு ஒருவருக்குப் பாதுகாப்புக் கருவியாக விளங்குகின்றன என்பதை இச்சோழிங்க நல்லூர்ச் சுருணைகள் வழியாகக் கண்டோம்.

மறைந்து கிடக்கும் இதுபோன்ற சுருணை ஆவணங்களைத் தேடி அன்றைய வாழ்வியற் பாங்குகளை அறிவது நமது தலையாயக் கடமை ஆகும்.

## துணை நூல்கள்


1. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஓலைச்சுவடிகள் விளக்க அட்டவணை.
2. அரசு கீழ்த்திசைச் சுவடி நூலக விவர அட்டவணை.
3. செங்கற்பட்டு மாவட்ட விவரச் சுவடி (Gazetteer).
4. புறநானூறு மூலமும் உரையும்.
5. சிலப்பதிகாரம் மூலமும் உரையும்.


* * *

# 19. திருச்சி மாவட்ட ஓலை ஆவணங்கள்

மொ. மருதமுத்து

## முகப்புரை

எண்கள், எழுத்துகள், குறியீடுகள் ஆகியவற்றை ஓலை, கல், காகிதம், செப்புத்தகடு போன்றவற்றில் செய்தியாகப் பொறித்து வைக்கப் பெறுவது ஆவணம் (Document) எனப்படும். ஒரு செய்தி அல்லது பல செய்திகளைப் பாதுகாக்கும் நோக்குடன் பதித்து வைத்துக் கொள்ளும் வழக்கம் மக்களிடையே நெடுங்காலமாக இருந்து வருகிறது. இப்பதிவுக் குறிப்புகள் அனைத்தும் பொதுவாகத் தமிழில் ஆவணங்கள் என்று குறிப்பிடப்படுகின்றன.

ஆவணம் என்பது மக்களின் அன்றாட வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளின் தொடர்பாக உள்ள பல்வேறு குறிப்பேடுகளாகும். அரசுகளுக்குள் ஏற்படும் உடன்படிக்கைகள், கடிதப் பரிமாற்றங்கள், முக்கியக் கொள்கை அறிவிப்புகள், தனிப்பட்டோர்களுக்குள் நிகழும் கொள்வன கொடுப்பன தொடர்பான உடன்படிக்கைகள், உறுதிப் பத்திரங்கள், குழுத் தீர்மானங்கள், ஒழுங்கு விதிகள் போன்றவைகள் இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும். பழைய ஆவணங்கள் அக்கால மக்களின் பண்பாடுகள், சமுதாயப் பழக்க வழக்கங்கள், நாட்டு நடப்புகள் ஆகியவற்றை எடுத்தியம்பும் கருவூலமாகத் திகழ்கின்றன. எனவே அவை முந்தைய வரலாற்றினை அறிவதற்கும் எழுதவதற்கும் துணை புரிகின்றன. அவ்வகையில் திருச்சி மாவட்டம் லால்குடி வட்டத்தைச் சேர்ந்த நெரிஞ்சில்குடி ராமாராவ் என்பாரிடமிருந்து பெறப்பட்ட *64* ஓலை ஆவணங்களைத் தமிழ்ப்பல்கலைக்கழகம் *1991*-இல் பதிப்பித்து நூலாக்கியுள்ளது.[1] இது ஓர் அரிய முயற்சியாகும். இந்நூலில் காணப்பெறும் ஓலை ஆவணச் செய்திகளைக் கொண்டு இக்கட்டுரை ஆயப்படுகிறது.

## எழுத்து, மொழிநடை அமைப்பு

இவ்வோலை ஆவணங்கள் பல நூற்றாண்டுகளாக இதற்கென்றே வளர்ந்து வந்த ஆவணமொழி நடையில் எழுதப்பட்டுள்ளன. இடைக்காலக் கல்வெட்டுகளோடு இவை பெரிதும் ஒத்துள்ளன. இருப்பினும் மொழியைப் பொறுத்தவரையில் இலக்கணப் பிழைகள் மிகுதியாக நிறைந்துள்ளன. சில

ஆவணங்கள் பேச்சு வழக்கை மிகவும் கொண்டுள்ளன. ஓரிரண்டு ஆங்கிலச் சொற்களும் பல பாரசீக, அரபுச் சொற்களும் ஆங்காங்குக் கையாளப்பட்டுள்ளன. *18,19*-ஆம் நூற்றாண்டுகளில் தமிழ்நாட்டில் இருந்த கல்வி நிலையையும் எழுத்தறிவையும் அளந்தறிய இவ்வாவணங்கள் உதவும்.

## இவ்வோலை ஆவணங்களில் காணப்பெறும் ஆவண வகைகள்

திருச்சி மாவட்ட ஓலை ஆவணங்களில் பல ஆவண வகைகள் காணப்படுகின்றன. அவைகள் முறையே மனை சுத்தக்கிரய சாசனம், நிலம்/ பங்கு சுத்தக்கிரய சாசனம், நிலம்/பங்கு ஈட்டுப்பேரில் கடன்முறி/பத்திரம், நலிப் பிரயல் சீட்டு, நிலப் போக்கிய முறி/சீட்டு(அனுபோக ஒத்தி போக்கியக் கடன் முறி), உடன்படிக்கைச் சீட்டு, ஒத்தி உடன்படிக்கைச் சீட்டு, ஒத்தி உடன்படிக்கைச் சீட்டுக்கு எதிர்தடைச் சீட்டு, இசாறாப் பட்டயம், இசாறா முச்சலிக்கா, இசாறா ரசீது, வாயிதாப் பணம் செலுத்தல் விவரம், குத்தகைக்குச் (அடையோலை) சீட்டுக்கு எதிர் நடைச் சீட்டு, நிலப் பரிவர்த்தனைச் சாசனம் அடிமைச் சீட்டு ஆகியனவாகும்.

மேலே உள்ள பட்டியலை ஊன்றிப் பார்த்தால் ஆவணங்களானது சாசனம், சீட்டு, பத்திரம், முறி என்று பல சொற்களால் குறிக்கப்பட்டன என அறியலாம். இவை யாவும் ஒரு பொருட் பல சொற்களென்பதில் அய்யமில்லை.

இவ்வோலை ஆவணங்களில் பெரும்பாலான, ஒருவர் தம் நிலத்தை வேறொருவரிடம் ஈடு வைத்து அவரிடம் கடன் வாங்கியதைப் பற்றியவை. இவற்றிலும் இரு வகைகள் உள்ளன. முதல்வகை 'ஈட்டுப் பேரில் கடன் முறி' என்பது. இதில் ஈடுவைத்தவர் கடன்முதலையும் வட்டியையும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் திருப்பித்தர வேண்டும். அப்பொழுதுதான் ஈடுவைத்த நிலத்தின் முழு உரிமையைத் திரும்பப் பெறமுடியும். இதோடு தொடர்புடைய இன்னொருவகை 'ஒத்திப் போக்கிய கடன் முறி' அல்லது சுருக்கமாக 'போக்கிய முறி' என்பது. இதுவே சில சமயம் 'ஒத்தி உடன்படிக்கைச் சீட்டு' என்றும் வழங்கப்படும். இவ்வகையில் கடன்முதல்மீது வட்டி செலுத்தப் படுவதில்லை. வட்டிக்கு மாறாகக் கடன் கொடுத்தவர் நிலத்தை உழுது பயிர் செய்து அதன் விளைவை அனுபவிக்கலாம். கடன்தொகை குறிப்பிட்ட காலக்கெடுவில் திருப்பித்தரப்பட்டால் நிலத்தை அதன் உடைமையாளர் திரும்பப் பெறுவார்.

'ஈட்டுப் பேரில் கடன் முறி' எனும் ஆவண வகையில் குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் கடன்தொகையைச் செலுத்தவில்லையென்றால் நிலத்தை அனுபவிக்கும் உரிமையைக் கடன்கொடுத்தவர் பெறுவார். அதாவது இது போக்கிய முறியாகக் கருதப்படும். விளைநிலத்தைக் குத்தகைக்கு அடைத்தல் தொடர்பான ஆவணங்கள் ஒன்பது, இவ்வோலை ஆவணங்களில் உள்ளன. இவை யாவும் குத்தகைக்காரர் நிலக்கிழாருக்கு எழுதிக் கொடுத்த 'எதிர்நடைச்

சீட்டு' என்ற ஒப்பந்தங்களாகும் ஓர் ஆவணம் இதனையே **இசாறா முச்சலிக்கா** என்று குறிக்கிறது. அதாவது குத்தகைக்காரர் தாம் குத்தகைக்கு எடுத்துக் கொண்ட நிலத்தை எந்த முறையில் பயிரிடுவது, நிலக்கிழாருக்கு எவ்வளவு தானியம் அல்லது எவ்வளவு காலத்துக்குப் பின் நிலத்தைத் திருப்பிக் கொடுப்பது போன்ற நிபந்தனைகளைக் குறிப்பிட்டு அந்த நிபந்தனைகளுக்குக் கட்டுப்படுவோம் என்ற இசைவைத் தெரிவிக்கும் ஒப்பந்தச் சீட்டாகப் பின்வரும் ஓலை ஆவணச் செய்தி விளங்குகிறது.

> "—— உங்களுடைய சொந்தமான நஞ்செய் *19*-ம் தாங்கள் கட்டு குத்தகைக்கு ஒப்பு கொண்ட படியினாலே மேற்படி நிலத்தில் இருபூ சாகுபடி செய்தும் ஒருபூ சாகுபடி செய்யப்பட்ட வயலே ஒருபூ சாகுபடி செய்தும் அதில் கண்ட பலனை அனுபவிச்சுக் கொண்ட தங்களுக்குக் குத்தகை அளக்குறது காரில் நெல் *300* கலம்—— பாலமணியன் கோடை காரில் நெல் *190* கலம் ஆக *490* கலம் நெல்லும் களத்துமோட்டில் அளப்பேனாகவும் கொல்லன் தச்சன் சுவந்தரம் நானே குடுத்துக் கொள்ளுவேனாகவும்—— சாகுபடிக்கு வாங்கப்பட்ட கோடை காரில் நெல் பத்துபடி கூடிய நெல்லும் குத்தகையுடன் சேர்த்து அளப்பேனாகவும் இந்தப்படிக்கு சம்மதிச்சு அடையோலை சீட்டுக்கு எதிர்நடைச் சீட்டு எழுதிகுடுத்தேன்——"[2]

இவ்வாறு குத்தகைக்கு நிலத்தைப் பெற்றுக் கொண்டவர் சாட்சிக்காரர்களையும் அழைத்து வந்து பத்திரத்தில் கையொப்பம் வாங்கிக் கொள்வதை,

> "—— சாட்சி லாலுகுடி தாலுக்கா அபிஷேகபுரம் சேஷய்யர் குமாரன் ஆனையன் அறிவேன். யிந்த கீறல் மருதாயி யிந்த கீரல் பஞ்சன்—— யிந்த கீரல் சன்னாசி. இந்தச் சீட்டு எழுதினது கணக்கு ராமய்யன்"[3]

என்னும் வரிகளால் அறியமுடிகிறது.

## நிலம்/மனை விலை ஆவணங்கள்

நிலவிலை ஆவணங்கள் நான்கும் மனைவிலை ஆவணங்கள் ஐந்தும் இத்தொகுதியில் உள்ளன. விற்பவர் வாங்குபவரிடம் முன்பெற்ற கடனை அடைப்பதற்கோ அல்லது வேறு அவசரப் பயன்பாட்டுக்கோ நிலம்/மனை விற்பனை செய்துள்ளார். இப்படி விற்கப்பட்ட நிலம் அல்லது மனை பெரும்பாலும் அவ்வூரில் சில குறிப்பிட்ட குடும்பங்கள் கூட்டாக அனுபவிக்கும் முறையாகிய கெணசங்கா பாகப் பங்குகளில் ஒன்றைச் சேர்ந்ததாகச் சுட்டப்படுகிறது. இம்முறை பிராமண ஊர்களில் மட்டும் வழக்கத்தில் இருந்ததாகத் தெரிகிறது. ஊர் நிலங்கள் ஒரு குறிப்பிட்ட எண் உள்ள பங்குகளாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு பங்கிலும் நன்செய், புன்செய், மனை போன்ற பலதரப்பட்ட

வகைகளும் அடங்கும். தொடக்கத்தில் ஒவ்வொரு நிலக்கிழாருக்கும் இத்தனை பங்குகள் என்று இருந்தன. சோழர் காலப் பிராமண ஊர்களில் *(பிரமதேயங்களில்)* ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒருவேலி கொண்ட பங்கு ஒன்று கொடுக்கப்பட்டதைப் பல்வேறு கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. ஆனால் இவ்வோலை ஆவணங்களில் ஒருவரே பல பங்குகளுக்குரியவராக இருந்தமையைப் பார்க்க முடிகிறது. *(உ-ம்)*

> "*1852* வருஷம் ஆகஸ்டு மாதம் *29* தேதிக்குத் தமிழ் பரிதாபி வருஷம் ஆவணி மாதம் *16* தேதி ஆங்கரையில் இருக்கும் கோதண்டராமய்யன் புத்திரன் எக்கராமய்யன் நெரிஞ்சல் குடியில் இருக்கும் அப்பாபிள்ளை குமாரன் தவம் பிள்ளையாகிய அய்யாபிள்ளைக்கி நஞ்சை நிலம் சுத்தகிரய சாசனம் பண்ணிக் குடுத்தபடி யென்னவென்றால் இது நாளதுநாள் நம்முடைய அவசர நிமித்தமாக மாந்துறை கிராம கெணசங்கா பாகம் பங்கு *36*-ல் எனக்குச் சொந்தமான பங்கு *18*.... யிந்த பதினெட்டு பங்கை சேர்ந்த நஞ்சை நிலத்தில் உன் இடத்தில் நாளது தேதியில் சுத்தகிரய சாசனம் பண்ணிக் குடுத்தது அய்யாதுரையன் தஞ்சை அக்ரானூர் கொல்லை கட்டளைக்கு மேற்கு நெரிஞ்சல்குடி எல்லைக்கு வடக்கு மேற்பட்ட கிராம பறயன் இறையிலிக்குக் கிழக்கு வடபுறம் அரட்டானபள்ளம் கட்டளைக்குத் தெற்கு இனாங்கல்லைக்கு உள்பட்ட நஞ்சை அக்கிரானூர் கொல்லை கட்டளை செய் *1*க்கு காணி *1* குழி *50* யிந்த நிலத்தை சுத்தக்கிரய சாசனம் பண்ணிக் குடுத்து............"[4]

இவ்வாறு ஒருவரே பல பங்குகளுக்குரியவராக இருப்பதற்குக் காரணம் காலப்போக்கில் நிலவுடைமையில் ஏற்பட்ட மாற்றங்களாகும். *13*-ஆம் நூற்றாண்டு தொடங்கி சமுதாயத்தில் ஒருசிலர் பலவழிகளில் பெருநிலக்கிழார்களாக, நிலப்பிரபுக்களாக உருவானார்கள் என்பதற்கு இவை சான்று பகர்கின்றன.

### ஓலையில் ஆவணப் பதிவுமுறை

ஒத்திப் போக்கியச் சீட்டுகளையும் விலை ஆவணங்களையும் 'ஆவணப் பதிவு' அடிப்படையில் இருவகையாகப் பிரிக்கலாம். ஒருவகை அரசு ஆவணப் பதிவகத்தில் பதியப்படாமல் தனிப்பட்ட இருவர் மட்டும் செய்து கொண்ட உடன்படிக்கைகள். இரண்டாவது ஆவணப் பதிவகத்தில் பதியப்பட்ட உடன்படிக்கைகள். பின்னவை அரசுக் கருவூல முத்திரை கொண்ட ஓலைகளில் எழுதப்பட்டுள்ளன. முன்பக்கத்தில் இடது கோடியில் வருவாய்த்துறை அஞ்சல்தலை (Revenue Stamp) முத்திரையாகப் பதிக்கப்பட்டுள்ளது. இஃது அந்த ஓலை ஆவணத்தின் மதிப்பு இவ்வளவு என காலணா, எட்டணா, ஒரு

ரூபாய் என்று தமிழ், தெலுங்கு, பாரசீகம், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளில் குறிப்பிடப்படுகிறது. பின்பக்கத்தில் வலது கோடியில் கருவூல (பொக்கிஷம்) முத்திரை நான்கு மொழிகளில் பதிக்கப்பட்டுள்ளது. இந்த அரசு முத்திரை ஓலைகளில் ஆண்டில் பழையது *1832*-ஐச் சேர்ந்தது. அதாவது *19*-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே அரசு ஓலைகள் மக்களிடத்தில் புழக்கத்துக்கு வந்துவிட்டன என அறியலாம். இருப்பினும் பல உடன்படிக்கைகள் ஆவணப்பதிவு அலுவலகங்களில் பதியப்படாமலும் நடைமுறையில் இருந்தன. மொத்தத்தில் முப்பது விழுக்காடே பதியப்பட்டன. நிலவிலை ஆவணங்களைப் பொறுத்தவரையில் யாவும் பதியப்பட்டன எனத் தெரிகிறது.

## இசாறாப் பட்டயம்

இவ்வோலை ஆவணங்களில் நான்கு ஓலை ஆவணங்கள் கும்பினி அரசின் சார்பில் திருச்சிராப்பள்ளி சுபாவின் தண்டல் அதிகாரி (Collector) ஜான் பர்ட்டு துரை (J. Bird Collr) என்பவர் லால்குடி தாலுக்காவைச் சேர்ந்த நிலக்கிழார்க்குக் கொடுத்த 'இசாறா' பட்டயங்களாகும். இங்கு இசாறா பட்டயம் என்பது 'பட்டா' எனப்படும். அதாவது இவை குறிப்பிட்ட நிலக்கிழாரின் அனுபோகத்தில் உள்ள நிலத்தின் அளவு, தரம், விளைச்சல் முதலியவற்றுக்கேற்றவாறு எவ்வளவு நிலவரி ஆண்டில் எந்தெந்தத் தவணைகளில், எந்த நிபந்தனைகளுக்குட்பட்டு அரசுக்குச் செலுத்தவேண்டும் என்ற குறிப்புகளடங்கிய ஆவணங்கள். இவற்றில் தொனிக்கும் அதிகார மிரட்டல் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியிலேயே ஆங்கில அரசு இப்பகுதியில் எவ்வளவு உறுதியாக அமர்ந்துவிட்டது என்பதற்குச் சான்று பகர்கின்றன.

## இவ்வோலை ஆவணங்களால் அறியவரும் பிற செய்திகள்

இவ்வோலை ஆவணங்கள் யாவும் ஒரு மராட்டிப் பிராமணர் குடும்பத்தைச் சேர்ந்தவையாதலால் பெரும்பாலும் அப்பிராமணக் குடும்பத்துடன் தொடர்புடைய செய்திகளே அதிகமாக உள்ளன. இவற்றைக் கொண்டு அன்றையச் சமுதாயத்தை முழுமையாக விளக்க முடியாவிட்டாலும் ஓரிரண்ட கூறுகள் தெளிவாகத் தெரிகின்றன. ஒன்று, சமுதாயத்தில் இருந்த வர்க்க முரண்பாடு. சில குடும்பங்கள் மிகுந்த நிலவளம் பெற்றிருக்க பல குடும்பங்கள் நிலமற்றவையாக இருந்தன. பெருநிலக்கிழார்கள் சுகபோகங்களில் திளைத்து, உழைக்காமல் செலவு செய்து வந்ததன் காரணமாக எப்பொழுதும் கடனாளிகளாக இருந்தார்கள். தங்கள் நிலங்களை அடகு வைத்தும், விற்றும் கடன் வாங்கிச் செலவு செய்தார்கள் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. சமுதாயத்தின் இன்னொரு கோடியில் இருந்தவர்கள் இவர்களை அண்டி வாழ்ந்து அடிமையாக இருந்தார்கள். அன்றைய நிலவுடைமைச் சமுதாயத்தின் தலையாய உற்பத்திச் சாதனங்களாக இவர்கள் இருந்தும் கூட தாங்கள்

கடன் வாங்கவேண்டுமானால் தங்களையே அடகுவைத்தும் விற்றுமே கடன் வாங்க முடியும். மகன் திருமணத்துக்கென்று கடன் வாங்கிய தந்தையை, மகனையும் மருமகளையும் வாழைபடி வாழையாக நிலமுதலாளிக்கு அடிமையாக அர்ப்பணிப்பதை,

> "ஆனந்த வருஷம் வைகாசி மாதம் 9-ஆம் தேதி மாந்துறையில் இருக்கும் கொண்டையம்பேட்டை ராமச்சந்திரராயர் அவர்களுக்கு தாங்கள் பணை பள்ளன் அனந்தன், கலியாணத்துக்காக அடிமை சீட்டு எழுதிக் கொடுத்தபடி யென்னவென்றால் இதுநாளது நான் என் மகன் கோவிந்தன் கலியாணத்துக்காக தாங்களிடமிருந்து ரூ.13-ம் நெல் 5 கலமும் வாங்கிக் கொண்டு கலியாணம் நடப்பிவிக்கிற படியினாலே மேற்படி கோவிந்தன் ஆண் அடிமை பெண் அடிமை குடும்ப சகிதமாய் பண்ணை அடிச்சு கொண்டு வருவானாகவும் இந்த படிக்கு சம்மதிச்சு...... அடிமைசீட்டு எழுதிக் கொடுத்தேன்"[5]

என்று ஓர் ஆவணம் ஒளிவு மறைவின்றித் தெரிவிக்கிறது. நிலக்கிழார்கள் தங்களிடம் அடிமையாக வேலை செய்யும் பணியாட்களையும் நிலங்களை விற்பதைப்போல தங்கள் வாழ்க்கை வளத்துக்காக விற்கும் செய்தியையும் ஓர் ஆவணம் நமக்குத் தெரிவிக்கிறது.

இவ்வாவணங்கள் வேறுசில சமுதாயச் செய்திகளையும் தருகின்றன. ஊர்களில் நிலக்கிழார்களை அண்டி கொல்லர், தச்சர், நாட்டுக் கர்ணன், கிராமக் கர்ணன் போன்ற பிற தொழிலாளிகளும் இருந்தார்கள். முகலாய ஆட்சிக் காலத்திலிருந்து வழங்கிவந்த சுபா, மாகாணம் போன்ற ஆட்சிப் பிரிவுகளையும் தொடர்ந்து கும்பினி அரசு பயன்படுத்தியது எனவும் அறியமுடிகிறது. கும்பினி ஆட்சியில் பயன்படுத்தப்பெற்ற பணவகையை 'கும்பினி அரும்பு', 'கும்பினி சிலாவணி' என்னும் பெயரால் அழைக்கப்பெற்றதையும், கிராமத்தில் வழங்கப்பெற்ற பழைய கணக்கு முறைகளையும் இவ்வாவணங்கள் தெரிவிக்கின்றன.

இவ்வாறு இவ்வோலை ஆவணங்கள் 19-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்து வந்த அரசியல் சமுதாய மாற்றங்களை ஓரளவு கோடிட்டுக் காட்டுகின்றன. இவ்வோலை ஆவணங்களில் இடம்பெறும் ஊர்களின் பெயர்களாக அறந்தாங்கி, அக்கரானூர், அபிஷேகபுரம், ஆங்கரை, இடையாற்றுமங்கலம், இரகுநாதபுரம், உத்தமசீலி, கொண்டையம் பேட்டை, கும்பகோணம், கூத்தூர், கோனேரிராஜபுரம், சிறுமருதூர், சீரங்கம், செய்யாமங்கலம், செவந்திநாதபுரம், சொக்கநாதபுரம், தஞ்சாவூர், தத்தனூர், திரிசிரபுரம் கோட்டை, திருவானைக்காவல், திருவொருவநல்லூர், திருவாதி தாலுக்கா, திருக்காட்டுப் பள்ளி, திம்மராய சமுத்திரம், நெரிஞ்சல்குடி,

பம்பரஞ்சுத்தி, பழமாரனூர், மழவனூர், மாந்துறை, முளப்பதுகுடி, ரெங்கநாதபுரம், லாடபுரம், லால்குடி முதலான பல ஊர்களின் பெயர்கள் அறிய வருகின்றன. இது ஊர்ப்பெயர் ஆய்விற்கு வழி வகுக்கும்.

## முடிவுரை

*18,19*-ஆம் நூற்றாண்டுகளின் சமூக ஆய்விற்கும் வரலாற்றாய்விற்கும் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட அரசு ஆவணங்களே இதுவரை பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆயினும் தமிழ் முதலிய இந்நாட்டு மொழிகளில் எழுதப்பெற்ற பிற ஆவணங்கள் தரும் செய்திகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டால்தான் முழுமையான வரலாறு கிடைக்கும் என்ற கருத்து அண்மைக் காலத்தில் மேலோங்கி வருகிறது. இத்தகைய ஆவணங்கள் ஏராளமாக நாட்டுப்புறங்களிலும், மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களிலும், பல்வேறு தமிழ் ஆராய்ச்சி நிறுவனங்களிலும், சுவடி நூலகங்களிலும் அழிந்த வண்ணம் இருக்கின்றன. இவைபோன்ற ஆவணங்களைத் தொகுத்துப் பதிப்பித்தால் இதுவரை வரலாற்றிற்குக் கிடைக்காத பல செய்திகளைப் பெறலாம் என்பது உறுதி. திருச்சி மாவட்ட ஓலை ஆவணங்களில் உள்ள சமூக, வரலாற்றுக் கருவூலத்தைக் கோடிட்டுக் காட்டும் இவ்வாய்வு, இனிவரும் சமூக, வரலாற்று ஆய்வாளர்களுக்கு ஓர் வழித்துணையாக அமையுமேயானால், அதுவே இவ்வாய்வின் பயனாகும்.

## குறிப்புதவி நூல்கள்

1. திருச்சிராப்பள்ளி மாவட்ட ஓலை ஆவணங்கள், எ. சுப்புராயலு (பதி.) தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1991.

2. வாழ்வியற் களஞ்சியம் - தொகுதி-2, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1991.

* * *

# 20. ஓலைச் சுவடிகளில் ஆவணங்களும் - பதிவேடுகளும்

புலவர் பா. கண்ணையன்

**முன்னுரை**

உலகில் தோன்றிய முதல் மனிதன் தமிழன் என்பது வரலாற்று ஆசிரியர்களின் கருத்து. முதல் தமிழ் மனிதன் எண்ணத்தில் தோன்றியதை வெளிப்படுத்தப் பேசக் கற்றான். பேசிய மனிதன் கருத்துக்களை எழுதி வைக்க முயன்று எழுத்துக்களை உருவாக்கினான். எழுதவொரு சாதனமாகப் பனையோலையைப் பயன்படுத்தினான். அந்தப் பனையோலை பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை பயன்பட்டது. ஆனால் அவற்றைப் பாதுகாக்க இயலாமல் பல இடையூறுகள் இருந்ததால் அழிந்துபோன சுவடிகள் அளவற்றன. எஞ்சிய சிறிதளவே இப்போது அச்சேறி நூல்களாக வெளிவந்துள்ளன. இந்தச் சிறுபகுதி நூல்களைக் கண்டே உலகம் வியக்கிறது. அழிந்த சுவடிகளும் அச்சேறியிருந்தால், முதன்முதலாகச் சந்திரனில் காலடி வைத்தவன் தமிழனாக இருந்திருப்பான். இந்நேரம் அனைத்துக் கிரகங்களையும் ஆய்வு செய்து விட்டுச் சூரியனை நெருங்கச் சூழ்நிலையை ஆராய்ந்து கொண்டிருப்பான். ஆகவே தமிழ் நாட்டுக்குச் சிறப்பாக வாய்த்த ஓலைச் சுவடிகளால் பெருமை கொள்கிறோம்.

**ஓலையில் எழுதப்பட்ட ஆவணங்களும் பதிவேடுகளும்**

ஓலைச் சுவடிகள் மூன்று வகைப்படும். அவை:

1. ஆவணங்கள்
2. பதிவேடுகள்
3. இலக்கியம், இலக்கணம், கணிதம், மருத்துவம், விஞ்ஞானம் போன்ற நூல்கள்.

இவற்றில் மூன்றாம் வகையான நூல்கள் இப்போது பலரிடமும் உள்ளன. ஆனால் ஆவணங்களும் பதிவேடுகளும் இப்போது அதிகமாக இல்லை. இவை அரிதாக அரசு அலுவலகங்களிலும், தனியார் வணிக நிறுவனங்களிலும் இருந்தவை. அலுவலக நடை முறைப்படி காலாவதியானதும் அழிக்கப்பட வேண்டியவை. ஆகவே அவை அவ்வப்போது அழிக்கப்பட்டு

விட்டதால் ஆவணங்களும் பதிவேடுகளும் கண்ணால் பார்க்கக்கூடக் கிடைக்காமற் போய்விட்டன. இதுபோலவே வணிகர்களிடம் இருந்தவகைகளும் நாளா வட்டத்தில் அழிந்துவிட்டன.

இவ்வகை ஓலைச்சுவடி ஆவணங்களிலும் பதிவேடுகளிலும், உள்ள எண்கள் முற்றிலும் தமிழ் எண்களாகவே குறிக்கப்பட்டுள்ளன. இவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களின் வகைகள், வேளாண்மைப் பயிர்களின் பெயர்கள், மக்களின் இனப் பெயர்கள், நாணயங்கள் ஆகியவை குறியீடுகளால் குறிக்கப்பட்டுள்ளன. ஆகவே பழங்கால ஓலைச் சுவடிகளைப் படிப்பதில் தேர்ந்தவராகவும், தமிழ்க் கணிதத்தில் மேல்வாய் இலக்கம், கீழ்வாய் இலக்கம், நெல் இலக்கம், குழிமாத்து ஆகியவற்றை முற்றிலும் கற்றுத் தேர்ந்தவராகவும் இருப்பவர்கள் மட்டுமே இவற்றைப் படிக்கவும் படியெடுக்கவும் இயலும். இது தவிர இந்த ஆவணங்களில் குறிப்பிடப்பட்டுள்ள குறியீடுகள் வழக்கொழிந்து போனதாலும், தமிழ் எண்களை எழுதும் வழக்கம் முற்றிலுமாக ஒழிந்து போனதாலும் இவற்றைப் படிப்பது மிகவும் கடினமாக உள்ளது.

பல்லவ மன்னர் காலங்களிலும், தமிழ் மன்னர்களான பாண்டிய சோழ மன்னர் காலங்களிலும் ஆவணங்களும் பதிவேடுகளும் பராமரிக்கப்பட்டு வந்ததைக் கல்வெட்டுக்களில் காண்கிறோம்.

ஆங்கிலேயர் ஆட்சியில் காப்டன்ரீட் (Captain Read), தாமஸ் மன்றோ (Thomas Munro) ஆகியவர்களால் கிபி*1792*-ஆம் ஆண்டில் அறிமுகப்படுத்தப்பட்ட ரயத்துவாரிமுறை நடைமுறைப்படுத்தப்படும் வரை, தமிழ் மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் கையாளப்பட்டு வந்த முறைகளிலேயே ஆவணங்களும் பதிவேடுகளும் மாறுதலின்றித் தொடர்ந்து நடைமுறையிலிருந்தன.

சோழமன்னர் பாண்டிய மன்னர் ஆட்சிக் காலத்திலிருந்து, விஜய நகர மன்னர்கள் முகலாய மன்னர்கள் ஆட்சிக் காலங்கள் வரை தமிழகத்தில் வழங்கப்பட்டுள்ள சாசனங்களில் நில விவரங்களும், நில உரிமைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. செங்கற்பட்டு மாவட்ட ஓலைச் சுவடிக் கணக்குகளில் நிலவிவரங்களும், நில உரிமைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. தற்போது நடைமுறையிலிருக்கும் கிராமக் கணக்குகளில் முதன்மையானதும், நிலையானதுமான அ. பதிவேட்டில் (A-Register) நிலவிவரங்களும், நில உரிமைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆக இவை மூன்றிலும் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்களைப் படிப்படியாக ஆய்வுநோக்கில் ஒன்றுக் கொன்று ஒப்பிட்டுப் பார்த்தால், சுமார் *1000* ஆண்டு காலமாகத் தமிழகத்தில் நடைமுறைப் படுத்தப்பட்டு வரும் நிலவிவரக் கணக்குகள், மாறுதலின்றித் தொடர்ந்து நடைமுறையிலிருந்து வருவதையறியலாம்.

இரயத்துவாரிமுறை நடைமுறைக்கு வருவதற்கும் காகிதத்தில் எழுதும் முறை வழக்கத்திற்கு வருவதற்கும் சரியாக இருந்தன. அதனால் இரயத்துவாரி முறைக்கு மாற்றியமைக்கப்பட்ட ஆவணங்களும் பதிவேடுகளும் காகிதத்தில் எழுதும் வழக்கத்திற்கு வந்துவிட்டன. இரயத்துவாரி முறை நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் பயன்படுத்தப் பட்ட ஒரு சில ஓலை ஆவணங்களும் பதிவேடுகளும் மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களில் வைக்கப்பட்டிருந்தன. அந்த ஆவணங்களும் பதிவேடுகளும் வைப்பதற்குக்கூட இடமில்லாமலும், எண்ணெய் பூசுதல், வெய்யிலில் காயவைத்தல், மருந்திடுதல் போன்ற காப்பீடு முறைகள் கையாளப்படாததாலும் குறுகிய காலத்திற்கு மட்டுமே பயன்படுமாறு பதப்படுத்தாத ஓலைகளில் எழுதப்பட்டிருந்ததாலும் பாதுகாப்பின்றி அழிந்து கொண்டிருந்தன.

செங்கற்பட்டு மாவட்ட ஆட்சியர் அலுவலகப் பதிவுவைப்பறைக் காப்பாளர் அழிந்து கொண்டிருக்கும் இவைகளை வரலாற்று ஆராய்ச்சி செய்ய எடுத்துக் கொண்டால் அலுவலக வைப்பறையில் இடமும் காலியாகும் இந்த ஓலைச்சுவடி ஆவணங்களும், பதிவேடுகளும் நல்ல நிலைமையில் பராமரிக்கப்படும் என்று எண்ணி, மாவட்ட ஆட்சியர் மூலம் அரசிடம் அனுமதி பெற்றுப் பல நிறுவனங்களுக்கு எழுதி இவற்றை எடுத்துக் கொள்ளுமாறு வேண்டினார்.[1] இதில் எந்த நிறுவனமும் அக்கறை காட்டாத நிலையில் அப்போது தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் ஓலைச் சுவடித் துறை தலைவராக இருந்த பேராசிரியர் திரு.மு. சண்முகம் பிள்ளை அவர்கள் முன்வந்து தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்காகப் பெற்றுக் கொண்டார்கள். தற்போது அந்த ஓலைச் சுவடிப் பதிவேடுகளும் ஆவணங்களும் மேற்படி தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் உள்ளன.

அத்துடன் தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் இருந்த தஞ்சாவூர் மாவட்ட ஓலைச் சுவடி கிராமக் கணக்குகளும், புதுக்கோட்டை மர்பார்கால ஓலைச் சுவடிக் கணக்குகளும் ஆவணங்களும் உள்ளன. சென்னையிலுள்ள அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் ஒருசில கிராமக் கணக்குகள் உள்ளன. டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் நூலகத்திலும் நிலங்களின் உரிமை சாசனம் போன்ற ஆவணங்கள் சில உள்ளன. காஞ்சிபுரத்திலுள்ள அருள்மிகு தொண்டைமண்டல ஆதின மடத்திலுள்ள நூலகத்திலும் சில ஆவணங்கள் உள்ளன. பாண்டிச்சேரியிலுள்ள பிரெஞ்சு ஆய்வு நிறுவனத்திலும் ஓலைச் சுவடிப் பதிவேடுகள் உள்ளன. சென்னை செம்மஞ் சேரியிலுள்ள ஆசியவியல் நிறுவனத்திலும் அரசு முத்திரை பதித்த ஓலைச் சுவடி ஆவணங்களும், திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம் பொன்னூர்க் கிராமக் கணக்கும், தனியார் நில அடமானக் கடன் பத்திரம் போன்ற ஆவணங்களும் உள்ளன.

ஆவணங்கள் என்பவை நிலங்கள் வீடுகள் போன்ற சொத்துக்களின் டரிமைப் பட்டயங்கள், கிரயம், தானம், கடன் ஒத்தி போன்ற சாசனங்கள், ஒப்பந்தப் பத்திரங்கள், சான்றுகள், தேர்தல் வாக்குச் சீட்டுகள், அரசு ஆணைகள், அறிவிப்புகள் போன்றவையாகும்.

பதிவேடுகள் என்பவை வரவு செலவு கணக்குகள், அன்றாட நிகழ்ச்சிக் குறிப்புகள், நிலங்களின் உரிமை, வரிநிர்ணயம், வரிவசூல், ஊழியர்கள் மற்றும் அவர்களின் ஊதியம் ஆகிய விவரங்கள், நன்கொடைகள் வழங்கும் விவரங்கள் போன்றவையாகும்.

## ஆவணங்கள் -பதிவேடுகள் எழுத ஓலையைப் பதப்படுத்துதலும், பயன்படுத்தலும்

ஓலைச் சுவடிகள் எழுதப் பனையோலைகளைப் பதப்படுத்தித் தருவதையும், சுவடி பார்த்துப் படி எழுதிக் கொடுப்பதையும் அக்காலத்தில் பலர் பிழைப்புக்கான தொழிலாகவே கொண்டிருந்தனர்.

சுவடிகள் எழுத சாதாரணப் பனைமரத்தின் ஓலைகள், தாளிப்பனை அல்லது கூந்தற்பனை எனப்படும். பனைமரத்தின் ஓலைகள் ஆகிய இருவகையான பனையோலைகள் பயன்படுகின்றன. சாதாரணப் பனையை விட தாளிப்பனையின் ஓலைகள் அகலமாகவும் நீளமாகவும் மென்மையாகவும் இருக்கும்.

தகுதியான காய்ந்த ஓலைகளை அளவாக நறுக்கிப் பதமாக வேகவைக்க வேண்டும். அவற்றை ஈரமின்றி உலரவைத்து மழுங்கிய கூழாங்கல் அல்லது சங்குகொண்டு அழுத்தித் தேய்த்துப் பதப்படுத்த வேண்டும். இவ்வாறு செய்வதை ஏடு பதப்படுத்துதல் அல்லது ஏடுபாடம் செய்தல் எனப்படும்.

பதப்படுத்திய ஓலைகள் எழுதுவதற்குத் தகுதியாகச் சீவி செம்மைப்படுத்தி, புத்தக ஏடுகளாக உதவுமாறு செய்யவேண்டும். இவ்வாறு செம்மைப்படுத்துதல் ஓலைவாருதல் அல்லது ஏடுவாருதல் எனப்படும்.

செம்மைப்படுத்திய் ஓலைகளில் துளையிட்டுக் கயிறு கோர்த்துச் சுவடியாக்குவார்கள். இவ்வாறு இடப்படும் துளைகள் ஓலைக் கண்கள் எனப்படும்.

**ஆவணங்களும் பதிவேடுகளும்** எழுதுவதற்கு முழு ஓலைகளைப் பயன்படுத்துவார்கள். சில ஆவணங்களுக்கு நறுக்கப்பட்ட ஓலைகளையும் பயன்படுத்துவார்கள். பதிவேடுகள் எழுதப் பதப்படுத்தாத முழு ஓலைகளையே பயன்படுத்தி வந்தனர். இந்த முழு ஓலைகள் “கணக்கு ஓலை” அல்லது “கணக்கு ஏடு” எனப்படும்.

ஆவணங்கள் எழுதும் ஓலைகள் பதப்படுத்தப்பட்டு அரசுமுத்திரை பதிப்பிக்கப்படும். பதிவேடுகளில் அரசுப் பதிவேடுகளின் தலைப்பு ஏட்டிலும் அரசுமுத்திரை பதிக்கப்படும். இவ்வாறு பதிக்கப்படும் முத்திரை "ஓலை முத்திரை" அல்லது "ஏட்டுப்பொறி" எனப்படும்.

ஓலைச்சுவடிகள், ஆவணங்கள், பதிவேடுகள் ஆகியவை எழுதப் பயன்படுத்தப்படும் ஆணி இரும்பு வெண்கலம் முதலான உலோகங்களில் தயாரிக்கப்படும். இவ்வித ஆணிகள் (Stylus) "எழுத்தாணி", "எழுத்து ஊசி", "ஓலை ஆணி", "ஓலை தீட்டும் படை" எனப் பல பெயர்களால் கூறப்படும்.

இவை "குண்டெழுத்தாணி", "வாரெழுத்தாணி", "குடவெழுத்தாணி" (குடைவெழுத்தாணி) "மடக்கெழுத்தாணி" எனப் பல வகைகளாகப் பயன் படுத்தப்படுகின்றன.

ஓலைச் சுவடிகள், ஆவணங்கள் போன்றவை எழுதும் பணியாளர்களுக்கு "ஓலை எழுத்துப் பேறு" என ஊதியமும், ஓலை எழுத்து "விநியோகம்" எனச் சன்மானமும் வழங்கப்பட்டன.

ஓலைகளில் பதிவேடுகள் (கணக்குகள்) எழுதும் கணக்கர்களுக்கு "கணக்கப்பேறு" என ஊதியமும், "கணக்கக்காணி" என நிலமானியமும் வழங்கப்பட்டன.

ஓலைச் சுவடி நூல்கள், ஆவணங்கள், பதிவேடுகள் ஆகியவை வைத்துப் பாதுகாக்கப்படும் இடம் "சரஸ்வதி பண்டாரம்" எனப்படும்.

ஓலைச் சுவடி நூல்கள், ஆவணங்கள் பதிவேடுகள் ஆகியவற்றை வைத்துப் பாதுகாக்கப்படும் பேழை "ஓலை சம்புடம்" எனப்படும்.

ஓலைச்சுவடி நூல்களையும் ஆவணங்களையும் பதிவேடுகளையும் வைத்துப் படிப்பதற்குப் பயன்படுத்தப்படும் சாய்வுப் பலகை "சரஸ்வதி பீடம்" எனப்படும்.

ஓலைச்சம்புடம் அடங்கிய தூக்கினைத் தூக்கிச் செல்லும் பணியாளர் "தூக்குத் தூக்கி" எனப்படுவார்.

## ஆவணங்கள் (Documents)

ஆவணங்களை ஓலையில் எழுதி அதில் எழுதிக் கொடுப்பவர்கள் முதலான சம்பந்தப்பட்டவர்கள் கையொப்பமிடுவார்கள். ஆவணத்தில் எழுதப் பட்டுள்ள செய்திகளை முழுவதும் நேரில் அறிந்தவர்கள் சாட்சிக் கையொப்பமிடுவார்கள். ஆவணத்தை எழுதியவர் "இது எழுதியது (இன்னார்)

இவை என் எழுத்து" என்று எழுதிக் கையொப்பமிட்டுப் பூர்த்தி செய்வார். ஆவணக் களரியில்[2] இதனைப் பதிவு செய்வார்கள்.

ஆவணத்தில் கையொப்பமிட எழுத்தறிவில்லாதவர்களுக்கு மாற்றாக வேறொருவர் கையொப்பமிடும் வழக்கமும் இருந்துள்ளது. இதனை "தற்குறிக்குத் தற்குறி மாட்டெறிந்தேன்"[3] என்ற கல்வெட்டுப் பகுதியால் அறிகிறோம்.

இக்காலத்தில் ஆவணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கிரயத்தொகை முதலான ரொக்கத் தொகைகளை ஆவணங்களைப் பதிவாளர் அலுவலகத்தில் பதிவுசெய்யும் போது, பதிவாளர் முன்பாகச் செலுத்தும் வழக்கம் நடைமுறையிலுள்ளது. ஆனால், இவ்வழக்கம் கிபி*1255*-ஆம் ஆண்டிலேயே நடைமுறையிலிருந்ததை "இக்காசு நாற்பத்தையாயிரம் ஆவணக் களரியிலேயே காட்டேற்றிக் கைச் செலவறக் கொண்டு விற்று விலைப் பிரமாணஞ் செய்து குடுத்த இந்நிலத்துக்கு இதுவே விலையாவதாகவும்" என்று காட்டு மன்னார் கோயில் கல்வெட்டு ஒன்று அறிவிக்கிறது.[4]

மூல ஆவணங்கள் ஓலையில் எழுதப்படும். அதற்குச் சரியான படிகள் கல்லிலும் செப்பேட்டிலும் வெட்டப்படும்.[5] இன்று நமக்குக் கிடைத்துள்ள கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் பண்டைக் காலத்தில் முதலில் ஓலையில் எழுதப்பட்ட ஆவணங்களின் படிகளே ஆகும்.

ஓலையில் எழுதப்பட்ட பழைய ஆவணங்கள் காலப்போக்கில் அழிந்து போனாலும் அவற்றின் படிகளாக விளங்கும் கல்வெட்டுக்களையும், செப்பேடுகளையும் கொண்டு என்னென்ன ஆவணங்கள் எவ்வாறு எழுதப்பட்டிருந்தன? அவைகளில் குறிப்பிடப்பட்ட செய்திகள் யாவை? என்பனவற்றை அறிந்து கொள்கிறோம்.

நீதிமன்றங்களில் நடைபெறும் வழக்கில் வழக்காளிகள் தமது வாதத்திற்கு உலகவழக்கு, எழுதப்பட்ட ஓலை ஆவணம், நேரில் கண்டவர்களின் சாட்சி ஆகிய மூன்றையும் ஆதாரமாகக் காட்டுவர். இந்த ஆதாரங்களை நீதிமன்றம் ஏற்று, நன்கு பரிசீலித்து இவ்வாதாரங்களின் அடிப்படையில் நீதி வழங்கும். இவற்றில் மிகவும் முக்கியமான ஆதாரமாக விளங்குவது ஓலை ஆவணம் என்பதனைச் சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர்புராணத்தில்

"ஆட்சியில் ஆவ ணத்தில்
அன்றிமாற் றயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று
காட்டுவாய் என்ன முன்னே

மூட்சியிற் கிழித்த ஓலை
படிஓலை மூல ஓலை
மாட்சியிற் காட்ட வைத்தேன்
என்றனன் மாயை வல்லான்."[6]

என்றும்,

"இருள்மறை மிடற்றோன் கையில்
ஓலைகைண் டவையோ ரேவ
அருள்பெறு கரணத் தானும்
ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி
விரித்ததன் தொன்மை நோக்கித்
தெருள்பெறு சபையோர் கேட்ட
வாசகம் செப்பு கின்றான்"[7]

என்றும், இறைவன் சுந்தரரைத் தடுத்து ஆளாகக் கொண்ட செய்தியை உரைக்கும் பகுதியில் ஆவணத்தின் சிறப்பினையும், நீதிமன்றத்தில் ஆவணத்தை எவ்வாறு சாட்சியாகக் கொள்கின்றனர் என்பதனையும் செயல்முறை விளக்கம் தோன்ற நன்கு விளக்கிக் கூறுகிறார்.

இதுதவிர வேள்விக்கு படிச் செப்பேட்டில் கொற்கைக் கிழான் நற்சிங்கன் என்பானை அவனுடைய உரிமையைப் பெற்றிட "நாட்டானின் பழைமையாதல் காட்டி நீ கொள்க"[8] என்று ஆதாரம் காட்டும் படிக் கூறியிருப்பதையும் காணலாம்.

தற்காலத்தில் எழுதப்படும் நிலபுலன்களின் கிரய சாசனங்கள்,. ஒத்தி அடமானம் போன்ற கடன் சாசனங்கள், பங்காளிகளின் பாகப் பிரிவினைப் பத்திரம், ஒப்பந்தங்கள், விவாகரத்து, அதிகாரப் பத்திரம் (Power of Attorney) போன்ற சாசனங்கள் பண்டைக்கால ஓலைச் சாசனங்களில் கண்டுள்ள முறையினைப் பின்பற்றியே மாறுதலின்றி எழுதப்பட்டு வருகின்றன.

பழங்காலத்தில் ஓலைகளில் எழுதப்பட்டு வழக்கத்திலிருந்த ஆவணங்கள் வருமாறு:

1. அஞ்சாப் பட்டயம்
   1. எடுத்த உரிமைகளைத் திரும்ப அளித்தற்குரிய சாசனம்.
   2. பிறர் கொடுமை செய்யாவண்ணம் நியமிக்கப்படும் சாசனம்.

| | | |
|---|---|---|
| 2. | அடத்திச் சீட்டு | ஒரு வியாபாரி மற்றொரு வியாபாரிக்கு இவ்வளவு தொகைவரை கொடுக்கலா மென்று எழுதிக் கொடுக்கும் சீட்டு. |
| 3. | அடிமை யோலை | ஆள் அடிமைப் பத்திரம் (Bond of a Slave) |
| 4. | அடவோலை<br>அடைவோலை | சொத்தை ஈடுகாட்டி எழுதிக்கொடுக்கும் அடமானக்கடன் பத்திரம் |
| 5. | அதிகாரப் பத்திரம் | தான் செய்யவேண்டிய காரியத்தைத் தனக்காகப் பிறர் செய்வதற்கு அதிகாரம் அளிக்கும் பத்திரம். (Power of Attorney) |
| 6. | அம்ச பத்திரம்<br>அவகாச முறி | பங்காளிகள் ஏற்படுத்திக் கொள்ளும் பாக அட்டவணைப் பத்திரம் (Partition Deed) |
| 7. | அறிக்கைப் பத்திரம்<br>அறிக்கையோலை<br>இஸ்தியார்<br>இஸ்தியார் நாமா | எழுத்து மூலமான அறிவிப்பு |
| 8. | அறுத்து முறி | மனைவியைத் தள்ளிவிடுகைப் பத்திரம் |
| 9. | அறுதிக் கிரயம்<br>அறுதிச்சாதனம்<br>அறுதிச் சீட்டு<br>அறுதி யுறுதி<br>கிரய சாசனம்<br>கிரய சீட்டு<br>கிரயப் பத்திரம்<br>விலையாவணம்<br>நிலவிலையாவணம் | நிலபுலன் முதலான சொத்துக்களின் விற்கிரய சாசனம் (Sales Deed) |
| 10. | அறுதி முறி அறையோலை | தீர்ந்துபோன (காலாவதியான) பத்திரம். ஒப்பந்தக் காலம் முடிந்து உரிமையற்றுப் போன ஒப்பந்தச் சீட்டு ஓலை |
| 11. | அறுப்புச் சீட்டு | தானிய அறுவடை செய்ய அனுமதிச் சீட்டு |
| 12. | ஆக்கினைப் பத்திரம்<br>ஆணையோலை | அரசனது கட்டளைத் திருமுகம் |

| | | |
|---|---|---|
| | கோனோலை<br>திருமுகம்<br>ஸ்ரீமுகம் | |
| 13. | இசைவுத் தீட்டு<br>இசைவோலை | உடன்படிக்கை சாசனம் |
| 14. | உபயத் தீட்டு | கோயிலில் வழிபாடு செய்யும் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட தற்கமைந்த உடன்பாட்டுச் சீட்டு |
| 15. | எதிர்ச் சீட்டு<br>எதிரிடைமுறி<br>எதிர்நடைப் பத்திரம்<br>எதிர்முறி | சொத்தைக் கிரயம் வாங்கினவர் அச்சொத்தை விற்பனை செய்ய நேரிட்டால், கிரயம் கொடுத்தவருக்கே திரும்பக் கிரயம் செய்வதாக ஒப்பந்தம் செய்து எழுதும் கிரயப் பத்திரம். |
| 16. | எல்லைப் பத்திரம் | எல்லை வழக்கு தீர்த்து எழுதும் பத்திரம் |
| 17. | ஒற்றிப் பத்திரம் | வாங்கும் கடன் தொகையைத் திரும்பச் செலுத்தும் போக்கியப் பத்திரம் வரை வட்டிக்கு ஈடாக ஈட்டுச் சொத்தை அனுபவித்து வரும் உரிமையுடன் கூடிய கடன் பத்திரம். |
| 18. | கடன் ஓலை<br>கடன் சீட்டு<br>கடன் முறி<br>கடன் பத்திரம் | வாங்கும் கடனுக்கு ஆதாரமாக எழுதிக் கொடுக்கும் ஆவணம் |
| 19. | கவுல் நாமா<br>கவுல் சீட்டு<br>குடியுடன் படிக்கை<br>குத்தகைச் சீட்டு<br>சாகுபடி முச்சலிக்கா<br>செய்கைச் சீட்டு<br>கபுலியத் நாமா | நிலக் குத்தகைப் பத்திரம் |
| 20. | கைபீது<br>கைபீயத்த | விவரக் குறிப்பேடு |
| 21. | குடவோலை<br>குடத்திலிடும் சீட்டு | சபையோரைத் தேர்ந்தெடுக்கக் |

| | |
|---|---|
| 22. கைத்தீட்டு | நேரில் கையெழுத்திட்டு எழுதிக் கொடுக்கும் உறுதிச் சீட்டு |
| 23. சர்வ முக்தியார் நாமா | எல்லாவற்றுக்குமாகக் கொடுக்கப்படும் அதிகாரப் பத்திரம் |
| 24. சுகஸ்த லிகிதம் தானே<br>சுவஸ்த லிகிதம்<br>சொஸ்த லிகிதம் | தன்கையால் எழுதிய ஆவணம் |
| 25. சுவீகாரப் பத்திரம் | பிறர் மகனைத் தன் மகனாகத் தத்து எடுத்தல் ஆவணம் |
| 26. சீதன ஓலை | மணமகளுக்கான சீதனம் எழுதப்பட்ட ஓலை |
| 27. சுருள் ஓலை | கடிதம் எழுதிச் சுருட்டி முத்திரையிடப்பட்ட ஓலை |
| 28. சோடி ராஜிநாமா | நில உரிமையை விட்டுவிட எழுதிக் கொடுக்கும் மனு |
| 29. தவணைக் கிரய சாசனம் | தவணைக்குள் ஒத்தித்தொகை செலுத்தாவிடில் ஒத்திக்காரருக்கே நிலம் உரிமையாவது என்றநிபந்தனைக் குட்பட்ட ஒத்தி ஆவணம் |
| 30. தவணைச் சீட்டு | கெடு வைத்து எழுதிய பத்திரம் |
| 31. தான சாசனம்<br>தான பத்திரம்<br>தான பத்திரிக்கை | ஒருவர்க்குக் கொடை வழங்கின விவரம் குறித்த ஆவணம் (Gift Deed) |
| 32. திருவுளச் சீட்டு | குலுக்கிப் போட்டு எடுத்தல் முதலிய வகையால் தெய்வ சித்தமறியும் சீட்டு |
| 33. நாளோலை | முகூர்த்த ஓலை |
| 34. நியாயப்பத்திரம் | வழக்குத் தீர்ப்பு ஏடு |
| 35. பரிவர்த்தனைப் பத்திரம் | தமது வசதிக்குத் தக்கவாறு தம்முடைய சொத்துக்களை ஒருவருக்கொருவர் மாற்றிக் கொள்வதற்கான ஆவணம் |

36. பற்றுமுறி — தொகையைப் பெற்றுக் கொண்டவர் பற்றுச் சீட்டாக எழுதி வழங்கும் ஓலைத் துணுக்கு

37. பிடிபாடுத் தீட்டு — ஆதாரமாக எழுதித் தரும் உறுதிச் சீட்டு (உத்திரவாதச் சீட்டு)

38. பிரமாண இசைவுத் தீட்டு — விற்பவர் வாங்குபவர் இருவரும் விலையை உறுதி செய்து, கிரயத்தை ஒப்புக் கொண்டதற்குரிய சான்றாக இருவரும் எழுதிக் கொள்ளும் உடன் படிக்கை உறுதிச்சீட்டு **(Agreement)**

## பதிவேடுகள் (Registers)

ஓலைச்சுவடியில் நூல்கள் எழுதப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆனால் பதிவேடுகள் **(Registers)** ஓலையில் எழுதியிருப்பதைப் பலர் பார்த்திருக்க மாட்டார்கள். பதிவேடுகள் பெரும்பாலும் ஓராண்டுக்கு மட்டில் பயன்படுத்தப்படும். ஆகவே பதிவேடுகள் எழுதப் பதப்படுத்தப்படாமலும் நறுக்காமல் நீளமாக உள்ள முழு ஓலைகளை அப்படியே பயன்படுத்துவார்கள். பல ஆண்டுகள் நடைமுறையிலிருக்க வேண்டிய பதிவேடுகளுக்கு மட்டில் அடிப்பாகமும் நுனிப்பாகமும் சிறிதளவு நறுக்கப்பட்டு பதப்படுத்துதல் முறைப்படி பதப்படுத்தப்பட்ட ஓலைகளில் எழுதுவார்கள்.

ஓலைகளில் எழுதப்பட்ட பதிவேடுகள் அடுக்காகக் கோர்த்துக் கட்டப்படுவதில்லை. அவை சுருட்டிச் சுருணையாகக் கட்டப்பட்டிருக்கும். அந்தச் சுருணைகள் அடிப்பாகமும் நுனிப்பாகமும் சிறுத்து, நடுப்பாகம் பெருத்து மலைப்பாம்பின் வயிற்றுப் பகுதிபோல் காணப்படும்.

இப்போது இருப்பது போலவே அக்காலத்திலும் அனைத்துத் துறைகளுக்கும் பல்வேறு பதிவேடுகள் நடைமுறையிலிருந்துள்ளன. அந்தப் பதிவேடுகள் பொத்தகம் என்ற பெயரால் வழங்கப்பட்டன. இப்போது காணப்படும் கல்வெட்டுக்களைப் பதிவு செய்து வைக்கவும் அப்போது ஒரு பொத்தகம் நடைமுறையிலிருந்துள்ளது. அதனை "இவ்வனைவர் கண்காணியாலும், கணக்கினாலும் கல்வெட்டு விகிதப்படி முன்பு கல்வெட்டுச் சேர்த்த பொத்தகம் ஸ்ரீ விமானத்துள்ள கல்வெட்டுப்படி பொத்தகத்தில் சேர்ப்பிக்கவென்று அதிகாரிகள் இருமுடி சோழ மூவேந்த வேளார் நியோகமும்"[9] என்ற கல்வெட்டுப் பகுதியால் அறியலாம்.

தமிழகத்தில் பண்டைக் காலத்திலிருந்து இந்நாள்வரை அரசுக்கு நில வருவாயே முதன்மை வருவாயாக இருந்துள்ளது. இந்த வருவாயுடன் வாணிபத் தொழிலுக்கும், வாணிபப் பண்டங்களுக்கும் வரிவிதித்து

வாங்கப்பட்டுள்ளன. இவ்வகையான வரிவிதிப்பு மற்றும் வசூல் சம்பந்தமாகப் பல பதிவேடுகள் ஓலைகளில் எழுதிப் பராமரிக்கப்பட்டு வந்தன. இதுபற்றிக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் விளக்கமாகக் கூறுகின்றன.

ஒவ்வொரு புத்தாண்டுத் தொடக்க நாளன்று புதிய ஆண்டுக்கான பதிவேடுகள் தொடங்கப்படுவதை அக்காலத்திய சோழ மன்னர்கள் ஒரு விழாவாகவே சிறப்பாகக் கொண்டாடியுள்ளனர். புத்தாண்டின் தொடக்க நாளன்று அரண்மனையில் புதுக்கணக்கு எழுதும் தொடக்க விழா நடைபெறும், அப்போது பேரரசனும், குறுநில மன்னர்களும், மற்றோரும் அமர்ந்திருப்பர். அப்போது அரண்மனைக் கணக்கன் புதிய கணக்கினைத் தொடங்கி, அதில் மன்னனின் மெய்க்கீர்த்தியை எழுதுவார். குறுநில மன்னர்கள் முதன் முதலாக அந்த ஆண்டிற்குச் செலுத்த வேண்டிய திறைப் பொருள், காணிக்கைப் பொருள் ஆகியவற்றைச் செலுத்துவார்கள். அதனைக் கணக்கன் புதுக்கணக்கில் வரவு வைத்து எழுதுவார். அதில் அரசன் முதன் முதலாகத் தன் கையொப்பமிட்டு விழாவை நிறைவு செய்வார். இதனை

"மன்முழுதுங் களிப்ப மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாயிற் புரத்து
மணிநா வொடுங்க முரசுகள் முழங்க
விசையமும் புகழும் மேன்மே லோங்க
வாழி வாழிஇம் மாநிலங் காக்கத்
திருமணி பொற்றோட் டெழுது புத்தாண்டு
வருதிறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் செறிந்த செம்பொற் குவையால்"[10]

என்ற விக்கிரம சோழனின் மெய்க்கீர்த்திப் பகுதி விளக்கிக் கூறுகிறது.

தற்போது கிராமக் கணக்குகளாக ஏ(A) பி(B) பி-1(B-1) ஆகிய நிலைப்பதிவேடுகளும் 1 முதல் 24 வரை எண்களிடப்பட்ட தினந்தோறும் எழுதும் பதிவேடுகளும், மாதந்தோறும் எழுதும் பதிவேடுகளும், ஆண்டுதோறும் எழுதும் பதிவேடுகளும், ஐந்தாண்டுக்கு ஒரு முறை எழுதும் பதிவேடுகளுமாக 42 பதிவேடுகள் நடைமுறையில் இருக்கின்றன. இவை தவிர புராதனச் சின்னங்களின் விவரப்பதிவேடு, சந்தன மரங்களின் விவரப் பதிவேடு, சர்வே எல்லைகளைக் குறிக்கும் கற்களின் விவரப் பதிவேடு, திட்டங்களுக்கு உட்பட்ட ஒப்படை செய்யப்பட்ட நிலங்களின் பதிவேடு போன்ற பல பதிவேடுகளும் நடைமுறையிலிருக்கின்றன.

இந்தப் பதிவேடுகளெல்லாம் பிற்காலச் சோழமன்னர் ஆட்சிக் காலங்களில் நடைமுறையிலிருந்த கணக்குகளே யாகும். முதலாம் இராசராசன் தன்னுடைய 16-ம் ஆட்சியாண்டாகிய கி.பி. 1001 முதல் கி.பி. 1003 வரை

சோழ இராச்சியம் முழுவதையும் அளந்து கணக்கிடுமாறு ஆணையிட்டார். இந்தப் பணி குரவன் உலகளந்தான் இராசராச மாராயன் என்ற அதிகாரி தலைமையில் நில அளவை செய்து, நிலங்களை வகைப்படுத்தித் தரம்பிரித்து நிலவரி நிர்ணயம் செய்யப்பட்டது.[11]

இந்த ஏற்பாடே தமிழகத்தில் முதன் முதலாகச் செய்யப்பட்ட நில அளவை மற்றும் நிலவரித் திட்டம் (Survey and Settlement) ஆகும். நில அளவையும், நிலவரி நிர்ணயமும் செய்த குரவன் உலகளந்தான் இராசராச மாராயன் என்பவரே தமிழ்நாட்டின் நில அளவை மற்றும் நிலவரித் திட்டத் துறையின் முதல் இயக்குநராகப் பதவியேற்ற முதல் அதிகாரியாவார்.

அடுத்து முதற் குலோத்துங்க சோழனின் *16*-வது ஆட்சியாண்டாகிய கி.பி. *1086*-இல் திருவேகம்பம் உடையானான உலகளந்தானான திருவரங்கத் தேவன் என்ற அதிகாரியின் தலைமையில் நிலஅளவை மற்றும் நிலவரித் திட்டம் தொடங்கப்பட்டு கி.பி. *1088*-இல் முடிவுற்றது.[12]

அதன்பிறகு விஜய மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் கிருஷ்ணதேவராயர் ஆட்சியின் போது கி.பி. *1513*-ஆம் ஆண்டில் நில அளவையும் நிலவரித் திட்டமும் செய்து முடிக்கப்பட்டது.[13]

இவ்வாறு நில அளவை செய்து நிலங்களைத் தரமிட்டு நிலவரித் திட்டம் செய்து முடிக்கப்பட்டுத் தயாரிக்கப்படும் பதிவேடு "தரப்பொத்தகம்" அல்லது "ஊர்ப்பொத்தகம்" எனப்பட்டது.[14]

இந்தத் "தரப்பொத்தகம்" அல்லது ஊர்ப்பொத்தகம்" என்பதுதான் இப்போது நடைமுறையிலிருக்கும் நிலையான கிராமக் கணக்காகிய அ. பதிவேடு (A.Register) எனப்படுகிறது.

பண்டைக்காலத்தில் குடிமக்கள் நிலங்களுக்காகச் செலுத்தும் வரிவிவரப் பதிவேடு "வரிப்பொத்தகம்"[15] எனப்பட்டது. இது தற்போது நடைமுறையிலிருக்கும் கிராமக் கணக்கு *16* எண் "வரியேடு" என்ற பதிவேடாகும். இந்தப் பதிவேடு அந்நாளிலிருந்து இந்நாள்வரை பெயர்கூட மாற்றமின்றி வழங்கப்பட்டு வருவதைக் காணலாம்.

இதுபோலவே அனைத்துப் பதிவேடுகளும் ஒப்பிட்டுப் பார்த்தால் பழைய முறைப்படியே இப்போதும் கையாளப்பட்டு வரும் ஒப்புமையைக் காணலாம்.

**ஓலைச் சுவடியில் எழுதப்பட்ட பதிவேடுகள் வருமாறு**

அஞ்சனா ஜாபிதா சாகுபடி மதிப்புப் புள்ளிக் கணக்கு

| | |
|---|---|
| 2. அடைச்சீட்டு | வரி செலுத்தியதற்கான ரசீது |
| 3. அமானத்துச் சிட்டா | பொதுக் குறிப்பேடு (படு குறிப்பு) (Miscelleneous Account) |
| 4. இராசிக் கணக்கு | கூட்டு வியாபாரத்தில் கூட்டாளிகள் தனித்தனியாகக் கணக்கிடும் இலாப நஷ்டக் கணக்கு |
| 5. இருசால் நாமா | தண்டற்பணம் அரசுக் கருவூலத்தில் செலுத்தியதற்கான விவரக் கணக்கு |
| 6. இனாயத் நாமா | இனாம்களின் விவரம் குறித்த பதிவேடு |
| 7. எதிர் கணக்கு<br>எதிர்நடைக் கணக்கு | கணக்கரால் எழுதப்பட்டு ஊர்ச் சபையினருக்கோ அல்லது கண்காணிப் பாளருக்கோ அனுப்பப்படும் கணக்கின் பிரதி |
| 8. ஏர்க்குறிப்பு ஏடு | ஏர் உழவு செய்வதைக் குறித்த தினசரிக் கணக்கு |
| 9. களநடைக் கணக்கு | அறுவடையாகிக் களத்தில் உள்ள தானியக் கணக்கு |
| 10. கிஸ்தி பந்தி<br>கிஸ்தி பேரிஸ்து<br>தவணைக் கணக்கு | தவணை முறையில் செலுத்தும் நிலவரித் தொகை |
| 11. குடிவாரக் கணக்கு | குடிமக்கள் மேல்வாரமாகக் கொடுக்க வேண்டிய தானியக் கணக்கு |
| 12. கைக்கணக்கு<br>கைச் சிட்டா<br>கையேடு<br>கையோலை<br>கைச்சீட்டு | தினசரிக் கணக்குக் குறிப்பேடு |
| 13. கைக்குறிப்பு ஏடு | நாட்குறிப்பு ஏடு (Diary) |
| 14. கைச்சாத்து | செலுத்திய தொகைக்குக் கொடுக்கப்படும் ஒப்புதல் சீட்டு |
| 15. கோஷ்பாரா | ஒரு கணக்கின் முடிவான மொத்தத் தொகையினைக் காட்டும் விவரப்பட்டியல் |

| | |
|---|---|
| 16. சாகுபடிக் கணக்கு | நஞ்செய் புஞ்செய் நிலங்களில் சாகுபடி செய்யப்பட்ட பயிர் விவரக் கணக்கு |
| 17. சிறுமுறி | பற்று ரசீது, மற்றும் சிறிய கட்டளைக் குறிப்பு ஓலை |
| 18. சுருணை | கணக்கெழுதப்பட்ட ஓலைக் கோர்வையினைச் சுருட்டிக் கட்டிய கட்டு |
| 19. டவுல் கணக்கு<br>டவுல் நாமா | வரிசெலுத்துவோருக்குக் கொடுக்கும் தீர்வை விவரக் கணக்குக் குறிப்பு |
| 20. டவுல் ஜமா | ஒரு ஜில்லா அல்லது கிராமத்தின் மொத்தத் தீர்வையின் விவரக் கணக்கு |
| 21. டவுல் வசூல் பாக்கிக் கணக்கு | ஒரு ஜில்லா அல்லது கிராமத்தின் மொத்தத் தீர்வையின் வசூல், பாக்கி விவரங்களைத் தெரிவிக்கும் கணக்கு |

**கடந்த 18, 19 நூற்றாண்டுகளில் ஆங்கிலேயர் ஆட்சியில் ஓலையில் எழுதப்பட்டு நடைமுறையிலிருந்த அரசுப் ப்திவேடுகள்**

| | |
|---|---|
| 1. தரப்படி வகையேடு<br>தரப்படிக் கணக்கு<br>தரம் பேரீஜ் கணக்கு<br>தரம் பைசலாதி கணக்கு<br>தரம்வாரி கணக்கு<br>தர்ஜா வாரி கணக்கு | கிராம நிலங்களின் தரம் சாகுபடி, வரி முதலியவற்றைக் குறிக்கும் கணக்கு கிழக்கிந்தியக் கம்பெனி காலத்தில் பார்நார்ட் என்ற ஆங்கிலேயப் பொறியாளரால் செங்கற்பட்டு மாவட்டம் நிலஅளவையும், நிலவரித் திட்டமும் (Survey and Settlement) செய்யப்பட்டது. அந்தக் கணக்குகள் தான் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் உள்ளவை. அவை பார்நார்ட் தரப்படிக் கணக்குகள் (Barnard Tarapady Accounts) என்று மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பட்டு வந்தன. |
| 2. தரப்படித் தொகையேடு | தரப்படி வகையேட்டில் விரிவாகக் கூறப்பட்டுள்ள விவரங்களைச் சுருக்கிக் கூறும் உள்ளடக்கக் கணக்கு |
| 3. தீர்வை வகையேடு | வரிநிர்ணய விவரத்தினைக் கூறும் கணக்கு. இது தரப்படி வகையேட்டில் கண்ட தீர்வை விதிப்பின் விவரம் கூறும் கணக்கு |

| | |
|---|---|
| 4. தீர்வைத் தொகையேடு | தீர்வை வகையேட்டில் விரிவாகக் கூறப்பட்டுள்ள விவரங்களைச் சுருக்கிக் கூறும் உள்ளடக்கக் கணக்கு |
| 5. தீர்வைத் திட்டம் ஏடு | தீர்வை விதிக்கப்பட வேண்டிய வரன்முறைகளைத் தெரிவிக்கும் கணக்கு |
| 6. மேரைச் சட்டம் ஏடு | கிராம ஊழியர் மற்றும் அறிநிலையங்களுக்கு வழங்கப்படும் மேரைகளின் அளவு, அதனைப் பெறும் உரிமையாளர் ஆகிய விவரங்களைக் கூறும் ஏடு |
| 7. சுதந்திரத் திட்டம் ஏடு | கிராம ஊழியர் மற்றும் அறநிலையங்களுக்குக் களத்தில் உரிமையாக வழங்கப்படும் தானிய அளவினையும் அதனைப் பெறும் உரிமையாளர் விவரத்தினையும் தெரிவிக்கும் ஏடு |
| 8. கோவில் ஈஸ்துவை ஏடு | கோவில்களுக்கு வழங்கப்பட வேண்டிய இனாம் முதலியவற்றையும், அவற்றைப் பெற வேண்டிய உரிமையாளர்களையும் தெரிவிக்கும் ஏடு |
| 9. கோவில் ஈஸ்துவைத் தீர்ப்பு ஏடு | கோவில்களுக்கு வழங்கப்பட்ட இனாம் முதலிய விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 10. தூக்குரி ஈஸ்துவை ஏடு | கிராமக் காவல்காரருக்கு வழங்கப்பட வேண்டிய இனாம் முதலிய விவரங்களையும் அவற்றைப் பெற வேண்டிய உரிமையாளரையும் தெரிவிக்கும் ஏடு |
| 11. கிராம ஈஸ்துவை ஏடு | கிராமத்தின் காணியாட்சிக்காரர் முதலானவர்களுக்கு வழங்கப்பட வேண்டிய இனாம் முதலிய விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 12. மனைவரிக் கணக்கு ஏடு | கிராமத்திலுள்ள வீட்டு மனைகளுக்கு விதிக்கப்பட்ட வரி விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 13. உப்பளம் வாரச்சட்டம் ஏடு | உப்பளங்களுக்கு விதிக்கப்பட்ட வரிகளின் வாரப் பங்கு வீதங்களைத் தெரிவிக்கும் ஏடு |

| | |
|---|---|
| 14. உப்பளம் மேரைச் சட்டம் ஏடு | உப்பளங்களிலிருந்து கிராம ஊழியர்கள் மற்றும் அறநிலையங்களுக்கு வழங்கப்படும் மேரைகளின் அளவு கூறும் ஏடு |
| 15. உப்பளம் சுதந்திரத் திட்டம் ஏடு | உப்பளங்களிலிருந்து கிராம ஊழியர்கள் மற்றும் அறநிலையங்களுக்கு உரிமையாக வழங்கப்படும் அளவு விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 16. தும்பால் மானியம் வயணம் ஏடு | கிராம ஊழியர் மற்றும் அறநிலையங்களுக்கு வழங்கப்படும் இறையிலி நிலங்களின் விவரம் தெரிவிக்கும் ஏடு |
| 17. ஏரி வயணம் ஏடு | கிராமத்திலுள்ள ஏரிகளையும் அதற்கான மராமத்து முதலிய விவரங்களையும் தெரிவிக்கும் ஏடு |
| 18. தோப்பு வயணம் ஏடு | கிராமத்திலுள்ள தோப்புகளின் விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 19. கோவில் வயணம் ஏடு | கிராமத்தில் அமைந்துள்ள கோவில்களையும் அவை சம்பந்தப்பட்ட விவரங்கயையும் தெரிவிக்கும் ஏடு |
| 20. மோறை தரப்படி ஏடு | கிராமத்தில் பயிரிடப்படாமல் கரடு முரடாக அமைந்துள்ள நிலங்களின் தரம் முதலான விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 21. தாங்கல் வயணம் ஏடு | கிராமத்திலுள்ள சிறிய பாசன ஆதாரங்களைப் பற்றிய விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 22. நீர்வளம் ஏடு | கிராமத்தின் பாய்ச்சலாதாரங்களின் நீர் வரவு செலவு இருப்பு விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 23. ரூசுமு மேரைத் திட்டம் ஏடு | ஆட்சியாளர்களால் அவ்வப்போது கிராம ஊழியர்கள் அறநிலையங்கள் முதலியவற்றிற்கு வழங்கப்படும் மேரையின் அளவினையும் அதனைப் பெறும் வழிமுறை உரிமையாளரின் விவரத்தினையும் தெரிவிக்கும் ஏடு |

| | |
|---|---|
| 24. மேல்வாரம் மேரைத் திட்டம் ஏடு | மேல்வாரம் தானியத்தில் கிராம ஊழியர்கள் அறநிலையங்கள் முதலியவற்றிற்கு வழங்கப்படும் மேரையின் அளவு விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 25. பங்குமாலை ஏடு | கிராமத்தின் காணியாட்சிக்காரர்களுக்கு உள்ள பங்கு விவரங்களைத் தெரிவிக்கும் ஏடு |
| 26. வீடு வயணம் ஏடு | கிராமத்தில் அடங்கிய வீடுகளின் வகையினை விவரமாகத் தெரிவிக்கும் ஏடு |
| 27. முச்சலிக்கா ஏடு | குடிமக்கள் அரசுக்கு எழுதிக் கொடுத்த ஒப்பந்தம், ஒப்புதல் வாக்குமூலம் முதலானவற்றைத் தெரிவிக்கும் ஏடு |
| 28. ரொக்க குத்தகை தானிய குத்தகை ஏடு | கிராமத்தில் காணியாட்சி நிலங்களில் பயிரிடும் குடியானவர் ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்கப்பணமாகவோ அல்லது குறிப்பிட்ட அளவு தானியமாகவோ குத்தகை கொடுக்க நிர்ணயம் செய்யப்பட்ட விவரத்தினைக் குறித்த ஏடு |
| 29. கோலடி சுதந்திரத் திட்டம் ஏடு | கதிரடித்த பிறகு தாளில் தங்கியுள்ளதை மாடுகட்டிப் போரடித்து/உதறியெடுத்துத் தூற்றிய தானியத்தில் கிராமப் பணியாளர், அறநிலையங்கள் ஆகியவற்றிற்கு உரிமையாக வழங்கப்படும் அளவினைத் தெரிவிக்கும் ஏடு |
| 30. பொதுமேரைக் கழிவு ஏடு | மேல்வாரம் குடிவாரம் பிரிக்கப்படாத பொதுதானியத்தில் கிராம ஊழியர்கள் அறநிலையங்கள் ஆகியவற்றிற்கு வழங்கப்படும் மேரைத் தானிய அளவினைத் தெரிவிக்கும் ஏடு. |

## முடிவுரை

இவ்வகை ஆவணங்களும் பதிவேடுகளும் தமிழகத்தில் பண்டைக் காலத்தில் வழக்கத்தில் இருந்தது போலவே, பின்னர் வந்த விஜய நகர அரசு, முகமதியர், ஆங்கிலேயர் ஆகியோர் ஆட்சிக் காலங்களிலும் தொடர்ந்து பின்பற்றப்பட்டு நடைமுறையில் வந்து கொண்டிருந்தன. தற்போது

வழக்கத்திலுள்ள ஆவணங்களின் வாசகங்கள் கூடக் கல்வெட்டுக்களில் காணப்படுவது போலவே மாற்றமின்றிக் கையாளப்படுவதைக் காணலாம். அரசுத் துறைகளிலும், தனியார் அலுவலகங்களிலும் வழக்கத்திலுள்ள இப்போதையப் பதிவேடுகள் பெரும்பாலும் பண்டைக் காலத்திய முறையினைப் பின்பற்றியே மாற்றமின்றித் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

இவ்வகை ஓலைச்சுவடி ஆவணங்கள் பதிவேடுகள் ஆகியவற்றில் காணப்படும் செய்திகளோடு அரசினர் ஆவணக்காப்பகம், அரசு அலுவலகங்கள் ஆகியவற்றிலுள்ள ஆவணங்களிலும் பதிவேடுகளிலும் காணப்படும் செய்திகளையும், தமிழகக் கல்வெட்டுக்கள் செப்பேடுகள் ஆகியவற்றில் காணப்படும் செய்திகளையும் ஒப்பிட்டு ஆய்வு செய்தால் இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகாலத் தமிழர்களின் வரன்முறையான பண்பாடு, நாகரிகம், சமுதாய வாழ்க்கை ஆகியவற்றைத் தெரிந்து கொள்ளலாம். அத்துடன் கல்வி பொருளாதார வசதி, வாணிபம், வேளாண்மை, குடியிருப்பு வசதி, அரசியல் போன்ற அனைத்துப் புள்ளி விவரங்களும் கிடைக்கும். அதற்கும் மேலாக நம்மைச் சங்க காலம் வரை இழுத்துச் சென்று அப்போதைய தமிழகத்தைப் படம் பிடித்துக் காட்டும்.

ஆகவே ஆய்வாளர்கள் ஓலைச்சுவடி ஆவணங்களும் பதிவேடுகளும் கள்ளச் சந்தைப் பொருள்கள் போலப் பதுங்கியிருக்கும் இடத்தைத் தேடிச் சென்று கண்டுபிடித்து, ஆய்வு செய்து, தாங்கள் மட்டுமன்றி அனைவரையும் பயனடையச் செய்வது இன்றியமையாததாகும் என்பதைக் கூறி விடை பெறுகின்றேன். வாய்ப்புக்கு நன்றி. வணக்கம்.

## மேற்கோள்

1. செங்கற்பட்டு மாவட்ட ஆட்சியர் அலுவலக ஆ-பி-*2*-நி.மு.*55426/84* நாள் *20-12-1985* உள்ள கோப்பு.
2. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி *12* எண் *179*
3. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி *5* எண்.*426*
4. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி *12* எண் *179*
5. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி *5* எண் *238*
6. திருத்தொண்டர் புராணம், முதற்காண்டம் திருமணச் சருக்கம், தடுத்தாட் கொண்ட புராணம் பாடல் பாடல் எண் *202*.
7. திருத்தொண்டர் புராணம், முதற்காண்டம் திருமணச் சருக்கம், தடுத்தாட் கொண்ட புராணம் பாடல் பாடல் எண் *204*.

8. 1923-ஆம் ஆண்டு எபிகிராபியா இந்திகா 17-ஆம் தொகுதி 291-309 (Epigraphia Indica Vol.xvii p.291-309)

9. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி 5 எண்.91

10. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி 5 எண்.426

11. தி.வை. சதாசிவ பண்டாரத்தார் - பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி - 1, 1949, பக். 124.

12. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி.6, எண்.30.

13. Mysore Gazetteer I.P.578

14. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி.23, எண்.303

15. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி 5 எண்.91

**பயன்பட்ட நூல்கள்**

1. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி-1

2. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி-2

3. தமிழ்நாடு அரசு. கிராமக் கணக்குகள் நடைமுறை நூல், 1982

4. தமிழ்ச் சொற் களஞ்சியம் (Tamil Lexicon)

* * *

# 21. தமிழகத்தில் சமண சமயச் சிற்பக்கலை

ஏ. ஏகாம்பரநாதன்

சமணசமயம் தமிழகத்தில் வேரூன்றத் தொடங்கிய காலத்திலிருந்தே இச்சமயத் துறவிகள் மலைகளிலுள்ள குகைகளைத் தங்களது உறைவிடங்களாகவும், சமயக் கல்வி புகட்டும் கல்வி நிலையங்களாகவும் ஆக்கியிருக்கின்றனர். இதனால்தான் இவற்றைக் குகைப்பள்ளிகள் என அழைப்பது மரபாகும். பிற்காலத்தில் சமண சமயத்தில் திருவுருவ வழிபாட்டிற்கு முதன்மை அளிக்கப்பட்டமையால், ·சிற்பவடிவங்களற்ற முந்தைய குகைப்பள்ளிகள் குகைக்கோயில்களாக மாற்றம் பெறலாயின. இவற்றுள் சிலவற்றின் உட்புறத்தில் அல்லது வெளிப்புறத்தில் சிற்பத் திருமேனிகள் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இவற்றைப்போன்று குன்றுகளைக் குடைந்து உருவாக்கப்பெறும் குடைவரைக் கோயில்களின் உட்புறத்திலும், குடைவரைகளும் கட்டிடக்கலை அடிப்படையில் வேறுபட்டிருப்பினும் ஒரே வகையான பாறைச்சிற்பங்களைக் (rock - cut sculturs) கொண்டிருப்பவையாகும்.

சிற்பத்திருமேனிகளைக் கொண்ட குகைக்கோயில்களையும் குடைவரைகளையும் அமைப்பதற்கு மிகுதியான பொருட்செலவும் கடினமான உழைப்பும், நீண்டகால அவகாசமும் தேவைப்பட்டதால் இவற்றைக் காட்டிலும் கட்டுமானக் கோயில்களுக்குப் பிற்காலத்தில் முன்னுரிமை அளிக்கப்படலாயிற்று. மக்கள் வசிக்கும் பகுதிகளிலேயே இவைதோற்றுவிக் கப்பட்டமையால் சிராவகப் பெருமக்களது இறைவுணர்வினை எளிதில் நிறைவுசெய்பவையாக இக்கோயில்கள் திகழலாயின. இவற்றில் நிறுவப்பட்டுள்ள மூலவர் சிற்பங்களும், பிற திருவுருவங்களும் முப்பக்க பரிமாணத்தையுடைய தனிச்சிற்பங்களாகும். சிலசமயம் இவை கற்பலகையில் செதுக்கப்பட்ட படைப்புச் சிற்பங்களாகவும் இருப்பதுண்டு.

கோயில்களில் வழிபாட்டுமுறைகள் சடங்குகள், விழாக்கள் முதலிய சமய நிகழ்ச்சிகள் அதிகரிக்கத் தொடங்கியதிலிருந்து உலோகத்தினாலும் இறைவடிவங்கள் மிகுதியாகச் செய்யப்படலாயின. இந்த உலோகத் திருமேனிகளைச் சிறப்புவழிபாட்டின்போதும் விழாக்காலங்களிலும் கோயிலைச் சுற்றியோ அல்லது ஊரைச் சுற்றியோ ஊர்வலமாக எடுத்துச் செல்வது வழக்கமாகும். இந்த உலோகத் திருமேனிகளும் சிற்பவகையின் பாற்பட்டதாகும். இவ்வாறு சமணசமயச் சிற்பங்களைப் பொதுவாகப் பாறைச் சிற்பங்கள்,

தனிச்சிற்பங்கள், உலோகத் திருமேனிகள் என் மூன்று வகைப்படுத்திக் கூறலாம்.

## தமிழகத்தில் சமணச் சிற்பக்கலையின் தொடக்கம்

கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.6ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலக் கட்டத்தில் சமணத் துறவிகள் உறைந்து வந்துள்ள குகைப்பள்ளிகளே தமிழகத்தில் காணப்பெறும் காலத்தால் முந்திய சமணச் சின்னங்களாகும். இத்தகைய குகைப்பள்ளிகள் நூற்றுக்கு மேற்பட்ட எண்ணிக்கையில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் காணப்படுகின்றன. மதுரையைச் சுற்றிலும் ஆனைமலை, அழகர்மலை, திருப்பரங்குன்றம், அரிட்டாபட்டி, மாங்குளம், முத்துப்பட்டி முதலிய இடங்களிலும், நெல்லை மாவட்டத்தில் மறுகால்தலை, குற்றாலம் ஆகிய தலங்களிலும், புதுக்கோட்டைப் பகுதியில் சித்தன்னவாசல், குடுமியான் மலை போன்ற இடங்களிலும், தமிழகத்தின் வடபகுதியில் தொண்டூர், ஜம்பை, திருநாதர் குன்று, பறையன்பட்டு போன்ற தலங்களிலும், இன்னும் பல்வேறு மலைகளிலும் இத்தகைய முந்தைய பள்ளிகள் இருப்பதைக் காணலாம்.

இயற்கையாக அமைந்த இக்குகைகளில் துறவிகள் உறைவதற்கென கற்படுக்கைகள் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றனவேயன்றி, அந்தக் காலக்கட்டத்தில் (கி.மு. 3- கி.பி.6ஆம் நூற்றாண்டுகளில்) வழிபாடு செய்வதற்கென இறைவடிவங்கள் செதுக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். தொடக்ககாலத்தில் தவநெறிக்கும், ஒழுக்கம் நிறைந்த வாழ்க்கைக்கும் சமண சமயம் முதன்மை அளித்ததேயன்றி, திருவுருவ வழிபாட்டிற்கு அல்ல என்பதால் மிக்கவாறும் இக்குகைப்பள்ளிகளில் இறைவடிவங்கள் செதுக்கப்படவில்லை எனலாம். மேலும் தமிழகத்தில் அனைத்து சமயத்தினரும் கி.பி.6ஆம் நூற்றாண்டு வரையிலும் இறைவடிவங்களைக் கருங்கல்லில் செதுக்கி வழிபடும் வழக்கத்தைக் கொண்டிருக்கவில்லை. ஏனெனில் 'கல்லெடுத்தல்' இறப்புடன் தொடர்புடைதாகக் கருதப்பட்டதுவே இதற்குரிய காரணமாகும்.[1] அதாவது போரில் விழுப்புண்பட்டு உயிர்துறந்த வீரமறவர்களுக்கும், பொது நலங்கருதி தன்னுயிர் மாய்த்த பெரியோருக்கும், உரைசால் பத்தினியருக்கும் அவர்களது நினைவைப் போற்றும் வகையில் நடுகல் எழுப்புவது வழக்கமாக இருந்திருக்கிறது. அந்த வழக்கப்படி இறைவழிபாட்டிற்குரிய திருவுருவங் களைக் கருங்கல் அல்லாத சுதை, மரம் போன்றவற்றால் செய்திருக்க வேண்டுமெனத் தெரியவருகிறது. தமிழகத்துச் சமணரும் இதற்கு விதிவிலக்காக இருந்ததில்லை என்பதனையே முந்தைய குகைப்பள்ளிகளும் அறிவுறுத்துகின்றன.

சங்க இலக்கியங்களில் பல்வேறு சமய இறைவடிவங்களைப் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றிருந்தபோதிலும், அத்திருவுருவங்கள் கல்லினால் செய்யப்பட்டனவாகக் கூறப்படவில்லை என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்க தாகும். சிலப்பதிகாரத்தில் கோவலனும், கண்ணகியும் கௌந்தியடிகளுடன் பூம்புகாரிலிருந்து மதுரை மாநகரை நோக்கிப் பயணம் மேற்கொண்டகாலை, உறையூரில் எழுந்தருளியிருந்த அருகப்பெருமானின் திருவுருவத்தை வணங்கியதாகக் கூறப்பட்டுள்ளது. இத்திருவுருவம் ஆதியில் தோற்றத்து அறிவனாகிய ஆதிநாதரது திருவடிவம் எனவும், அது திங்கள் மூன்றடுக்கிய வாறுள்ள திருமுக்குடையின் கீழ், காலைக் கதிரவனின் பொன்னிறத்தை உடையதாகப் பிண்டிமர நிழலின் கீழாக அமைந்திருந்ததென அறியக் கிடக்கிறோம்.[2]

இதுபோன்ற மதுரை நகரின் புறச்சேரியில் ஆயர் முதுமகளாகிய மாதரி என்பாள் பூங்கண் இயக்கிக்குப் பால்மடை கொடுத்து வழிபட்டதாகவும் சிலப்பதிகாரம் இயம்புகிறது.[3] இது தீர்த்தங்கரரின் துணைத் தெய்வமாகிய இயக்கி *(யக்ஷி)*ணு என்பதில் ஐயமில்லை எனினும், குறிப்பாக எந்த இயக்கி என்பதை அறிவதற்கில்லை. சிலம்பு காட்டும் அருகப்பெருமான், இயக்கி ஆகியோரது திருவுருவங்கள் சுதை அல்லது வேறு எளிதில் அழியும் பொருட்களினால் செய்யப்பட்டதாக இருந்திருக்க வேண்டுமேயன்றி கல்சிற்பங்கள் என்று கூறுவதற்கில்லை. எனவே குகைப்பள்ளிகளை அடிப்படையாகக் கொண்டு நோக்கினால், சமண சமயத்தின் தொடக்க காலத்தில் *(கி.மு.3-1* ஆம் நூற்றாண்டுகள்*)* திருவுருவவழிபாடு இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அதற்குப் பின்னர் *(கி.பி.1,2,3* ஆம் நூற்றாண்டுகள்*)*படிப்படியாகத் தமிழகச் சமணரிடையே திருவுருவ வழிபாட்டு முறைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டமையால் பூவும், புகையும் *(சாம்பிராணிப்புகை)*, பால்சோறும் *(நைவேத்தியம்)* படைக்கும் வழக்கமும், திருவிழா எடுக்கும் வழக்கமும் ஏற்படலாயின. *(*சிலம்பு கூறும் செய்திகள் பிற்காலத்தியவை என்றும், அதனால் சிலப்பதிகாரத்தின் பல பகுதிகள் பிற்காலத்தவை என்றும் ஒரு கருத்து உள்ளது*)*.[4]

இது எவ்வாறாயினும் தமிழகத்தில் கி.பி.*6*ஆம் நூற்றாண்டு வரையிலுள்ள கருங்கல்லினாலான சமண சிற்பங்கள் வடித்து வழிபடப் படவில்லை எனக் கூறலாம்.

### பக்தி இயக்கமும் சமணச் சிற்பக்கலையும்

சங்ககாலத்திற்குப் பின்னர் தமிழகம் களப்பிரரது ஆட்சியின் கீழ்க் கொணரப்பட்டது. இவர்களது ஆட்சியில் சமணம், புத்தம் ஆகிய இரு

சமயங்களும் போற்றிப் புகழப்படலாயின. இதனால் வைதீக வழியொற்றிவந்த சைவமும், வைணவமும் நாயன்மார்களாலும் ஆழ்வார்களாலும் பக்தி இயக்கம் வாயிலாக மேலும் வளர்ச்சி பெறவேண்டிய நிலைக்குள்ளாயின. கிபி. 7ஆம் நூற்றாண்டில் இந்தச் சமயக் குரவர்கள் தங்களது சமயங்கள் அதிவேக எழுச்சி பெறுவதற்கு முனைப்புடன் ஈடுபடலாயினர். இவர்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் திருத்தலப் பயணம் மேற்கொண்டு ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் சைவ, வைணவக் கடவுளரைப் பண்சுமந்த பாடல்களால் பாடிப் பரவியும், விந்தை மிகு செயல்களைச் செய்தும், அதே சமயத்தில் சமண, புத்த சமயங்களை இடித்துரைத்தும் மக்களது மனதில் சைவ, வைணவ பக்தி உணர்வினை ஊட்டி வளர்த்தனர். சாதி பேதம் பாராட்டாமை, உணவு அளித்தல், அடைக்கலம் கொடுத்தல் போன்ற பணிகளினால் சமுதாயத்தின் அடித்தளத்திலுள்ள மக்களும் இவர்களது பக்தி இயக்கத்தில் ஈர்க்கப்படலாயினர். இந்தக் காலக்கட்டத்தில் பல்லவர்களும், பாண்டியர்களும் தங்களது ஆட்சிப் பகுதிகளில் சைவ, வைணவக் கோயில்களைத் தோற்றுவித்து, அவற்றில் அந்தந்த சமயக்கடவுளர்களின் பல்வேறு வகையான திருவுருவங்களை அழகுற வடிக்கச்செய்து, வைதீகவழியிலான பூசைகள், சமயச் சடங்குகள், விழாக்கள் போன்றவை நடைபெறப் பேருதவி புரிந்துள்ளனர். பக்தி இயக்கத்தால் ஈர்க்கப்பட்ட மக்களுக்கு இக்கோயில்கள் தங்களது இறையுணர்வை மேலும் அதிகரிக்கச் செய்வனவாக இலங்கின. இவ்வாறு பக்தி இயக்கமும், கோயில்கலையும் ஒருங்கிணைந்தமையால் சைவமும், வைணமும் அதிவேக எழுச்சிபெறலாயின[5] அதே சமயத்தில் இச்சமயத்தவர்கள் சமணத்தின்பால் காழ்ப்புணர்வு கொண்டமையால், சமண சமயம் மிகவும் பாதிப்பிற்குள்ளாயிற்று. மதுரை, திருவோத்தூர், பழையாறை, திருவாரூர் போன்ற இடங்களில் சைவர்களுக்கும், சமணருக்குமிடையே சமயப்போர் மூண்டதாகப் பெரியபுராணம் விரிவுபடக் கூறும்.[6]

இவ்வாறு கிபி.7ஆம் நூற்றாண்டில் சைவ, வைணவ சமயங்களின் அதிவேக எழுச்சியினால் சமணசமயம் பாதிக்கப்பட்டபோதிலும், விரைவில் அச்சோதனையைக் கடந்து மீண்டும் புத்துயிர் பெறலாயிற்று. அக்காலத்தில் சமண சமயத்தவர் தங்களது சமயத்தை நிலைநிறுத்தும் வகையில் சைவ, வைணவ சமயங்களிலுள்ளதைப் போன்று திருவுருவ வழிபாடு, சடங்குகளுடன் கூடிய பூசைமுறைகள், பெண் தெய்வ (இயக்கி) வழிபாட்டின் முதன்மை போன்ற பல்வேறு அம்சங்களை ஏற்றுக் கொள்ளலாயினர். பக்தி இயக்கக் குரவர்களைப் போன்று சமணசமயம் புத்தொளி பெற்றிலங்கும் வகையில் இச்சமயப் பெருந்துறவியரான அஜ்ஜநந்தி, உத்தநந்தி, வஜ்ரநந்தி, அரிஷ்டநேமி, நாக நந்தி, குணசாகரதேவர் முதலிய பலர் அரும்பாடுபட்டிருக்கின்றனர். இவர்கள் சமயப்பணி மட்டுமன்றி சமுதாயப் பணிகளும் ஆற்றியமையால் வைதீக சமயங்களுக்கு ஓரளவு இணையாக, சமணசமயம் வளர்ச்சி பெறலாயிற்று.[7]

இந்த வளர்ச்சியின் வெளிப்பாட்டினை முந்தைய குகைப்பள்ளிகளில் கி.பி.*8,9* ஆம் நூற்றாண்டுகளில் செதுக்கப்பட்ட சமண சிற்பவடிவங்கள் புதியதாகத் தோற்றுவிக்கப்பட்ட குகைக்கோயில்கள், குடைவரைக் கோயில்கள், கட்டிடக் கோயில்கள், அவற்றிலுள்ள சிற்பச் செல்வங்கள் ஆகியவற்றின் வாயிலாக அறியக் கிடக்கிறோம். மேலும் இக்கோயில்கள் ஆட்சி புரிந்தோரிடமிருந்தும், பொது மக்களிடமிருந்தும் பலவகையான தானங்களைப் பெற்று, சமுதாயத்தை ஒருங்கிணைக்கும் வலிமைமிக்க அமைப்புகளாகவும் உருவெடுக்கலாயின.

## பாறைச் சிற்பங்கள்

கி.பி. *8* ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து தோற்றுவிக்கப்பட்ட பாறைச்சிற்பங்கள் பாண்டிய நாட்டில் திருச்சாரணத்துமலை, கழுகுமலை, ஆனைமலை, அழகர்மலை, அரிட்டாபட்டி, திருப்பரங்குன்றம், கீழக்குயில்குடி, முத்துப்பட்டி, உத்தம பாளையம் முதலிய பல தலங்களிலுள்ள மலைகளிலும் காணப்படுகின்றன. இவற்றைப் போன்று தொண்டைநாட்டில் கருப்பங்குன்று, அனந்தமங்கலம், ஆட்சிப்பாக்கம், தொண்டூர், திரு நறுங்கொண்டை, திருமலை, திருநாதர்குன்று முதலிய பல்வேறு இடங்களிலும் பாறைச் சிற்பங்களைக் காணலாம்.

பொதுவாக இந்தச் சிற்பங்களில் தீர்த்தங்கரர்களை அமர்ந்த தியானக் கோலத்திலோ அல்லது நின்ற நிலையில் தவம்புரியும் கோலத்திலோ (காயோத்சர்கம்) அமைப்பது வழக்கமாகும். இத்திரு வடிவங்கள் எழுந்தருளியிருக்கும் பீடங்களில் இலாஞ்சனைகள் பொறிக்கும் வழக்கம் கடைப்பிடிக்கப்படவில்லை யாதலால், இவை எந்தத் தீர்த்தங்கரரைக் குறிக்கிறதென்பதை எளிதில் அறிந்து கொள்ளும் வாய்ப்பில்லை. இதுபோன்று தீர்த்தங்கரர்களது பணித்தெய்வங்களாகிய யக்ஷன், யக்ஷி ஆகியோரது சிற்றுருவங்களையும் அச்சிற்பத் தொகுதியில் வைக்கும் மரபு கி.பி.*16* ஆம் நூற்றாண்டு வரையிலும் கடைப்பிடிக்கப்படவில்லை.

கழுகுமலை குகையின் மேல் பகுதியிலுள்ள பாறையில் மூன்று வரிசைகளாகத் தீர்த்தங்கரர்களது சிறிய வடிவங்கள் தீட்டப்பட்டிருக் கின்றன. இவற்றிற்கு இடைப் பகுதிகளில் ஆங்காங்கே மாடம் போன்ற அமைப்பினுள் பெரிய அளவிலான சிற்பங்களும் வடிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இவற்றுள் கோமடேஸ்வரர், பார்சுவநாதர், ஆதிநாதர், நேமிநாதர், மகாவீரர் ஆகியோரைக் குறிப்பவையும், பத்மாவதி, அம்பிகா ஆகிய யக்ஷியரைக் குறிப்பவையும் அழகும், கலைத்திறனும் வாய்ந்தவையாகும். கி.பி.*9* ஆம் நூற்றாண்டில் துறவிகள் பலரும், பொதுமக்கள் பலரும் இந்தத் திருவுருவங்களைச் செதுக்கியமைப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கின்றனர் என அறிய வருகிறோம். இந்தச் சிற்பங்களின் சிறப்புத்தன்மை என்னவென்றால், ஆதிநாதர், நேமிநாதர் ஆகியோர்

அமர்ந்திருக்கும் பீடங்களில் அவர்களது சின்னங்களாகிய (Symbols) தர்மச் சக்கரமும், சங்கும் பொறிக்கப்பட்டிருப்பதாகும். இந்தச் சிறப்புத்தன்மை கர்நாடக நாட்டுச் சமணச் சிற்பக் கலையின் தாக்கத்தினால் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது.[8]

செஞ்சியை அடுத்துள்ள திருநாதர்குன்றில் இருபத்தி நான்கு தீர்த்தங்கரர்களது அழகிய திருவுருவங்கள் இரண்டு வரிசைகளாக நீண்ட மாடம் போன்ற அமைப்பினுள் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். வழக்கமாகச் சமணத் திருவுருவங்களில் காணப்பெறும் முக்குடை அரைவட்ட பிரபை, கொடியமைப்பு, சாமரம் வீசுவோர் சிற்றுருவங்கள் ஆகிய எவையும் இவற்றில் இடம் பெறவில்லை. கிபி. 9ஆம் நூற்றாண்டில் படைக்கப்பட்ட இந்த இருபத்தி நால்வர் தொகுதிச் சிற்பங்களைப் போன்று தமிழகத்தில் வேறெங்கும் பாறைச் சிற்பங்கள் இல்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

திருமலை, அனந்தமங்கலம், சித்தாமூர், கீழக்குயில்குடி, திருச்சாரணத்து மலை, கழுகுமலை போன்ற இடங்களில் தீர்த்தங்கரர் சிற்பங்களுக்கு இணையாக அம்பிகா, பத்மாவதி, சித்தாயிக போன்ற யக்ஷர்களது திருவுருவங்கள் தீட்டப்பட்டிருப்பதிலிருந்து, கி.பி.7ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் இத்தேவியர் வழிபாடு எய்தியிருந்த உயர்வினை நன்கு உணர முடிகிறது.

தமிழகத்தில் சித்தன்னவாசல், சொக்கம்பட்டி, விளாப்பாக்கம் போன்ற இடங்களில் சமண சமயக் குடைவரைகள் காணப்படுகின்றன. இவற்றுள் சித்தன்னவாயிலைத் தவிர எஞ்சியவை முழுமை பெறாதவையாகும். சித்தன்னவாசல் குடைவரையில் கருவரையினுள் அமர்ந்த கோலத்தில் வீற்றிருக்கும் மூன்று தீர்த்தங்கரர் சிற்பங்களும், மண்டபத்தின் உட்சுவர்களில் பன்னாக நீழலில் தியானத்தில் அமர்ந்த நிலையிலுள்ள பார்சுவ நாதர் வடிவமும், ஆச்சாரியார் ஒருவரது திருவுருவமும் அழகுறச் செதுக்கப்பட்டிருக்கின்றன. சொக்கம்பட்டி குடைவரை வாயிலின் ஒருபுறம் தரணேந்திரயக்ஷனும், மறுபுறம் பத்மாவதி யக்ஷியும் முழுமையாக வடிக்கப்பெறாத நிலையிருப்பதைக் காணலாம். கிபி. 7ஆம் நூற்றாண்டில் சைவ, வைணவ சமய எழுச்சியின் வாயிலாகத் தோன்றிய காழ்ப்புணர்வினால் இந்தக் குடைவரையின் செதுக்கு வேலைகள் கைவிடப்பட்டதாகக் கூறப்படுகிறது.[9]

## தனிச்சிற்பங்கள்

மன்னர்களது ஆதரவினாலும், மக்களது பொருளுதவியினாலும் கட்டப்பெற்ற கோயில்கள் பொருளாதார ஏற்றம் பெற்ற போது அவற்றில் மிகுதியான சிற்பங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. கிபி9ஆம் நூற்றாண்டிற்கு முந்திய கோயில்களில் மூலவர் திருவுருவங்களைத் தவிர வேறு சிற்பங்கள்

இருந்தனவாகத் தெரியவில்லை. காலத்தால் முந்திய இக்கட்டிடக் கோயில்களுள் மிகுதியானவை அழிந்துவிட்டன. எனினும் அவற்றில் இடம் பெற்றிருந்த மூலவர் திருவுருவங்களுள் சில எஞ்சியிருக்கின்றன.

இதற்கு எடுத்துக்காட்டாக, மொசக்குடி, தியாகதுர்க்கம், வெண்குன்றம் போன்ற தலங்களில் காணப்பெறும் கி.பி.8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தீர்த்தங்கரர் திருவடிவங்களைக் கூறலாம். இவை பொதுவாக நீண்டு மெலிந்த உடலமைப்பினையும், திடத்தன்மையற்ற கைகள், கால்கள் ஆகிய உறுப்புகளையும் கொண்டவையாக இருக்கின்றன. இவற்றில் தட்டை வடிவமான முக்குடையைத் தவிர வேறு அலங்காரங்கள் காணப்படவில்லை.

கி.பி. 9ஆம் நூற்றாண்டிலிருந்து தீர்த்தங்கரர், யக்ஷி ஆகியோரைக் குறிக்கும் சிற்பங்கள் மிகுதியும் சிறிது தடித்த உடலமைப்புடனும் அமைதியான முகப்பொலிவுடனும் காணப்படுகின்றன. மேலும் இவற்றில் அரைவட்ட பிரபை, கொடியமைப்பு, சாமரம் வீசுவோரது சிற்றுருவங்கள் ஆகியனவும் இடம் பெற்றிருக்கின்றன. கி.பி. 9-13ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த சிற்பங்கள் அனைத்திலும் சோழர்கலைப் பாணியின் மாட்சியினைக் காண இயலும். கி.பி. 14-17 ஆம் நூற்றாண்டுகளில் உருவாக்கப் பெற்ற சமண சிற்பங்கள் விசயநகர - நாயக்க கலைப்பாணியைப் பிரதிபலிப்பவையாகும். பொதுவாக இவை பருத்துத் திரண்ட உடல் அமைப்பையும் பரந்த நெற்றியையும், நீண்ட புருவங்களையும், கூர்மையான மூக்கினையும் பெரிய முத்துக்கள் கோர்க்கப் பட்டது போன்ற முடியலங்கார அமைப்பையும் பெற்றவையாக இருக்கின்றன. முந்தைய சிற்பங்களிலுள்ள மிகவும் அமைதியான முகப்பொலிவு, இயற்கையாக உள்ள தசை மடிப்பு, தசையின் வழுவழுப்புத் தன்மை போன்ற குணநலன்களை இவற்றில் காண்பது அரிதாகும்.

கி.பி. 11ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் தீர்த்தங்கரர்களுக்கென எடுப்பித்த கோயில்களில், யக்ஷிக்கெனத் தனியாகச் சிறிய கருவறை ஒன்று பரவலாகக் கட்டப்பெற்றிருப்பதைக் காணலாம்.[10] இவற்றில் யக்ஷியின் தனிச்சிற்பங்கள் நிறுவப்பட்டு, மக்களால் மிகுந்த ஈடுபாட்டுடன் வழிபடப்பட்டு வரலாயின. தமிழகத்தில் அம்பிகா, பத்மாவதி ஆகிய இரு யக்ஷியரே பெருமளவில் வழிபடப்பட்டு வந்திருக்கின்றனரென்பதை, அவர்களுக்கென கட்டப்பெற்ற சிறிய கருவறைகளும், அவற்றில் இடம்பெற்றுள்ள இத்தேவியரின் திருவடிவங்களும் தெளிவுற விளக்குபவையாகும்.

## உலோகத் திருமேனிகள்

சமண சமயச் சார்புடைய உலோகத் திருவுருவங்கள் கி.பி.10 ஆம் நூற்றாண்டிற்கு முன்பு அதிகமாக வார்க்கப் பெற்றதாகத் தெரியவில்லை. சென்னை அருங்காட்சியகத்தில் இடம்பெற்றிருக்கும் கி.பி.8ஆம் நூற்றாண்டைச்

சார்ந்த பார்சுவநாதர் திருவுருவம் தமிழகத்திலுள்ளவற்றுள் காலத்தால் முந்தியது எனக் கருதப்படுகிறது. பல்லவர் காலக் கலைப்பாணியைப் பெற்றிலங்கும் இப்படிமம் நீண்டுமெலிந்த உடலமைப்பையும், திடத்தன்மையற்றது போன்றுள்ள கைகள், கால்கள் ஆகியவற்றையும் பெற்றிருக்கிறது. இதன் தலைக்கு மேலாக உள்ள ஐந்து தலை அரவத்தின் விரிந்த நிலையிலுள்ள படம் தீர்த்தங்கரரது தலையின்மீது கவிழ்த்து வைக்கப்பட்டதைப் போன்று காட்சியளிக்கிறது.[11] சோழரது ஆட்சிக் காலத்தைச் சார்ந்த உலோகத்திருவுருவங்கள் சிவகங்கை, திருநறுக்கொண்டை, திண்டிவனம், செங்கனிக்குப்பம், கிடங்கில், சளுக்கி, போளூர் முதலிய பல தலங்களில் காணப்பட்டன. இவற்றுள் திருநறுங்கொண்டையிலுள்ளதைத் தவிர எஞ்சியவை அனைத்தும் சென்னை அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன.

திருநறுங்கொண்டை அப்பாண்டை நாதர்கோயிலில் காணப்படும் அம்பிகா யக்ஷியின் திருவடிவம் கி.பி. *10*ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். இத்தேவியின் படிமம் திரிபங்க நிலையில் வலதுபுறம் பணிப்பெண்ணையும், இடதுபுறம் குழந்தையின் சிற்றுவருவத்தையும் பெற்று ஒயிலாகக் காட்சியளிப்பதைக் காணலாம். சிவகங்கையிலிருந்து கொணரப்பட்ட தீர்த்தங்கரர் திருவுருவம், சாமரம் வீசுவோர் புடைசூழ ஆழ்ந்த தியான நிலையில் சிம்மாசனத்தில் வீற்றிருப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. அமைதியின் வடிவாய்க் காட்சிதரும் இப்படிமம் சோழர்காலக் கலைப் பாணியின் ஒப்பற்ற தன்மையை அறிவுறுத்தும் வகையில் அமைந்துள்ளது. திண்டிவனம்., கிடங்கில் போன்ற இடங்களிலிருந்து பெறப்பட்ட தீர்த்தங்கரர் திருவடிவங்களும், செங்கனிக்குப்பத்திலிருந்து கொணரப்பட்ட அம்பிகா யக்ஷியின் திருமேனியும் கி.பி. *12* ஆம் நூற்றாண்டைய சோழர் கலைப்பாணியைக் கொண்டிலங்குபவையாகும்.

கி.பி. *16*ஆம் நூற்றாண்டிலிருந்து இக்காலம் வரையிலும் வழிபாட்டிலுள்ள அனைத்துக் கோயில்களிலும் ஏராளமான செப்புத் திருமேனிகள் காணப்படுகின்றன. கி.பி. *15*ஆம் நூற்றாண்டிலிருந்து சித்தாமூரைத் தலைமையிடமாகக் கொண்டு சமணசமயம் தழைத்தோங்கப் பாடுபட்ட மடாதிபதிகள் கோயில்கள் கட்டப் பெற்றமையே இதற்குரிய முக்கியமான காரணமாகும்.[12] இந்தக் காலக் கட்டத்தில் தீர்த்தங்கரர்கள் யக்ஷர், யக்ஷியர் பிற தெய்வங்கள் ஆகியோரைக் குறிக்கும் திருவுருவங்கள் எண்ணிக்கையில் அதிமாக இருப்பினும், கலைப்பாங்கின் அடிப்படையில் நோக்கும்போது முற்காலத்திய கலைமாட்சித் தன்மை மிகவும் குறைந்தவை யாகத்தான் விளங்குகின்றன. இவை சமண சமயத்தினரின் மிகுந்த சமயப் பற்றினைப் பிரதிபலிக்கின்றனவேயன்றி கலையின் உன்னதத் தன்மையை விளக்குவனவாகத் திகழவில்லை.

தமிழகத்திலுள்ள சமயச் சிற்பங்களை ஒருசேர நோக்கும்போது, ஆரம்பகாலத்தில் சடங்குகளை அடிப்படையாகக் கொண்ட வழிபாட்டிற்குச் சமணசமயம் முதன்மை அளிக்காததாலும், கருங்கல்லில் இறைவடிவங்களை அமைத்து வழிபடும் வழக்கம் இல்லாததாலும், கிபி 7 ஆம் நூற்றாண்டிற்கு முந்திய இறைவடிவங்கள் எவையும் கிடைக்கப் பெறவில்லை. கிபி. 7 ஆம் நூற்றாண்டில் சைவ, வைணவ சமயங்களின் அதிவேக எழுச்சியினால் சமண சமயம் மிகுந்த பாதிப்பிற்குள்ளானபோதிலும், விரைவில் அது மீண்டும் புத்துயிர் பெறலாயிற்று. இதனால் பாறைச்சிற்பங்கள் மிகுதியாகத் தோற்றுவிக்கப்படலாயின. சடங்குகளை அடிப்படையாகக் கொண்ட வழிபாட்டு முறைகள் அந்தக் காலத்தில் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. திருவுருவங்களுக்கு விளக்கிடுதல், அபிடேகம் செய்தல், தானியங்கள் நைவேத்தியம் படைத்தல், தூப - தீபங்கள் காட்டுதல் இன்னபிற பூசைமுறைகள் செய்யப்பட்டிருக்கின்றன.

கோயில்களின் வளர்ச்சிக்கு அரசுபுரிந்தோரும், சமயப்பற்று மிக்க சமணப் பெருங்குடியினரும் பல்வேறு வகையான தானங்களை அளித்து உதவிபுரிந்திருக்கின்றனர். இதனால் கோயில்கள் விரிவாக்கம் பெற்றதோடு, அவற்றில் மேலும் பல சிற்பங்களும், உலோகத் திருமேனிகளும் நிறுவப்படலாயின. விழாக்காலங்களில் உற்றாரும், உறவினரும் ஒருங்கு கூடி இறையுணர்வில் திளைப்பதற்கும், விருந்தோம்பலில் சிறந்து ஒற்றுமையுடன் திகழ்வதற்கும் கோயில்களும், அவற்றிலுள்ள இறைத்திருவுருங்களும் அடிப்படையாகத் திகழ்ந்து வந்திருக்கின்றன என்பதை நன்கு உணரமுடிகிறது.

## மேற்கோள்கள்


1. K.R. Srinivasan, "Some aspects of religion as revaeled by early monuments and literature of the south", **Journal of the Madras University,** 1960,. Vol.32, No.1, pp.141-142,
கே.கே. பிள்ளை, **தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும்,** பக். *150*

2. சிலப்பதிகாரம் *11 : 1-5*

3. சிலப்பதிகாரம் *15 : 115-118*

4. Journal of Indian History, 1970, pp.69-71

5. A. Ekambaranathan, **Iconographic concepts and Forms of Siva in the Tamil Country,** (Ph.D. Thesis-Madras University Unpublished) 1981, pp. 210-14

6. பெரிய புராணம் தண்டியடிகள் புராணம், பா. *15-24* சம்பந்தர் புராணம் பா. *600-850*இ திருநாவுக்கரசர் புராணம், பா. *145-146, 294-295*

7. ஏ. ஏகாம்பரநாதன், **தென்பாண்டிய நாட்டுச் சமணக் கோயில்கள்,** பக்.*195-196*

8. ஏ.ஏகாம்பரநாதன், **கழுகு மலையில் சமணம்,** பக்.*84*

9. K.R. Srinivasan, "Monuments and Sculptures", in Jaina Art of Architure, Vol. II, p.208

10. **Annual report on Epigraphy,** 221/1968-69

(கீழ் சாத்தமங்கலம் சமணக் கோயிலில் கி.பி. *9* ஆம் நூற்றாண்டிலேயே யக்ஷிக் கெனத் தனிக் கருவறை அமைக்கப்பட்டதாக இந்தக் கல்வெட்டு கூறுகிறது.)

11. C. Sivaramamurti, **Panorama of Jain Art - South India** ;l. 273

12. A. Ekambaranathan, **Rishabhanatha Cult in Tamilnadu** (under print) Delhi, p. 106-107.

* * *

# 22. சரசுவதி மகால் நூலக ஆவணங்கள்

ய. மணிகண்டன்

தஞ்சைச் சரசுவதி மகால் நூலகம் பலமொழிகளைச் சார்ந்த பல்லாயிரம் ஓலை, காகிதச் சுவடிகளைத் தன்னகத்தே கொண்டிருக்கின்ற ஓர் அரிய நூலகமாகும்.

வரலாற்று ஆய்வுகளுக்கு உதவும் நிலையிலான வரலாற்றுத் தொடர்புடைய சில செப்பேடுகளும் பல மோடி ஆவணங்களும் சில இலக்கியச் சுவடிகளும் இந்நூலகத்தில் இடம்பெற்றுள்ளன.

## செப்பேடுகள்

நூலக அருங்காட்சியகத்தில் ஏழு செப்பேடுகள் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. நாயக்கர் காலச் செப்பேடு ஒன்றும் மராட்டியர் காலச் செப்பேடுகள் ஆறுமாக இவை உள்ளன. மராட்டியர் காலச் செப்பேடுகள் ஐந்து மட்டும் மோடி வரிவடிவில் எழுதப் பெற்றுள்ளன. பிற இரண்டும் தமிழில் உள்ளன.

## நாயக்கர் காலச் செப்பேடுகள்

தமிழில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேடு இரகுநாத நாயக்கரின் ஆணைபற்றி எடுத்துரைக்கின்றது. (இரகுநாதரின் ஆட்சிக்காலம் கி.பி. *1600* முதல் *1645* வரை) இரு ஏடுகளைக் கொண்ட ஏட்டுத் தொகுதியின் இரண்டாம் ஏடு மட்டுமே கிடைத்துள்ளது. முதல் ஏடு கிடைக்காததால் ஆண்டு முதலிய குறிப்புகளை அறிய முடியவில்லை.

சிவபுரம் மக்களுக்கு இரகுநாத நாயக்கர் செய்த அறக்கொடை ஆணையை விவரிக்கும் இச்செப்பேடு 'சிவபுரம் செப்பேடு' எனக் குறிக்கப் படுகிறது.

கிடைத்துள்ள இரண்டாம் ஏட்டில் இரகுநாத நாயக்கர் பெயர் சிவபுரம் மக்களுக்கான அறக்கொடை, முதலிய செய்திகள் உள்ளன. சாசனம், சாதனம் எனச் செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது. அதே நேரத்தில், செப்பேடு பொறித்ததில் உள்ள எழுத்துக்குற்றம், வாசகப் பிழை, வரி மாறாட்டம் போன்றவற்றைப் பொருட்படுத்தத் தேவையில்லை எனும் குறிப்பும் செப்பேட்டின் இறுதியில் இடம்பெற்றுள்ளது. இந்தத் தர்மத்தைப் பரிபாலனம் செய்பவர்களுக்கு ஏற்படும் பலன்களும் இறுதியில் கூறப்பட்டுள்ளன.

## மராட்டியர் காலச் செப்பேடுகள்

மராட்டியர் காலச் செப்பேடுகளில் ஒன்று தமிழிலும் ஐந்து மோடி வரிவடிவிலும் எழுதப்பட்டுள்ளன.

## தமிழில் உள்ள செப்பேடு

தமிழில் எழுதப்பட்டுள்ள செப்பேடு இரண்டாம் ஏகோசி அரசன் காலத்தைச் சேர்ந்தது. காலம் *16.8.1735* ஏட்டின் இரு பக்கங்களிலும் வாசகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

செப்பேட்டின் முதல்பக்கத்தில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பங்கு இடத்தில் அழகான வரைகோட்டோவியம் தீட்டப்பெற்றுள்ளது. இராமேசுவரம் இராமலிங்கம் நடுவில் முகம் போன்ற வடிவில் புன்முறுவல் பூத்துக் காட்சியளிக்க, இராமலிங்கத்தின் தலைக்குமேலே ஐந்து தலைநாகம் குடைபிடிப்பது போலச் செதுக்கப்பட்டுள்ளது.

இராமலிங்கத்தின் இடப்புறம் பார்வதி நான்கு கைகளுடன் இறைவனை நோக்கி மலர்களை ஏந்தி நின்ற நிலையில் உள்ளார். இராமலிங்கத்தின் வலப்புறம், இராமன் ஆசனத்தில் அமர்ந்து மலரால் இறைவனைப் பூசிக்கின்றான். இராமனுக்கு வலப்புறம் சீதை அமர்ந்துள்ளார். சீதைக்கு அருகே இலக்குவனும், செப்பேட்டின் இடக்கோடியில் வாலில் மணி கட்டப்பட்ட அனுமனும் நின்ற நிலையில் காட்சியளிக்கின்றனர். செப்பேட்டை அழகு செய்யும் இந்த ஓவியத்தின் சிறப்பு, தனித்துச் சுட்டும் அளவுக்கு உயர்ந்ததாக உள்ளது.

செப்பேட்டின் தொடக்கத்தில் இரண்டு வரிகள் வடமொழியில் நாகரி வடிவில் எழுதப்பெற்றுள்ளன. இச் செப்பேட்டுச் செய்தியான, இராமேசுவர அன்னதான அறத்துக்காக இன்னார், இன்னாரிடம் கிராமக் கொடையளித்தார் எனுங் குறிப்பு அவ்விரு வரிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*16.8.1735*இல் சோகோசி தளுவி என்பவர் மகளும், சுபான்சி சாதவராவ் என்பவர் மனைவியுமான ஆவுபாயி அம்மாள் என்பவர் பட்டுக் கோட்டைச் சீமையில் பெரிய கோட்டை என்னும் ஊரில் முன்னரே அவ்வூரில் சிலருக்கு அளிக்கப்பட்டிருந்த கொடைநிலங்கள் போக மீதம் *71.5* வேலி *1* மா நிலத்தினை, இராமேசுவரத்தில் அன்னதானக் கட்டளை தர்மச் சத்திரத்துக்குக் கொடையாக அளித்தார். இதனைச் சதாசிவபட்டர் என்பவர் பெற்றுக்கொண்டார் என்பதை இச்செப்பேட்டு வாசகங்கள் தெரிவிக்கின்றன.

இச்செப்பேட்டின் மூலம் *18* ஆம் நூற்றாண்டில் மராட்டியரின் கீழ்ப் பட்டுக்கோட்டைச் சீமைக்கு விசைய ரகுநாத மெய்க்கண் கோபாலன் சேருவைக்காரர் என்பவர் பாளையக்காரராக இருந்ததையும், பெண்கள் கொடை

வழங்கும் நிலையில் இருந்ததையும், பெண் மணமான பின்னரும் கணவன் பெயருடன் தந்தையின் பெயர் சேர்த்துக் கூறப்படுகின்ற குடும்ப நிலையையும் அறிகிறோம்.

மராட்டியர் ஆட்சிக் காலச் செப்பேட்டிலும் தஞ்சைப் பகுதி சோழ மண்டலம் என்றே குறிக்கப்படுகின்றது. சகாற்றம், நேமிச்ச முதலான திரிந்த சொல் வடிவங்கள் செப்பேட்டு வாசகங்களில் காணப்படுகின்றன.

இச்செப்பேட்டின் இறுதிப்பகுதியில், இந்தத் தர்மத்துக்கு இடையூறு நேருமாயின், இடையூறு செய்வோர் (இந்துக்களாயின்) காசி இராமேசுவரத்தில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகக் கடவர் என்றும், துலுக்கர் ஆயின் மக்கத்திலே மதனாவிலே பன்றி தின்ற தோஷத்திலே போகக் கடவர் என்றும்,

இந்தத் தர்மத்தை நடக்கச் செய்வோர் (இந்துக்களாயின்) காசி இராமேசுவரத்தில் சகல தர்மத்தையும் செய்த புண்ணியத்தை அடையக்கடவர் என்றும், சகாயம் செய்வோர் துலுக்கராயின் மக்கா மதீனாவிலே செய்த தர்மத்தை அடையக் கடவர் என்றும் கூறும்பகுதி குறிப்பிடத்தக்கதாக விளங்குகின்றது.

அகச்சமயிகளால் அன்றிப் புறச்சமயிகளால் உதவி - இடையூறு ஏற்படின் விளையும் பலாபலனைப் பொருத்தமுறவும் மனம் புண்படாவண்ணமும் இவ்வாறு உரைத்தல் போற்றத்தக்கதாக உள்ளது.

## மோடி எழுத்திலுள்ள செப்பேடுகள்

இந்நூலகத்தில் உள்ள ஐந்து மோடிச் செப்பேடுகளும் மன்னன் பிரதாப சிங்கின் காலத்தைச் சேர்ந்தவையாகும். இவ்வைந்து மோடிச் செப்பேடுகளும் மூன்று செப்புத் தகடுகளில் எழுதப்பெற்றுள்ளன. இரு செப்புத் தகடுகளில் முன்னும் பின்னுமாக நான்கு செப்பேட்டுச் செய்திகள் எழுதப் பெற்றுள்ளன. இவற்றின் காலம் முறையே *7.10.1739, 23.1.1741, 9.5.1741, 3.6.1741, 1741* ஆகும்.

இவ்வைந்து செப்பேடுகளும், அக்காலத்தில் சிறந்து விளங்கிய சமயப் பெரியாரான தர்மதேவ பிரமானந்த பைராகி எனும் துறவிக்கு அரண்மனையைச் சேர்ந்த இடங்களிலிருந்து அளிக்கவேண்டிய கொடை பற்றிக் குறிப்பிடுகின்றன. இக், கொடையின் துணைகொண்டு ஏழைகட்கும் இரவலர்கட்கும் நோயாளிகட்கும் பிராமனந்த பைராகி உதவிகள் செய்ததாய் அறிகிறோம்.

தஞ்சாவூர், கும்பகோணம், திருவாரூர், மன்னார்குடி ஆகிய இடங்களிலுள்ள மகால்களில் பணிபுரியம் அலுவலர்கட்கு அனுப்பப்பெற்ற

ஆணையின் பிரதிகளாகவே இவை காணப்படுகின்றன. ஆணையைப்பெறும் அலுவலரின் பெயர் குறிப்பாகச் சுட்டிக் கூறப்பெறவில்லை.

எல்லா இடங்களிலும் நேரில் கொணர்ந்து கொடுக்கும் ஆணைகட்குப் படி எடுத்துக்கொண்டு மூலப்படியைப் பைராகி அவர்களிடமே கொடுத்துவிடவேண்டும் என்றும், கொடையை அளித்த செய்தி பேசுவா அவர்களுக்குத் தெரிவிக்கப்படவேண்டும் என்றும் ஏடுகளில் கூறப்பட்டுள்ளது.

இச்செப்பேடுகளில் சர்கேல், பேசுவா, உசூர் முதலிய அலுவல் பெயர்களும், நரசிங்கராவ், ஆனந்தராவ், வெங்கோபராவ் முதலிய அலுவலர் பெயர்களும் குறிப்பிடப் பெற்றுள்ளன. மராட்டியர்களின் ஆட்சிமுறை, அன்றாட அலுவல்முறை குறித்த ஆய்வுகளுக்கு இச்செப்பேடுகள் பயன்படும்.

### மோடி வரைபடங்கள்

சரசுவதி மகாலில் *53½ X 5* செமீ; *55½ X 53½* செமீ அளவில் இரண்டு பெரிய வரைபடங்கள் உள்ளன. சரபோஜி மன்னர் காலத்தைச் சேர்ந்த இவை, மோடி எழுத்தில் குறிப்புகளையும் பெயர்களையும் கொண்டு விளங்குகின்றன.

தஞ்சை நகரின் வரைபடங்கள் என இவற்றை இதுவரை அறிஞர்கள் குறிப்பிட்டு வந்தனர். இதில் இடம் பெற்றிருக்கும் மோடி எழுத்துச் செய்திகளைக் கவனிக்காமல் விட்டுவிட்டனர். 'பேப்ஸ் ஆப் இண்டியா' எனும் நூலில் சூசன்கோலி என்பவர் இப்படங்களை வெளியிட்டு இவற்றைத் தஞ்சை நகர வரைபடங்கள் என்றே குறிப்பிட்டுள்ளார்.

அண்மையில் வரலாற்று ஆய்வறிஞர் குடவாயில் திரு பாலசுப்பிரமணியம் அவர்கள், இவ்விரு வரைபடங்களிலும் உள்ள மோடிக் குறிப்புகளை மொழிபெயர்க்கச் செய்து, ஆய்வு செய்து, "இவ்வரைபடங்கள் தஞ்சை நகரத்தைக் காட்டும் துல்லியமான வரைபடங்கள் அல்ல. பெரிய கோட்டையும் சிறிய கோட்டையும் காட்டப்பெற்று, அவற்றின் அகழியில் யார் யாருக்குப் பயிர்செய்ய எந்த இடங்கள் குத்தகையாகக் கொடுக்கப் பெற்றன என்ற விவரங்கள்தான் குறிக்கப்பெற்றுள்ளன. நகரின் முக்கியமான இடங்களின் பெயர்களும் குறிக்கப்பெற்றுள்ளன" எனக் கண்டு கூறியுள்ளார். தமது 'தஞ்சாவூர்' எனும் நூலில் 'அல்லி தர்வாஜா' என்ற வடக்கு வாசல், 'பத்தே தர்வாஜா' என்ற கிழக்கு வாசல், சிவலக்கோட்டை, பிரஹதீஸ்வரர் கோயில், கோட்டை வாயில்கள், அகழியில் தண்ணீர் உள்ள இடம், பயிர்செய்யும் இடம், பழைய சிவகங்கை, அனுமார் கோயில், மாடுகள் மேய்க்கும் இடம், திவான் வாடா, நட்டுவன் சாவடி, ராணி வாய்க்கால், மாமா சாஹேப் வீடு, நரசிம்மர் கோயில் கொடிமரத்து மூலை ஆகிய இடங்கள் வரைபடங்களில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

பெரிய கோட்டையையும் சிறிய கோட்டையையும் காட்டுகின்ற இவ் வரைபடங்களால் தஞ்சையின் முக்கிய இடங்களின் பெயர்களையும் கோட்டையும் அகழியும் பராமரிக்கப்படாததால் அகழியின் பல பகுதிகளும் காய்கறி பயிரிடும் நிலமாக மாறியதையும், அகழியில் பயிர்க் குத்தகைக்காக அளிக்கப்பட்ட இடங்களைப் பற்றிய விவரத்தையும், கோட்டையும் அகழியும் மெல்ல மெல்ல அழியத் தொடங்கிய நிலையையும் நாம் அறிகின்றோம்.

## தஞ்சை நாட்டிய நால்வருள் ஒருவர் தொடர்பான ஆவணம்

தஞ்சையில் நாட்டியம் கற்றுக்கொடுப்பதில் வல்லவர்களாகவும், தஞ்சை நாட்டிய நால்வர் எனப் போற்றப்படுபவர்களாகவும் விளங்கிய, சுப்பராய ஓதுவார் என்ற நட்டுவாங்க வல்லவரின் மக்களான பொன்னையா, சின்னையா, சிவானந்தம், வடிவேலு ஆகியவர்களில் சிவானந்த நட்டுவனாரைப்பற்றிய ஓர் ஆவணம் சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளது.

மோடி எழுத்தில் அமைந்துள்ள இவ்வாவணம், சிவனாந்த நட்டுவனார் தமிழில் இட்ட கையொப்பத்தைத் தாங்கியுள்ளமை வியந்து குறிப்பிடத்தக்கது.

சிவானந்த நட்டுவனார் தஞ்சைப் பெரிய கோவிலில் நட்டுவாங்க வேலையில் இருந்தபோது, இரண்டாம் சிவாஜியின் மகள் திருமணம் நடந்தது. அத்திருமணத்திற்குச் சிவானந்தம் சென்றிருந்தார். அப்பொழுது அரசர் தஞ்சையில் உள்ள தேவதாசிகள் எல்லோருக்கும் ஹிந்துஸ்தான் நாட்டியமும் கர்நாடக நாட்டியமும் கற்றுத்தரப் பணித்தார். அதன்படி சிவானந்தமும் அவர் சகோதரர் மூவரும் சேர்ந்து இரவுபகலாக நாட்டியம் கற்றுக் கொடுத்தனர். எனினும் சிவானந்த நட்டுவனாரை ஹுஜூர் முன்னிலையில் நாட்டியம் செய்யக்கூடாது எனப் பெரிய கோயில் மத்யஸ்தர் தடை செய்துவிட்டார். அதனால் சிவானந்தம் முன்போல் அரசர் முன்னிலையில் நாட்டியம் ஆடுவதற்கு அனுமதி தரல் வேண்டும் என்று *10.10.1844* இல் விடுத்த வேண்டுகோள் கடிதமாகும் இவ்வாவணம்.

இவ்வாவணத்தில் சிவானந்த நட்டுவனார் பரமானந்தத்தின் மகன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளமை, ஆய்வாளரிடை ஐயத்தைத் தோற்றுவித்தது. தஞ்சை நாட்டிய நட்டுவாங்க நால்வரின் தந்தையின் பெயர் சுப்பராய ஓதுவார் என அறியப்படுகின்ற நிலையில், இவ்வாவணத்தில் பரமானந்தத்தின் மகன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால் இச்சிவானந்தம் நட்டுவாங்க நால்வருள் ஒருவர்தாமா என ஐயம் எழுந்தது.

வரலாற்று ஆய்வறிஞர் குடவாயில் பாலசுப்பிரமணியம் அவர்கள், நட்டுவாங்க, இசை மரபினர் தாயின் பெயரையே முன்னால் இட்டு இன்னாரின் மகன்-மகள் எனப் போட்டுக் கொள்ளும் பழக்கத்தை எடுத்துக் காட்டி,

பரமானந்தம் என்பது நட்டுவாங்க நால்வரின் தாயார் பெயர் எனக் கூறி ஐயமகற்றினார்.

இவ்வாறு அரிய செய்திகளைத் தாங்கிய மோடி எழுத்தில் கடிதமும் தமிழில் கையொப்பமும் ('சிவானந்தம் நட்டுவன் கையெழுத்து' எனக் கொண்ட இவ்வாவணம், வரலாற்று ஆய்வுகளுக்குப் பயன்படுவதாகும்.

## ஆவணங்களாகும் இலக்கியங்கள்

சரசுவதி மகால் நூலகத்தில் இடம்பெற்றுள்ள சில சமஸ்கிருத, தெலுங்கு இலக்கியச் சுவடிகள், அழகிய இலக்கிய நூல்களாகத் திகழ்வதோடு, நாயக்கர், மராட்டியர் காலத் தஞ்சைக் கோட்டை, அரண்மனை, நகர அமைப்பு, அரசர்களின் சிறப்பு, போர் நிகழ்ச்சிகள், வருவாய்க் கணக்குகள் முதலியவற்றைப் பற்றிய செய்திகளைத் தெரிவிக்கின்ற வரலாற்று ஆவணங்களாகவும் விளங்குகின்றன.

இந்நூல்கள் நாயக்கர் கால, மராட்டியர் கால வரலாற்றை வரையத் துணைசெய்யும் குறிப்புகளைக் கொண்டுள்ளமை கருதி, இவற்றை இலக்கியங்களாகப் போற்றுவதோடு வரலாற்று ஆய்வுகட்கு உதவும் ஆவணங்களாகவும் மதித்துப் பேண நாம் கடமைப்பட்டுள்ளோம்.

இவ்வகையிலான நூல்களாக சாஹித்ய ரத்னாகரம், இரகுநாத விலாசம், இரகுநாதாப்யுதயமு, இரகுநாத நாயகாப்யுதயம், மன்னாருதாச விலாசம், கலிவிடம்பனம் ஆகிய நூல்கள் அமைந்துள்ளன.

## சாஹித்ய ரத்னாகரம்

இந்நூல் கி.பி.*1600* முதல் *1633* வரை தஞ்சையை ஆட்சிசெய்த இரகுநாத நாயக்கரின் அவையில் அரங்கேறிய ஒரு சமஸ்கிருத நூலாகும்.

செவ்வப்ப நாயக்கர், அச்சுதப்ப நாயக்கர், இரகுநாத நாயக்கர் ஆகிய மூன்று (பாட்டன், மகன், பேரன்) நாயக்க மன்னர்களுக்கு அமைச்சராகவும் குருவாகவும் திகழ்ந்த கோவிந்த தீட்சிதரின் மகனாகிய யக்ஞநாராயண தீட்சிதரால் இயற்றப்பட்டதாகும் இந்நூல்.

இரகுநாத நாயக்கனின் வீரத்தையும், ஆற்றலையும், தஞ்சை நகர அமைப்பையும், கோட்டை, அகழி, அரண்மனை ஆகியவற்றின் சிறப்பையும் எடுத்துரைக்கின்ற இந்நூல், பல அரிய குறிப்புகளை வழங்குவதாக அமைந்துள்ளது.

இந்நூலின் ஒன்பதாம் சர்க்கம் அச்சுதப்ப நாயக்கரின் அரண்மனை தர்பார் மண்டபம் பற்றிக் கூறுகின்றது. அமைச்சர் கோவிந்த தீட்சிதருடன்

அச்சுதப்ப நாயக்கர் தன் மகன் இரகுநாதனை அருகில் வைத்துக்கொண்டு ஈழவேந்தனுக்குக் கொடுத்த வாக்குறுதிபற்றி ஆலோசித்தார் என்றும் ஆலோசனை நடந்த இடம் லஷ்மி விலாசம் என்றும் கூறப்பட்டுள்ளது.

கோட்டையின் அமைப்பு கருடன் வடிவில் இருந்ததால் கருடக்கோட்டை என அழைக்கப்பெற்றது, மந்திராலோசனை மண்டபத்தின் பெயர் லஷ்மி விலாசம் போன்ற பல செய்திகளை நாம் இந்நூலால் அறிகிறோம்.

## இரகுநாத விலாசம்

சாஹித்ய ரத்னாகரத்தை இயற்றிய யக்ஞநாராயண தீட்சிதரால் இயற்றப்பட்ட மற்றொருநூல் 'இரகுநாத விலாசம்' என்பதாகும். இது சமஸ்கிருதம் கலந்த மொழிநடையிலான நாடக நூலாகும். இரகுநாத நாயக்கரைப் பற்றிய கற்பனை நாடகமாக இது இருப்பினும், நாயக்கர் காலத் தஞ்சை நகரம், அரண்மனை, 'இராம மண்டபம்' எனும் மண்டபம், 'லக்ஷ்மி விலாசம்' எனும் கொலு மண்டபம், அந்தப்புரப்பெண்கள் பல கலைகளையும் கற்கும் 'கலா பரிசீலனசாலா' எனும் பகுதி, அதற்குள் அமைந்திருக்கும் 'ஸ்ரீராம சௌதம்' எனும் பகுதி அதற்கு மறுபுறம் மாடியில் உள்ள நேரத்தை அறிவிக்கும் மணி மாடம், அதனை அடுத்துள்ள விஜயபவனம், மன்னனின் வசிப்பிடமான 'இந்திரா மந்திரம்' ஆகியவற்றைப் பற்றி இந்நூல் விரிவாக எடுத்துரைக்கின்றது.

இந்திரா மந்திரத்தில் திருமகள் தாமரையில் வீற்றிருக்கும் திருவுருவம் இடம்பெற்றிருந்தது என்றும், இதே மாளிகையின் ஒருபுறம் வெள்ளி ஆசனத்தில் இரகுநாத நாயக்கரின் உருவச்சிலை திகழ்ந்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

## இரகுநாதாப்யுதயமு, இரகுநாத நாயகாப் யுதயமு

இரகுநாத நாயக்கரின் மகனான விசயராகவ நாயக்கர், 'இரகுநாதாப் யுதயமு', 'இரகுநாத நாயகாப்யுதயமு' எனும் இரு தெலுங்கு நூல்களை இயற்றியுள்ளார்.

கல்லணைக்கு அருகில் உள்ள தோகூர் எனும் ஊரில் இரகுநாத நாயக்கரால் நிகழ்த்தப்பெற்ற போர், வரலாற்றுச் சிறப்புடையதாகும். இப்போரில் இரகுநாத நாயக்கர், ஜக்கநாயக்கன் எனும் விசய நகரத்துக் கலகக் காரனையும் மதுரை செஞ்சி நாயக்கர்களையும் வென்று, உண்மையான விசய நகரத்து வாரிசான 'இராமராயன்' எனும் சிறுவனுக்குப் பேரரசனாக மணிமுடி சூட்டினார். வரலாற்றுச் சிறப்புடைய இப்போர் பற்றிய ஆவணங்கள் பல கிடைத்திருந்தும், போர் நிகழ்ச்சிகள் பற்றியும் எவ்வாண்டு இப்போர் நிகழ்ந்தது என்பது பற்றியும் ஆய்வாளர்களுக்குத் தெரியாமல் இருந்தது. ஆனால் 'இரகுநாதாப்யுதயமு'

சுவடியின் மூலம் போரின் முழு விவரத்தையும் நாம் அறிவதோடு, கிபி*1616* ஆம் ஆண்டு சூன் மாதம் போர் நிகழ்ந்தது எனும் தெளிவான வரலாற்றுக் குறிப்பையும் அறிகிறோம்.

இரகுநாத நாயக்கரின் நாட்டு வருவாய் விவரங்களுக்கும் இரகு நாதாப் யுதயமு நூலில் கூறப்பட்டுள்ளன. இரகுநாத நாயக்கரின் நாட்டின் ஆண்டு வருவாய் *6,68,000* மாடை என்ற குறிப்பினை இந்நூலால் நாம் அறிகிறோம். தர்மாசனம் மூலமாக *3,00,000* மாடையும்,மானியம், மனோவர்த்தி என்ற நிலவருவாய் மூலம் *2,50,000* மாடையும், கறைதொறை (கரை துறை) மூலம் *1,00,000* மாடையும், சுங்கம் மூலமாக *%18,000* மாடையும் வருவாய் வந்ததாக அட்டவணை ரங்கப்பையன் கூற்றின் வாயிலாக விஜயராகவ நாயக்கர் தம் நூலில் குறிப்பிடுகிறார். *2,50,000* மாடை நில வருவாயில்*1,50,000* மாடை பணமாகவும் *50,000* மாடை மதிப்புக்கு நெல்லாகவும் கிடைத்தது போக *50,000* மாடை வருவாய் நிலுவையில் இருப்பதாகவும் அந்நூல் குறிப்பிடுகின்றது.

'இரகுநாத நாயகாப்யுதயமு' எனும் சுவடியில் தஞ்சை நகரின் அமைப்பு, கோட்டை, அரண்மனை ஆகியவை பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. இரகுநாத விலாசம் போன்றே இந்நூலும் அரண்மனையில் ஒவ்வொரு பகுதியின் பெயரையும் கூறிஅவற்றின் அமைப்பை எடுத்துரைக்கின்றது.

யானைகள் கட்டியிருக்கும் 'பெத்த மவந்தி' எனும் இடம், குதிரைகள் உள்ள 'படானி பவந்தி' எனும் இடம், கணக்கு எழுதும் 'சம்ப்ரதிகரணம்' எனும் அலுவலர்கள் பணிபுரியும் 'விசால சாலை' எனும் பகுதி, இராம பிரானின் உருவம் திகழும் 'இராம பத்ர சாலை' எனும் பகுதி, 'லக்ஷ்மி விலாசம்' எனும் பகுதி, வஸ்தாத்துகள் பயிற்சி செய்யும் 'கரடி கூடம்', 'இந்திர மந்திரம்' முதலிய அரண்மனையின் பல பகுதிகள் இச் சுவடியில் விவரிக்கப்பட்டுள்ளன.

இரகுநாத நாயக்கர் காலையில் படுக்கையிலிருந்து எழுந்திருப்பதி லிருந்து மீண்டும் இரவு அவர் படுக்கைக்குப் போவது வரை ஒரு நாளில் நிகழும் அவனது பணிகள் அத்தனையும் இச்சுவடியில் விவரிக்கப் பெற்றுள்ளன.

மதுரை வீரப்ப நாயக்கரை வெற்றிகொண்ட இரகுநாத நாயக்கர் அம் மன்னனது பாவையையும், அவர் கொடுத்த வேதிகையையும் ஏற்றுக் கொண்டு தஞ்சையை அடைந்தார். இராம சௌதம் எனும் தர்பார் மண்டபத்தையுற்றுக் கொலுவேறினார். அப்போது பாட்சாவின் பிரதிநிதியாக ஹனுமோஜிபந்த் பரிசுப் பொருட்களுடன் அங்குவந்து மன்னனைச் சந்தித்தார் என்பது போன்ற செய்திகளும் இரகுநாத நாயகாப்யுதயம் நூலில் குறிப்பிடப் பட்டுள்ளன.

இரகுநாதாப்யுதயமு, இரகுநாத நாயகாப்யுதயமு எனம் இரு நூல்களின் வாயிலாக நாம் நாயக்கர் காலத் தஞ்சை அரண்மனை, கோட்டை அமைப்பு குறித்தும், போர் நிகழ்வுகள் குறித்தும் அறிகிறோம்.

## மன்னாரு தாச விலாசம்

விஜயராகவ நாயக்கரின் அவைக்களப் புலவராகத் திகழ்ந்த ரங்காஜி ஜம்மா எனும் பெண்புலவர் இயற்றிய தெலுங்கு நாடக நூல் 'மன்னாரு தாச விலாசம்' என்பதாகும்.

விஜயராகவ நாயக்கர் தஞ்சையில் வீற்றிருந்த 'இராஜகோபால விலாசம்' என்ற இடத்தைப் பற்றியும், அவருடைய இராஜகுரு பற்றியும், குடும்பத்தினருடன் மன்னன் கதை கேட்டல், நாட்டியங் காணல் பற்றியும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

விஜயராகவ நாயக்கரின் குலதெய்வம் மன்னார்குடி இராஜகோபாலப் பெருமான். விஜயராகவ நாயக்கர் மன்னாரு தாசன் என்றும் குறிப்பிடப் பெறுபவர். மன்னாரு தாச விலாசம் எனும் இந்நாடகத்தில் விஜயராகவனின் வரலாறு, மன்னார்குடிக் கோயிலின் வருவாய் விவரங்கள் முதலியன இடம் பெற்றுள்ளன.

இந்த நாடகத்தில் கோயிலில் நடப்பதாகக் காட்டப்பெற்றுள்ள காட்சி ஒன்றின் மூலமாக இக்கோயிலின் ஆண்டு வருமானமும், சொந்தமான கிராமங்களின் எண்ணிக்கையும் கூறப்பெறுகின்றது.

"லட்சத்து ஐம்பதினாயிரம் பொன்னுக்குத் திருவிடையாட்டம் கிராமங்களில் நடக்கிறது. அதிலே கிராமங்களாய் எண்பது. உட்கடயல் எழுபத்து நாலு, மடப்புறம் பன்னிரண்டு, கஞ்சனத்திலே மூணு மாகாணம் நடக்குறது. இதுக்கு மன்னங்காலிலே மூணு லட்சம் கலம் நெல்லும் முப்பதுனாயிரம் பொன்னும் குத்தகைப்பட்டி. . . . "

என்று நாடகக் கதாபாத்திரங்களான கோயில் அலுவலர்கள் மன்னனுக்கு அறிக்கை செய்வதன் வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது. இதுதவிர புஷ்பவனத்திலே லட்சத்து ஐம்பதினாயிரம் இலுப்பை மரங்கள் உள்ளதாகவும் அவற்றின் மூலம் ஐம்பதினாயிரம் கலம் இலுப்பைக் கொட்டை கிடைப்பதாகவும் கூறப்பெற்றுள்ளது. தஞ்சை அரண்மனையிலிருந்து இக்கோயிலுக்கென ஒவ்வொரு நாளும் 50 பொற்காசுகள் வழங்கப்பட்டன என்ற செய்தியும் இந்நாடகத்தின் வாயிலாக நாம் அறிகிறோம்.

## திருவாரூர் மாஹாத்மியம் என்னும் கலிவிடம்பனம்

கலிவிடம்பனம் என்ற வடமொழிச் சுவடி நூலொன்று 'கமலாலய மாகாத்மியம்' என்ற பெயரில், சரசுவதி மகால் நூலகத்தில் இடம் பெற்றுள்ளது.

கி.பி.*18* ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆட்சிபுரிந்த சஹஜி மகாராஜாவுக்கு எழுதப்பெற்ற சீட்டுக்கவியாக அமைந்த நூலாகும்.

இதில் திருவாரூர்த் திருக்கோயிலில் மன்னரது யானைகளும், குதிரைகளும் பராமரிக்கப்பட்டதாகவும், அதனை மேற்பார்வை செய்யும் அதிகாரி பல ஊழல்கள் செய்ததாகவும், இதனால் யானைகளும் குதிரைகளும் பாதிக்கப்படும் செய்தியினை மிக அழகாக, நயமாகத் திருவாரூரின் பெருமைகள் ஒன்று, இரண்டு என்று வரிசையாகச் சொல்லி மன்னனின் கவனத்திற்குக் கவிதை வாயிலாகக் கொணர்ந்த அரியநூல் இது. இதனை இயற்றியவர் யானைகளைப் பராமரிக்கும் பணியைச் செய்த ஒரு மருத்துவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## வாசுதேவகரி வதங்களில் இராசகோபாலச் சக்கரம் எனும் காசு பற்றிய குறிப்பு

சஹஜியின் அவைக்களப் புலவரான வாசுதேவகரி இயற்றிய பதங்களில் விசயராகவ நாயக்கர் காலத்தில் வெளியிடப்பட்ட இராச கோபாலன் செண்டேந்தி நிற்க, பின்புறம் வசியராகவ நாயக்கர் தன் உடைவாளை இடது கரத்தால் உட்டலோடு அழுத்திப்பிடித்த வண்ணம் இருகரங்களையும் கூப்பி வணங்கும் கோலத்தில் காணப்பெறுகின்றார்.

இக் காசினைப் பற்றிய குறிப்பு வாசுதேவ கவி பதங்களில் காணப்படுகின்றது.

'ததி அளந்துண்ட கண்ணன் நிகர்
தஞ்சையில் சகஜி மகா ராஜேந்த்ரா
கையில் கோபாலச் சக்கரப்பொன் காணாவிட்டால்
வஞ்சித்தே னென்று . . . .

என ஒரு பாடலில் உள்ளமை நோக்கத்தக்கது. விசயராகவ நாயக்கர் காலத்தில் வெளியிடப்பட்ட காசு சகஜி காலத்திலும் புழக்கத்தில் இருந்தது என்பதை இப்பாடலால் அறிகிறோம். இக்குறிப்புகள் நாணயவியல் ஆய்வு களுக்கு உதவுவனவாகும்.

## தமிழ்ச் சுவடி ஈற்றுக் குறிப்பில் வரலாற்றுக் குறிப்பு

இந்நூலகத் தமிழ்த்துறையில் இடம்பெற்றுள்ள கம்பராமாயணச் சுவடியொன்றின் *(சுவடி எண்-1)* ஈற்றில் தஞ்சையை ஆண்ட மன்னர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளமை சுட்டத்தக்கது. இக்குறிப்பு வரலாற்று ஆய்வுக்கு உதவுவதாக அமைந்துள்ளது. அக்குறிப்பு வருமாறு.

"மானுவிக்கியான நெறி செங்கோல் செலுத்தப்பட்ட கிருஷ்ணராயர் கடாட்சத்துக்கு யோக்கியனான சேவப்ப நாயக்கர் முதல் விசயராகவ நாயக்கரந்தம் விசையாபுரம் பாரிசாவ சீரரான காசி மகாராசாவுடைய குமாரன் ஏகோசி ராசா, ஏகோசி ராசா குமாரன் மகாராசா, மகாராசா சகோதரன் சர்வோசி ராசா, சாம்பூதிய தக்ஷணபாக நள்ளி தலைகிள்ளி பின்னாற்பத் தெண்ணாயிரம் ஆதித்தகுல ராசரீகஞ் செலுத்திய சோழதேச தீபக தஞ்சை மாநகரம்......"

## முடிவுரை

இவ்வாறு வரலாற்று ஆய்வுகளுக்குப் பயன்படும் பல அரிய ஆவணங்களும், இலக்கியச் சுவடிகளும் இந்நூலகத்தில் உள்ளன. இன்னும் ஆழ்ந்து நோக்கினால் மேலும் சில ஆவணங்கள் கிட்டக்கூடும். இங்குச் சுட்டப்பெற்றவற்றுள் சில வரலாற்று ஆய்வாளர்தம் நூல்களில் இடம்பெற்று வரலாற்று ஆய்வுகளைச் செழுமைப்படுத்தியுள்ளன. மேலும் சில வருங்கால ஆய்வுகளை வளமாக்கக் காத்திருக்கின்றன.

* * *

# 23. பானை ஓட்டு எழுத்துக்களைப் பாதுகாத்தல்

வே. ஜெயராஜ்

குறியீடுகள் மூலம் தனது கருத்தை வெளிப்படுத்திய மனிதன் பின்னர் எழுத்துக்களின் உதவியால் எழுதப் பழகினான். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே எழுத்துக்கள் தோற்றம் பெற்றதை அகழாய்வுகள் உறுதிப்படுத்தியுள்ளன. எழுதுவதற்காக கற்கள், மரப்பட்டைகள், பலகைகள், உலோகங்கள், ஓலைகள், துணி, ஓடுகள், செங்கற்கள் ஆகியவற்றை மனிதன் பயன்படுத்தினான். இன்றைக்கு ஏறத்தாழ *6000* ஆண்டுகளுக்கு முன்னரே மனிதன் கையினால் மட்பாண்டங்கள் செய்தான் என்பதற்குத் தகுந்த ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன. பானை யோட்டில் எழுதப்பட்ட செய்திகள் பல ஆய்வு வழி நமக்குத் தெரிகிறது. தமிழ்நாட்டில் அரிக்கமேடு, கொற்கை, அழகரை, உறையூர், கரூர், முட்டம், வல்லம், காஞ்சிபுரம் போன்ற பல்வேறு இடங்களில் அகழாய்வு மூலம் தமிழ் எழுத்துப் பொறிப்புகள் உடைய பானை ஓடுகள் கிடைத்துள்ளன. ஆனால், அவைகள் எல்லாவற்றையும் விட கொடுமணலில் மிக அதிக அளவில் எழுத்துப் பொறிப்புகள் கிடைத்துள்ளன. வீணாகி, கண்ணன், ஆதன், அந்தய், அந்துவன், சாத்தந்தை, ஆதன், வேனி ஆதன், கூல அந்தைய சாம்பான், அகல் போன்ற சொற்கள், பொறிக்கப்பட்ட பானையோடுகள் கிடைத்துள்ளன. இவை யாவும் பானைகளைச் சுட்டபிறகே கீறப்பட்டுள்ளன. எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட ஓட்டுப் பலகைகள் உலகின் பல்வேறு இடங்களில் கிடைத்துள்ளன. இவை பாதுக்காக்கப்பட வேண்டும். இக்கட்டுரையில் ஓடுகளின் தன்மைகள், ஓட்டின் பாதிப்புகள், பாதுகாப்பு முறைகள், எழுத்துக்களைப் பாதுகாத்தல், பானை ஓடுகளைச் சேமிக்கும் முறை, காலஅளவீட்டு முறை போன்றவற்றைப் பார்க்கலாம்.

## பானை ஓடுகள்

களிமண் மனிதன் பயன்படுத்திய ஒரு சாதாரண கிடைப்பதற்கு எளிய பொருளாகும். களிமண் ஈரமாக இருக்கும்போது மிருதுவாகவும் இருக்கும். இதனைச் செம்பழுப்பு நிறமாகச் சூடாக்கிக் குளிர்ந்த பின்னர் கல்போன்று உறுதியாகிறது. எனவே தான், மனிதன் அன்றாட வாழ்க்கையில் பெருமளவில் பானைகளைப் பயன்படுத்தினான். பானை ஓடுகளில் பல்வேறு வாசகங்களையும் எழுதி குறியீடுகள் உண்டாக்கினான். உறுதியின்

அடிப்படையில் பானை ஓட்டைத் தங்கத்திற்கு இணையாக்கலாம். ஒரே வித களிமண்ணிலிருந்து வெப்பம், பிராணவாயு ஆகியவற்றின் அளவின் அடிப்படையில் விதவிதமான பானைகளைச் செய்யப் பழகியிருந்தான். மேற்பரப்பு பல்வேறு முறைகளில் வழவழப்பு செய்யப்பட்டது. காற்றில் உலர வைக்கப்பட்ட ஒரு பானை ஒடு இன்னொரு களிமண் நீர்க்கலவையில் முழுக்கிச் சுடப்பட்டால் வழவழப்பைப் பெறுகிறது. வழவழப்பினைச் சுடுவதற்கு முன்னர் செய்தும் பெறலாம்.

## பானை ஓட்டின் தன்மைகள்

பொதுவாகப் பானை ஓடுகள் அகழாய்வு மூலமாகவே கிடைக்கின்றன. இவற்றில் எழுத்துக்கள் இருப்பதால் அவை பாதுகாக்கப் படவேண்டும். நன்கு சுடப்படாத ஓடுகள் பலம் குறைந்தவைகளாகவும், அதிக நுண்துவாரங்கள் உடையவையாக இருப்பதாலும் ஈரமான நிலையில் உடைந்து போகக் கூடிய தன்மையுடையதாகவும் இருக்கும்; துண்டுகளாகவும் கிடைக்கும். மட்பாண்ட ஓட்டுத் துண்டுகள் அழுக்குகளாலான அடுக்குகள் நீக்கப்பட்டு, பலப்படுத்தப் பட்டு இணைக்கப்படவேண்டியவை ஒட்டவைக்கப் படவேண்டும். தேவைப்படின் காணாது போன இடங்கள் 'பிளாஸ்டர் ஆப் பாரிசு' உதவியுடன் அல்லது அரால்டைட்டுபன் சலவைக்கல் தூள் சேர்த்து உரிய நிறம் கலந்து நிரப்பப்படவேண்டும். மிக எளிதில் பானை ஓடுகள் உராய்ந்து சேதமாகக் கூடியவை; உப்புக்களை உறிஞ்சும் தன்மையுடையவை. எனவே, பானையோட்டிலுள்ள எழுத்துக்களைப் பாதுகாக்க அவற்றின் பாதிப்புத் தன்மைகளைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

## பானை ஓட்டு எழுத்துக்கள்

பானை ஓடுகளில் பிராமி, தமிழ் எழுத்துக்கள் காணப்படுகின்றன. இவை பொதுவாக சுட்டபிறகே கீறப்பட்டுள்ளன. சுடுமுன்னரே கீறப்பட்ட எழுத்துக்கள் அதிகம் பாதிக்கப்படுவதில்லை.

## பானை ஓட்டு எழுத்துக்களின் பாதிப்புகள்

அகழாய்வின் போது கிடைக்கும் பானை ஒடுகள் ஈரமாக இருப்பதால் ஈரம் காய்ந்த பின்னரே, தூய்மை செய்யவேண்டும். பானை ஓட்டின் உட்பகுதியில் நீரில் பாதிக்கப்படாத மையினால் குறியிடவேண்டும். ஓடுகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் பொருட்களை நன்கு ஆய்வு செய்த பின்னரே தூய்மைப் பணிக்குச் செல்லுதல் நலம். உப்பால் கலந்த நீரினால் தூய்மை செய்யலாம். வண்ணங்கள் கொண்டு எழுதப்பட்டிருப்பின் அது சிதையாவண்ணம் கரைப்பான்களைப் பயன்படுத்த வேண்டும். நெடுங்காலம் பூமியில் புதையுண்டிருப்பதால் மட்பானை ஒடு பூமியிலுள்ள உப்புக்களை உறிஞ்சி இருக்கும். மெருகூட்டப்பட்ட ஓடு, ஒரு பகுதியில் சிதைந்திருப்பின்

உப்பினை, அது உறிஞ்சுவதால் பிற மெருகூட்டப்பட்ட பகுதிகளும், உப்பினை உறிஞ்சி உப்புப் படிகமாக மாறுவதால் உதிர்ந்து விட ஏதுவாகும். நீரில் மூழ்க வைத்துப் பலமுறை அதனைத் தூய்மை செய்தால் உப்புக்கள் கரைந்து வெளிவருகின்றன. நன்கு வேகவைக்காத மட்பாண்டமாக இருப்பின் நீரினால் தூய்மை செய்வதைத் தவிர்க்க வேண்டும்.

உறிஞ்சப்பட்ட உப்பினை மட்பாண்ட ஓடுகள் அல்லது சுட்ட செங்கல்லிருந்து நன்கு அகற்ற காகிதக்கூழினைப் பயன்படுத்தலாம். மட்பாண்ட ஓட்டினை ஈரமாக்கிய பின் காய்த்து வடித்த நீரில் பசையாக்கப்பட்ட அமிலத்தன்மையற்ற காகிதக்கூழினை ஓட்டின் மீது பூசவேண்டும். உப்பு, காகிதக்கூழினால் உறிஞ்சப்பட்டுத் தூய்மையாகிறது. பின்னர் காகிதக் கூழ் காய்ந்து விழுவதால் அதனை அகற்றி, நீரில் கழுவி மறுபடியும் ஓட்டின் மீது பூசலாம். பலமுறை இவ்விதம் செய்வதால் முற்றிலும் உப்புக்கள் அகற்றப்படுகின்றன. எம்முறையில் தூய்மைப் படுத்தப்பட்டாலும் நன்கு உலர்ந்த பின்னர் நைட்ரோ செல்லுலோஸ் மூலம் கட்டியாக்கப்படுகிறது. இவ்விதச் செய்கையால் மட்பாண்ட ஓடுகளின் மீது உள்ள எழுத்துக்கள் பாதுகாக்கப்படுகின்றன.

### உடைந்தவற்றைப் பேணுதல்

மட்பாண்ட ஓடுகள் பலமற்றவையாக இருப்பின் அவை பலப்படுத்தப்பட வேண்டும். பாலிவினைல் அசிட்டேட், பாலிமிதைல் மெத்தக் கரைலேட்டில் மூழ்க வைத்து அவற்றைக் கடினப்படுத்தலாம். வெற்றிட முறையில் அவற்றைக் கடினப்படுத்துவது ஏற்றது. உடைந்த ஓடுகளை ஒட்ட, உடைந்த பகுதிகளை நன்கு தேய்த்துத் தூய்மைப்படுத்த வேண்டும். பின்னர் ட்யூரோபிக்ஸ், அரால்டைட் போன்ற பசையின் உதவியுடன் ஒட்டலாம்.

### பானை ஓட்டு எழுத்துக்களைப் பாதுகாத்தல்

பானை ஓட்டு எழுத்துக்களில் படிந்துள்ள அழுக்குகளை மிகக் கவனமாக புருசு கொண்டு அகற்ற வேண்டும். டீப்பால் கரைசல் கொண்டு தூய்மைப்படுத்த வேண்டும். பின்னால் அசிட்டோனில் கரைக்கப்பட்ட பாலிவினையல் அசிட்டேட் பூசி எழுத்துக்களைப் பாதுகாக்கலாம்.

### ஒளிப்படம் எடுத்தல்

புகைப்படம் எடுத்து அவ்வெழுத்துக்களைப் பாதுகாத்து வைக்கலாம். ஒளிக்காட்சிக்கான வில்லைகள் தயாரித்து அவற்றைப் பாதுக்காக்கலாம். வீடியோ படம் எடுத்து உண்மை நிலையினைப் பாதுகாக்கலாம்.

## பதிஉரு நகல் எடுத்தல்

எழுத்துக்கள் பானையோட்டில் ஆழமாகப் பதிந்திருப்பின் அவற்றைக் காகிதத்தில் அப்படியே பதிவுறு எடுத்துவிடலாம். பானை ஒட்டில் எழுத்துப்பகுதியை நன்கு தூய்மைப் படுத்திய பின்னர் வெள்ளைக் காகிதத்தை ஈரப்படுத்திப் பல்தேய்க்கும் புருசினாலோ அல்லது பெருவிரலினாலோ அழுத்தினால் எழுத்துப் பகுதியில் காகிதம் படிந்துவிடும். மை தோய்த்த குவிந்த ஒரு மை ஒற்றியினால் காகிதத்தில் உருட்டினால் எழுத்துப் பகுதியில் மை படாமல் இருப்பதால் அவை வெண்மையாகத் தெரியும். இப்படியும் பதிவுரு எடுத்துப் பானையோட்டு எழுத்துக்களைப் பாதுகாக்க முடியும்.

## பானையோட்டு எழுத்துக்களின் சேமிப்பு

பானையோடுகள் வேதியியல் மாற்றம் அடைவதில்லை. ஆனால், உப்புக்களை உறிஞ்சுவதால் பலமிழந்து விடும். ஒன்றோடொன்று உராய்வதால் எழுத்துக்கள் சிதைந்துவிட வழியுண்டு. எனவே, அவற்றை மரத்தாலான தட்டுகளில் பஞ்சுப்படுக்கையின் மீது மட்பாண்ட ஓடுகள் மீது மெல்லிய காகிதம் சுற்றி ஒன்றின் மீது ஒன்று படாதவாறு வைக்க வேண்டும்.

## பானை ஓடுகளில் காலக்கணக்கீடு

'தெர்மோலு மிசென்ஸ்' என்றழைக்கப்படும் வெப்ப ஒளியானது கதிரோட்டத்திற்குட்படுத்தப்பட்ட ஒவ்வொரு படிகத் தன்மையுடைய பொருளும் சூடாக்கப்படும்போது வெளியிடப்படுவதாகும். களிமண்ணிலுள்ள 'பெல்ட்ஸ்பார்', 'க்வார்ட்ஸ்' போன்ற படிகங்கள் இயற்கையானவை. எனவே, களிமண் பூமியினுள் புதைந்திருக்கும்போது பல்வேறு வகையாக கதிர்வீச்சுகளுக்கு உட்படுகின்றன. கதிர்வீச்சினால் உருவாகும் "எலக்ட் ரான்கள்" ஒட்டுப்பகுதியில் சிக்கிக் கொள்கின்றன. மட்பாண்டங்கள் செய்யச் சூடு படுத்தும்போது சமநிலையடைகின்றன. மறுபடியும் மட்பாண்டங்கள் புதையும் போது காலாவட்டத்தில் கதிர்வீச்சினால் கால அளவிற்கேற்ப ஒளிச்சக்தியைச் சேமித்துக் கொள்கின்றன. மட்பாண்ட ஓடுகள் வெளியே வரும்போது அவை சுவாத்த சக்தியை இழக்கத் தொடங்குகிறது. 'காமா' பெக்ட்ரோமீட்டர் என்ற கருவியைப் பூமிக்குள் குறிப்பிட்ட காலம் புதைத்து இயற்கையான கதிர்வீச்சை அறிந்து கொள்ளலாம். ஒட்டைச் சூடுபடுத்தும்போது உருவாகும் ஒளியிலிருந்து ஒளியின் அடர்த்தியையும் அதனைத் தொடர்ந்து அதன் காலத்தையும் அறியலாம்.

**முடிவுரை**

பானையோட்டு எழுத்துக்கள் நமது நாட்டில் அதிகம் கிடைப்பதில்லை. கிடைப்பவற்றையும் பேணுவதற்கான நடவடிக்கை எடுப்பதில் பல்வேறு சிரமங்கள் உள்ளன. எனவே, பானை ஓடுகளின் தன்மையினை அறிந்து உரிய முறையில் பாதுகாத்தால் பின்வரும் சந்ததியினர் நம்மைவிட அவற்றை அதிகம் பயன்படுத்தி, நமது பழம் பெருமையுணர்ந்து இன்னும் சிறப்பாக வாழ வழி கோலும்.

**துணை நூல்கள்**


1. இராசவேலு, சு., திருமூர்த்தி, கோ., தமிழ்நாடு தொல்லியல் அகழாய்வுகள், பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை *(1995)*
2. இராமன், கே.வி., தொல்லியல் ஆய்வுகள், சேகர் பதிப்பகம், சென்னை.
3. ஏகாம்பரநாதன், ஏ., பொன்னுசாமி, அரங்க., தொல்லியல் அகழாய்வு நெறிமுறைகள், ரோகிணி பதிப்பகம், சென்னை *(1983)*
4. பெரியார் மாவட்ட வரலாற்று ஆவணக்குழு. செய்திமலர், ஈரோடு, அக்டோபர் *(1988)*
5. ஜெயராஜ், வே., வடஆர்க்காட்டில் சுடுமட்பாண்டக்கலை, அரசு அருங்காட்சியகம், வேலூர் *(1992)*
6. Brunham, R.J.P. Tarling, D.H. Magnetisation of Shards as an Assistance to the Reconstruction of Pottery Vessels, Studies in Conservation, Vol. 20, No. 3. August (1975)
7. Gurumurthi, S., Ceramic Traditions in South India, Madras (1981)
8. Indian Archaeology : A Review.
9. Jeyaraj, V., Hand Book on Conservation in Museums, Government Museum, Madras (1995)
10. Karl Khandalavala, Archana Roy, Terracotta, Marg, Vol.XXXVIII. No.3
11. Mahalingam, H.J., Early South Indian Palaeography, University of Madras. (1974)
12. Plenderleith, H.J., Werner, A.E.A., The Conservation of Antiquities and Works of Art, Oxford University Press (1976)

13. Sankalia, H.D., Prehistoric Art in India, Vikas Publishing House Pvt. Ltd., (1978)

14. Stephen G. Rees - Jones, A Fifteenth Century Florentine Terracotta Relief. Technology-Conservation-Interpretation, Studies in Conservation, Vol.23, No.3, August (1978)

15. The Holy Bible, Henry Fronde, Oxford University Press (1886)

16. Van Geersdaele, P.C., & Davidson, S., The Thirteenth Century Tile - Kiln from Clarendon Place - its Removal and Reconstruction for Exhibition, Studies in Conservation, Vol. 20, No.3, August (1975)

* * *

# 24. ஆவணங்களில் திருவள்ளுவரும் திருக்குறளும்

முனைவர் செ. இராசு

கல்வெட்டுக்கள், செப்பேடுகள், ஓலைப்பட்டயங்கள் போன்ற வரலாற்று ஆவணங்களில் திருக்குறள் பற்றிப்பல குறிப்புகள் காணப்படுகின்றன.

## கபிலமலைச் செப்பேடு

நாமக்கல் மாவட்டம் கபிலக்குறிச்சி என்னும் ஊரில் உள்ள கபிலமலையில் ஒரு செப்பேடு உள்ளது.[1] அல்லாள இளையாநாயக்கன் என்னும் வேட்டுவ குலப் பட்டக்காரர் ஏற்படுத்திய மடம் பற்றி இச்செப்பேட்டில் குறிக்கப்படும் ஆதினத் தலைவருக்குத் திருவள்ளுவர் என்றே பெயர்.

திருவள்ளுவருக்கு கபிலமலைமடம், பழனிமடம், திருச்செங்கோடு மடம் ஆகிய மூன்று மடங்களையும் எழுதிக்கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது. திருவள்ளுவர் பெயரைப் பிற்காலத்திலும் நினைவு கூர்ந்துள்ளமைக்கு இச்செப்பேடு சான்றாக உள்ளது.

## பழனி வீரமுடியாளர் செப்பேடு

மதுரைத் திருமலை நாயக்கர் காலத்தில் பழனி சின்னோப நாயக்கர் என்பார் அதிகாரத்தில் பழனியில் வீரமுடியாளர் சார்பில் ஒரு மடம் ஏற்படுத்தப்படுகிறது. சிதம்பர உடையார் சீடன் அலங்காரபண்டாரம் அதன் தலைவராக நியமிக்கப்படுகிறார். மடத்தில் தண்ணீர்ப்பந்தல் வைக்கப்பட்டு உப்பு, ஊறுகாய், நீராகாரம் வைக்கப்படுகிறது.

அந்தச் செப்பேட்டில் பழனி சின்னோப நாயக்கர் மெய்க்கீர்த்தியில்

"—————— புகழ்ப்பூண்டு
இன்சொல்லால் இனிதளித்து வள்ளுவர் மரபு காத்து
முப்பால் மொழியின்படிக்கு
அல்லவை கடிந்து
நல்லவை நாட்டி

கலிமெலியக் குடிதழைக்க
ஆறிலொன்று கடமைகொண்டு
அசையாமணிகட்டி அரசாளுநாளில்"

என்ற தொடர்கள் காணப்படுகின்றன.[2]

**பல்லடம் செப்பேடு**

கொங்குநாட்டு வாரக்க நாட்டில் நாரணபுரம் அங்காள பரமேசுவரி கொடைச் செப்பேட்டில் நாராயண கவுண்டர் அதிகாரம் பேசப்படுகிறது.[3]

'ஓதி யுணர்ந்து உலகம்முழுதும் ஆளுவதற்கு
நீதி சாகரம் நினைவுடன் கற்று
மும்மொழி விநோதன் முத்தமிழ் தெரிந்தோன்
வள்ளுவர் மரபுகாத்து முப்பால் மொழியின்படியே
அல்லவை கடிந்து நல்லவை நாட்டி'

என்பன பாளையக்காரர் பற்றிய புகழ்மொழிகளாகும்.

**பூந்துறை நாட்டார் மேலோலை**

மதுரை முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கொங்கு நாட்டில் பூந்துறை நாட்டுக்கும் காங்கயநாட்டுக்கும் எல்லைப்போர் ஏற்பட்டுத் தாராபுரம் நாயக்கர் அதிகாரி திம்மப்ப முதலியாரால் அவ்வழக்கு தீர்த்து வைக்கப் படுகிறது. அதைக் குறித்து *1617*-ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தத்தில்

'அழும் குழவிக்கு அன்புடைத் தாய்போல்
அனைத்து உயிர்கட்கும் இனிமையே நல்கி
சற்குணம் நான்கும்
வள்ளுவர் உரைத்து முப்பால் மொழியின்படியே
செங்கோல் நீதி வழுவாமல் நாட்டி
நடத்தி வருகுற நாளில்'

என்ற தொடர்கள் காணப்படுகின்றன.[4]

**காரையூர்ச் செப்பேடு**

பழையகோட்டைப் பட்டக்காரர் அழகன் உத்தமக்காமிண்டர் செப்பேட்டிலும்

'ஓதி யுணர்ந்து. உலக முழுதாண்டு
மும்மூர்த்தியும் முத்தமிழ் விநோதன்

சரிபுட தாங்கும்தான விநோதன்
அளிக்கு சந்திரன் அர்த்தத்துக்கு மன்னி
சொல்லினில் தருமன் தோளினில் பீமன்
வில்லினில் விசயன் வாளினில் அபிமன்
பரிதனில் நகுலன் கரிதனில் உதயன்
புகழினில் போஜன் போகத்தில் இந்திரன்
சேவகத்தில் வராகி நடுவினில் எமன்
தைரியத்தில்நிருதி தனத்தில் குபேரன்
அறிவுக்கு அகத்தியன் எனப்புகழ் பெற்று
இன்சொல்லால் இனிதளித்து வன்சொல்லால் மறம்கடிந்து
அழும் குழவிக்கு அன்புடைத் தாய்போல்
அனைத்து உயிர்கட்கும் இனிதென
வள்ளுவர் உரைத்த முப்பால் மொழியின் படியே
அறமே அறிந்து அல்லவை கடிந்து நல்லவை நாட்டி
ஆறில் ஒன்று கடமைகொண்டு'

அரசாட்சி செய்ததாகக் கூறப்படுகிறது.[5]

## பழையகோட்டை ஏடு

பழைய கோட்டைப் பட்டக்காரர் பயிரன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் தம்பி கண்ணுச்சாமி என்ற குமார ரத்தினக்கவுண்டர் ஒரு பள்ளி ஏற்படுத்துவதற்காக ஆசிரியர் ஒருவரைத் தேடி திருவாவடுதுறை ஆதினம் சென்று முத்துப்பிள்ளை என்பவரைக் குடும்பத்துடன் அழைத்துக் கொண்டு வந்தார். அதற்காக ஆதினத்து *28* ஏக்கர் நிலம் அளிக்கப்பட்டது.

பழைய கோட்டையில் ஒரு வாரத்தில் *200* சிறுவர்கள் தங்கிப்பயில ஒரு பள்ளி ஏற்படுத்தப்பட்டது. அதைக்குறிக்கும் பாடலில்

'எங்கணும் புகழவே காரை ஆனூர் வந்தபின்
எட்டுநாட்கு உள்ளாகவே
இருநூறு சிறுவர்கட்கு ஆனபடி யாக ஒரு
எழிலான கூறையிட்டு
பொங்கிடும் சமையல் அறை பள்ளியறை இவைகளும்
புனித ஆசிரியருக்காய்
புதிதாக அமைத்தவர்க்கு உணவுஉடை இவைகளும்
போதிய படிக்கமைத்து
சங்கீதப் பண்ணுடன் சொலுகின்ற தமிழ்மறை
சங்கநூல்கள் நிகண்டும்

சாதிமத பேதமில் லாதுநல நீதியாய்ச்
சகலர்க்கும் ஓதிவைத்து
துங்கிதச் சொல்லுடன் தூயவர் இவராலே
துலங்கு நற் பள்ளி யீது'

என்று கூறப்பட்டுள்ளது.[6]

## வலங்கைச் சரித்திரம்

தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தின் சார்பில் இடங்கை வலங்கை வரலாறு என்ற நூல் அண்மையில் வெளியிடப் பட்டுள்ளது.[7] அதில் தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் எழுதிய 'வலங்கைச் சரித்திரம்' என்ற ஆவணம் வெளியிடப்பட்டுள்ளது. *(எண் டி 462-ன் படி)* சமயக்காழ்ப்புடன் எழுதப்பட்ட அந்த ஆவணம் பதிப்புக்கு ஏற்றது அல்ல.

தஞ்சை விளாறுக்கோட்டையில் வாழ்ந்த மல்லியப்பெருமாள் என்ற பறையன் மகன் பிறவுடைச் சாம்பான் என்ற பறையனுக்கும் அவன் மனைவி பெரிய நாயகம் என்ற பறைச்சிக்கும் அவர்கள் இறந்தபின் எடுக்கப்பட்ட சமாதிக் கோயில்களே தஞ்சைப் பெருவுடையார் பெரியநாயகி கோயில் என்றும், பெருவுடைச் சாம்பான் தம்பி தியாகச் சாம்பான் என்ற பறையன் சமாதியே திருவாரூர்த் தியாகராசர் கோயில் என்றும் 'அதை யிப்போ அக்கியானிகள் *(அஞ்சானிகள்)*' சுவாமி என்று *?*கும்பிடுவதாகவும் அந்த ஆவணத்தில் எழுதப்பட்டுள்ளது.

'சிவன் அல்லது ருத்திரனுக்குப் பயித்தியம் பிடித்து வெகுகாலம் சுரணையில்லாமல் தன் பிறந்தகமான வூரையும் வீட்டையும் விட்டு சுடுகாட்டில்ப் போய்ப்புரண்டு எலும்புகளைப் பொறுக்கித் தின்று தலையோடுகளைப் பொறுக்கிக் கழுத்திலே கட்டிக்கொண்டு திரிந்தான்'

என்பதைப் போன்ற அபத்தமான பற்பல பக்கங்கள் அந்நூலில் உள்ளன.

அந்நூலில் காட்டிலே விறகு பொறுக்கச் சென்ற கருவூர்ப் பெரும்பறையன் மகள் ஆதிக்கும் பகவன் என்ற பார்ப்பனுக்கும் மழைக்கு ஒதுங்கிய மடத்தில் பட்சமாகப் பேசிச் சயனித்த இடத்தில் பிறந்தவர் திருவள்ளுவர் என்று கூறப்பட்டுள்ளது. சேரமான் பெருமாள், கபிலர், மாரியம்மை, பிடாரி, அவ்வையார், வள்ளியம்மை ஆகியோர் திருவள்ளுவரின் சகோதர சகோதரிகளாம்.

'திருவள்ளுவன் தொண்டமண்டலத்து மயிலாப்பூரிலே பறையர் வீட்டிலே வளர்ந்தான். இவன் திருக்குறள் என்ற பொஸ்தகத்தையும்

ஞானவெட்டியான் கதையையுமுண்டு பண்ணினான். இவன் பாண்டிய ராசாவின் காலத்திலே வேதசாஸ்திர விசாரிப்புக்கும், ஞாயம் விசாரிப்புக்கும் போட்டிருந்த சங்கத்தார் *49* பேரையும் அழித்து அவர்கள் போட்டு உட்கார்ந்திருந்த சங்கப் பலகையையும் அழித்தவன்.'

என்றும் அந்த ஆவணத்தில் எழுதப்பட்டுள்ளது.

### எல்லீசன் கல்வெட்டுக்கள்

சென்னை மாவட்ட ஆட்சியராகவும் பண்டாரத் தலைவராகவும் விளங்கியவர் ஃபிரான்சிஸ் வைட் எல்லீஸ். அவர் நன்கு தமிழையும் வடமொழியையும் கற்ற அறிஞர். மனுதர்ம சாஸ்திரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த அவர் திருக்குறள் அறத்துப்பாலை *1812*-இல் மொழிபெயர்த்தார். அவருடைய மொழிபெயர்ப்பே திருக்குறளில் முதல் ஆங்கில மொழிபெயர்ப்பாகும். அவர் உரையில் *300*-க்கும் மேற்பட்ட தமிழ் நூல்களை மேற்கோள் காட்டியுள்ளார். கிடைக்காமல் அழிந்த வளையாபதியிலிருந்தும் மேற்கோள் காட்டியுள்ளார்.

*1818*-ஆம் ஆண்டு சென்னையில் தண்ணீர்ப்பஞ்சம் வந்தபோது அவர் சென்னையில் *27* கிணறுகள் வெட்டிவைத்தார். அவற்றுள் ஒன்று சென்னை இராயப்பேட்டை பெரிய பாளையத்தம்மன் கோயிலில் உள்ளது. அக்கிணற்றில் எல்லீஸ் திருப்பணி பற்றி ஒரு கல்வெட்டும் உள்ளது.

பாரெலா நிழற்று பரியரிக் குடையோன்
வாரியுஞ் சிறுக வருபடைக் கடலோன்
ஆர்கட லதிர வார்க்கும் கப்பலோன்
மரக்கல வாழ்வில் மற்றொப் பிலாதோன்
தனிப்பெருங் கடற்குத் தானே நாயகன்
தீவுகள் பலவும் திதிபெறப் புரப்போன்
தன்னடி நிழற்குத் தங்குபல் உயிர்க்குத்
தாயினு மினியன் தந்தையிற் சிறந்தோன்
நயநெறி நீங்கா நாட்டார் மொழிகேட்
டுயர் செங் கோலும் வழாமை யுள்ளோன்
மெய்மறை யொழுக்கம் வீடுறா ளிப்போன்
பிரிதன்னிய கருகாத்திய விபானிய மென்று
மும்முடி தரித்து முடிவில் லாத
திக்கனைத் துந்தனிச் சக்கர நடாத்தி
யொருவழிப்பட்ட வொருமை யாளன்
வீரசிங் காதனித்து வீற்றிருந் தருளிய

சோர்சென்னு மரசற்கு *58*ம் ஆண்டில்
காலமும் கருவியும் கருமமும் சூழ்ந்து
வென்றியோடு பெரும்புகழ் மேன்மேற் பெற்ற
கும்பினி யார்கீழ்ப் பட்டகனம் பொருந்திய
யூ.வெலயத் தென்பவ னாண்டவ னாக
சேர சோழ பாண்டி யாத்திரங்
கலிங்க துளுவ கன்னாட கேரளம்
பணிக்கொடு துரைத்தனம் பண்ணும் நாளில்
சயங்கொண்ட தொண்டிய சாணுறு நாடெறும்
ஆழியி லிழைத்த வழகுறு மாமணி
குணகடல் முதலாக் குடகட லளவு
நெடுநிலந் தாழ நிமிர்ந்திடு சென்னப்
பட்டணத் தெல்வீச னென்பவன் யானே
பண்டார காரிய பாரம் சுமக்கையில்
புலவர்கள் பெருமான் மயிலையம் பதியான்
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
திருக்குற டன்னிற் திருவுளம் பற்றி
"இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு"
என்பதின் பொருளை யென்னு னாய்ந்து
ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம்
வருஷம் *1740*க்குச் செல்லாநின்ற
இங்கிலீசு *1818*ம் ஆண்டில்
பிரபவாதி வருஷத்துக்கு மேற்சொல்லா நின்ற
பஹூதான்ய வருஷத்தில் வார திதி
நக்ஷத்திர யோக கணம் பார்த்து
சுபதினத்தி லிதனோ டிருபத் தேழு
துரவுகண்ட புண்யாகவாசநம்
பண்ணுவித்தேன் *1818*

என்பது சென்னைக் கிணற்றுக் கல்வெட்டாகும்.

எல்லீஸ் அலுவலின் பொருட்டு இராமநாதபுரம் சென்றபோது உணவு நஞ்சால் அகாலமரணமடைந்தார். இராமநாதபுரத்தில் உள்ள அவர் சமாதியில்

மிக்கப் புகழ்மணந்து விரிந்து தழைத்து
திக்க னைத்தும் படர்ந்திடு மிங்கிலீசு
குலப்பூங் கொடிக்கொரு கொழுமல ரொப்போன்
கல்வி யறிவிலாக் காரிருள் இரியச்

செல்வச் சங்கச் செழுங்கதிர் விரித்தருளி
எல்லீச னென்னு மியற்பெய ருடையோன்
இத்தே யத்தி லியன்பல சொற்களில்
முத்தமி ழாரியம் முதற்பல கசடறக்
கற்றறிந் தவற்றுள் சுவைபல வுணர்ந்தோன்
புத்தமிழ் தெனத்தமிழ்ப் பொழிதிரு வாக்கினன்
மநுமுத னூல்களின் வழக்குநெறி யனைத்தும்
இனமுறத் தொகுத்திங்கி லீசில் விரித்தோன்
திருவள் ளுவப்பெயர்த் தெய்வஞ் செப்பி
யருள்குற ணூலு ளறப்பா லினுக்குத்
தங்குபல நூலுதா ரணங் டவைப்பெய்
திங்கிலீசு தன்னி லிலங்கமொழி பெயர்த்தோன்
இந்நிலக் குடிமையு மிறைமையு முணரத்
தொன்மை செய்கற் பொறிசொற் செப்பேடு
நன்னராய்ந் தவற்றையு நன்குமொழி பெயர்த்தோன்
புறைசெய் வெற்கடம் புக்கவோர் காலத்
தரசுபுரி சென்னையி லாங்கா கிருபத்தேழ்
கூவல்க ளோடறக் குளமும் தொட்டோன்
இனைய பெருங்குண முடையோன்
தென்திசை யாத்திரை செல்வுழி முகவையில்
சாலிவாகன சகமா யிரத்தெழு நூற்று
நாற்பத் தொன்றி னுக்குக் கிரிஸ்துவின்
ஆயிரத் தெண்ணூற்றுப் பத்தொன்பதா மாண்டில்
ஏய மார்ச்சி லொன்பதினிற் சடிதியில்
அந்தோ நிலமக ளழுதுதலை விரிக்க
அறமுதற் கடவு ளடிப்பெரு நிழல்பெற்
றுறுமினைப் பாறி யுவகையுற் றனனே

என்ற கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[8]

எல்லீசன் பண்டாரத் தலைவராக இருந்த காரணத்தால் திருவள்ளுவர் உருவம் பொறித்த தங்கக் காசுகளை வெளியிட்டார்.[9]

## பொன்சொரிமலைக் கல்வெட்டு

நாமக்கல் மாவட்டம் மல்லூர் அருகில் உள்ள பொன்சொரிமலைச் சமணர் குகையில்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்

என்ற குறட்பா 5 வரிகளில் வெட்டப்பட்டுள்ளது. கி.பி. 15-ஆம் நூற்றாண்டு எழுந்தமையில் அமைந்துள்ளது.[10] வள்ளுவநாடு என்ற நாட்டுப் பிரிவைச் சில கல்வெட்டுக்களில் காணுகிறோம்.

## குறிப்புகள்

1. புலவர் செ. இராசு., **கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் *1991,* பக்.*310-315:* ARE (A) 18 of 1929

2. புலவர் செ. இராசு., **பழனி வரலாற்று ஆவணங்கள்**, தட்டச்சுபடி

3. **கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்** : பக். *272-277;* ARE (A) 1 of 1910

4. **கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்** : பக்.*121-124:* கல்வெட்டு இதழ் *1.* ஆனந்தா, சித்திரை *(14.4.1974)* பக்.*6-9*

5. கு. அருணாசலக் கவுண்டர், **பழைய கோட்டைப் பட்டக்காரர் நாட்டுப் பாடலும், பூர்வ பட்டயமும்,** எஸ்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி *1965* பக்.*17-30;* தி.நா. சுப்பிரமணியம் **தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்,** மூன்றாம் தொகுதி, முதல்பாகம் எண்.*1223;* தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலக எண்.*2949-7*

6. கு. அருணாசலக் கவுண்டர், மேலது, பக். *32-33*

7. வெளியீடு எண்.*76,* இந்நூல் முழுவதிலும் சுமார் *200* இடங்களில் ஆவணத்திற் காணப்படும் பறையன் என்ற சொல்லை நீக்கிக்கோடு போடப்பட்டுள்ளது. அது ஆவணம் பதிப்பிற்கும் முறைக்கு மாறானது.

8. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு.

9. ஐராவதம் மகாதேவன் இ.ஆ.ப. (ஓய்வு) **தினமணி சுடர்** *5.3.1995* அளக்குடி ஆறுமுகம் சீதாராமன், **தமிழகத் தொல்லியல் சான்றுகள்**

10. கண்டு பிடித்தவர் செ. இராசு.

* * *

# 25. ஆவணங்கள் பாதுகாப்பு - ஓர் அறைகூவல்

எம்.எஸ். பாண்டியன்

## முன்னுரை

மேலை நாடுகளில் கண்டுள்ள சில சான்றுகளின் அடிப்படையில் கலையார்வம் மனித இனத்தில் தோன்றி சுமார் 50 ஆயிரம் ஆண்டுகள் ஆகின்றன. அக்கலையார்வத்தின் வெளிப்பாடே நாம் இன்று அனுபவிக்கும் சிலைகள், சிற்பங்கள், ஓவியங்கள், பழம்பெரும் நூல்கள், சுவடிகள் முதலியன. இவைகளை அடிப்படையாகக் கொண்டு மானிட நாகரிக வளர்ச்சியைப் பற்றிப் பல்வேறு கருத்தில் சிந்தித்து வந்துள்ளோம். மேலை நாடுகள் மட்டுமல்ல, கீழை நாடுகளும் இதற்கான வரலாற்றுச் சான்றுகளை நமக்கு அளிக்கத் தவறவில்லை.

## நாகரிக எழுச்சிகள்

எகிப்துக்கு முந்தியது சுமேரியர்கள் நாகரிகம். எகிப்தியர்கள் பானைகளில் வண்ண ஓவியங்கள் தீட்டி இறந்தோரைப் புதைக்கும் சவக்குழிகளில் வைத்துப் பாதுகாத்துள்ளனர். சீனாவில் கி.மு. 2000-ல் ஓவியங்கள் தீட்டியுள்ளனர். இந்தியாவில் அஜந்தா, எல்லோரா குகை ஓவியங்கள் இன்றும் பிரசித்தமானவை. வங்கத்திலும் பீகாரிலும் 11, 12-ஆம் நூற்றாண்டுகளில் ஓவியப் பள்ளியில் (13-17-ஆம் நூற்றாண்டு) ஜெயினர்கள் எழுதிய பனை ஓலைச் சுவடிகள் கிடைத்துள்ளன. இதே மக்கள் கி.பி. 1327-இல் காகிதங்கள் மூலமாக எழுதியுள்ளார்கள். அண்டை நாடான இலங்கையில் இந்தியத் தொடர்புடைய ஓவியங்கள் கிடைத்துள்ளன.

## கிரேக்க ஓவியங்கள்

தவிர, கிரேக்க நாகரிகத்தின் வெளிப்படாக நிர்வாண சிற்பங்கள், இயற்கைச் சூழலை வைத்து வரைந்த ஓவியங்கள் யாவும் வண்ணத்தால் ஆனவை. கிரேக்கத்தில் பிரசித்தி பெற்றது 'மலர்க் குவளை' ஓவியம் சுவர் ஓவியங்களான 'Capture of Troy', 'Decent of Odysseus to Hades' இவைகளைக் கிரேக்க ஞானி அரிஸ்டாட்டில் கண்டு ரசித்ததாகக் கூறுகின்றார்கள். தென் இத்தாலியில் 'Helen of Troy' மோனேலிசா சுவர்

ஓவியங்களும், அங்கே மறுமலர்ச்சிக் காலத்தில் எழுதப்பட்ட சுவர் ஓவியங்கள் யாவும் இன்றும் நம் மனித இனத்தின் நாகரிகத் தொன்மையைக் காட்டவல்லன.

## திரைச்சீலை-கேன்வாஸ் ஓவியம்

டேவிட்காக்ஸ் எழுதிய 'Welsh Funeral' என்ற திரைச்சீலை ஓவியமும், 'Harvest Wagon' என்ற கேன்வாஸ் ஓவியமும் புகழ் பெற்றவை. உலகத்தின் மூன்று மிகப் பெரிய அளவிலான ஓவியங்களில் ஒன்று Paradise (82x33). அது வெனிஸ் நகர மாளிகை ஒன்றில் உள்ளது. இதே பெயரில் 300 பேர்கள் அடங்கிய சுவர் ஓவியம் ஒன்று பாரிஸ் நகரில் உள்ளது. அடுத்து 'The last Judgement' என்ற ஓவியம் 56 அடி உயரமானது. மூனிச் நகர தேவாலயத்தில் உள்ளது.

## நாகரிகமும் மொழியும்

மொழி - மனித ஆற்றலுக்கு ஒரு வடிகால் ஆகும். எத்தனை மொழிகள் - உலகில் தோன்றியும் மறைந்தும் வாழ்ந்தும் உள்ளன. அவைகள் 3000-4000 என்பார்கள். நமது ஆதிமனிதனே மொழியைப் படைத்தவன். அதைக் கல்லிலும் மரத்திலும் முதலில் செதுக்கினான். கி.மு. 800-ல் கவிஞன் ஹோமர் காலத்தில் துணியிலும் மரப்பட்டையிலும் எழுதினார்கள்.

## எழுதுபொருட்கள் கருவிகள் தொடக்கம்

எகிப்தில் காகிதம் செய்வதை முதலில் கண்டனர். பின் சீனாவும் தாளினை உருவாக்கியது. அவர்கள் பருத்தியிலிருந்து காகிதம் செய்தனர். அவர்களிடம் அரேபியர்கள் கற்றுக் கொண்டு பாக்தாத்தில் இதனைத் தொழிலாக நடத்தினர். (கி.பி.795) கிருத்துவ பாதிரிகள் மூலம் மேற்கு ஐரோப்பாவிற்குக் காகித உற்பத்தி பரவியது. கி.பி. 1290-இல் காகித தொழிற்கூடம் ஒன்று சொ்மனியில் உருவானது. இங்கிலாந்தில் கி.பி.1494-இல் கைவினைக் காகிதம் செய்தனர். கி.பி.1760-இல் மரக் கூழால் காகிதம் செய்யும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. தற்காலத்தில் 1798-இல் காகிதம் செய்ய இயந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

## எழுத்தில் புதுமை - புத்தக ஆக்கம்

ரோமானியப் பேரரசில் அடிமைகளைக் கொண்டு ஏராளமான புத்தகங்களை கையால் எழுதி வெளியிட்டனர். அலெக்ஸாண்டிரியாவில் ஒரு நூலகத்தில் 4 இலட்சம் ஏட்டுச் சுவடிகள் இருந்துள்ளன. 5-ம் நூற்றாண்டில் ரோம் நகரம் புத்தகச் சந்தைக்குப் பெயர் பெற்றிருந்தது. சீன இலக்கியங்களை, கி.மு. 175-இல் மரப்பட்டைகளில் எழுதினார்கள். டச்சுக்காரர்கள் மரத்தில் பிளாக் புக்ஸ் என்று தயாரித்தார்கள். தற்கால உலோக அச்சுக்கள் கூடன்பர்க்

என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டன. வில்லியம் காக்ஸ்டனின் முதல் அச்சுப்படிகள் இன்றும் இலண்டன் ஆவணக் காப்பகத்தில் உள்ளன. *(13121476).*

## பைபிளும் கொரானும்

ஒரு இலட்சம் டாலர் விலை கொடுத்து வாங்கப்பட்ட 'New Testament' என்ற புத்தகம் பிரிட்டீஸ் மியூசியத்தில் இன்றும் உள்ளது *(1933).* கையினால் எழுதப்பட்ட கொரான் நூல் பெர்சிய மன்னனுக்குப் பரிசாக வழங்கப்பட்டது. இன்று அதன் விலை மதிப்பு கணக்கிட முடியாது. ஏன்? அது *398* ரத்தினக் கற்கள், *167* முத்துக்கள், *132* கோமேதக கற்கள், *109* வைரக் கற்கள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. சுவீடனில் உப்சலா பல்கலையில் உள்ள Silver Corex என்ற நூல் சவ்வினால் ஆகிய தாளில் வெள்ளி உலோகத்தினால் எழுதப்பட்டுள்ளது.

## சீனமொழி அகராதி

கி.பி. *1600*-இல் அச்சிடப்பட்டுள்ள *5020* தொகுதிகள் கொண்ட சீன மொழி அகராதி, உலகிலேயே அதிகப் பருமனானது இதுவே வியன்னாவின் உலகின் மிகப் பெரிய 'Anatomical Atlas' *(744/5* உயரம் *352/5* அகலம்*)* இன்றும் உள்ளது.

## நூலகங்களும் ஆவணக் காப்பகங்களும்

முதன் முதலாக நூலகங்கள் கோவில்களிலும் ஆவணக் காப்பகங்களிலுமே ஏற்பட்டன. முதல் நூலகம் *1900*-ல் நினிவே என்ற இடத்தில் ஆஸ்திரியா மன்னன் சர்தான பாலஸ் என்பாரால் நிறுவப்பட்டது. பிறகு கி.மு. *1500*-இல் எகிப்தில் நூலகம் ஏற்பட்டது. ரோமானிய தளபதி அண்டனி கிளியோ பாத்ராவிற்கு இரண்டு இலட்சம் புத்தகங்களை ஆசிய மைனர் முதலிய நாடுகளின் அரசர்களிடமிருந்து பெற்று வழங்கியதாகத் தெரிகிறது.

## பிரிட்டிஷ் ரோமானிய நூலகங்கள்

ரோம் நகரத்தில் கி.மு. *63*-இல் பொது நூலகம் உருவானது. வெனிஸ் நகரில் புகழ் பெற்ற கவிஞன் ஒருவன் கி.பி*1362*-இல் நூலகம் ஒன்றை நிறுவினான். வாடிகன் நூலகம் கி.பி. *1449*-இல் உருவானது. பிரிட்டிஷ் மியூசியம் நூலகம் கி.பி.*1753*-இல் ஏற்பட்டது. இங்கே *50* இலட்சம் புத்தகங்களும், *2* இலட்சம் சுவடிகளும் உள்ளன. அமெரிக்க காங்கிரஸ் நூலகத்தில் *50* இலட்சம் முதல் *60* இலட்சம் வரை புத்தகங்கள் உள்ளன. பாரிஸ் தேசிய நூலகத்தில் *45* இலட்சம் புத்தகங்களும் *5* இலட்சம் கையெழுத்துப் பிரதிகளும் உள்ளன.

## செய்தித்தாள்-லத்தீன் மொழி

உலகின் முதல் செய்தித்தாள் 'பீகிங் நியூஸ்' ஆகும். இதன் வயது *1700* வருடங்கள் முந்தியது. மேலை நாடுகளில் லத்தீன் மொழியில் பத்திரிகைகள் வெளியாயின. சீசரது காலம் முதல் வெளிவருகின்றன. முதல் ஆங்கில செய்தித்தாள் 'Weekly News' கி.பி.*1622*-இல் வெளியானது. "Bostan News Letter" கி.பி.*1704*-இல் அமெரிக்காவிலிருந்து வெளிவருகின்றது.

## காஷ்மீர் நூலகம்

இந்தியாவில் காஷ்மீரில் மிகப்பெரிய நூலகம் இருந்துள்ளது. இதில் வடமொழி நூல்கள் ஏராளமாக இருந்துள்ளன. இங்கே தான் சித்தர்போகர் தங்கி வடமொழி வித்தகரானார் எனத் தெரிகிறது.

## நமது பண்பாட்டுக் கலைச் செல்வங்கள்

தங்கம், வெள்ளியினும் மேலாகக் கருதி மனித இனம் தனது பாரம்பரியச் சொத்தாக மதித்து வரக் கூடியவை, மேலே கூறப்பட்ட 'கலைப் பொக்கிஷங்களே' ஆனால் இவைகள் காலப் போக்கில் (Aging) அழிந்தும் மறைந்தும் போகும் இயல்பின. பண்டைய நாகரிகத்தின் சின்னங்களான அவைகள் அழிந்து போனால் அல்லது காணாமல் போகுமானால் மனித இனம் தனது வரலாற்றை இழந்து விட்டதாகவே கருத வேண்டிய நிலை வரும். எனவே இத்தகைய மூல ஆதாரங்கள் அழிவுறாமல் பாதுகாத்தே ஆக வேண்டும்.

## கலாசாரப் பீடங்கள்

இத்தகைய கலைகள் வாழும் இருப்பிடங்கள் - அல்லது பீடங்கள் எவை? அரும் பொருட்காட்சியகங்கள்; நூலகங்கள் ஆவணக் காப்பகங்கள்; இவைகளே. இவைகளைக் காப்பாற்ற வேண்டிய கவலையும் நமக்கு ஏற்பட்டுள்ளது என்பது முற்றிலும் உண்மையே! எனவே இத்தகைய பொக்கிஷங்கள் வைத்துள்ள இடங்கள் நல்ல கட்டிட அமைப்பாக இருக்க வேண்டும். அவற்றிற்கேற்றாற் போன்ற இடங்களைத் தேர்வு செய்து நூலகம் முதலியன அமைக்க வேண்டும். போதிய காற்றும், வெளிச்சமும் கொண்ட அறைகளில் இத்தகைய கலைச் செல்வங்கள் வைத்துக் காக்கப்பட வேண்டும். ஆயினும், மேற்கூறிய ஆவணக் காப்பகங்கள் நூலகங்கள் அரும் பொருட்காட்சியகங்களில் வைக்கப்பெற்றுள்ள சுவடிகள், புத்தகங்கள், ஏனைய கலைப் பொருட்கள் யாவும் ஒளியினாலும் சூழ்நிலைகளினாலும் கெட்டுப் போகின்றன.

## கலைப் பொருட்களின் இயல்புகள்

இந்தக் கலைப் பொருட்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று Organic என்பது. இது உயிர்க் கூறு பெற்றவை என்று அழைக்கப்பெறும். மற்றது Inorganic என்பது. இது உயிர்க் கூறற்றது என்று அழைக்கப்பெறும். உயிர்க் கூறான பொருள்களில் அதாவது பருத்தி, மரம், தோல், சில்க், டைஸ் ஆகியவற்றின் மூலம் தயாரிக்கப்பட்டவை. உயிர்க் கூறில்லாத பொருட்கள் அதாவது கல், கனிமங்கள், மண்ணினால் செய்யப்பட்டவையாகும். இவைகள் எளிதில் பாதிக்கப்படுவதில்லை. ஆனால் முன்னது வெகு எளிதில் பாதிக்கப்படுவன.

## வஸ்துகளும் தட்பவெப்ப நிலையும்

(மேற்கண்ட இருவகைத் தன்மைகள் கொண்ட கலைப்பொருட்களும், அருங்காட்சியக, ஆவணக் காப்பக நூலக வஸ்த்துக்களும் அதிகமான ஒளியினாலும் அதிகமான ஈரத்தினாலும் பாதிக்கப்படுகின்றன). எங்கெங்கே அதிகச் சூடும் அதிக ஈரமும் ஏற்பட வாய்ப்புள்ளதோ அவ்விடங்களில் கிருமிகள் பிரச்சனைகள் எழுகின்றன. எனவே தட்ப வெப்ப சூழ்நிலைகளால் ஏற்படும் மாறுதல்களையொட்டி அவற்றைப் பாதுகாப்புச் செய்ய தனிக் கவனமும் முயற்சியும் தேவைப்படுகிறது.

## கிருமிகளின் தோற்றம்

வருமுன் காப்பதே சிறப்பு என்ற மரபுவழிக் கூற்றிற்கேற்ப முதலில் கிருமிகளை வரவொட்டாமல் செய்ய இயலுமா என்பதை ஆராய வேண்டும். கடும் மழை, கடும் குளிர், கடும் வெயில் இவைகள் இயற்கைச் சூழலால் ஏற்படுகின்றன. எனவே இவைகளை நாம் தடுத்து விட இயலாது. எனினும் தற்கால புதிய கண்டுபிடிப்புகளின் வாயிலாக பின்பாவது அழிக்க முடியுமா என்று ஆராய வேண்டும். மிகுந்த ஒளி உஷ்ணமானது. ஒரு தாளிலோ அல்லது சிற்பத்திலோ அல்லது ஓவியத்திலோ உள்ள வண்ணத்தை மட்டுமல்ல. அதன் உறுதியையும் குலைத்து விடுகிறது. துணிச்சீலை கேன்வஸையும், ஆற்றலிழைக்கவும் வர்ணப்பூச்சை அழிவுறவும் செய்து விடுகின்றது.

சூடும் ஈரமும்

இதே கலைப்பொருட்கள் ஈரத்தை உட்கொள்வதால் அவைகள் சேதமுறுகின்றன கலைப்பொருளின் அளவு, வடிவம் அல்லது உரு மாறுகின்றன. உதாரணமாகக் காகிதம் வறட்சியான காலங்களில் மடிந்து விடுகின்றது. பனை ஓலைச் சுவடிகள் ஒடிகின்றன. மழைக் காலங்களில் புழுப் பூச்சிகள் நுண்ணுயிர்க் கிருமிகள் அதிகமாகப் பெருகி விடுகின்றன. மரத்தாலான

கலைப் பொருட்கள் உருமாறுதலும், உருச் சிதைவதும் கீறல் ஏற்படுவதும் சாதாரணமாக நிகழ்கின்றன.

## ஒளியின் ஆற்றலும் பாதிப்பும்

ஒளியின் ஆற்றலை நாம் முதலில் அறிய வேண்டியது மிக அவசியம். இது மின்காந்த இயல்பும் - ஆற்றலும் கொண்டது. ஒளி ஆற்றலில், ஒளி, சூடு விசை யாவும் உள்ளன. அதன் ஆற்றலை அழித்துவிட முடியாது. இதன் ஆற்றல் வெப்ப அலை பரவும் தன்மை கொண்டது. அது கண்ணுக்குத் தெரிவது, தெரியாதது என்று இருவகைப்படும். ஒளியில் உள்ள Ultra வயலட் Violet Regions இவைகள் பொருட்களில் படுமோசமான இரசாயன மாற்றத்தைத் தந்து பழுதடையவும் செய்கிறது. உஷ்ண நிலை கூடினால் அதற்கேற்றவாறு இரசாயன மாற்றமும் ஏற்படுகிறது. எனவே நூலகத்தில் உள்ள பொருட்கள் மீது ஒளி பாய்வது கீழ்க்கண்டவைகளைப் பொறுத்து அமைகின்றது.

1. ஒளியின் தீவிரம்
2. ஒளிபடும் காலம்
3. புறஊதா ஒளியின் முன்னிலையில்

இதனால் ஏற்படும் பாதிப்புப் பொருளின் மசிவியலைப் பொறுத்தம், ஒளியின் தன்மைக்கிணங்க அவை நீட்சியையும் பொறுத்தேயாகும். சில தனித்த காரணங்களும் உண்டு.

## வெளிச்சத்தைக் கட்டுப்பாட்டில் வைத்தல்

ஆவணக்காப்பகம் அருங்காட்சியகம் நூலகம் இங்கெல்லாம் வெளிச்சத்தைக் கட்டுப்படுத்த வேண்டிய ஒரு முக்கிய செயலாகும். எளிதில் மசியக் கூடிய தன்மை பெற்ற பொருட்கள் வைக்கப்பட்ட அறையோ அல்லது பொருட்காட்சி வைத்துள்ள இடங்களோ நூலக அறையோ இதில் அடங்கும். இதன் பொருட்டு மூன்று முன் நடவடிக்கைகள் தேவை.

1. பொருள் மீது வெளிச்சம்படுவதை வேண்டிய அளவு குறைக்க வேண்டும்.
2. குறிப்பிட்ட அளவு நேரமே பொருட்களை வெயில் படுமாறு வைக்க வேண்டும்.
3. கதிரியக்கத்தினால் இரசாயன மாற்றங்கள் வெகு துரிதமாக செயல்படுவதால் புகைப்படங்களை வெளிச்சத்திலிருந்து நீக்கி விட வேண்டும்.

மேலும் வெவ்வேறு வகைப்பட்ட பொருட்களுக்கும் வெளிச்சத்தின் அதிக அளவு மற்றும் குறைந்த அளவு தேவை என்ன என்பதை முதலில் கண்டு கொள்ள வேண்டும். இதனால் முன்கூட்டியே அதிகமாக வெளிச்சம் ஊடுருவுவதைக் கட்டுப்படுத்த முடியும்.

வெளிச்சம் போன்றே ஈரமும் அழிவில் பங்கு வகிக்கின்றது. குறிப்பாகப் புத்தகங்கள் ஈரத்தால் கெட்டுப் போகின்றன. அதிக தொடர்பான (R.H) ஈரம் குறித்த மாற்றத்தினை உண்டு பண்ணுகின்றது. இச் சூழ்நிலையில்தான் அழுக்கடையும், வளையும், எழுதும் மை கூட அழிந்துவிடும். தொடர்பான ஈரத்தன்மை (R.H) உயரும் போது பலகை அல்லது தாள் அதன் உருவு பெறுகின்றது. அதே நேரம் வண்ணம் பூசியதும் தெரிவதில்லை. சிம்புசிம்பாக வண்ணம் பிளந்து விடுகிறது. அதிக ஈரத்தால் புழுக்கள், காளான், நுண்ணுயிர்க் கிருமிகள் உருவாகவும் காரணமாகிறது. ஒட்டும் பசைக் கூடப் பயனற்றதாகக் கெடுத்து விடுகிறது.

**பரிகாரம்**

தட்ப வெப்ப நிலையைக் கட்டுப்படுத்துவதற்கு நூலகம் மற்றும் ஆவண அறைகளையும் குளிர்ச்சாதனப் படுத்த வேண்டும். இதுவே, தூசு, மாசுபடுதலைத் தவிர்க்கிறது. சில இடங்களில் இந்தக் குளிர்ச் சாதனம் பயன்படாது. இதனால் அதிகச் செலவும் ஆகும். எப்போதும் இதனைப் பயன்படுத்த வேண்டிய நிலையில் அலுவலக வேலை நேரங்களில் மட்டும் பயன்படுத்தினால் அபாயமானது. ஏனெனில் குளிர் சாதன வசதி இரவுக்கும் பகலுக்கும் அதிக ஏற்ற இறக்கத்தை உண்டு பண்ணும். கட்டிடம் முழுவதிலும் ஏ.சி. வைக்க இயலாது எனவே குறிப்பிட்ட ஓர் இடத்தை மட்டும் தேர்வு செய்ய வேண்டிய நிலையும் உருவாகின்றது.

**காகிதமும் சில உண்மைகளும்**

ஆர்கானிக் என்று வழங்கப்படும் உயிர்க் கூறுள்ள சாதனமான காகிதத்தை இன்று நாம் பல வகையிலும் உபயோகித்து வருகிறோம். அதுவே புத்தகங்கள் உருவாகச் சாதனங்களாகவும், கையெழுத்துப் பிரதிகள் தயாரிக்கவும், தட்டச்சிடவும் அச்சுப் பொருளாகவும் இருந்து வருகிறது.

அமெரிக்காவில் அந்நாட்டுச் சூழ்நிலையை அனுசரித்துக் காகிதம் உற்பத்தியாகின்றது. அதில் *50%* காரத்தன்மை ஏற்றி சுமார் *100* ஆண்டுகள் காகிதம் நிலைத்திருக்குமாறு உற்பத்தி செய்கிறார்கள். நம் நாட்டில் கைவினைத்தாள்களும் எந்திரத்திலும் காகிதங்கள் செய்யப்படுகின்றன. அவைகள் தரத்தில் சுமார்தான். நமக்குக் கிடைக்கும் செய்தித்தாள் ஓர் ஆண்டுக்குள் கெட்டுப் போகும் தன்மை கொண்டவை. ஆயுள் கெட்டியாக

உள்ளவாறு காகித உற்பத்தி செய்து பயன்படுத்த வேண்டும். அரசு உருவாக்கும் ஆவணங்களுக்கு இத்தகைய காகிதங்கள் அவசியம். ஏனெனில் அரசினால் தயாரிக்கப்படும் ஆவணங்களே பொது, அதாவது 'Public Records' ஆகின்றன. இவைகளே பின்னால் வரலாற்று மூலங்களாகின்றன.

## நுண்ணுயிர் பூச்சி, புழுக்கள், காளான் முதலிய எதிரிகள்

பெரும் மழை வெள்ளம் வந்து தணிந்த பிறகு நுண்ணுயிர்கள் உற்பத்தியாகின்றன. புதிதாகத் தோன்றும் நகரங்கள் தொழிற்கூடங்களில் நடக்கும் தொழில் காரணமாக உருவாகும் இரசாயன பொருட்கள், எண்ணெய்ப் பசை கலந்த கழிவுப் பொருட்களின் மூலமாகத் தோன்றும் உயிர் அணுக்கள் யாவும் சூழ்நிலைக் கேற்ப அவைகள் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டு வேகமான வளர்ச்சியுடன் அதிக அளவு உற்பத்தியாகி அவைகள் வெள்ளத்தால் ஏற்படும் தண்ணீருடன் கலந்து வந்து அழிவுகளை ஏற்படுத்துகின்றன.

காளான்கள் மட்டும் தவிர்க்க முடியாத வழக்கத்துக்கு மாறாக மண்ணில் பெருவாரியாக உருவாகின்றன. அவைகள் பலவகைப் புளிப்புகளின் கூட்டாக மாறி உயிர் வாழ்க்கைச் சூழலை மாற்றியமைத்துக் கொண்டு இனப் பெருக்கம் செய்து, தாளை அழிப்பதில் முன்னிலை வகிக்கின்றன.

ஆக்டினோமைடைஸ் என்ற நுண்ணுயிர்களும் காளான்களைப் போலத் தாளில் இனப் பெருக்கம் செய்கின்றன. எதிர்பாராத வகையில் கழிவுப் பொருட்களைப் பயன்படுத்திக் கொண்டு தாமே கலப்பினத் தன்மையால் கூடிக் கொள்கின்றன. நுண்ணுயிர்களின் மூலக் கருவான காற்று, வெளிச்சம் இவற்றால் அவை தாளின் மேற்பகுதியில் எப்போதும் படிந்தேயுள்ளன. உரிய ஈரத்தன்மை அடைந்ததும் *25-30* சென்டிகிரேடில் (சூட்டில்) வளர்ச்சி அடையத் தொடங்குகின்றன.

## அமெரிக்க அருங்காட்சியக ஆய்வுகள்

அமெரிக்க நூலக அருங்காட்சியகத்தை ஆய்வு செய்தபோது அங்கிருந்த கையெழுத்துப் பிரதிகளில் *17* வகைத் தாவர உயிரியலைச் சேர்ந்த காளான்கள் இருந்த தென்றும் இதற்குக் காற்றே மூலகாரணமாகவும் கண்டறிந்தார்கள். நாட்களை அழிப்பதில் பலகிருமிகள் முக்கிய பங்கேற்பதில்லை எனினும் அவைகள் அதிக அளவில் தாளில் உருவாகின்றன. இவைகளில் குறிப்பிடத்தக்கவை.

*1.* மியு வோரல்ஸ்

*2.* மோனலிசா சிடோபிலா

*3.* பெண்சிலினி வகையறாக்கள் (அசிமிட்ரிகா)

இந்தக் காளான்கள் புத்தகங்கள் மீது இயற்கையாக விழும் ஒளியினாலும் பெருமளவில் சுற்றுப்புறக் காற்றின் மூலமாகவும் அதிகமாகப் பரவுகின்றன என்று கூறுகிறார்கள்.

## இந்திய நூலக ஆய்வுகள்

*1976*-இல் இந்தியாவில் முதன் முறையாகக் காற்றில் கலந்து மிதக்கும் நுண்ணுயிர்கள் பற்றி நூலகங்களின் உள்ளறைகளில் ஆய்வு நடத்தப்பட்டது. அஸ்பெர்ஜிலிலிஸ், தோருலா, பென்சிலியம், ட்ரைசேசா, டெர்மா, சிட்டோமியம் என்ற கருமூலங்கள் அங்கே இருப்பது கண்டறியப்பட்டது.

இத்தகைய நுண்ணுயிர்கள், நூலகங்கள் அரும்பொருட் காட்சியகங்கள், ஆவணக்காப்பகங்களில் மிகுந்த அளவில் அழிவு செய்கின்றன. உயிர்ப் பொருட் கூறு பெற்ற (Organic) பொருட்களில் இவைகள் தங்கி அவைகளில் மரம், தாள், பட்டு கம்பளி, மயிர், இறகு, தோல் ஆகியவை கலந்த பொருட்களை உணவாகச் சாப்பிடுகின்றன. இவைகளில் முக்கியமானவை கரப்பான், வெள்ளிப்பூச்சி, விட்டில்பூச்சி, கம்பளிப் பூச்சி, புத்தகப் புழு, வெள்ளை எறும்பு, கரையான் முதலியன.

## நாசத்தை தடுப்பது சிலமுறைகள்

இத்தகைய நாசகாரிகள் அணுகாமல் பாதுகாக்க, கீழ்க்கண்ட முறைகளை நாம் கையாள வேண்டும். நமது பீடங்களில்

1. சூட்டைத் தணிக்க வேண்டும் (Keep the Temperature low)
2. ஈரப்பதத்தையும் குறைக்க வேண்டும் (Keep the Humidity low)
3. தட்ப வெட்ப நிலையில் உள்ள வேறுபாட்டைக் குறைக்க வேண்டும் (Keep Variation in Temperature and humidity small)
4. சூழ்நிலையைபும் பொருளையும் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் (Keep the Environment and Objects Clean)

இந்த நெறிமுறைகளை நம்மால் கையாள முடியாமல் அரும்பொருட்கள் நாசமாகுமானால் வேதியியல் முறையில் கீழ்க்கண்ட முறைகளால் நாசத்தைக் கட்டுப்படுத்தலாம். பியூமி கேஸன் (Fumigation) அதாவது இரசாயனப் புகையூட்டுதல் முறையில் சில வாயுக்கள் மூலமாக இக்கிருமிகளை ஒழிக்கலாம்.

## வாக்வோம் பியூமிகேசன் (Vaccum Fumigation)

சதுர அல்ல செவ்வக வடிவ அறைக்குள் உள்ள காற்றை நீக்கி விட்டு, வெற்றிடத்தை ஏற்படுத்தி, விச வாயுவை உள்ளே செலுத்தி, உள்ளே உள்ள அரும்கலைப் பொருட்களில் பற்றியுள்ள பூச்சி, புழுக்களை அழிக்கலாம். (It has special type of inlet and venting system) முக்கிய புகைப் பொருட்களாவன மெதில் புரோமைட், எத்திலின், ஆக்ஸைடு, கார்பன் டை அல் பைட், கார்பன் டெட்ரா குளோரைடு ஆகியன. புத்தக அலமாரிகளில் அல்லது காட்சி அரங்குகளில் கற்பூரம், கந்தக கலப்பில்லாத இரச கற்பூர உருண்டைகளை வைக்கலாம். மியூசியம் நூலகங்களில் பாராடை குளோரோ பென்ஸன் பயன்படுத்தலாம். எறும்புகளைக் கொல்ல *10%* போரிக் ஆசிட்டில் பேராக்ஸ் கலந்து வைத்தால் அவைகள் அழிகின்றன. பூச்சிக் கொல்லி கலவையை *(1%* ஆர்த்தோ பெனால் பெனால் *4%* பாராடை குளோரோ பென்ஸன் இவைகளை எரிசாராயத்தில் கலந்து*)* பூச்சி அழிப்பான் தாளில் தோய்த்து காகித மூலங்கள், ஓலைச் சுவடிகள் அவைப் பொருட்களின் ஊடே வைத்துப் பாதுகாக்கலாம். காளான்கள் எப்போதும் *10*$^{\circ}$C - *60*$^{\circ}$C வெப்பத்தை தாங்குவன. அதற்கு வேண்டிய *25*$^{\circ}$C - *30*$^{\circ}$C சூடு இவ்வளவே - அதன் வளர்ச்சிக்கு ஈரம் *55%*லிருந்து *100%* வரை தேவையாகும். *70%*க்கு மேல் மிகத் துரித வளர்ச்சியடையும்.

எனினும் *55%* ஈரத்தில் அவை வளராது. இதற்குக் காளான் கொல்லியைப் பயன்படுத்த வேண்டும். அவைகளை நேரடியாகப் பொருளில் பீச்ச வேண்டும். அவைகளுக்குக் கீழ்க்கண்ட குணமிருக்க வேண்டும்.

1. இம்மருந்து எளிதில் விரைவில் ஆவியாகக் கூடாது.
2. அழுக்கடையக் கூடாது.
3. நிறமற்றதாக இருக்க வேண்டும்.
4. சிறிதளவே உபயோகித்தாலும் அது வீரியமுடையதாக இருக்க வேண்டும்.
5. மனிதர்களுக்கு அதனால் தீங்கு வரக்கூடாது.
6. இதனால் பொருளின் சுவையழகு பாதிக்கக் கூடாது.

இரசாயனப் புகை மூலம் பொருட்களில் கிருமி தொற்றிக் கொள்வதைத் தடை செய்யலாம். அதாவது எரி சாராயத்தில் *10%* தைமால் கலந்து தூவலாம். தண்ணீரில் *40%* பார்மல் டிஹைட் கலந்தும் தூவலாம்.

ஆனால் தோல், ஜவ்வு போன்ற புரோட்டீன் கலந்துள்ள பொருட்கள் மீது சிதறக்கூடாது. தாள் ஆவணங்களிலிருந்து காளான்களை மீட்பதற்கு

| | | |
|---|---|---|
| *1.* தைமால் | *5%* | *(எரிசாராயத்தில்)* |
| *2.* பென்டா குளோரா பெனிகல் | *.05%* | *(எரிசாராயத்தில்)* |
| *3.* மெர்குரி குளோரைடு | *.05%* | *(தண்ணீரில் அல்லது சாராயத்தில்)* |
| *4.* ஆர்த்தோ பினாயில் | *.05%* | *(எரிசாராயத்தில்)* |
| *5.* மெதில் அம்மோனியம் பிராயிப் | *5%* | *(சாராயத்தில்)* |

இக்கலவையைத் தெளிக்கலாம்.

**சில புதிய அணுகுமுறைகள்**

பல அரிய புத்தகங்கள், தாள் மூலங்களை, ஓலைச் சுவடிகளை, பிர்ச் பார்க் சுவடிகள் (பிரம்பு பட்டை) இவைகளை, சூழ்நிலைகளிலிருந்து காப்பாற்ற வேண்டும். அதாவது இவைகள் வைப்பறைகளில், காட்சியகங்களில், ஆராய்ச்சிக் கூடங்களில் வைத்திருக்கும் போது பழுதடைதல் (Damage), நாசவேலை (Vadalism) செய்வதால் இழத்தல், திருடிச் செல்லுதல் போன்ற பிற கெடுதல்களையும் நாம் சமாளிக்க வேண்டும். நெருப்பினால் அழிதல் (Fire) இதற்கு நெருப்பணைக்கும் கருவிகள் உடன் வைத்திருக்க வேண்டும். நல்ல முறையில் ஏடுகள் கையாளப்பட வேண்டும் பழுதடைந்த ஆவணங்களை (Acid Free tissue of Box) இவைகளில் வைத்துக் காப்பாற்ற வேண்டும். நூலகர்கள் நன்கு பயிற்சி பெற்றவர்களாக இருக்க வேண்டும். திருடிச் செல்பவர்கள் தண்டிக்கப்பட வேண்டும். அதற்கு காவல் ஆள் வைக்க வேண்டும். தவிர ஆவணக்காப்பகங்களும் நூலகங்களும் வாசகர்களிடம் பிணைத் தொகை கட்டும் நிபந்தனைகளை அறிமுகப்படுத்தலாம்.

**21-ம் நூற்றாண்டில் நமது அணுகுமுறை**

முற்காலத்தில் நாம் எழுதிய காகிதங்களை விடத் தற்கால காகிதங்கள் மோசமானவை. எனினும் எழுதப்படும் காகிதங்கள் தரம் வாய்ந்தவையாக இருக்க வேண்டும். நம்மிடம், கையால் மரபுப் பூர்வமாக எழுதப்பட்ட ஆவணங்கள் தட்டச்சிட்டவை, அச்சிட்டவை என்று ஏராளம் உள்ளன. ஆயினும் வருங்கால ஆவணங்கள் யாவும் மைக்ரோபிலிம் போட்டோக்கள், வீடியோ ஆடியோ டேப்ஸ் மற்றும் கணினியில் உருவாக்கப்பட்டவைகளாக இருக்க வேண்டும். இத்தகைய பணிக்கு வருவோர்

தம்மை மாற்றிக் கொள்ள வேண்டும். பழைய நெறிமுறைகளிலேயே இருந்து விடக்கூடாது. நவீன காலத் தொழில் நுட்பங்களை உலகத்தின் எங்கிருந்தாலும் அவைகளைத் தெரிந்து கொண்டு அதற்கேற்ப ஊக்கமாகச் செயல்பட வேண்டும். மேன்மேலும் அறிவைப் பெருக்கிக் கொண்டு, புதிய நூற்றாண்டுக்கு ஏற்றவாறு நம்மைத் தயாரித்துக் கொள்ள வேண்டும். எதிர்வரும் அறை கூவலைச் சமாளிக்க வேண்டும்.

மேலை நாடுகளில் பெரிய நூலகங்கள் யாவும் தங்களுக்குப் 'பாதுகாப்பு ஆய்வுக் கூடங்கள்' (preservation Labs) வைத்துள்ளன. அதைப் போன்றே இங்கும் அவ்வித வாய்ப்புகளை ஏற்படுத்த வேண்டும்.

பீட்டர்ஸ் வாட்டர்ஸ் என்ற அமெரிக்கர் கூறுவதைக் கேளுங்கள்:

The enormous complexitier of modern preservation problems cannot be solved unless librarians take the responsibilities of ensuring that their collections are receiving the best possible attention. One solution to this is to employ a conservator preferably scholoars with a broad knowledge of librarianship mathematics, chemistry and physics. The History and Culture and of book technology who also has a solid physical training in restoration. He should either be responsible for or be part of a preservation department which would control every thing concerned with preservation.

இந்திய அரசியலமைப்புச் சட்டமே, கலைச் சாதனங்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கிறது. *(விதி-49)* அதன் சுருக்கம்:

"It shall be obligation of the State to protect every monument or place or subject of articles or Historical interest declared by or under law made by parliament to be of national importance from spoilation disfigurement destruction, removal, disposal in export as the case may be"

எனவே, ஒவ்வொரு மாநிலமும் தங்களிடம் உள்ள அரும் பொருட்காட்சியகங்கள், நூலகங்கள், ஆவணக் காப்பகங்கள் போன்றவற்றை அரசியலமைப்பு விதிகளின் படி சிறப்பான முறையில் பாதுகாக்க வேண்டும். இதற்குத் திட்டக் குழுவும், பல்கலைக் கழக மான்யக் குழுவும் உதவி வருகின்றனர். இந்திய அரசின் *1956*-ம் ஆண்டு Centrally Controlled Monument and Museums சட்டமும் *1972*-ஆம் ஆண்டு Antiquities சட்டமும் *1998*-ஆம் ஆண்டு தேசிய ஆவணக் காப்பகச் சட்டமும் இந்திய

அரசியலமைப்பு விதியில் கண்ட ஷரத்துக்களின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை**

பொதுவாக, பல அமைப்புகள் மூலமாக நமது கலைச் சொத்துக்களைப் பராமரித்து வருகின்றோம். நமக்குக் கடந்த காலம் என்று ஒன்று இருந்ததை அவைகளே மெய்ப்பிக்கும் சாட்சியங்களாகும். இதை முன் கூட்டியே உணர்ந்த அறிஞன் ஒருவன், வடமொழியாகிய சமஸ்கிருதத்தில் எழுதிய கருத்து:-

"A manuscript should be decked like one's own beloved child, be guarded from another's hand like one's virtue wife, be treated like an injured limb one's body, be looked up everday like a good friend, be tied up strong thread like a prisoner, be always thought of like the name of Hari. Then only the manuscript does not perish as the elder's said" எத்தகைய பொன்மொழி என்பதைக் காட்டாட்சியர்கள் உணர்ந்து செயல்பட வேண்டும்.

இவைகளைப் பாதுகாப்பத்தில் அரசுகளுடன் தற்கால அமைப்புகள் தங்கள் உதவிக்கரம் நீட்டித்து நூல்களையும் ஆவணங்களையும் தத்து எடுத்துக் கொண்டால், எத்தகைய அழிவிலிருந்தும் அவைகளைப் பாதுகாத்துக் கொள்ள தகுந்த அரண் கிடைத்து விட்டது போல் இருக்கும்.

வாழ்க நமது கலையும் பண்பாடும்!

**இணைப்பு - அ**

**காளான்களால் பாதிப்புக்குள்ளான ஒரு சில நூலகங்கள் ஆவணங்கள்**

**தொகுப்பு**

*1.* *1924*-இல் கொலம்பியாவிலுள்ள நேவா நதியில் வெள்ளம் ஏற்பட்டு வடிந்த பிறகு *62000* புத்தகங்கள் அழிந்தன. அங்குப் பலவகை காளான்கள் உருவாயின.

*2.* *1966*-இல் டாஸ்கேனில் கடுமையான வெள்ள அழிவிற்குப் பிறகு *30*க்கும் மேற்பட்ட நூலகங்கள், ஆவணக் காப்பகங்கள் காளான்களினால் மிகுந்த அளவு பாதிக்கப்பட்டன. லிஸ்பனில் *1967*-இல் காலொஸ்ட் குல்பன் கெய்சைச் சேர்ந்த பல மதிப்பு வாய்ந்த கையெழுத்துப் பிரதிகள் கெட்டுப் போயின. இதே போல் அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, போலந்து நாடுகளில் உள்ள நூலகங்கள், ஆவணக் காப்பகங்கள் மற்றும் அருங்காட்சியகங்களிலும் அழிவு ஏற்பட்டன.

3. இந்தியாவில் புனா நகரில் ஏற்பட்ட வெள்ளச் சேதத்திற்குப் பிறகு அங்கே தாள்களின் நுண்ணுயிர்க் கிருமிகள் தாக்கியதாகத் தெரிகிறது.

## Note of References


1. The Article on, Paper its nature and Techniques - By Avinasi Lal.
2. The Article on, 'Effect and control of light and environmental factors' - by Mamta Misra.
3. The Article on, 'Effect and cause of Fungus' - By Nismisha Pathak
4. The Article on, 'Effect and cannot of Insects' - By Nismisha Pathak
5. The Article on, 'Storage of Library materials and care in their Handling - A.S. Bisht
6. The Article on, 'Preservation of manuscript and rare books with special reference to the Aligarh Muslim University Library - L.A. Qureshi.
7. The Article on, 'Problems in conservation and Management of Books, MSS and Archives - By J.S. Marwah
8. The Article on, 'Problems in conservation reasons and suggested remedees - By V.V. Talwar.
9. The Article on, 'Preserving the Heritage' - By V. Lalitha
10. நுண்ணுயிர்க் கிருமிகளால் அழிவுறும் தாள் மூலங்கள் ஓர் இலக்கிய ஆய்வு - சஷிதாபன்
11. The Madras Record Office - By Dr. B.S. Baliga
12. Everybody's Book of Facts - By F.L. Dunbar & Harold Wheels.


* * *

# 26. சோழநாட்டு ஆவணங்கள்

க. கருப்பையா

மன்னா உலகத்து............

தன் புகழ் நிலைநிறுத்தி தாம் மாய்ந்தனரே[1]

என்பது ஆன்றோர் வாக்கு. நம் முன்னோர்கள் அவர்களின் வீர தீர பராக்கிரம செயல்களையெல்லாம் வருங்கால சந்ததியினரின் வாழ்விற்கு வழிகாட்டியாக அமைய வேண்டுமெனக் கருதி கல்லிலும், செம்பிலும் வெட்டி வைத்து விட்டுச் சென்றுள்ளனர். உலோக அலோகப் பொருள்களில் பொறித்து வைக்கப் பெற்ற அப்பொறிப்புகள் காலவோட்டத்தில் பல அழிந்துவிட்டன. பல ஆவணங்கள் இன்னும் வெளிச்சத்திற்கு வராமலேயுள்ளன. கிடைத்துள்ள ஆவணங்களில் பல சிதைந்துள்ளன. அவற்றின் கருத்துக்களை முழுவதும் அறிய முடியாமல் திண்டாட வேண்டியிருக்கிறது. இந்த அவலம் தென்இந்தியா மட்டுமல்லாது இந்தியா முழுமைக்கே பரவியுள்ளது என்று அறியும்போது வேதனைதான் மிஞ்சுகிறது. மேனாட்டு அறிஞன் கூறுவது போன்று, இந்தியர்கள்[2] தம் உன்னத வாழ்வின் சிறப்புகளையெல்லாம் எழுதி வைத்துப் பாதுகாக்க ஏனோ தவறிவிட்டனர்.

தொன்மை வரலாற்றிற்குச் சொந்தமானவர்கள் என்பதும், அவற்றை எடுத்துரைக்கப் போதுமான சான்றுகள் நமது பெட்டகத்தில் பதுக்கி வைக்கப்பட்டுள்ளன என்பதும் சமீப காலங்களில் நிரூபிக்கப்பட்டுள்ளன. தமிழகத்தின் ஆன்றோர்களும், சான்றோர்களும் அவர்தம் வரலாற்றின் உயர்வின் நிலை காண, பட்டிதொட்டிகளிலெல்லாம் பரவிக் கிடக்கும் பழமையான ஆவணங்களையெல்லாம் சேகரிக்கும் பெருமுயற்சியில் தம்மை ஈடுபடுத்தி உழைத்து எண்ணுதற்கரிய ஆவணங்களை வெளிச்சம் போட்டுக் காட்டி வருகின்றனர் என்பது ஒரு ஆறுதலான விசயமாகும். இருப்பினும், கல்தோன்றா மண்தோன்றா காலத்திற்கு முன்பே தோன்றிய தமிழக வரலாற்றின் முழுமையை அறிய இவை போதா.

பிற்காலச் சோழர்களின் வரலாறு, கிடைக்கப்பெற்ற ஏராளமான சான்றுகளைக் கொண்டு ஓரளவு வரையறுக்கப்பட்டுவிட்டது. சங்ககாலச் சோழர்களின் வரலாறு நமக்குத் தொடர்ச்சியாகக் கிடைக்கவில்லை. காவிரிக்குக் கரைகட்டிய கரிகால் சோழன், நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி,

கோப்பெருஞ்சோழன் என்று இலக்கியங்களில் பேசப்பட்டாலும் அவர்களின் உண்மை உறவு முறையை அறிய போதிய ஆவணங்கள் கிட்டில. எனவே ஊகத்தின் அடிப்படையில் ஒருவருக்கொருவர் தொடர்புடையவர்களாகக் காட்டப்பட்டுள்ளது. பிற்காலத்தில் எழுந்த இலக்கியங்களும், கல்வெட்டுகளும் இந்தச் சங்ககால மன்னர்களைப் பற்றிய குறிப்புகள் கொடுப்பதால் ஒரு சில மன்னர்களின் வரலாற்றையாவது அறிந்து கொள்ள முடிகிறது. இம்மன்னர்களைப் பற்றிய வரலாறு சுமார் *300* ஆண்டுகாலம் அதாவது கி.பி. *2* ஆம் நூற்றாண்டிலிருந்து *5* ஆம் நூற்றாண்டு வரை கிட்டில. அவர்களைப் பற்றிய தகவல் தரும் ஆவணங்கள் ஏதும் கிடைக்காததால் அதை இருண்ட காலமாகக் கணிக்கின்றனர். பல்லவர்கள் காலத்தை அடுத்து கி.பி. *855* முதல் கி.பி. *1280* வரையுள்ள சோழர்களின் வரலாற்றை அறிய ஏராளமான சான்றுகள் உள்ளன என்பது யாவரும் அறிந்ததொன்று.

இக்காலக்கட்டங்களில் பலதரப்பட்ட ஆவணங்கள் கிடைக்கின்றன. அவர்கள் காலத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டு ஆவணங்கள் ஏராளம். அதனோடு செப்புப் பட்டயம், பலதரப்பட்ட இலக்கிய நூல்கள், மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் வெளியிடப்பட்ட நாணயங்கள், அவர்கள் விட்டுச் சென்ற பொருள் ஆராய்ச்சிகள், வெளிநாட்டவரின் குறிப்புகள் போன்றவை சிறந்த ஆவணங்களாக உள்ளன. பேரறிஞர் பலர் இச்சோழர்களின் வரலாற்று ஆராய்ச்சியில் ஈடுபட்டு நல்ல உன்னத வரலாற்றினை உலகுக்கு அறிவித்துள்ளனர். அறிஞர் திரு. நீலகண்டசாஸ்திரி[3], சதாசிவ பண்டாரத்தார்[4], தி.ந. சுப்பிரமணியன்[5], டாக்டர் இராஜகோபால்[6], டாக்டர் சு. சுவாமிநாதன்[7] போன்றோர்கள் இங்கே குறிப்பிடப்பட வேண்டியவர்கள். தொட்டனைத்தூறும் மணற்கேணி போல இன்னும் பல உண்மைகள் சோழர்களின் ஆவணங்களை ஆராய்ந்தால் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. அம்முயற்சியின் தொடர்ச்சியே இக்கட்டுரையின் நோக்கம்.

சோழநாட்டு ஆவணம் என்ற இத்தலைப்பில் ஆவணங்களின் அமைப்பு, வகைகளை அறியும் ஆவணம் என்றால் பொதுவாக என்ன என்பதை அறிதல் மிக அவசியம்.

(எழுத்துக்கள், எண்கள், குறிகள் ஆகியவற்றைக் காகிதம்[8], ஓலை, செப்புத்தகடு, கல் போன்றவற்றில் செய்தியாகப் பொறித்து வைக்கப்பெறுவது ஆவணம் (**Document**) எனப்படும்).

(ஒன்றைப் பாதுகாக்கும் நோக்கத்துடன், ஒன்று அல்லது பல செய்திகளை மக்கள் பதிவு செய்து வைக்கும் குறிப்புகளும் ஆவணங்கள் என்று பொதுவாகக் கூறப்படுகிறது). சோழநாட்டு ஆவணங்களில் அரசனது

ஆணையைக் குறிப்பெடுப்பவர் திருவாய்சோர்வி[9] என்றும், எழுதுபவர் திருமந்திர ஓலையென்றும்[10], அதனை மேற்பார்வையிடுபவர் திருமந்திர ஓலைநாயகம்[11] என்றும், அதை நிறைவேற்றுபவர் ஆணத்தி என்ற சொற்கள் வருவது குறிப்பிடத்தக்கதாகும். இந்தியாவில் பல வித ஆவணங்கள் இருந்து வந்தன என்பதை நாரதரின்[12] அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. பாகப்பிரிவினை, நன்கொடை, விற்பனை, ஒப்பந்தம், கோயில் கட்டளைகள் போன்ற காரணத்திற்காக ஆவணங்கள் எழுதியுள்ளதாக அது கூறுகிறது. மேலும் தர்மசாஸ்திர நூல்கள் ஆவணங்களைப் பற்றி விரிவாக எடுத்துரைக்கின்றன.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால் ஆவணங்கள் என்பது தனியார் இருவரிடையே ஏற்படும் பரிவர்த்தனைகள், விற்பனைகள், உடன்பாடுகள், சபை, ஊர் ஆகியவை எடுத்த முடிவுகள், தீர்மானங்கள், அளித்த சலுகைகள், தொடர்ந்து நடைபெற வேண்டிய தர்மங்கள், நியதிகள், ஆகியவை ஆவணங்களாகப் பதிவு செய்யப்பட்டன.

சோழர்களின் ஆவணங்கள் கணக்கிலடங்கா. அது உலகம் முழுவதும் பரவிக்கிடக்கிறது என்று கூடச் சொல்லலாம். இந்தியாவில் இமயம் முதல் குமரி வரையிலும் ஜாவா, கடாரம் போன்ற நாடுகளிலும் காணப்படுகிறது. இவ்வனைத்தும் ஆய்வுக்கு உட்படுத்துவது இயலாத காரியம். சோழநாட்டில் மட்டும் கிடைக்கும் ஆவணங்கள் என்று எடுத்துக் கொண்டாலும் மிகுதியாகவே உள்ளன. சோழநாடு என்கிறபோது அதன் எல்லையை வரையறுப்பது தலையாய கடமை. ஆனால், அது முடியாத காரியம். காரணம் போர்களினால் எல்லைக் கோடுகள் பல மாறுபாட்டிற்குட்படுத்தப்பட்டுள்ளன. இருப்பினும் நம் முன்னோர்கள் அதன் எல்லையைக் கீழ்க்கண்டவாறு வகுக்கின்றனர்.

பொதுவாக, தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனார்[14] கூறும் தமிழக எல்லையாவது

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறும் நல்லுலகம்

என்கிறார். குண, குட, கடலால் சூழப்பட்ட இத்தமிழகம் முடியுடை மூவேந்தர்கள் சேர, சோழ, பாண்டியர்களால் ஆளப்பட்டிருக்கின்றது. இப்பகுதிக்குட்பட்ட வடபுலம் சோழர்களின் ஆட்சிக்குட்பட்டிருக்கிறது. ஏறத்தாழ இந்நாளைய திருச்சி, தஞ்சை, தென் ஆற்காடு, சென்னை, செங்கற்பட்டு, சித்தூர் மாவட்டங்களை உள்ளடக்கியதாகும்.

சோழநாட்டின்[15] எல்லையைச் சோழமண்டலசதகம் பின் வருமாறு கூறுகிறது.

கடல் கிழக்குத் தெற்கு கரைபொரு வெள்ளாறு
குடதிசையில் கோட்டைக் கரையாம் - வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை யிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்.

கல்வெட்டுக்களிலிருந்து சோழநாட்டின் தென் எல்லை வெள்ளாறு, கிழக்கு எல்லையாக வங்காளக் கடலும், மேற்கு எல்லை கோட்டக்கரை என்றும், வடக்கு எல்லை தெளிவாகக் கூற முடியாத அளவில் உள்ளது என்றும் அறிகின்றோம்.

இவ்வெல்லைக்குட்பட்ட ஆவணங்களே எண்ணிக்கையில் அடங்கா. இருப்பினும் அவற்றையெல்லாம் ஆய்வுக்குட்படுத்துவது வாழ்நாள் போதாது. ஒரு சில ஆவணங்கள் மட்டும் ஈண்டு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. தேவையானபோது, கட்டுரையின் முக்கியத்துவம் கருதி எல்லைக்கு அப்பாற்பட்ட ஆவணங்கள் சிலவற்றை எடுத்துக் கொள்வதில் தவறில்லை. விரிவான ஆராய்ச்சி செய்வதற்கு முன்னர், சோழர்களின் ஆவணங்களை எவ்வகையில் பிரிக்கலாம் என்று அறிவது நல்லது.

ஆவணங்களில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்தின் அடிப்படையில் வட்டெழுத்து, தமிழ், கிரந்தம், வடமொழி என்று அழைக்கப்படுகிறது. பாண்டிய நாட்டில் சோழர்களின் கல்வெட்டுகள் பல வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. அதில் பயன்படுத்தப்படும் மொழியால் தமிழ், வடமொழி என்று அழைக்கின்றோம். ஆவணங்கள் எழுதப் பயன்பட்ட பொருளின் அடிப்படையில், செம்பு, சிலை, ஓலை என்றும், அது கிடைக்கப்படும் இடத்தால், தஞ்சாவூர், திருவாலங்காடு, கரந்தை என்றும் அறிகிறோம். அதை வெளியிட்ட குலப்பெயர்களாலும், மன்னனின் பெயராலும் அழைக்கின்றோம். ஆவணங்கள் இருக்கும் இடத்தைப் பொருத்தும் *(லெய்டன் பட்டயம்)* அழைக்கின்றோம்.

சோழர் ஆவணங்களின் அமைப்பின் அளவில் அதனைப் பல வகைப்படுத்தலாம் என்று அறிஞர் பலர் கருதுகின்றனர்.

சுருக்கமாக அமைப்பை உடைய இவ்வாவணங்கள் பல்லவ மன்னர்கள் காலத்தில் கொஞ்சமாக விரிவடையத் தொடங்கி, சோழர் காலத்தில் இலக்கிய முறையில் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன என்று அறிகிறோம். திர. சா. கணேசன்[16] அவர்கள் ஒரு கல்வெட்டு எப்படி, எவையெல்லாம் உள்ளடக்கி இருக்க வேண்டும் என்று இலக்கணம் வரைகிறார். அதை ஒப்பிட்டு நோக்கினால் சோழர் ஆவணங்கள் அவ்விலக்கண விதிக்கு ஏற்புடையதாக இருப்பதைக் காணலாம். ஆவணத்தின் தொடக்கமாக மங்கலச் சொல். அதன்பின், மெய்க்கீர்த்தி, பட்டப்பெயர், இயற்பெயர், ஆண்டு, ஆணை அல்லது அறச்செயல்,

எழுதி அமைத்தவர், பொறித்தவர், காப்பு நிலை என்ற அமைப்பின் அடிப்படையில் எழுதப்பட்டிருப்பது தெரியவருகிறது.

இதையே டாக்டர் பூ. சுப்பிரமணியன்[17] அவர்கள் ஏழு பகுதிகளாகப் பிரிக்கின்றார். *1.* கொடை, *2.* இலக்கியம், *3.* வரலாறு, *4.* சமயம், *5.* வாழ்க்கை, *6.* அரசியல், *7.* போலி ஆவணங்கள் என்று ஆவணங்களை நுணுகி ஆய்வு செய்தால் எத்தனையோ வகையாகப் பிரிக்க வாய்ப்பிருக்கிறது. மேலே கூறப்பட்ட ஏழுவகையும் பொதுவான பிரிவாகும். நீதி பற்றியும், நெறிமுறைகள், பண்பாடு பழக்க வழக்கங்கள், பொருளாதாரம் இன்னும் இவை போன்ற எத்தனையோ வகைகள் இருக்கலாம். ஆவணங்களை ஒவ்வொன்றாக ஆராய்ச்சி செய்கின்ற போது இந்த உண்மை விளங்கும்.

கொடை பற்றி விளம்பும் ஆவணங்கள் சோழர்காலத்தில் ஏறத்தாழ எண்பது சதவீதம் ஆகும். சான்றாக, தஞ்சைக்கு அருகாமையிலுள்ள கரந்தை[18] செப்புப்பட்டயம் முதலாம் இராசேந்திர சோழனால் வெளியிடப்பட்டுள்ளது. இப்பட்டயம் *108* பிராமணர்களுக்குக் கொடை கொடுத்தாகச் சொல்லப்படுகிறது.

சோழர்கால ஆவணங்களில் சோழர்களின் மெய்கீர்த்திப் பகுதிகள் முழுமையும் இலக்கிய நடையில் எழுதப்பட்டுள்ளன. முதலாம் இராசராசனின் கல்வெட்டுகள் இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். இம்மெய் கீர்த்தியிலிருந்து அம்மன்னனின் அருஞ்செயல்கள், போர் வெற்றிகள், அறக்கொடைகள், விருதுப்பெயர்கள் போன்ற பல வரலாற்றுக் குறிப்புகளை அறிய முடியும். இப்பகுதி அகவல் சீர் அமைப்புடன் சீர் நான்காய் இரண்டடித் தொடையில் அரசன் மெய்ப்புகழ் எல்லாஞ்சொல்லியும், முடிவில், அவன் வரலாறும் சொல்லுவது. இதன் இலக்கணம் பன்னிருபாட்டியல், வச்சணந்தி மாலை முதலிய பாட்டியல் நூல்களில் காணப்படுகிறது.

வரலாற்று மூலங்களாக விளங்கும் சோழர் கால ஆவணங்கள் பல. அவைகள் சோழ மன்னர்களின் வம்சாவளியை ஒருவாறு வரிசைப்படுத்துகின்றன. பாண்டிய வரலாற்றை அறிய வேள்விக்குடி பட்டயமும், சின்னமனூரிலிருந்து கிடைத்த பட்டயமும் விளங்குவதுபோல, சோழர்களின் வம்சாவளியினரை அறிய முதலாம் இராசேந்திர சோழன் வெளியிட்ட திருவாலங்காடு[19] செப்பேடு, கரந்தை செப்பேடும், மற்றும் வீரராசேந்திரன் காலத்தில் வெட்டப்பட்ட கன்னியாகுமரி கல்வெட்டும் அழியாச் சான்றுகளாக விளங்கி நிற்கின்றன.

பொருளாதார நிலையை அறிந்து கொள்ள சோழர்களின் ஆவணங்கள் பெரிதும் துணை புரிகின்றன என்றால் அது மிகையாகாது. அரசு வருவாய் இன்றியமையாதது. வரி, குடிகள் கொடுக்கும் வெகுமதிகள்,

போரில் கொள்ளும் பொருள்கள் மூலமே அரசாங்க கஜானாவை நிரப்ப வேண்டும். முதலாம் பராந்தகன் காலத்தில் செங்கற்பட்டு மாவட்டம் சோழ சிங்கபுரத்தில் வரையப்பெற்ற கல்வெட்டொன்றில் அறுகூறினால் புரவுமாய்[20] என்று கூறுகிறது. இங்குப் புரவு என்றால் அரசிறை என்பதால் அரசாங்க வரி என்று பொருளாகிறது. இது அறநூல் குறளில் கூறி உள்ளதற்கு ஒப்ப அரசனுக்கு ஆறில் ஒன்றாயிற்று என்பதற்கிசைந்து வசூலிக்கப்பட்டுள்ளது தெரிகிறது. நிலவரி முக்கியமாக வருவாய் இருந்ததால் முதலாம் இராசராசன் நிலத்தை முழுவதையும் அளந்து கணக்கிடச் செய்த செய்தியைக் கல்வெட்டொன்று விளக்குகிறது. பின்னர் கி.பி. *1086*-ல் முதற் குலோத்துங்களின் *16*-ஆம் ஆண்டிலும், மூன்றாம் குலோத்துங்கனின்[22] *38*-ஆம் ஆண்டிலும் நிலம் முழுவதையும் அளந்ததாகக் கல்வெட்டு ஆவணங்கள் தெரிவிக்கின்றன.

அக்கால சமூக வாழ்க்கை பற்றி சோழர் கால ஆவணங்கள் தெள்ளத் தெளிவாக விளக்குகின்றன. வர்ணாசிரமக் கொள்கையில் ஊறித்திளைத்த சமூகத்தில் வேத விற்பன்னர்களான பிராமணர் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளதை எண்ணாயிரம் கல்வெட்டு[23] எடுத்தியம்புகிறது. ஒவ்வொரு சமூகத்தவரும் தங்களுக்கு வேண்டிய உரிமைகளை அரசனிடம் பெற்றதாக முதலாம் இராசராசன், இராசேந்திரன் காலத்தில் வெளியிடப்பட்ட கல்வெட்டுகள் கூறுகின்றன. அடிமைகளாக, பெண்டிர்கள் காளகஸ்தி கோயிலுக்கு விற்றதாக மூன்றாம்[25] குலோத்துங்கன் கல்வெட்டு கூறுகிறது. சமூகம் இரண்டு வகையாக வலங்கை, இடங்கை எனப் பிரிந்து சொல்லவொண்ணா தொல்லைக்கு ஆளாகியுள்ளது பல கல்வெட்டுகளிலிருந்து தெரிகிறது. முதலாம் இராசேந்திரனின் மூன்றாம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்ட[26] திருவிசலூர்க் கல்வெட்டு இதற்கொரு எடுத்துக்காட்டு. மூன்றாம் குலோத்துங்க சோழர் காலத்தில் வெளியிடப்பட்ட மற்றுமோர் கல்வெட்டு இடங்கைப் பிரிவின் தோற்றம் வளர்ச்சியைப் பற்றித் தெளிவாக விளக்குகிறது. இவ்விரு பிரிவுகளில் ஏராளமான வகுப்புகள் அடங்கியிருந்தன என்று மெட்ராஸ் மேனுவல் தெரிவிக்கின்றது. சாணார் என்ற வகுப்பார் இதில் மிகவும் குறிப்பிடத்தக்கவர்கள். இலக்கியங்களில் சான்றார், சான்றோர் என்பதெல்லாம் பேசப்படுகின்றன. இவர்கள் பழங்காலத்தில் மிகச் சிறந்த போர்வீரர்களாலும், நாட்டை ஆண்ட சத்திரியார்களாகவும் இருந்தவர் என்று சமீபகால ஆராய்ச்சி தெரிவிக்கிறது. இதனால் நாடாழ்வார்கள் என்ற பட்டம் பெற்றனர் என்பதும், அதன் பின்பு நாடன் என்றும், தற்காலத்தில் நாடார் என்றும் வழங்கப்பட்டுள்ளது. இவ்வாராய்ச்சியில் ஈடுபட்டுள்ள மதிப்பிற்குரிய கல்வெட்டு ஆய்வாளர் திரு. நெல்லையார் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

அவரின் அரிய முயற்சியில் கண்டுபிடித்த கல்வெட்டு ஒன்று முதலாம் பராந்தகன்[27] காலத்தில் வெளியிடப் பட்டுள்ளது. சிதைந்து போன கல்வெட்டினால் படிக்க முடியவில்லையென்றாலும், மத்திய கல்வெட்டுத் துறையினரால் படியெடுக்கப்பட்டுப் படிக்கப்பட்டுள்ளது. அவர்கள் கிழாரான மரபுச் சான்றார் என்று படிக்கப்பட்டுள்ளது. இதையே ஓர் ஆவணமாகக் கொண்டால் இதுகாறும் பெருத்த சந்தேகத்திற்கு ஆளாகியிருந்த சான்றோர் அல்லது சாணாரின் காலம் இன்னும் பல நூற்றாண்டிற்கு முன் தள்ளப்பட்டுள்ளது என்பது தெளிவாகும். சாணார் என்பவரே சான்றோர் என்பது தென்றெனத் தெரிய வருகிறது. பழந்தமிழராகிய இவர்களின் வரலாறு வெளிச்சத்திற்கு வருவது தமிழக வரலாற்றின் ஒரு பகுதியாகவே இருக்கும் என்பதால் இது வரவேற்கத் தக்கது.

சோழநாட்டு ஆவணங்களில் அரசியல் பற்றிப் பேசப்படும் பகுதி ஏராளமாகும். அவர்கள் தங்கள் கீழ் பணிபுரியும் குறுநிலமன்னர், அண்டை நாட்டவரிடம் கொள்வினை, கொடுப்பினை தொடர்பை ஏற்படுத்தி நாட்டைப் பலப்படுத்தியுள்ளனர் என்பது அவர்களின் கல்வெட்டு ஆவணங்களிலிருந்து தெரிகிறது. முதலாம் ஆதித்திய சோழன், பல்லவ மன்னன் அபராசித வர்மனை வென்று தொண்டமண்டலம் வரை தமது சோழ சாம்ராஜ்யத்தை நிறுவியுள்ளான் என்பதைத் தில்லை ஸ்தானத்திலிருந்து[28] கிடைக்கும் கல்வெட்டால் அறிகிறோம். அவர் கங்கர்களோடு கொண்ட தொடர்பினைத் தில்லை ஸ்தானத்துக் கல்வெட்டும் எடுத்து இயம்புகிறது. இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருட்டிணனைத்[29] தக்கோலப் போரில் பொருதி நின்று தன் மகன் இராச ஆதித்தனை இழந்ததைத் தக்கோலத்தில் கிடைக்கின்ற கல்வெட்டு ஆவணத்திலிருந்து அறிகிறோம். முதலாம் இராசராசனின் தமையனார் ஆதித்திய கரிகாலன்II கொல்லப்பட்ட செய்தியும், அது பற்றிய விசாரணை முடிவினை உடையார் குடி கல்வெட்டு கூறுகிறது. மூன்றாம் இராசராசன் எப்படியெல்லாம் தம் ஆட்சிக்காலத்தில் துன்பங்கள் அடைந்து அவதிப்பட்டான் என்று திருவந்திபுரம்[30] கல்வெட்டு தெரிவிக்கிறது.

பாரபட்சமற்ற முறையில் மக்கள் அனைவருக்கும் சமநீதி கிடைக்க நீதித்துறையைச் சிறந்த முறையில் பலப்படுத்தியுள்ளனர் என்பதற்கு அக்காலகட்டத்தில் கிடைக்கும் ஆவணங்களே சான்றாக இருக்கின்றன.

அக்கால நீதி நிர்வாகம் மிகச் சிறந்த முறையில் இருந்தது என்பதைச் சோழர்காலத்தில் வெளியிடப்பட்ட பல ஆவணங்கள் எடுத்தியம்புகின்றன. முறைப்படுத்தப்பட்ட நீதி மன்றங்கள் இயங்கி வந்துள்ளன. ஊர், கிராம சபை, வர்த்தக சபை போன்ற அமைப்புகள் நீதிமன்றங்களாகவும் இயங்கின. கீழ்மட்டத்தில் நடக்கும், சண்டை, சச்சரவுகள் அங்கேயே தீர்த்து

வைக்கப்பட்டன. இரண்டாம் இராசராச சோழன்[31] காலத்தில் வெளியிடப்பட்ட தாமரைப்பாக்கம் கல்வெட்டு ஆவணம் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு சகோதரர் இருவருக்கிடையில் ஏற்பட்ட சச்சரவினால் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டனர். விளைவு தம்பியின் மூர்க்கத்தனமான தாக்குதலினால் அண்ணன் கொல்லப்பட்டான். இப்புகார் சித்திரமேழி பெரியநாட்டார் என்ற வேளாளர் சபைக்கு எடுத்துச் செல்லப்பட்டு தீர்ப்பளித்ததாக அவ்வாவணம் கூறுகிறது.

அனைத்து மதங்களையும் அரவணைத்துச் சகிப்புத்தன்மையுடன் சோழமன்னர்கள் இருந்தார்கள் என்பதை அவர்களின் பல ஆவணங்கள் நன்றாக விளக்குகின்றன. முதலாம் இராசராசன்[32] காலத்தில் வெளியிடப்பட்ட ஆனைமங்கலம் செப்பேடு இதற்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. கடாரத்து அரசன் விசயத்துங்கவர்மனுக்கு நாகப்பட்டினத்தில் புத்தர் விகாரம் கட்ட அனுமதியளித்த தோடல்லாமல், ஆனைமங்கலம் என்ற கிராமத்தையே தானமாக அளித்ததை லெய்டன் செப்பேடு (பெரியது) விளக்குகிறது. அவனின் சகோதரி குந்தவை பிராட்டியார் ஜைன பள்ளிக்கு நைவேத்தியம் அளித்ததாக இன்னோர் கல்வெட்டு கூறுகிறது. சைவ, வைணவ கோயில்களுக்கு, நிலங்கள் தானமாகக் கொடுக்கப்பட்டதைத் தேவதானம், திருவிடையாட்டம், திருநாமத்துக்காணி என்ற பெயர்களால் கல்வெட்டுகளில் கூறப்படுவதை அறியலாம்.

கல்வி மேம்பாட்டிற்கு அவர்கள் செய்த தொண்டினை வேதல்[33] கல்வெட்டு மிக மிக விளக்கமாகச் சொல்கிறது. இது முதலாம் பராந்தகன்[34] காலத்தில் வெளியிடப்பட்டுள்ளது. இவர்களின் நிர்வாகத் திறமைக்கு உலகப்புகழ் வாய்ந்த உத்தரநல்லூர்க் கல்வெட்டு ஒன்றே போதும். எவ்வளவு சிறப்பு வாய்ந்த திறமையான ஆளுநர்கள் என்று அறிந்து கொள்ளலாம். இன்னும் இவை போன்ற எத்தனையோ ஆவணங்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் எழுத்தில் கொண்டுவருவது இயலாததால் அவ்வாவணங்களைப் பற்றிக் கல்வெட்டுகளில் எப்படியெல்லாம் பயன்படுத்துகின்றனர் என்று தெரிந்து கொள்வது நல்லது.

சோழர்கால[35] ஆவணங்களில் எழுதப்பட்ட பத்திரங்கள், இன்னும் பிறவற்றைப் பிரமாணங்கள் என்று அழைக்கின்றனர். இது விலைபிரமாணம், நிலபிரமாணம், பூமிபிரமாணம், இறைக்காவல், ஆசிரியப்பிரமாணம், சண்டேசுவர பிரமாணம் என்றெல்லாம் இருப்பது தெரியவருகிறது.

எழுதப்பட்ட ஆவணங்களுக்கு மற்றோர் பெயராகத் தீட்டு என்ற சொல்லாட்சி பெற்றுள்ளது. இவை, அறையோலை, இறையோலை, இறைக்காவல்

ஒட்டோலை, சிலவோலை, கையெழுத்தோலை என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றன.

மனிதனை விலைபேசி விற்று அதனைப் பதிவுசெய்து வைக்கும் பழக்கம் இருந்துள்ளது. இது ஆள் ஒலை அல்லது ஆள்விலைப் பிரமாணம் என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளது. தென் ஆற்காடு மாவட்டம் பந்தலில் கிடைத்த கல்வெட்டு ஆவணம் ஆள்ஒலை பற்றிப் பேசுகிறது.

தாருமுடியுமுரசுந் தமக்குரிய
பாருமுடன் பெறுவர் பார்வேந்தர் - வீரப்
பெருமான் மகதேசன் பேரெழுதித் தந்தன்
திருமார்பில் ஆள்ஒலை செய்து[36]

சேக்கிழார் பெருமான்[37] எழுதிய பெரியபுராணத்தில்

அக்காலம் உன்தந்தை தன்தந்தை ஆள்ஒலை
இக்காரியத்தை நீ இன்று சிரித்ததென் ஒட என்று,

இறைவன் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பார்த்துக் கூறியதாகக் கூறுகிறார்.

குறுநிலமன்னர்களுக்குள்ளும், அல்லது அரசர் தமக்குள்ளும் ஏற்படுத்தும் உடன்படிக்கை பத்திரம் நிலமைத்தீட்டு என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளது.[38]

இவர்கள் எனக்கு ஒரு காலமும் தப்பாதிருக்க - நானும்
இவர்களுக்கு ஒரு காலமும் தப்பாதிருக்கக் கடவோனாகவும்

என்ற வாசகத்தை உள்ளடக்கிய செங்கம் கல்வெட்டு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. இது விடுதாதழகில் பெருமானான இராசராச அதியமான் எழுதித்தந்ததாகும்.

கோயில் பராமரிப்புக்காக, இறைவன் பெயரிலே நிலங்கள் கொடுப்பதை அந்நிய நாமகரணத்தீட்டு என்றும் அழைத்தனர்.

கல்வெட்டின் இறுதிப்பகுதியில் அதில் சொல்லப்பட்ட கருத்துக்களுக்குச் சாட்சியாகக் கையொப்பமிடும் வழக்கம் இருக்கும். படிப்பறிவு இல்லாதவர்கள் தற்குறி என்ற பெயரால் வழங்கப்பட்டிருக்கின்றனர்.

ஒருவர், வேறொருவருக்காக எழுதிக் கொடுப்பது முகனர் எனப்படும். தாய் மகனுக்கும், மகன் தாய்க்கும் எழுதிக் கொடுத்தற்கான அத்தாட்சி

கல்வெட்டுகளில் ஏராளம் உள்ளன.

ஒருவர் ஒப்புக் கொண்ட அறச்செயலை மற்றொருவர் ஏற்றுக் கொள்வது அல்லது புணைபோவது என்ற மரபு சோழர் காலத்திருந்ததை புணைத் தீட்டு என்று அழைக்கப்பட்டுள்ளது.

ஒருவர் பெயரிலுள்ளதை ஆவணத்தை மற்றொருவர் பெயருக்கு மாற்றுவது திரிவிட்டுக் கொடுத்தல் என்றும், ஒரு செயலை ஒப்புக் கொண்டு, ஏற்றுடைத்துவது ஒட்டிக் கொடுத்தல் என்றும், கொடையாகக் கொடுக்கப்பட்ட ஆடுமாடுகள், நிலம் பராமரிப்பதாக ஏற்றுக் கொள்வதை அடுத்துக் கொடுத்தல் என்றும் ஆவணங்களில் சொல்லப்பட்டுள்ளது.

சோழர்களின் ஆவணங்களில் எவ்வகை எழுத்துக்கள் எவ்வாறெல்லாம் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை அறிந்து கொள்வது நல்லது. சோழர்கள் தமிழ் எழுத்துக்களையே பயன்படுத்தியுள்ளனர். பல்லவர்கள் காலத்தில் இவை வழக்கில் இருந்தாலும், உயரிய நிலையை அடைந்தது சோழர் காலத்திலேயாகும். பத்தாம் நூற்றாண்டில் சோழர்கள் கையோங்கி பாண்டி மண்டலத்தை வெற்றி கொண்டபோது அங்கு அதுவரை வழக்கிலிருந்த வட்டெழுத்து வீழ்ச்சியடையத் தொடங்கியது. மேலும் மைசூர் சமஸ்தானம் சில பகுதிகளிலும், நெல்லூர் போன்ற தெலுங்கு தேசத்திலும் இலங்கையிலும் தமிழ் பொறித்த சாசனங்கள் காணப்படுகின்றன.

சோழர்களின் ஆவணங்கள் தமிழ் மொழியில் தமிழ் எழுத்துக்களாலே எழுதப்பட்டிருப்பினும், சில ஆவணங்கள் வடமொழியில் கிரந்த எழுத்துக்களாலும் எழுதப்பட்டுள்ளன. பொதுவாக இம்மன்னர்கள் வெளியிட்ட பட்டயங்களில் தமிழ், வடமொழி பயன்படுத்தப்பட்டுள்ளது. வடமொழி பெரும்பாலும் தமிழின் மொழிபெயர்ப்பாகவேயுள்ளது. கிரந்த எழுத்துக்களால் எழுதப்பட்டுள்ள இவ்வடமொழிப் பகுதி காலத்தால் பிந்தியுள்ளது என்று கருத வாய்ப்புள்ளது. திருவாலங்காடு பட்டயமும் கரந்தை[53] பட்டையமும், முறையே முதலாம் இராசராசனின் *6, 8,* ஆம் ஆட்சியாண்டுகளில் வெளியிடப்பட்டுள்ளன. இவரின் *11* ஆம் ஆட்சியாண்டில் வெற்றிகொண்ட கடாரம் குறிப்பிடப்பட்டுள்ளதை சமஸ்கிருதப்பகுதி பிற்காலத்தில் இந்தப் பட்டயங்களில் சேர்க்கப்பட்டிருக்கலாம் என யூகிக்க இடம் இருக்கிறது. அவ்வாறாயின் இம் மன்னர்கள் தமிழுக்கே மிகுந்த சிறப்பிடம் அளித்துள்ளனர் என்பது தெள்ளத் தெளிவாகிறது.

பழங்கால ஆவணங்களையும் இம்மன்னர்கள் போற்றிப் பாதுகாத்து வந்துள்ளனர் என்பதற்குத் திருமழபாடி[39] கல்வெட்டொன்று ஆதாரமாக

இருக்கின்றது. கோயில் புனரமைக்கப்பட்ட போது பழைய கல்வெட்டுகளை அப்படியே பிரதி எடுத்து, கோஷம் கட்டி முடித்த பிறகு மீண்டும் பதிக்கப்பட்டள்ளது பற்றி இக்கல்வெட்டு கூறுகிறது.

இதுவும் ஒரு பழங்காலபடி, இந்தப் பிரதி விமானத்தில் ஏற வெட்டினமையில் முன்னி வாசகம் வெட்டிக்கிடந்த தனிக்கல்லால் உபயோகமின்மையரில் இதை தவிர்க்கப்பட்டது என்று வாசம் கூறுகிறது.

சோழமன்னர்கள் தங்களின் ஆட்சிக் காலத்தில் நடக்கும் நிகழ்வுகளைப் பதிவு செய்ய அதிகாரிகளை நியமித்தனர் என்பது ஏற்கெனவே சொல்லப்பட்டுள்ளது. அதேபோல கல், செம்பு போன்ற பொருள்களில் பொறித்து எழுதுவதற்கு அரசாங்கமே எழுத்தச்சர்களை அமர்த்திக் கொண்டமை அவர்களின் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. முதலாம் இராசராசனின் காலத்தில் கட்டி முடிக்கப்பட்ட தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் தமது கல்வெட்டுக்களைப் பதிக்க சாத்தங்குடி[40] வெள்ளாளன் இரவிப்பாலூருடையான் அமர்த்தப்பட்டடதாகத் தெரியவருகிறது.

தமிழில் எழுதப்பட்ட ஆவணங்கள் பிழையற எழுத முயற்சிகள் நடந்துள்ளன. இருப்பினும் சந்திப்பிழை தவிர்க்க முடியாது ஆகியுள்ளதைப் பல ஆவணங்களிலிருந்து தெரியலாம். சான்றாக, நெய்யமுது என்பது கல்வெட்டுகளில் நெய் அமுது என்றும் கறியமது என்பது கறி அமுது என்றும் எழுதப்படவில்லை. மேலும் மெய்யொற்றின் மீது புள்ளியிடப்பட்டுள்ள எகர ஒகார குறில் ஆகியவற்றிற்கு இடப்பட்டு வந்த புள்ளி வழக்கு ஒழிக்கப்பட்டது. மெய்யெழுத்துக்களில் இகரம், ஈகாரம் ஆகியவற்றின் குறிகள் பொதுவாக வேறுபாடு இல்லாமல் ஒரே விதமாக எழுதப்பட்டு வந்தன. வேறுபாடு காணப்படும் இடங்களில் ஈகாரக் குறியின் சுழி வலதுபுறத்தில் காணப்படும். கிரந்த எழுத்துக்களைப் போலல்லாமல், மெய்யெழுத்து ககரம், சகரமும் இரட்டைக் கோடுகள் இன்றி இருக்கும். மு, மு, ஆகிய இரண்டும் ஒரு விதமாக எழுதப்பட்டு வந்துள்ளது. தவும் நவும் வலப்புறத்தில் முடிவடையும் கோடு அடியில் இடதுபுறமாக வால்போல் இழுக்கப்பட்டுள்ளது. ண, ன ஆகியவற்றின் வலது பக்கக்கோடுகள் நன்கு நீட்டப்பட்டுள்ளன. இகரத்தின் அடிக்கோடு அப்படியே எழுத்தைச் சுற்றி இழுக்கப்பட்டு ஒரு சுழியைப் போல அமைந்துள்ளது. யகரம் மூன்று கோடுகளைக் கொண்டுள்ளது. க ச த ந ர முதலிய எழுத்துக்கள், உயிர் மெய் எழுத்தின் ஆகாரக் குறி ஆகியவற்றின் தலைப்பிலுள்ள படுக்கைக்கோட்டின் இடது புறமாகக் கீழ்நோக்கித் தொங்கும் ஒரு சிறிய கோடு ஒட்டப்பட்டது.

சோழர்கள் வடமொழியை எழுதுவதற்குக் கிரந்தெழுத்துக்களை

எவ்வாறு பயன்படுத்தியுள்ளனர் என்பது அறியத்தக்கது. இது தமிழில் சில வர்க்க எழுத்துக்களின் குறையைப் போக்கவே பயன்படுத்தப்பட்டது. க என்ற மெய்யெழுத்து மாறாமல் இருந்தாலும் அதன் நடுக்கோட்டின் கீற்று கீழ்நோக்கி வளைந்துள்ளது. எகரம் வால் நீண்டுள்ளது. சுழி பார்க்கும்படியாகவுள்ள பிற்காலத்தில் முப்பிரிவாகப்பட்டுள்ளது. கனம் வட்ட வடிவம் பெரியதாகச் சுழித்துக் காணப்படுவது பிற்காலத்தில் சரிசமமாக்கப்பட்டுள்ளது. அதேபோல கரம் முற்காலத்தில் அழகுபடுத்தப்பட்டிருந்தது; பிற்காலத்தில் ஒரே மாதிரியாக்கப்பட்டுள்ளது மேலும் தகரத்திலுள்ள சுழிப்பு பார்க்கும்படியாக இருந்தது. பிற்காலத்தில் சாதாரணமாக்கப்பட்டுள்ளது. அதேபோல நகரம் சற்று சாய்வாக இருந்தது. பிற்காலத்தில் நேராக்கப்பட்டுள்ளது.

பாண்டிய நாட்டை வெற்றி கொண்ட போது அங்குப் புழக்கத்திலிருந்த வட்டெழுத்து கொஞ்சம் கொஞ்சமாக வழக்கொழிந்து தமிழ் எழுத்துக்கள் புழக்கத்திற்கு வரத்தொடங்கின.

## பார்வையிடப்பட்ட நூல்கள்

1. மெய்க்கீர்த்தி
2. Smith : Ancient India
3. K.A.N. Sastri. The Cholas
4. சதாசிவ பண்டாரத்தார் : பிற்காலச் சோழர் சரித்திரம்
5. தி.ந. சுப்பிரமணியன் : பண்டைத் தமிழ் எழுத்துக்கள்
6. எஸ். இராசகோபால் : சோழநாட்டு ஆவணங்கள்
7. S. Swaminathan : Inscriptions of Cholas
8. தமிழ்ப் பல்கலைக்கழகம் : கலைக்களஞ்சியம், தொகுதி II, பக். 644
9. S-II Vol. (திருவாய்கேள்வி)
10. S-II Vol. (திருமந்திர ஓலை)
11. S-II Vol. (திருமந்திர ஓலைநாயகம்)
12. Naradar : Asthasastra
13. Dharmasastra
14. Tolkappiyar : Tolkappiam
15. சோழ மண்டல சதகம்
16. சா. கணேசன் : கையேடு பக். 164

17. பூ. சுப்பிரமணியன் : மெய்க்கீர்த்திகள்
18. K.G. Krishnan : Karandai Plates
19. K.G. Krishnan : Tiruvalangadu Plates
20. சோழசிங்கபுரக் கல்வெட்டு (செங்கற்பட்டு மாவட்டம்)
21. S-II Vol. III No. 222 & 23
22. ibid Vol. V.No. 990
23. AR No. 375 of 1911
24. திருவாலங்காட்டுச் செப்புப்பட்டயம் *11, 517-524.*
25. காலகஸ்திக் கல்வெட்டு
26. திருவிசலூர்க் கல்வெட்டு
27. திருசாத்துறைக் கல்வெட்டு
28. தில்லைஸ்தான் கல்வெட்டு
29. தக்கோலக் கல்வெட்டு
30. திருவயிந்தபுரம் கல்வெட்டு
31. தாதரைப் பாக்கம் கல்வெட்டு
32. . பெரிய லெய்டன் செப்பேடு
33. வேதல் கல்வெட்டு
34. உத்தரமேரூர் கல்வெட்டு
35. வரலாற்றுக் கலம்பகம்
36. பந்தளிக் கல்வெட்டு
37. சேக்கிழார் : பெரியபுராணம்
38. கோவிந்தசாமி : அகரமுதலி
39. திருமழபாடி கல்வெட்டு
40. தஞ்சாவூர்க் கல்வெட்டு
41. தி.ந. சுப்பிரமணியன் : பண்டைத் தமிழ் எழுத்துக்கள்

* * *

# சொல்லகராதி

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| சங்க இலக்கிய ஆய்வுகள் | 30.00 |
| தொல்காப்பிய ஆய்வுகள் | 20.00 |
| Indian Epistemology | 125.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| உ.வே.சா. நூல்களில் சொல்லும் சுவையயும் | 18.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| லவகுச நாடகம் | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| தமிழர் சமூகவியல் | 35.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | **175.00** |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| தமிழ் கற்பித்தலில் உன்னதம் | 20.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |

Pub.No. 402 **தமிழில் ஆவணங்கள்** **75.00**